# சங்க இலக்கியம் - திராவிட இயக்க வாசிப்பு

திருவள்ளுவர் பல்கலைக்கழக முழு நேர முனைவர் (பிஎச்.டி.,)
பட்டத்திற்காக அளிக்கப் பெற்ற ஆய்வேடு


ஆய்வாளர்

**சி.க. கோவிந்தராஜ்**

(பதிவு எண்: No.TVU/R/Ph.D./Reg./FT/Tam./SHCT/2013/6254)

நெறியாளர்

**முனைவர் கி. பார்த்திபராஜா,** எம்.ஏ., பிஎச்.டி.,
உதவிப் பேராசிரியர் & முதுகலைத் தமிழ்த்துறைத் தலைவர்
தமிழ் முதுகலை & ஆய்வுத்துறை
தூய நெஞ்சக் கல்லூரி (தன்னாட்சி)
திருப்பத்தூர் – 635 601, வேலூர் மாவட்டம்.






## திருவள்ளுவர் பல்கலைக்கழகம்
**சேர்க்காடு, வேலூர் - 632 115.**

அக்டோபர் – 2016

# நெறியாளர் சான்றிதழ்

**"சங்க இலக்கியம் - திராவிட இயக்க வாசிப்பு"** என்னும் தலைப்பில் சி.க.கோவிந்தராஜ் (பதிவு எண்:2013/6254) செய்துள்ள, இந்த ஆய்வேடு திருவள்ளுவர் பல்கலைக்கழகத்தில் முனைவர் பட்ட ஆய்வு செய்த காலத்தில் தன்னியலாகச் செய்யப்பட்டது என்றும் இந்த ஆய்விற்காக ஆய்வாளருக்கு வேறு எந்தப் பட்டமும் அளிக்கப்படவில்லை என்றும் சான்றளிக்கிறேன்.

இடம் : திருப்பத்தூர்

நாள் : 17.10.2016

நெறியாளர் கையொப்பம்

**(முனைவர் கி.பார்த்திபராஜா)**

தமிழ்த்துறைத் தலைவர்

**(முனைவர் பொ.செல்வகுமார்)**

முதல்வர்

**(அருட்தந்தை முனைவர் தா.மரிய அந்தோணிராஜ்)**

# ஆய்வாளர் உறுதிமொழி

**“சங்க இலக்கியம் - திராவிட இயக்க வாசிப்பு”** என்னும் தலைப்பில் திருவள்ளுவர் பல்கலைக்கழக முனைவர் (பிஎச்.டி.,) பட்டத்திற்காக முழுநேரமாகச் செய்யப்பட்ட, இந்த ஆய்வேடு என் சொந்த முயற்சியில் தன்னியலாக உருவானதேயாகும். இந்த ஆய்வேடு இதற்குமுன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் அளிக்கப்பெறவில்லை என உறுதியளிக்கிறேன்.

இடம் : திருப்பத்தூர்

நாள் : 17.10.2016

ஆய்வாளர் கையொப்பம்

**(சி.க.கோவிந்தராஜ்)**

# நன்றியுரை

**‘சங்க இலக்கியம் - திராவிட இயக்க வாசிப்பு’** என்னும் ஆய்வுத் தலைப்பினை அனுமதித்து, ஆய்வேட்டுப் பணியின் பல்வேறு நிலைகளில் வழிகாட்டுதல் வழங்கிய மதிப்புமிகு துணைவேந்தர் அவர்கள், பதிவாளர் அவர்கள், தேர்வுக் கட்டுப்பாட்டு ஆணையர் அவர்கள் உள்ளிட்ட திருவள்ளுவர் பல்கலைக்கழக நிர்வாகத்தினருக்கு நன்றி.

இந்த ஆய்வினைச் செம்மையாகச் செய்வதற்கு அனுமதியளித்த எமது தூய நெஞ்சக் கல்லூரி ஏழை, எளிய மாணாக்கர்களைத் தன்னுள் ஏற்றுக் கல்வியளித்து வருகிறது. இக்கல்லூரியின் அருட்தந்தையர்கள், இல்லத்தந்தை அருட்திரு முனைவர் சி.அந்தோனிராஜ் அடிகளார், முதல்வர் அருட்தந்தை முனைவர் தா.மரிய அந்தோனிராஜ் அடிகளார், கூடுதல் முதல்வர் அருட்தந்தை முனைவர் கே.ஏ.மரிய ஆரோக்கியராஜ் அடிகளார் அனைவருக்கும் என் உள்ளம் நிறைந்த நன்றிகள்.

தூய நெஞ்சக் கல்லூரியில் முழு நேரமாக முனைவர் பட்ட ஆய்வு செய்வதற்கு அனுமதி அளித்த தமிழ்த்துறைக்கும் ஆய்வுப் பணிகளில் உறுதுணையாக இருந்து ஊக்கமும் உற்சாகமும் அளித்த தமிழ்த்துறைத்தலைவர் முனைவர் பொ.செல்வகுமார் அவர்களுக்கும் எனது மனமார்ந்த நன்றியைக் காணிக்கையாக்குகிறேன். ஆய்வுப் பணிகளில் ஆற்றுப்படுத்திய தமிழ்த்துறைப் பேராசிரியர்கள் அனைவருக்கும் எனது நன்றியை உரித்தாக்குகின்றேன்.

ஆய்வு நெறியாளராக அமைந்தது மட்டுமல்லாமல், ஆய்வு மாணவனாக இருந்த காலம் முதல் தேங்கிக்கிடந்த என் ஆய்வுப் பணிக்கு உரிய தடங்களை வகுத்துத் தந்து ஆய்வு தழைக்க வழிகாட்டியாக இருந்தவர். என்னை உற்ற தம்பியாக எண்ணி நல்வழிப்படுத்திய நெறியாளர். அது மட்டுமல்லாமல் எனக்குத் தாயாகவும் தந்தையாகவும் இருந்து நேசித்தவர். குருவாக இருந்து கண்டித்தவர். என்னை முனைவர் பட்ட ஆய்வு மாணவராக ஏற்று நெறிப்படுத்திய நெறியாளர் முனைவர் கி.பார்த்திபராஜா அவர்களுக்கு என் உள்ளம் கனிந்த நன்றி. எனது உடன்பிறவா சகோதரியாகத் தோழமைப் பண்போடு பழகும் தோழர் ம.ஆ.சிநேகா பார்த்திபராஜா அவர்களுக்கு நன்றி.

முனைவர் பட்ட ஆய்வு மதிப்பீட்டுக் குழுவில் ஆய்வு மதிப்பீட்டாளராக வருகை புரிந்து, ஆய்வு தொடர்பாகப் பல்வேறு கருத்துக்களை வழங்கிய முனைவர் ந.சிவகுரு அவர்களுக்கு நன்றி.

என் ஆய்வுக்கு உறுதுணையாக இருந்த பல்கலைக்கழக நூலகங்கள், அண்ணா அறிவாலயம் பேராசிரியர் நூலகம், தூய நெஞ்சக் கல்லூரி நூலகம், முனைவர் கி.பார்த்திபராஜா அவர்களின் நூலகம், வேலூர் மாவட்ட மைய நூலகம் மற்றும் வாணியம்பாடி கிளை நூலகம் ஆகிய நூலகங்களுக்கும் அதன் பணியாளர்களுக்கும் என் நன்றி.

என்னைப் பெற்று வளர்த்தெடுத்த எனது தாய், தந்தை, உடன் பிறந்தவர்கள், உறவினர்கள் மற்றும் நண்பர்கள் ஆகியோர்க்கு என் நன்றிகளைச் சமர்ப்பிக்கின்றேன்.

என் ஆய்வுக் காலத்தில் பல்வேறு கருத்துக்களை விவாதித்து, ஆய்வுப் பணிக்குத் தூண்டுகோலாக இருந்த சக முனைவர் பட்ட ஆய்வாளர்கள் அ.குமார், மு.மாலா, கோ.மோகன், கு.கார்த்திகா, ஆ.ரூபா, ம.வித்யா, ப.ஆனந்தகுமார் ஆகியோர்க்கு மனமார்ந்த நன்றிகள்.

ஆய்வாளர்

**சி.க.கோவிந்தராஜ்**

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம். | - | அகநானூறு |
| இ.இ. | - | இடம் குறிக்கப்படவில்லை |
| குறுந். | - | குறுந்தொகை |
| சிறுபாண. | - | சிறுபாணாற்றுப்படை |
| தொ.ஆ. | - | தொகுப்பு ஆசிரியர் |
| தொ.ஆசி. | - | தொகுப்பு ஆசிரியர்கள் |
| தொகு. | - | தொகுப்பு நூல் |
| நற். | - | நற்றிணை |
| ப. | - | பக்கம் |
| பக். | - | பக்கங்கள் |
| பதிற். | - | பதிற்றுப்பத்து |
| பதி.ஆ. | - | பதிப்பு ஆசிரியர் |
| பதி.ஆசி. | - | பதிப்பு ஆசிரியர்கள் |
| புறம். | - | புறநானூறு |
| பா.எ. | - | பாடல் எண் |
| பொருந. | - | பொருநராற்றுப்படை |
| மலை. | - | மலைபடுகடாம் |
| மு.நூ | - | முன்னர் குறிப்பிட்ட நூல் |
| மேலது. | - | மேலே குறிப்பிட்ட நூல் |
| மொ.நூ. | - | மொழி பெயர்ப்பு நூல் |
| வி. | - | விடுதலை |

## பொருளடக்கம்

## ஆய்வு முன்னுரை

தமிழ்ச் சமூக வரலாற்றில் நீண்ட வாசிப்பு மரபைப் பெற்றுள்ள நூல் சங்க இலக்கியம். இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முந்தைய தமிழ்ச் சமூகத்தின் அடையாளத்தைச் சுமந்து நிற்கும் சங்க இலக்கியம், தமிழக வரலாற்றில் முதன்மையான பங்கு வகிக்கின்றது. இத்தகைய பெருமை வாய்ந்த சங்க இலக்கிய வாசிப்பின் தொடக்கம் சங்க காலத்திலிருந்தே ஆரம்பித்திருக்கின்றது. தொகுக்கப்பட்ட காலத்திற்கு முன்பும் பின்பும் சுமார் ஆயிரம் ஆண்டுகள் புழக்கத்தில் இருந்த பிரதிகள் தொகுத்து ஒரு வடிவமாகக் கொடுக்கும் நிலையில் ஆயிரம் ஆண்டுகள் கழித்து இப்பிரதிகளை உரையாசிரியர்கள் வாசிக்கிறார்கள். அதன் பிறகு ஐந்நூறு ஆண்டுகளில் சமூகத்தில் ஏற்பட்ட வியத்தகு மாற்றங்களில் பழம்பிரதிகளின் வாசிப்பு வேறு பரிமாணத்திற்கு இட்டுச் சென்றது.

1887-இல் அச்சுக்கு வரத் தொடங்கிய சங்க இலக்கியம் 1940-இல் முழுமையுற்றது எனலாம். பாட்டும் தொகையும் என்று அறியப்பட்ட இச்செந்நெறி இலக்கிய மரபு ‘சங்க இலக்கியம்’ என்னும் தொடரால் அறியப்படலாயிற்று. இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் சங்க இலக்கியம் குறித்த ஆய்வுகள் வெளிவரத் தொடங்கின.

புலமையாளர்களிடம் மட்டுமே அறியப்பட்டதாக இருந்த சங்க இலக்கியம் 1940 களுக்குப் பிறகு பொதுவெளியில் விரிவாக அறியப்பட்டது, வாசிக்கப்பட்டது. இதன் காரணமாகச் சங்க இலக்கியம் குறித்த புரிதல், உரையாடல், சொல்லாடல், மதிப்பீடு போன்றவை சங்க இலக்கிய வாசிப்பின் வழியே நிகழ்ந்தன. இதன் விளைவாக இனம், மொழி, நாடு, தமிழர் பண்பாடு, தமிழர் வரலாறு என்ற அடையாளங்களைக் கண்டெடுத்துப் பேசும் வாய்ப்புகளை உருவாக்கியது. சங்க இலக்கியத்தை இலக்கியம் என்ற வரையறையிலிருந்து மாற்றி அதனை ஒரு சமூக வரலாற்றுக்கான தரவாகச் சங்க இலக்கிய வாசிப்பு கொண்டு சென்றது.

இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் உருப்பெற்று வளர்ந்த திராவிட இயக்கம் தமது அடையாளங்களைச் செவ்விலக்கியங்களின் மூலமாகக் கட்டமைக்க முனைந்தது. இச்செயல்பாட்டிற்குச் சங்க இலக்கியம் பெரிதும் உதவியது என்று கூறலாம். தமிழர்களின் பல்வேறு வகையான செயல்பாடுகளைச் சங்க இலக்கியப் பாடல்களிலுள்ள செய்திகளின் மூலம் திராவிட இயக்கச் சார்பாளர்கள் வெளிப்படுத்தினர். திராவிட இயக்கத்தின் மேடைப் பேச்சாளர்கள் சங்க இலக்கியம் குறித்த விரிவான செய்திகளைத் தம் மேடைப்

பேச்சுக்கள் மற்றும் எழுத்துக்களின் மூலமாக நிகழ்த்தினர். மேலும், தமிழர் வரலாறு, பண்பாடு, தமிழர்களின் பல்வேறு வகையான சிந்தனை மரபுகள் ஆகிய தகவல்களைச் சங்க இலக்கியத்தில் இருந்து காட்டத்தொடங்கினர். இவ்வகையில் தமிழினத்தின் அடையாளமாகச் சங்க இலக்கியம் புரிந்து கொள்ளப்பட்டது. இவ்வகையில் சங்க இலக்கியக் கருத்துக்களைத் திராவிட இயக்கம் பொதுவெளியில் பேசியதை எழுதியதைத் திராவிடச் சிந்தனையின் அடிப்படையில் ஆராயும் விதமாக இந்த ஆய்வு அமைகின்றது.

**ஆய்வுத் தலைப்பு**

**“சங்க இலக்கியம் - திராவிட இயக்க வாசிப்பு”** என்பது இந்த ஆய்வின் தலைப்பாகும்.

**ஆய்வு நோக்கம்**

சங்க இலக்கியம் பற்றியான திராவிட இயக்கத்தின் விமர்சனங்களையும் இவ்வியக்கம் தமது அடையாளங்களைச் சங்க இலக்கியம் மூலமாகக் கட்டமைத்ததையும் தமிழ்த் தேசிய இனத்தின் அடையாளமாகச் சங்க இலக்கியம் எடுத்துக் கொள்ளப்பட்டதையும் ஆழமாக ஆராய்ந்து, ஆராய்ந்ததைத் தகுந்த சான்றுகளுடன் அணுகி அறிந்து, அறிந்ததை உணர்த்துதலே இந்த ஆய்வின் நோக்கமாகும்.

**கருதுகோள்**

- சங்க இலக்கியம் என்ற சொல்லாடலில் ‘சங்கம்’ என்பதே தமிழர்களின் தொன்மையைப் பறைசாற்ற உருவாக்கப்பட்ட வார்த்தையாக இருக்கலாம். சங்கம் குறித்தும் சங்க காலத்தில் இயற்றப்பட்ட பனுவல்கள் பற்றியும் பல்வேறு இயக்கங்கள் வெவ்வேறு கோணத்தில் வாசித்திருக்கலாம். குறிப்பாகத் திராவிட இயக்கம் தன்னுடைய வளர்ச்சிக்காகத் தமிழ் இலக்கியங்களைப் பயன்படுத்தியிருக்கலாம்.
- தமிழகத்தில் அரசியல் ரீதியாக ஆட்சியைக் கைப்பற்ற மரபிலக்கியங்களை மறுவாசிப்பிற்கு உட்படுத்தியிருக்கலாம்.
- தமிழர் திராவிடர் வரலாற்றை உலகறியச் செய்ய சங்க இலக்கியத்தை முன்னெடுத்திருக்கலாம்.
- அறிவியல் தொழில் நுட்பத்தின் விளைவாக எழுந்த முற்போக்குச் சிந்தனையால் சங்க இலக்கியத்தை விவாதப் பொருளாக்கியிருக்கலாம்.

இவ்வாறு பல முன்மொழிவுகளுடன் இந்த ஆய்வின் கருதுகோள் அமைகிறது.

**ஆய்வு முன்னோடிகள்**

- இராசேந்திரன்.சே., - தமிழ்க் கவிதையில் திராவிட இயக்கத்தின் தாக்கம், பூமணி பதிப்பகம், சென்னை -1985.

- நாராயணன்.இரா., - சங்க இலக்கிய அரசியல், காவ்யா, சென்னை - 2007.

**ஆய்வு எல்லையும் பரப்பும் (1916 – 1973)**

தென்னிந்திய நல உரிமைச் சங்கம் உருவான காலம் முதல் பெரியார் மறைந்த காலம் வரை பெரியார், சி.என்.அண்ணாதுரை, மு.கருணாநிதி ஆகிய மூவரின் பேச்சுக்கள், சொற்பொழிவுகள், உரையாடல்கள், எழுத்துக்கள், நேர்காணல்கள் அடங்கிய நூல்கள், இதழ்கள் போன்றவைகளை முதன்மையாகக் கொண்டு இந்த ஆய்வின் எல்லை வரையறுக்கப்பட்டுள்ளது.

**ஆய்வுத் தரவுகள்**

இந்த ஆய்வின் தரவுகள் இருவகையில் அமைகின்றன. அவை,

1.முதன்மைத் தரவுகள்

2.துணைமைத் தரவுகள்

**முதன்மைத் தரவுகள்**

பெரியார், சி.என்.அண்ணாதுரை, மு.கருணாநிதி ஆகியோரின் சொற்பொழிவுகள் அடங்கியத் தொகுப்புக்கள், கடிதங்கள், சட்டமன்ற உரைகள், நூல்கள் போன்றவை முதன்மைத் தரவுகளாக அமைகின்றன.

1. ஆனைமுத்து.வே. (தொ.ஆ.) : பெரியாரின் ஈ.வெ.ரா.சிந்தனைகள் (தொகுதி 1,2,3) சிந்தனையாளர் கழகம், திருச்சி – 1974.

2. கருணாநிதி.மு. : சங்கத் தமிழ், ராக்ஃபோர்ட் பப்ளிகேஷன்ஸ், சென்னை,

இரண்டாம் பதிப்பு, 1987.

3. பரிமணம்.அ.மா. பாலசுப்பிரமணியன்.கு.வெ. (ப.ஆசி.) : சங்க இலக்கியத் தொகுப்பு (எட்டுத்தொகை, பத்துப்பாட்டு) நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்., சென்னை, முதற்பதிப்பு, 2004.

4. மெய்யப்பன் (ப.ஆ.) : அண்ணாவின் சட்டசபை சொற்பொழிவுகள், (தொகுதி - 1, 2) மணிவாசகர் பதிப்பகம், சென்னை, மறுபதிப்பு, 1998.

5. ……. : தம்பிக்கு அண்ணாவின் கடிதங்கள், (தொகுதி: 1-7) பூம்புகார் பதிப்பகம், சென்னை, 2002.

6. …….. : பேரறிஞர் அண்ணாவின் சொற்பொழிவுகள், (தொகுதி : 1, 2) பூம்புகார் பதிப்பகம் சென்னை மூன்றாம் பதிப்பு, 2011.

7. …….. : கலைஞர் கடிதம், (தொகுதி.1-10) அபிராமி நிலையம் சென்னை,1990.

8. …….. : கலைஞரின் சட்டமன்ற உரைகள் பாகம்: 1, 2 தமிழ்க்கனி பதிப்பகம், சென்னை முதற்பதிப்பு, 2008.

**துணைமைத் தரவுகள்**

இந்த ஆய்வுப் பொருள் தொடர்பாக வெளிவந்துள்ள ஆராய்ச்சி மற்றும் திறனாய்வு நூல்கள், திராவிட இயக்க ஆய்வாளர்களின் நூல்கள், ஆய்வேடுகள், கட்டுரைகள், இதழ்கள், அகராதிகள் ஆகியன இந்த ஆய்வின் துணைமைத் தரவுகளாக அமைகின்றன.

**ஆய்வு அணுகுமுறைகள்**

இந்த ஆய்வானது விளக்கமுறைத் திறனாய்வு (Descriptive criticism) மற்றும் வரலாற்று முறைத் திறனாய்வு (Historical Approach) ஆகிய ஆய்வு நெறிகளின் அடிப்படையில் அணுகப்பட்டுள்ளது.

**ஆய்வுத்திட்டம்**

**"சங்க இலக்கியம் - திராவிட இயக்க வாசிப்பு"** என்னும் இந்த ஆய்வேடு முன்னுரை, முடிவுரை நீங்கலாக நான்கு இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது.

ஆய்வு முன்னுரை

1. தமிழ்ச் சமூக வரலாற்றில் சங்க இலக்கிய வாசிப்பு
2. திராவிட கருத்துநிலை நிறுவனர்களின் இலக்கியக் கோட்பாடுகளும் சங்க இலக்கிய வாசிப்பும்
3. இரண்டாம் கட்டத் திராவிட இயக்கமும் சங்க இலக்கிய வாசிப்பும்
4. திராவிட இயக்க ஆய்வாளர்களின் சங்க இலக்கிய வாசிப்பு

ஆய்வு மதிப்பீடு

என்பனவாகும்.

**ஆய்வு அறிமுகம்**

ஆய்வு அறிமுகம் என்னும் பகுதி ஆய்வு விளக்கம், ஆய்வுத் தலைப்பு, ஆய்வு நோக்கம், கருதுகோள், ஆய்வு முன்னோடிகள், ஆய்வு எல்லையும் பரப்பும், ஆய்வுத் தரவுகள், ஆய்வு அணுகுமுறைகள், ஆய்வுப் பகுப்பும் சுருக்கமும் ஆகியவற்றை விளக்குகிறது.

**இயல் - 1 : தமிழ்ச் சமூக வரலாற்றில் சங்க இலக்கிய வாசிப்பு**

வாசிப்பு – விளக்கம், சங்க இலக்கிய வாசிப்பு, சங்க இலக்கியம், சங்க இலக்கிய வாசிப்பின் தொடக்கம், தொகுப்பாளர்களின் சங்க இலக்கிய வாசிப்பு, உரையாசிரியர்களின் சங்க இலக்கிய வாசிப்பு, சங்க இலக்கிய பதிப்பாளர்களின் வாசிப்பு, பதிப்புக்குப் பின் சங்க இலக்கிய வாசிப்பு, இந்திய விடுதலை இயக்கமும் சங்க இலக்கிய வாசிப்பும் - கே.ஏ.நீலகண்ட சாஸ்திரி, ரா.இராகவையங்கார், எம்.சீனிவாச ஐயங்கார், சாமி.சிதம்பரனார், எஸ்.வையாபுரிப்பிள்ளை, சங்க இலக்கியம் சைவ சமய வாசிப்பு, சங்க இலக்கியம் திராவிட இயக்க வாசிப்பு, சங்க இலக்கியம் மார்க்சிய வாசிப்பு, சாதிய இயக்கங்களின் சங்க இலக்கிய வாசிப்பு - சைவ வேளாளர், தேவேந்திர

குல வேளாளர், மறவர், அருந்ததியர், தலித் மக்கள் போன்ற பிரிவினரின் சங்க இலக்கியம் குறித்த விவாதம் செய்திகளை உள்ளடக்கி இவ்வியல் ஆராய்கிறது.

**இயல் - 2 : திராவிட கருத்துநிலை நிறுவனர்களின் இலக்கியக் கோட்பாடுகளும் சங்க இலக்கிய வாசிப்பும்**

திராவிடம் - சொல்லும் பொருளும், திராவிடம் - மூவகையான கருத்துக்கள், திராவிடம் - பெரியாரின் விளக்கம், பயன்பாட்டில் 'திராவிடம்' என்னும் சொல், திராவிட இயக்கம் வரையறை, தென்னிந்திய மக்களின் சங்கம், திராவிட தேசியம், கருத்துநிலை - விளக்கம், திராவிடக் கருத்து நிலை, பெரியாரின் பண்பாட்டு நடவடிக்கை, திராவிட இயக்கத்தின் நிலைப்பெயர்வும் கருத்து நிலையும், பெரியார் இலக்கியக் கொள்கையும் சங்க இலக்கிய வாசிப்பும், பெரியாரின் இலக்கிய வரையறை, தமிழ்ப் புலவர்கள், பிற இலக்கியங்கள் குறித்துப் பெரியாரின் வாசிப்பு - திருக்குறள் போன்றவை உள்ளடக்கி இந்த இயல் ஆராய்கிறது.

**இயல் - 3 : இரண்டாம் கட்டத் திராவிட இயக்கமும் சங்க இலக்கிய வாசிப்பும்**

பெரியார் - சி.என்.அண்ணாதுரை இடையே கருத்து முரண்பாடு - இன்ப நாள், துக்க நாள், வாரிசு அரசியல், திராவிட முன்னேற்றக் கழகம் தோற்றம், இரண்டாம் கட்டத் திராவிட இயக்கம் - சி.என்.அண்ணாதுரையின் அரசியல் குறிக்கோள், தமிழக வரலாற்றில் தமிழ்மொழி குறித்த சிந்தனை, பெரியாரின் மொழிச் சிந்தனை, மொழிச்சிந்தனையில் பெரியாருக்கும் அண்ணாவுக்குமான முரண்பாடு, சி.என்.அண்ணாதுரையின் இலக்கிய அணுகுமுறை, சி.என்.அண்ணாதுரையின் இலக்கியக் கோட்போடு, சி.என்.அண்ணாதுரையின் சங்க இலக்கிய வாசிப்பு - பண்டைத் தமிழரின் சிறப்பு, சங்க இலக்கியம் வெகுசன மக்களின் இலக்கியம், மதச்சார்பற்ற இலக்கியம், ஆரிய திராவிடக் கலப்பு, சங்க காலம் வளமான பொற்காலம், ஆரியர் உயர்வும் தமிழர் தாழ்வும், சமகால மக்களுக்கு வளமான பண்டைய தமிழகம், மறக்குடிப் பெண்கள், பல்வேறு வகையான போர்க்கருவிகள், சி.என்.அண்ணாதுரையின் சங்க இலக்கிய காட்சிகள், சி.என்.அண்ணாதுரை போற்றிய இலக்கியங்கள் - சங்க இலக்கியம், சிலப்பதிகாரம், திருக்குறள், கலிங்கத்துப்பரணி, மு.கருணாநிதியின் இலக்கிய வாசிப்பு போன்றவை குறித்து இந்த இயல் ஆராய்கிறது.

**இயல் - 4 : திராவிட இயக்க ஆய்வாளர்களின் சங்க இலக்கிய வாசிப்பு**

சி.இலக்குவனார் - சங்க இலக்கிய வாசிப்பு, பழந்தமிழரின் பெருமை, சங்க இலக்கியத்தின் தொன்மை, தமிழ் மொழியின் தொன்மை, தமிழரின் பெருமை,

தமிழ்ச்சங்கம், ஊர்ப்பெயர்கள், பண்டைத் தமிழரின் வாழ்க்கை முறை, வைதீகக் கலப்பால் ஏற்பட்ட பிரிவுகள், பண்டைத் தமிழரின் கடவுள் நம்பிக்கை, கா.அப்பாத்துரையார் - சங்க இலக்கிய வாசிப்பு, பண்டைத் தமிழரின் போர் நெறி, திராவிட நாகரிகத்தின் பெருமை, பண்டைத் தமிழரின் வீரம், இன்றையத் தமிழர் மரபு, தமிழர்களுக்கான வரலாறு, தமிழகத்தின் வரலாறு, திராவிட நாகரிகத்தின் தொன்மை, பண்டைத் தமிழரின் வாணிக உறவு, திராவிட தேசியம், மு.வரதராசனார் - சங்க இலக்கிய வாசிப்பு, பண்டைத் தமிழரின் நாகரிகச் சிறப்பு, பண்டைத் தமிழரின் வீரம், பண்டைத் தமிழரின் மானம், தமிழ்ச்சங்கம், கா.கோவிந்தன் - சங்க இலக்கிய வாசிப்பு, சேர, சோழ, பாண்டிய அரசுகளின் தொன்மை, பண்டைய மன்னர்களின் ஆட்சி எல்லை (காஞ்சிபுரம்), குமரி முதல் வேங்கடம் வரை, ஊர்ப் பெயர்கள், ஊர்ப் பெயர்கள் சமஸ்கிருதத்தால் ஏற்பட்ட மாற்றம், சங்க காலப் புலவர் (மாமூலனார்), சங்க காலம், லெ.ப.கரு.இராமநாதன் செட்டியார் - சங்க இலக்கிய வாசிப்பு, சங்கத் தமிழரின் பெருமை, பண்டைத் தமிழரின் கல்விச் சிறப்பு, சங்க காலப் பெண்களின் கல்விச் சிறப்பு, பண்டைத் தமிழரின் வாணிகச் சிறப்பு, பண்டைய தமிழரின் வரலாறு, ச.சோமசுந்தர பாரதியார் - சங்க இலக்கிய வாசிப்பு, பழந்தமிழ் நாகரிகத்தின் பெருமைகள், பண்டைத் தமிழரின் திருமண முறைகள், ந.சி.கந்தையா பிள்ளை – சங்க இலக்கிய வாசிப்பு, நாகரிகத்தின் முன்னோடி, தமிழர் x ஆரியர், தமிழ் மொழியின் தனித்தன்மை, மயிலை சீனி.வேங்கடசாமி – சங்க இலக்கிய வாசிப்பு, கால ஆராய்ச்சி, ஐயர் என்னும் சொல்லின் பொருள், திராவிட – ஆரியக் கலப்பு, தமிழரின் பண்பாடு, பழங்காலத் தமிழர் வாணிகம், பண்டமாற்று முறை, நெசவுத்தொழில், அணிகலன்கள், மூவேந்தர்களின் சிறப்புகள், மறைமலையடிகள், தேவநேயப் பாவாணர் போன்றவைகளை உள்ளடக்கி இவ்வியல் ஆராய்கிறது.

**ஆய்வு மதிப்பீடு** என்னும் பகுதியில் மேற்கண்ட **“சங்க இலக்கியம் - திராவிட இயக்க வாசிப்பு”** என்னும் தலைப்பின் கீழ் முன்னுரை நீங்கலாக நான்கு இயல்களில் ஆராயப்பட்ட முடிவுகள் தொகுத்துத் தரப்பட்டுள்ளன. அதனைத் தொடர்ந்து மேலாய்வுக் களங்கள் கொடுக்கப்பட்டுள்ளன.

ஆய்வேட்டின் இறுதியில் ஆய்வுக்குப் பயன்பட்ட நூல்களும் கட்டுரைகளும் அகரநிரலில் தொகுத்துக் கூறப்பட்டுள்ளன.

# 1. தமிழ்ச் சமூக வரலாற்றில் சங்க இலக்கிய வாசிப்பு

1.1. வாசிப்பு – விளக்கம்

1.2. சங்க இலக்கிய வாசிப்பு

1.3. சங்க இலக்கியம்

1.4. சங்க இலக்கிய வாசிப்பின் தொடக்கம்

1.5. தொகுப்பாளர்களின் சங்க இலக்கிய வாசிப்பு

1.6. உரையாசிரியர்களின் சங்க இலக்கிய வாசிப்பு

1.7. சங்க இலக்கிய பதிப்பாளர்களின் வாசிப்பு

1.8. பதிப்புக்குப் பின் சங்க இலக்கிய வாசிப்பு

1.9. இந்திய விடுதலை இயக்கமும் சங்க இலக்கிய வாசிப்பும்

1.9.1. கே.ஏ.நீலகண்ட சாஸ்திரி

1.9.2. ரா.இராகவையங்கார்

1.9.3. எம்.சீனிவாச ஐயங்கார்

1.9.4. சாமி.சிதம்பரனார்

1.9.5. எஸ்.வையாபுரிப்பிள்ளை

1.10. சங்க இலக்கியம் சைவ சமய வாசிப்பு

1.11. சங்க இலக்கியம் திராவிட இயக்க வாசிப்பு

1.12. சங்க இலக்கியம் மார்க்சிய வாசிப்பு

1.13. சாதிய இயக்கங்களின் சங்க இலக்கிய வாசிப்பு

1.13.1. சைவ வேளாளர்

1.13.2. தேவேந்திர குல வேளாளர்

1.13.3. மறவர்

1.13.4. அருந்ததியர்

1.13.5. தலித் மக்கள்

# இயல் - 1

## தமிழ்ச் சமூக வரலாற்றில் சங்க இலக்கிய வாசிப்பு

### 1.1. வாசிப்பு – விளக்கம்

வாசிப்பு என்ற சொல்லுக்கான பொருள், படித்தல், கற்றல், ஆராய்தல், மதிப்பீடு செய்தல் போன்றவை ஆகும். தற்போது பெற்றிருக்கிற அறிவில் சிறு மாறுதல்களையும், அனுபவம், பழக்கம் அல்லது பயிற்சி மூலமாகப் பெறுகிற திறமைகள், பழக்க வழக்கங்கள், மனப்பாங்குகள் ஆகியவற்றைப் பெறுகின்ற செயல்முறையையும் வாசிப்பு எனலாம்.

'வாசிப்பு' என்ற சொல், வாசகன் அல்லது ஆய்வாளன், திறனாய்வாளன் ஓர் இலக்கியத்தை எவ்வாறு அணுகுகிறான், புரிந்து கொள்கிறான், ஆராய்கிறான், திறனாய்வு செய்கிறான், என்பதைக் குறிக்கிறது.

### 1.2. சங்க இலக்கிய வாசிப்பு

புலமையாளர்களால் மட்டுமே அறியப்பட்டதாக இருந்த சங்க இலக்கியம், 1940-களுக்கு பிறகு பொதுவெளியில் விரிவாக அறியப்பட்டது. இதன் காரணமாக சங்க இலக்கியம் குறித்த புரிதல், உரையாடல், சொல்லாடல், மதிப்பீடு போன்றவை விரிவடைந்தன. இதன் விளைவாக இனம், மொழி, நாடு, தமிழர் பண்பாடு என்ற அடையாளங்களைக் கண்டெடுத்துப் பேசும் வாய்ப்புகள் உருவாகியது. சங்க இலக்கியத்தை இலக்கியம் என்ற குறுகிய வரையறையிலிருந்து மாற்றி அதனைச் ஒரு சமூக வரலாற்றுக்கான மிக இன்றியமையாத தரவாக உருவாகியது சங்க இலக்கிய வாசிப்பு எனலாம்.

### 1.3. சங்க இலக்கியம்

பாட்டும் தொகையும் சேர்ந்த பதினெட்டு நூல்களைச் 'சங்க இலக்கியம்' என்று குறிப்பிடுவது உண்டு. அவை பல காலங்களில் பல பகுதிகளில் வாழ்ந்த நுண்மாண் நுழைபுலமிக்க புலவர்களால் பாடப்பட்டன என்பர். அவற்றில் அகம், புறம் என்ற இரு கூறுகள் பொருந்தியுள்ளன என்பர்.

“சங்கப் பாடல்கள் படைக்கப்பட்ட காலம் கி.மு. 3ஆம் நூற்றாண்டு என்றும், கி.மு. 6ஆம் நூற்றாண்டுக்குட்பட்டது என்றும் ஆய்வாளர்கள் குறிப்பிடுகின்றனர்.”[1] சங்ககாலம் பற்றி தமிழியல் ஆய்வாளர்களிடையே பல்வேறு கருத்து வேறுபாடுகள் இருக்கின்றன. அக்காலம் பற்றி அவர்கள் கூறுவதாவது, “சங்க இலக்கியத்தில் இடம்பெற்றுள்ள பாடல்கள் யாவும் ஒரே காலத்தில் பாடப்பட்டவை அல்ல, அவை கி.மு மூன்றாம் நூற்றாண்டுகளில் பாடப்பட்டவை என்று நீலகண்ட சாஸ்திரியார், பேராசிரியர் ச.வையாபுரிப் பிள்ளை போன்றோர் முடிவு செய்துள்ளனர். ஐராவதம் மகாதேவன் அவர்களின் தொடக்க காலத்தமிழ்க் கல்வெட்டுகள் என்னும் ஆய்வு நூல் வெளிவந்த பின்னர் சங்கப் பாடல்களின் தொடக்கம் கி.மு. மூன்றாம் நூற்றாண்டாக இருக்கக் கூடும் எனக் கருதப்பட்டது. பேராசிரியர்கள் ஒய். சுப்பராயலுவும், கா. ராஜன் போன்றோர் மேற்கொண்ட அகழாய்வு, தொல்லியல் ஆய்வு முடிவுகளைக் கருத்தில் கொள்ளும் போது, சங்கப்பாடல்களின் தொடக்கம் பெருங்கற்படைக் காலமாக (megalithic age) இருக்கக்கூடும் என்று தெளிவாகிறது. அதாவது கி.மு. ஆறாம் நுற்றாண்டிலிருந்து தொடங்கி, கி.பி. 250 முடியவுள்ள ஒரு நீண்ட கால எல்லையில் சுமார் ஒன்பது நூற்றாண்டுகளில் பல்வேறு காலகட்டங்களில் பாடப்பட்ட பாடல்கள் சங்க இலக்கியம் என்னும் தெளிவு இப்போது பிறந்துள்ளது.”[2] என்கிறார் அ. பாண்டுரங்கன்.

இப்பேரிலக்கியத்தைப் படைத்த புலவர்கள் பல பகுதியைச் சேர்ந்தவர்களாகவும், பல ஊரினைச் சேர்ந்தவர்களாகவும், பல சமூகத்தைச் சேர்ந்தவர்களாகவும், இருந்திருக்கின்றனர். தமிழ்ச் சமூகத்தின் அனைத்துத் தளத்தினரும் இத்தமிழ்ப் பேரிலக்கியத்தில் ஈடுபட்டு உழைத்துள்ளனர். சங்க இலக்கியம் மக்கள் இலக்கியமாகவும், கொண்டாடப்படுகிறது. மன்னர்களைப் புகழ்ந்து பாடப்பட்ட பாடல்கள் தொகை நூல்களில் இடம் பெற்றிருப்பினும் அவை அரசவைக் கவிஞர்களால் மட்டும் பாடப்பட்ட பாடல்களின் தொகுப்பு அல்ல என்பதைப் புரிந்துகொள்ள முடிகின்றது.

### 1.4. சங்க இலக்கிய வாசிப்பின் தொடக்கம்

சங்க இலக்கிய ‘வாசிப்பு’ சங்க காலத்திலேயே தொடங்கி விட்டது எனலாம். “பண்டைக் காலத்து தமிழ் இலக்கியத்தைச் சங்க இலக்கியம் என்று சொல்வது தமிழ் மரபு. பாண்டிய மன்னரின் ஆதரவில் மூன்று தமிழ்ச் சங்கங்கள் வெவ்வேறு காலங்களில் தோன்றி நூலாராய்ச்சியில் ஈடுபட்டு, நயமுள்ளவைகளைப் போற்றிப் பாராட்டியும் குற்றமுள்ளவைகளை ஏற்க மறுத்தும், இயங்கி, வெகு காலத்திற்குப் பின் மறைந்தன

என்று கதைகள் நிலவி வருகின்றன"[3] என்பர். சங்கம் என்ற அமைப்பே, கவிதை ஆராய்ச்சிக் களமாக இருந்திருக்கிறது.

"இந்தக் கதைகளிலிருந்து நாம் தெரிந்து கொள்ள வேண்டிய பொருள் ஒன்று உண்டு. பண்டைக் காலத்தில் நூல்களைப் பற்றியும், இலக்கியத்தைப் பற்றியும் ஆராய்ச்சி நடந்திருக்க வேண்டும். இவ்வித ஆராய்ச்சிக்குப் பேச்சும் வாதமும் கருவிகளாக அமைந்திருக்க வேண்டும். நூல்கள் மிகுந்த கண்டிப்புடன் ஆராயப் பெற்றிருக்க வேண்டும் என்பதையும், பிழைகளையோ குற்றங்களையோ அக்காலத்துப் புலவர் எள்ளளவேனும் அனுமதிக்க மாட்டார் என்பதையும் நக்கீரர், சீத்தலைச் சாத்தனார் போன்றவரைப் பற்றியுள்ள சில கதைகள் தெளிவாகக் காட்டுகின்றன. இலக்கிய மரபையும், இலக்கண விதிகளையும் மீறுவதைக் குற்றம் என்று அவர் கொண்டார்"[4] என்பர். எனவே சங்க இலக்கிய வாசிப்பு என்பது சங்க காலத்திலேயே இருந்திருக்கின்றது என்ற கருத்து உறுதிப்படுகிறது.

"இறையனார் களவியல் உரையில் (1976:6) கடைச்சங்கமிருந்து தமிழாராய்ந்தார் சிறுமேதாவியாரும், சேந்தம்பூதனாரும், அறிவுடையரையனாரும், பெருங்குன்றூர்க்கிழாரும், இளந்திருமாறனும், மதுரை மருதனிளநாகனாரும், கணக்காயனார் மகனார் நக்கீரனாரும் என இத்தொடக்கத்தார் நாற்பத்தொன்பதின்மர் என்ப"[5] என வரும் உரைக்கூற்று சங்க காலத்தில் புலவர்கள் தமிழாராய்ச்சியில் ஈடுபட்டு இருந்தனர் என்பதை மேலும் தெளிவாக்குகின்றது.

### 1.5. தொகுப்பாளரின் சங்க இலக்கிய வாசிப்பு

சங்க இலக்கியப் பாடல்கள் அகப்பாடல்களாகவும், புறப்பாடல்களாகவும் தொகுக்கப்பட்டுள்ளன. தொகுப்புப் பற்றி உ.வே. சாமிநாதையர் "கி.பி. இரண்டாம் நூற்றாண்டில் இருந்த புலவர்களும் அரசர்களும் தமிழாராய்ச்சியில் ஊக்கங்கொண்டு பழந்தமிழ்ச் செய்யுட்களைத் தொகுக்கத் தொடங்கினர்"[6]என்கிறார்.

சங்கப் பாடல்களின் தொகுப்பு உதிரிப்பாடல்களின் தொகுப்பாக உள்ளது. இப்பாடல்களைப் பாடியவர்கள் சேர, சோழ, பாண்டிய நாட்டினைச் சேர்ந்தவர்கள். அந்நிலப்பகுதியில் வாழக்கூடிய மக்களிடம் வாய்மொழியாக இப்பாடல்கள் இருந்திருக்கின்றன. பிற்காலத் தேவைக் கருதி இப்பாடல்கள் தொகுக்கப்பட்டுள்ளன.

இதனைப் பிற்காலப் பாண்டிய மன்னர்கள் தொகுத்து இருக்கலாம் என்றும் கி.பி. 5-9 ஆம் நூற்றாண்டுகளில் அவை தொகுக்கப்பட்டிருக்கலாம் என்றும் கூறப்படுகின்றன. "தொகுக்கப்பட்ட காலத்திற்கு முன்பு அப்பிரதியின் புழுங்கு காலம் கி.மு. 500 வரை இருக்க முடியும் என்று ஊகிக்க முடிகிறது"[7] என்கிறார் வீ.அரசு.

"தொகுப்பாசிரியர்கள் சங்கப்பாடல்களைத் தொகையாகத் தொகுத்துத் தரும் முயற்சியில் பல குறிப்புகளைக் கூறுகளைப் பாடல்களுடன் சேர்த்துள்ளனர். அவை திணை, துறை சூழலமைவுக் குறிப்புகள், பண், இசை, வண்ணம் தூக்கு முதலியன"[8] பிற்கால வாசிப்பின் விளக்கம் கருதியே இவ்வாறாகச் சேர்த்துள்ளனர் என ஊகிக்கலாம். "தொகுப்பு முயற்சி பாண்டிய நாட்டிலும், சேர நாட்டிலும் நடைபெற்றதாக ஆய்வறிஞர்கள் குறிப்பிடுகின்றனர்."[9]

யானைக்கட்சேய் மாந்தரஞ் சேரலிரும்பொறை, பூரிக்கோ, உக்கிரப்பெருவழுதி, பாண்டியன் மாறன் வழுதி போன்ற தொகை செய்வித்த அரசர் சங்க இலக்கியங்களை ஆராய்ந்து தொகுத்து இருக்கிறார்கள். "சங்கப்பாடல்களிலே பாட்டில் பயின்றுவரும் சிறப்புத் தொடர்களால் பெயர் பெற்ற புலவர் பெருமக்கள் இருபத்தெழுவர் காணப்படுகின்றனர். இவருள் பத்தொன்பது புலவர் பெயர்களுக்குரிய சிறப்புத் தொடர்களைக் கொண்ட பாடல்கள் குறுந்தொகையுள் உள. பிற நூல்களிலும் குறுந்தொகைத் தொடரால் பெயர்பெற்ற புலவர்கள் வருகின்றனர்."[10] பாடல்களை இயற்றிய புலவர்களின் பெயர்களை அறியமுடியாதபோது, தொடர்களைக் கொண்டு பெயரிடுவது வாசிப்பின் ஒரு பகுதியாகும்.

### 1.6. உரையாசிரியர்களின் சங்க இலக்கிய வாசிப்பு

சங்க இலக்கிய பிரதிகள் ஆயிரம் ஆண்டுகள் புழக்கத்தில் இருந்த நிலையில் பின்னர் தொகுத்து ஒரு வடிவமாகக் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இதில் தொகுத்தோரின் இடையீடுகளும் இருந்திருக்கின்றன. எனவே பிரதி முதல் நிலையிலிருந்து இரண்டாம் கட்டத்தை வந்தடைந்து விட்டது. இது தமிழ் மொழியின் வளத்தைப் புரிந்துகொள்ள உதவுகிறது. இதனை ஆயிரம் ஆண்டுகளுக்குப் பிறகு உரையாசிரியர்கள் வாசிக்கிறார்கள். அதில் பழைய பிரதி என்னும் கருத்தாக்கம் உறுதி செய்யப்படுகின்றது. "அவர்களது வாசிப்பில் சமகால ஊடாட்டம் கணிசமாக நடைபெறுகிறது. வடமொழி மரபுகள் தமிழ்ச்சூழலில் செல்வாக்குப் பெற்றிருந்த காலங்களில், உரையாசிரியர்கள்

பழம்பிரதிகளை வாசித்தார்கள். அப்போது வடமொழி மரபு சார்ந்த கருத்தாக்கங்களை இணைத்தே வாசித்தனர். நச்சினார்க்கினியர், பரிமேலழகர் முதலிய பிறர் இவ்வகையில் செயல்பட்டனர். மேலும் உரையாசிரியர்கள் காலம் என்பது 'மதம் ஆதிக்கம்' நிலவிய காலம் ஆகும். பல்வேறு மத முரண்பாடுகள் நடைமுறையில் நிலவிய காலம். மதம் சார்ந்த கருத்தியல்களுக்கும் உரையாசிரியர்கள் ஆட்பட்டார்கள். பழம் பிரதிகள் வாசிப்பில் மத தாக்கமும் ஏற்பட்டது"[11] என்பர்.

"கி.பி.9-ஆம் நூற்றாண்டு தொடங்கி 16-ஆம் நூற்றாண்டு வரையான காலப்பகுதியில் உரைகள் மிகுதியாக உருவாகின. சங்க இலக்கியம் என வழங்கப்படும் பாட்டும் தொகையுமான பனுவல்களுக்கும் இக்காலத்தில் உரைகள் உருவாகின. எட்டுத்தொகையில் நற்றிணை, குறுந்தொகை தவிர பிற அனைத்துத் தொகை நூல்களுக்கும் உரைகள் கிடைக்கின்றன"[12] என்கிறார் அ.சதிஷ். மேலும் அவர் உரை நூல்களை வரிசைப்படுத்துகிறார்.

"
- புறநானூறு, பெயரறியப்படாத உரை, 13-ஆம் நூற்றாண்டு
- பதிற்றுப்பத்து, பெயரறியப்படாத உரை, 13-ஆம் நூற்றாண்டு
- பரிபாடல், பரிமேலழகர் உரை, 13-ஆம் நூற்றாண்டு
- அகநானூறு குறிப்புரை (முதல் 90 பாடல்களுக்கு மட்டும்), 13 ஆம் நூற்றாண்டு, வேறுரை (பாடலின் இடையிடையே 52 பாடல்களுக்கு கிடைக்கும் உரை), 13 ஆம் நூற்றாண்டு
- கலித்தொகை நச்சினார்க்கினியர் உரை, 16 ஆம் நூற்றாண்டு
- பத்துப்பாட்டு நச்சினார்க்கினியர் உரை, 16 ஆம் நூற்றாண்டு இத்துடன் பத்துப்பாட்டின் முதல்பாடலான திருமுருகாற்றுப் படைக்கு மட்டும் வேறுபல உரைகளும் கிடைத்துள்ளன, அவை

  கவிப்பெருமாள் உரை - 11 ஆம் நூற்றாண்டு

  பெயரறியப்படாத உரை - 13 ஆம் நூற்றாண்டு

  பரிமேலழகர் உரை – 13 ஆம் நூற்றாண்டு

பரிதியார் உரை - 15 ஆம் நூற்றாண்டு”[13]

இவ்வாறான உரைகள் என்பதே வாசிப்பின் விளைவாகும். பல்வேறு காலகட்டங்களில் உரையாசிரியர்கள் பலவாறான வாசிப்பைச் சங்க இலக்கியங்களின் மீது நிகழ்த்தியுள்ளனர் எனலாம்.

“உரையாசிரியர்கள் தமிழ் இலக்கியங்களைப் பொருள் விளக்க இரண்டுவிதமான முறையியல்களைப் பின்பற்றியுள்ளனர். தமிழ் அறிவு மரபின் முதன்மையான நூலாகக் கருதப்படும் தொல்காப்பியம் என்னும் பனுவலையும் அதிற்கூறப்பட்டுள்ள அகம், புறம் என்ற வடநூல் அறிவு மரபை அடிப்படையாக வைத்து அறம், பொருள், இன்பம் வீடு என்னும் உறுதிப்பொருளை முழுமையடைய வைக்கும் தன்மையில் உரையெழுதுதல் இவ்விரு மரபுகளே முதன்மையாகத் தொழிற்பட்டுள்ளன.”[14]

“காலம் கடந்து வந்துள்ள பிரதியைச் சமகாலத்தில் எதிர்நோக்கும் இவ்வுரையாசிரியர்கள் தம் காலத்திய மொழி, பண்பாடு, சமூக அமைப்பு, அரசு, கருத்தியல் நிலைகள், ஒழுக்கவியல்கள், ஆகிய தன்மைகளின் அடிப்படையில் மறுவரைவு செய்கின்றனர். இம்மறுவரைவு அல்லது மீள எழுதும் செயல் என்பது வேறு ஒரு கால சமூக அமைப்பு நிலையில் மாறுபடும் என்பதை அறிந்திருந்தனர். எனவேதான் பிரதியை முழுமையான அடிப்படையில் மறுவரைவு செய்யாமல் பிரதிக்குள் உள்நுழைந்து உருவாக்கிக் கொள்ளும் பொருள் செயல்பாட்டிற்கான சில திறப்புகளை மட்டும் இவ்வுரையாசிரியர்கள் உருவாக்கியுள்ளனர் ஐங்குறுநூற்றின் உரையை நோக்க இது தெளிவாக விளங்கும்.”[15] இலக்கியத்திற்கு உரை எழுதுவதை மட்டும் நோக்கமாக கொள்ளாமல் அவ்விலக்கியத்தின் வழி, சம கால சமூகத்தேவையை நிறைவு செய்வதும் உரையாசிரியர்கள் நோக்கமாக இருந்துள்ளது என்பதை அறிந்து கொள்ள முடிகின்றது.

பெயரறியப்படாத உரையாசிரியர்கள் பலரும் அறிவுப் பாரம்பரியத்தின் அடையாளமாகச் சங்க இலக்கிய வாசிப்பின் வெளிப்பாடாக உரை எழுதியுள்ளனர். “அகப்பாடல்களின் தன்மையை உள்வாங்கித் தமக்கான சிந்தனைப் பின்புலத்திலிருந்து உருவாகியுள்ள இப்பெயரறியப்படாத உரைகள் தமிழ் அறிவுப்பாரம்பரியத்தின் மிக முக்கிய அடையாளங்களாகும்.”[16] இவையெல்லாம் சங்க இலக்கிய வாசிப்பின் தொடர் நிகழ்வைக் குறிப்பதாக உள்ளது.

## 1.7. சங்க இலக்கிய பதிப்பாளர்களின் வாசிப்பு

தொடர்ந்து வாசிப்பில் இருந்து வந்த சங்க இலக்கியம் 18-ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் தடைபட்டது. “தமிழ்க் கல்வியில் உயர்நிலையடைந்த மாணவர்களும், வித்துவான்களும், புலவர்களும் தொல்காப்பியம், பத்துப்பாட்டு, எட்டுத்தொகை முதலிய சங்க நூல்களையும் சிலப்பதிகாரம், ,மணிமேகலை, பெருங்கதை முதலிய சங்க காலத்து நூல்களையும், சங்க காலத்துக்குப் பிற்பட்ட நூல்களாகிய பதினெண்கீழ்க்கணக்கு, சீவக சிந்தாமணி, சூளாமணி முதலிய நூல்களையும் பயில்வது தொன்று தொட்டு வந்த வழக்கமாகும். ஆனால் இந்த வழக்கம் 18 ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியிலிருந்து தடைபட்டது. மேற்சொன்ன நூல்களைப் படிக்கக் கூடாதென்று புதிய கருத்து ஒன்று அக்காலத்தில் தோன்றியது”[17] என்பர். சங்க இலக்கிய வாசிப்பின் இடைவெளிக்கான காரணங்களை ஆய்வாளர்கள் பின்வருமாறு விளக்குவர்.

“இந்தத் தவறான கருத்தைப் பரப்பியவர் 18-ஆம் நூற்றாண்டிலிருந்த சுவாமிநாத தேசிகரும், சிவஞான சுவாமிகளும் ஆவர். மிக அரிதாகச் சங்க நூல்களைப் பயின்றுவந்த சிறுபான்மைப் புலவரையும், அவற்றைப் படிக்காமல் தடுத்தவர் இலக்கணக் கொத்து நூலாசிரியராகிய சுவாமிநாத தேசிகர். மிகுந்த சைவப் பற்றுடைய தேசிகர், சங்க நூல்களையும் சமண, பௌத்த வைணவ இலக்கியங்களையும் படிக்கக் கூடாதென்றும் சைவ நூல்களை மட்டுந்தான் படிக்கவேண்டும் என்றும் வற்புறுத்தி எழுதினார். அந்நூல்களைப் படிப்போரை இகழ்ந்து உரைத்தார். அவர் இயற்றிய இலக்கணக்கொத்து என்னும் நூலின் பாயிரத்தில், 7-ஆம் சூத்திரத்தின் விளக்கத்தில் அவர் இவ்வாறு எழுதியுள்ளார்.”[18]

இவ்வாறான இலக்கிய வெறுப்புச் செயல்பாடுகளுக்குக் காரணம் சமயக் காழ்ப்புணர்ச்சியே ஆகும். “சங்க நூல்களையும் சங்கம் மருவிய நூல்களையும் படிப்பவர் சமயப் பற்றற்றவர் என்றும், வீணர்கள் என்றும் பழிக்கப்பட்டனர். சைவ சமயத்தவர் இந்த நூல்களைப் படிக்கக் கூடாதென்று தடுக்கப்பட்டனர். சமயப் பற்றுக் காரணமாக உண்டான இந்தப் புதிய கருத்து தமிழரின் கலைகளுக்கும் பண்பாட்டுக்கும் பேராபத்தாக இருந்தது. தமிழ் மொழிக்கே ஆபத்தாக இருந்தது”[19] என்றும் கருதுவர்.

“சைவர் சைவசமய நூல்களைத்தான் படிக்க வேண்டும் சமயச் சார்பற்ற சங்க நூல்களையும் சமணர், பௌத்தர், வைணவர் முதலியவர் இயற்றிய இலக்கிய

நூல்களையும் படிப்பது கூடாது. அந்நூல்களைக் கற்பது வாழ்நாளை வீணாளாகக் கழிப்பதாகும்"[20] என்பது சுவாமிநாத தேசிகரின் கருத்தாகும். "இதே கருத்தை இவர் காலத்தில் இருந்த சிவஞான சுவாமிகளும் வலியுறுத்தினார். சிவஞான சுவாமிகள் தாம் இயற்றிய சோமேசர் முதுமொழி வெண்பாவில்,

சேக்கிழார் சிந்தா மணிப்பயிற்சி தீதெனவே

தூக்கியுப தேசித்தார் சோமேசா - நோக்கில்

பயனிச் சொல் பாராட் டுவானை மகனெனல்

மக்கட் பதடி யெனல்

என்று கூறினார். இதில் சமண சமய நூலாகிய சிந்தாமணிக் காவியத்தை மட்டும் படிக்கக் கூடாதென்று சொன்னபோதிலும், ஏனைய நூல்களையும் விலக்கியதாகக் கருதப்பட்டது."[21] சைவமடங்களைச் சார்ந்த புலவர்கள், சங்க இலக்கியக் கல்வியைத் தடைசெய்தனர் என்று தமிழியல் ஆய்வாளர்களில் சிலர் கருதுகின்றனர். சங்க இலக்கியப் பரவலாக்கத்தை சைவ மடம் சார்ந்த கல்வியமைப்பு மட்டுப்படுத்தியே வந்திருக்கிறது.

சிவஞான சுவாமிகள் "பதினெட்டாம் நூற்றாண்டில் இருந்தவர். சுவாமிநாத தேசிகர் 18-ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் இருந்தவர். சிவஞான சுவாமிகள் அந்த நூற்றாண்டில் வாழ்ந்து 1785 - ஆம் ஆண்டு காலமானார். இவர்கள் மாணவராகிய கச்சியப்ப முனிவர் 1790 - ஆம் ஆண்டில் காலமானார். இவர்கள் செல்வாக்கடைந்திருந்த கல்வி வளர்ச்சிக்குத் தாயகமாயிருந்த சைவ மடங்களைச் சேர்ந்தவர்கள். இவர்கள் பரப்பி வந்த இந்தக் கருத்து, சங்க இலக்கியங்களையும் சமண பௌத்த இலக்கியங்களையும் சைவர்கள் படிக்கக் கூடாதென்னும் கொள்கை, அந்தக் காலத்தில் செல்வாக்கடைந்திருந்தது. இவர்களிடம் கல்வி பயின்ற மாணவர்கள் பலரும் இக்கொள்கையை ஆதரித்துச் சங்க நூல்களையும் மணிமேகலை சிலப்பதிகாரம் முதலிய இலக்கிய நூல்களையும் மாணவர்களுக்குப் பாடஞ் சொல்வதை நிறுத்திக் கொண்டனர்."[22] இதனால், நெடுங்காலம் தொடர்ந்து வந்த சங்க இலக்கிய வாசிப்பு தடைபட்டது.

"குறுகிய நோக்கத்துடன் சைவ சமயக் கண்கொண்டு பார்க்கிறவர்களுக்குச் சிறந்ததாகத் தோன்றுகிற இந்தக்கருத்து, பரந்து விரிந்த நோக்கத்துடன் தமிழ் மொழி, தமிழ் இலக்கியம் என்னும் கண்கொண்டு பார்க்கும்போது எவ்வளவு ஆபத்தானது என்பது

நன்கு தெரியும். தமிழரின் பண்டைய நாகரிகம், கலைப் பண்பாடுகளை அடியோடு அழித்து ஒழிப்பதற்கு அடிப்படையாக இருந்தது இந்தக் கொள்கை. இது 19 - ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி வரையில் நிலைத்திருந்தது. 18 - ஆம் நூற்றாண்டில் தோன்றிய இந்த இயக்கம் நாலைந்து தலைமுறை வரையில், ஏறக்குறைய ஒரு நூற்றாண்டு வரையில் நீடித்திருந்தது. இந்தக் குறுகிய தவறான கொள்கையின் காரணமாகவே சில பழந்தமிழ் நூல்கள் மறைந்துவிட்டன. மிக அருமையாகச் சிலரிடத்தில் மட்டும் இருந்த ஏட்டுச் சுவடிகள், இந்த இயக்கம் காரணமாக மறைந்துவிட்டன. சிதிலமான ஏட்டிலிருந்து பெயர்த்தெழுதி வைக்காத காரணத்தினால் அவை முழுவதும் அழிந்து விட்டன. வளையாபதி, தகடூர் யாத்திரை என்னும் நூல்கள் இந்தக் குறுகியக் கொள்கை காரணமாக அழிந்து போன நூல்களாகும்”[23] என்பர்.

இதைபற்றி பெருமாள் முருகன் குறிப்பிடும்போது, “19 - ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் இந்நூல்களைப் பயின்றோர் இருந்தனரா என்பது சந்தேகமே. இன்னும் கொஞ்சம் முன்னோக்கிப் போய் 17 - ஆம் நூற்றாண்டைப் பார்க்கலாம், அப்போது தோன்றிய இலக்கண நூல்களில் முக்கியமானது ‘இலக்கணக் கொத்து’. இதை இயற்றியவர் சாமிநாத தேசிகர். அந்த நூலுக்கான உரையையும் அவரே எழுதியுள்ளார். அவ்வுரையில் சங்க இலக்கியங்களைப் படிக்கக் கூடாது என்று கூறுகிறார்.”[24] என்று கருத்துரைக்கிறார். படிக்கத் தகுந்த, படிக்கத் தகாத நூல்கள் என்று சிலவற்றைத் தேசிகர் பட்டியலிடுவதையும் பின்வருமாறு எடுத்துக்காட்டுகிறார்.

“படிக்கக் கூடாத நூல்கள் என்று அவர் தரும் பட்டியல் இதுÉ நன்னூல், சின்னூல், அகப்பொருள், யாப்பருங்கலக் காரிகை, தண்டியலங்காரம், பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண் கீழ்க்கணக்கு, இராமன் கதை, நளன் கதை, அரிச்சந்திரன் கதை. படிக்கவேண்டிய நூல்கள் என அவர் தரும் பட்டியல் இது: தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா, பட்டினத்துப் பிள்ளையார் பாடல்”[25] எனப் பட்டியலிடுவதாகப் பெருமாள் முருகன் குறிப்பிடுகிறார்.

மேலும், சாமிநாத தேசிகர் “பத்துப்பாட்டு, எட்டுத்தொகை முதலிய நூல்களைப் படிப்பவர்களைப் பற்றிப் “பாற்கடலுள் பிறந்து அதனுள் வாழும் மீன்கள் அப்பாலை விரும்பாது வேறு பலவற்றை விரும்புதல் போல” என்று கூறுகிறார். அதாவது, சங்க இலக்கியம் உள்ளிட்ட பழைய நூல்கள், அழுக்குகள் என்பது அவர் அபிப்ராயம்.

தேவாரம், திருவாசகம் முதலிய சைவ நூல்களையே அவர் பால் என்று கருதுகிறார்."[26] "17-ஆம் நூற்றாண்டு இலக்கிய வரலாற்றில் சைவம் சார்ந்த சிற்றிலக்கியங்கள், இலக்கண நூல்கள் ஆகியவற்றுக்கு முக்கிய இடம் உண்டு. சைவ ஆதிக்கம் மிகுந்திருந்த அந்தச் சூழலில், பிற மதம் சார்ந்த நூல்களை அழுக்குகள் என்று புறந்தள்ளும் பார்வை, கருத்து நிலவியிருக்கிறது என்பதற்கு சாமிநாத தேசிகரின் கூற்றே சான்றாகிறது"[27] என்பர்.

இவைபோன்ற காரணங்களால்தான் 18 - ஆம் நூற்றாண்டில் சங்க இலக்கிய பயிற்சி என்பது படிப்படியாகக் குறைந்துவந்திருக்கிறது. அவற்றைப் படியெடுத்துப் புதிய ஓலைகளில் எழுதுவோர் இல்லை. இருந்த பழைய ஓலைச்சுவடிகள் படியெடுப்பாரின்றி அழியும் நிலை ஏற்பட்டிருக்கிறது. "19-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் மீட்டுருவாக்கம் செய்யும் வேலையில் அறிஞர்கள் இறங்கிய பிறகே, அவற்றுக்கு முக்கியத்துவம் உருவாகியிருக்கிறது. கிட்டத்தட்ட இரண்டு நூற்றாண்டுகளைக் கடந்துவரச் சங்க இலக்கிய நூல்கள் பெரும்பாடு பட்டிருக்கின்றன."[28] என்பர்.

19 - ஆம் நூற்றாண்டில் தமிழ்கூறுநல்லுலகின் தலைசிறந்த ஆசிரியர் என்று போற்றப் பெற்ற மகாவித்வான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை திருவாவடுதுறை ஆதினத்தின் வித்வானாக இருந்தார். உ.வே.சாமிநாதையர் இவரிடம் பாடம் கேட்டு வித்வானானார். மகாவித்வான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் தம் மாணவர்களுக்குச் சங்க இலக்கியங்களையும், மணிமேகலை, சிலப்பதிகாரம் முதலிய நூல்களையும் பாடம் சொல்லவில்லை. ஏனென்றால், "அந்த நூல்களைப் படிக்கக் கூடாது என்ற கொள்கை அக்காலத்துச் சைவ மடங்களிலும் புலவர்களிடத்தும் பரவியிருந்தது. வேறு சைவ வைணவப் புலவர்களும் சங்க நூல்களை அக்காலத்தில் பாடஞ்சொல்லவில்லை. சங்க இலக்கியங்களைப் பிற்காலத்தில் அச்சிற் பதிப்பித்த டாக்டர் உ.வே. சாமிநாதையர் அவர்களுக்கும் அக்காலத்தில் சங்க நூல்களின் பெயர்கூடத் தெரியாதிருந்தது என்றால், இந்த நூல்கள் எவ்வளவு கட்டுப்பாடாகத் திட்டமிடப்பட்டுப் புறக்கணிக்கப் பட்டிருந்தன என்பதனை யூகித்தறியலாம்"[29] என்பர்.

மேற்கண்ட செய்திகளிலிருந்து சைவ வைணவ சமயத்தாராகிய வைதீகச் சமயத்தார் சங்க இலக்கியங்களையும், பௌத்த இலக்கியங்களையும் எவ்வாறு தூற்றியிருப்பார்கள் என்றும், அவை அழிய எவ்வாறு வழி வகுத்திருப்பார்கள் என்றும் அடையாளங் கண்டு கொள்ளலாம். இவற்றிற்கெல்லாம் சமயக் காழ்ப்பே காரணம்

எனலாம். “சங்க நூல்களைப் படிக்கக் கூடாதென்ற இயக்கம் நீடித்திருந்து. அச்சுப் புத்தகங்களும் அக்காலத்தில் வெளிவராமலிருந்திருக்குமானால், முன்னரே மறைந்து போன நூல்கள் போக இப்போது கிடைத்துள்ள பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண் கீழ்கணக்கு, சிலப்பதிகாரம், மணிமேகலை, பெருங்கதை முதலிய இலக்கியச் செல்வங்களும் மறைந்துபோய், நற்காலமாக அந்தக் குறுகிய நோக்கமுள்ள தவறான கருத்து சென்ற நூற்றாண்டிலேயே தடுக்கப்பட்டு விட்டது”[30] என்பர்.

சங்க இலக்கிய எதிர்ப்பு என்பது புறக்கணிப்பு வழியாகவே தொடர்ந்து நடைபெற்று வந்தது. “18 - ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியிலேயே சாமிநாத தேசிகர், சிவஞான சுவாமிகள் காலம் முதல் ஒரு நூற்றாண்டு காலம் வரையில் இருந்து வந்த சங்க நூல்களையும் பௌத்த, சமணக் காவியங்களையும் கற்றல் கூடாது என்னும் வழக்கத்தைச் சேலம் இராமசுவாமி முதலியார் அவர்கள் உ.வே. சாமிநாதையரைக் கொண்டு தகர்த்தெறிந்தார்”[31] என்பர். இதன் பயனாக 19 - ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் ஓலைச்சுவடிகளில் இருந்த சங்க இலக்கியங்களை அச்சுக்குக் கொண்டுவர முயன்றனர். “1887 - இல் தமிழ் இலக்கியப் பரப்பின் உயரிய இலக்கியமான சங்க இலக்கியத்தைக் கலித்தொகை வழி முதன் முதலில் தமிழுலகிற்கு அறிமுகப்படுத்திய பெருமைக்குரியவர் சி.வை. தாமோதரம்பிள்ளை ஆவார். இவ்வாறு தொடங்கிய சங்க இலக்கியப் பதிப்புப் பணி, அடுத்து முப்பது ஆண்டுகளில் முழு அளவில் நிறைவினை அடைந்தது. எனவே ‘1887 முதல் 1920 வரை அமைந்த முதற்காலக்கட்டத்தைச் சங்க இலக்கியங்களின் முதற்பதிப்புக் காலகட்டம்’ எனக் குறிப்பிடலாம்”[32] என்பர்.

சங்க இலக்கியங்களைப் பற்றிச் சேலம் இராமசாமி தெரிவித்த செய்திகளும், கொடுத்த சிந்தாமணி ஏட்டுப் பிரதியும் சங்க இலக்கியங்களை ஆராய்ந்து அச்சிடுவதற்கு ஐயரவர்களை ஊக்கப்படுத்தியது. டாக்டர் உ.வே.சாமிநாதையர் 1887-இல் சீவகசிந்தாமணியைப் பதிப்பிக்கிறார். தொடர்ந்து பத்துப்பாட்டு(1889), புறநானூறு(1894), ஐங்குறுநூறு(1903), பதிற்றுப்பத்து (1904), பரிபாடல்(1918) ஆகிய சங்க இலக்கிய நூல்களைப் பதிப்பித்திருக்கிறார். அவரைத் தொடர்ந்து நற்றிணையை(1915) பின்னத்தூர் அ.நாராயணசாமி ஐயரும், குறுந்தொகையை(1915) சௌரி பெருமாளரங்கனும், அகநானூற்றை(1920) ரா. ராகவையங்காரும் பதிப்பித்து இருக்கிறார்கள்.

“திருமுருகாற்றுப்படை, நச்சினார்க்கினியர் உரையுடன் 1834 இல் சரவணப்பெருமாளையராலும், 1851 இல் ஆறுமுக நாவலராலும், 1853 இல் சுப்பராய

முதலியாராலும் பதிப்பிக்கப்பட்டன. சி.வை.தாவின் கலித்தொகை பதிப்பிக்கப்பட்ட 1887 ஆம் ஆண்டிற்கு முன்னமே திருமுருகாற்றுப்படை மட்டும் பலமுறை பதிப்பிக்கப்பட்டிருக்கின்றது. சி.வை. தா.வின் கலித்தொகைப் பதிப்பு வரும்வரை, திருமுருகாற்றுப்படை ஒரு பக்திப் பனுவலாக மட்டுமே பதிக்கப்பட்டு வந்திருக்கின்றது."[33]

"சி.வை.தா.வில் தொடங்கிய மேல்கணக்கு நூல்களின் பதிப்பு, 1920 இல், ரா. ராகவையங்காரின் அகநானூற்றுப் பதிப்போடு நிறைவு பெறுகிறது. 1940-இல் இவையனைத்திற்கும் பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை சங்க இலக்கியம் எனப் பெயரிட்டு முழுமையாகப் பதிப்பித்தார். சங்க இலக்கியம் பதிப்பாகின்ற காலத்திலேயே அது குறித்த உரையாடலும் தொடங்கியது"[34] எனலாம்.

"டாக்டர் உ.வே.சா. அவர்களின் பதிப்புகளை ஆராய்ச்சிக் கொத்துக்கள் என்றுதான் கூறவேண்டும்"[35] எனலாம். "நூல்களைப் பதிப்பிக்கும்போது எண்ணற்ற ஆராய்ச்சிக் கருத்துக்களையும் ஒருங்கே இணைத்து வெளியிட்டவர் உ.வே.சாமிநாதைய்யரே. நூலுக்கு மிக விரிந்த அளவில் ஆராய்ச்சிக் குறிப்புகளுடன் முன்னுரை எழுதுதல் என்பதைத் தொடங்கி வைத்த பெருமை உ.வே.சாமிநாதையருக்கே உண்டு. நூல் குறித்த அனைத்து செய்திகளும் அவருடைய முன்னுரையில் இடம் பெற்று விடும்"[36] என்று கருத்துரைக்கிறார் கி.பார்த்திபராஜா. புறநானூற்றை உ.வே.சாமிநாதையர் பதிப்பித்து வெளியிட்டது தமிழ்ச் சூழலில் முக்கியமான நிகழ்வாக மாறியது. "தமிழர் வரலாற்றுக்கு ஆதாரமான பல செய்திகளைக் கொண்ட அந்த நூல், பெரும் செல்வாக்குப் பெற்றது. அதன் பின் சங்க இலக்கியங்கள் தமிழக அரசியலில் தவிர்க்க இயலாத இடத்தைப் பெற்றன."[37] என்று பெருமாள் முருகன் குறிப்பிடுகின்றார். சங்க இலக்கியங்களை சி.வை.தாமோதரம் பிள்ளை, உ.வே.சாமிநாதையர் உள்ளிட்ட பலர் பதிப்பித்தனர். "இவர்களைத் தொடர்ந்தே எஸ். வையாபுரிப் பிள்ளையின் சங்க இலக்கியப் பதிப்பு வெளிவருகிறது. இது 1940-ஆம் ஆண்டு சைவ சித்தாந்த சமாஜத்தின் வெளியீடாக வந்தது. இதற்கு முன்னோடியாக 1933-இல் பேராசிரியர் எழுதிய 'சங்க நூற் புலவர் அகராதி' அமைவதை, ம.பாலசுப்பிரமணியன் குறிப்பிடுவார். எட்டுத்தொகை, பத்துப்பாட்டு இரண்டையும் குறிக்கச் சங்க இலக்கியம் என்ற பெயரை முதன் முதலில் பயன்படுத்தியவர் வையாபுரியாரே என்பர் (இராமசுந்தரம்). இவரின் சங்க இலக்கியப் பதிப்புக்கு 43 பிரதிகள் ஒப்பு நோக்கப்பட்டன. மூலம் மட்டும் உள்ளவையும், உரையுடன் கூடியவையும், தொல்காப்பியம் உள்ளிட்டவற்றில் காட்டாகத் தரப்பட்டவையும் பாடங்களாகக் கொள்ளப்பட்டது கருதத்தக்கது."[38] மேலும் சங்க

இலக்கியங்களைப் பல வித கண்ணோட்டங்களுடன் பார்த்து உரை எழுதவும், ஆய்வு செய்யவும் இப்பதிப்பு உந்துதல் தந்தது எனலாம்."[39] இவ்வாறான பதிப்புகள் சங்க இலக்கிய வாசிப்பை விசாலமாக்கின எனலாம்.

**1.8. பதிப்புக்குப் பின் சங்க இலக்கிய வாசிப்பு**

சங்க இலக்கியப் பதிப்புக்குப் பின் எண்ணிக்கையில் மிகுந்த சங்க இலக்கிய ஆய்வுகள் வெளிவரத் தொடங்கின. ஓலைச்சுவடியில் இருந்த இலக்கியங்கள் அனைத்தும் நூல் வடிவம் பெற்றதும் அதைப்பற்றியான ஆய்வுகள், இதழ்கள் வழியாக வெளிவரத் தொடங்கின. "சங்க இலக்கியப் பதிவுகள் உருவானவுடன் பல இதழ்கள் அதுகுறித்த விவாதத்தை முன்னெடுத்தன, குறிப்பாகச் செந்தமிழ், செந்தமிழ்ச் செல்வி, கலாநிலையம், சித்தாந்த தீபிகை, தமிழ்ப்பொழில் இன்னப் பிற இதழ்கள் இச்செயல்பாட்டில் தடம் பதித்தன. இந்நிகழ்வு, திட்டமிட்டு நிகழ்ந்த ஒன்று அன்று. சமகாலத்தில் புது வி'யங்களை ஓர் ஊடகம் எவ்வாறு முக்கியத்துவப்படுத்துமோ அதுபோன்று இவ்விதழ்களும் சங்க இலக்கியப் பதிப்பு உருவானவுடன் அதை முக்கியத்துவப்படுத்தி எழுதின."[40] என்கிறார் பிரேம் குமார்.

"மேற்குறித்த அந்த இதழ்கள் சங்க இலக்கியம் குறித்து ஏராளமான விவாதங்களை முன்னெடுத்தன. கனதிமிக்க பல்வேறு ஆய்வுகள் அவற்றில் மேற்கொள்ளப்பட்டன.

"பதிப்புகள், மொழிபெயர்ப்பு, கால ஆய்வுகள், தனிநிலை ஆய்வுகள், ஒப்பாய்வுகள், பிற துறை ஆய்வுகள் என்ற நிலையில் எல்லாம் இதழ்கள் ஆய்வை முன்னெடுத்தன. இதழ்கள் மட்டுமின்றி சமகாலப் பள்ளி, கல்லூரி, அறிஞர், நிறுவனம் சார்ந்த ஆண்டுக் கொண்டாட்டங்களுக்கென வெளியிடப்படும் ஆண்டு மலர்களிலும் சங்க இலக்கியம் குறித்த கட்டுரைகள் ஒரு புறம் எழுதப்பெற்றன."[41] ஒரு சில சங்க இலக்கிய உரைப்பதிப்புகளோடு எளிய நடையில் இலக்கியக் கட்டுரைகளையும் மரபு சார்ந்த பண்பாட்டுச் செய்திகளையும் இதழ்கள் வெளியிட்டு வந்தன"[42] என்கிறார்.

19 ஆம் நூற்றாண்டின் இடையில் பதிப்புத்துறை அனைவருக்கும் பொது என்ற நிலை உருவானவுடன், "1920-இல் மதுரைத் தமிழ்ச் சங்கம் செந்தமிழ் இதழ் மூலமாகவும், 1923-இல் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் செந்தமிழ்ச் செல்வி இதழ் மூலமாகவும், கரந்தைத் தமிழ்ச் சங்கம் 1925-இல் தமிழ் பொழில் மூலமாகவும், 1930 -இல்

கலாநிலையம், 1932 இல் கலைமகள், 1934-இல் கொங்கு மலர் இதழ் போன்றவற்றின் தாக்கத்தால் தமிழ் வட்டம், சிவனேசன் போன்ற இதழ்களும் தமிழ்ச் சுவடிகளைப் பதிப்புகளாக வெளியிட்டு அழகு பார்த்தன"[43] என்பர்.

மேற்சொன்ன அனைத்து இதழ்களும் சங்க இலக்கியப் பதிப்பை வெளியிடவில்லை. "கலாநிலையம், செந்தமிழ்ச் செல்வி, செந்தமிழ், தமிழ்ப் பொழில் முதலான இதழ்கள் சங்க இலக்கியப் பதிப்புகளை வெளியிட்டுள்ளன. அவற்றுள் முழுமையான சங்க இலக்கியப் பதிப்பை வெளியிட்ட ஒரே இதழ் கலா நிலையம் ஆகும். அதிலும் குறுந்தொகையை மட்டும் அவ்விதழ் வெளியிட்டிருக்கின்றது"[44] என்று இதழ்கள் சங்க இலக்கியப் பரவலில் கொண்டிருந்த ஈடுபாட்டை ஆய்வாளர்கள் எடுத்துக் காட்டுகின்றனர்.

சங்க இலக்கிய வாசிப்பை விரிவாக்கியதில் செந்தமிழ் இதழின் பணி முக்கியமானதாகும். இதனைக் கா. சிவத்தம்பி, "சங்க இலக்கியப் பதிப்பும் செந்தமிழ் இதழும், இரண்டின் இணைவும் அதனூடாக உருப்பெற்ற புதிய உரையாடல்களும் சங்க இலக்கிய வாசிப்பை விரிவாக்கின"[45] என்கிறார். செந்தமிழ் இதழில் ரா. ராகவையங்காரின் சங்க இலக்கியம் குறித்த ஆய்வுக் கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன. அவர் சங்க இலக்கியம் பற்றிய அறிமுகத்தையும், பெண்பால் புலவர்கள் பாடல்களில் இடம்பெறும் செய்திகள் ஆகியன பற்றியும் ஆழமான அறிமுகத்தினை நான்கு கட்டுரைகளில் தருகிறார். அதில் 28 பெண்பால் புலவர்களை அவர் அடையாளம் காட்டுகிறார்.

செந்தமிழ் இதழில், "அரசர்கள், குடிகள், இடம், சங்கம் பற்றிய வரலாறு தொடர்பாகப் பல கட்டுரைகள் வெளி வந்திருக்கின்றன. "1917-இல் கே.எஸ்.சீனிவாசப்பிள்ளையால் ஆரம்பிக்கப்பட்ட 'வஞ்சி மாநகர்' குறித்த விவாதம், பெரும் அறிவுசார் கருத்தாடலாக நடந்திருக்கிறது. 'கொடுங்கோளூரே வஞ்சி மாநகர்' எனவும், 'ஆனிலை கரூரே வஞ்சி மாநகர்' எனவும் இரண்டு விவாதங்கள் தொடங்கப்பெற்றன. முன்னதற்குச் சோமசுந்தர பாரதி, பூர்வ பிடிகை, நாராயணையர், சி. எஸ். செலுவையாரும், பின்னதற்கு ரா. ராகவையங்கார், எஸ். வையாபுரிப்பிள்ளை முதலானோரும் தத்தம் அறிவுசார் கருத்தாடலை முன்வைக்கின்றனர். இப்படியான கருத்தாக்கத்திற்குக் காரணமாக அமைவது 'இனியாரெனத்' தொடங்கும் புறநானூற்றின் 13 ஆம் பாடலில் வரும் 'விழுநீர் வேலி நாடு கிழவோனே' என்னும் தொடரே"[46] என்பர்.

சங்க இலக்கியங்கள் எல்லோருடைய கைகளிலும் கிடைக்கப்பெற்ற சூழலில் அந்த இலக்கியத்தை இதழ்கள் மொழி பெயர்ப்பு என்ற அடுத்த பரிணாமத்திற்கு இட்டுச்சென்றன. “டி.பி. கிரு‘ணசுவாமி முதலியாரால் குறுந்தொகையில் சில பாடல்கள் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. சித்தாந்த தீபிகையில் ஜெ.எம்.நல்லசுவாமிப் பிள்ளை கலித்தொகை, புறநானூறு, ஐங்குறுநூறு, திருமுருகாற்றுப்படை, குறிஞ்சிப்பாட்டு முதலான நூல்களில் சில பாடல்களையும் பகுதிகளையும் மொழிபெயர்த்துள்ளார். மேலும் இதே இதழில், ஜி.யு.போப் (1898 - 1913, செந்தமிழ் செல்வி) புறநானூற்றில் பல பாடல்களையும், என். பாலசுப்பிரமணிய முதலியார் (29,60), கலித்தொகையில் சில பாடல்களையும், பு.செல்வகேசவராய முதலியார் கலித்தொகையில் சில பாடல்களையும், முல்லைப்பாட்டையும் மொழி பெயர்த்துள்ளனர். இதுபோன்று இன்னும் பல சமகால இதழ்களில் சங்க இலக்கியப் பாடல்கள் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன.”[47] இவ்வாறு இதழ்கள் சங்கக்கவிதை மொழிபெயர்ப்பை முன்னெடுத்தன.

இந்த முயற்சியைத் தொடர்ந்து, பல அறிஞர்கள் சங்க இலக்கியம் பற்றிய ஆராய்ச்சிக் கட்டுரைகளை ஆங்கிலத்தில் வெளியிட்டனர். அவர்களுள் “எம்.எஸ்.பூரணலிங்கம் பிள்ளை, வெ.கனகசபைப் பிள்ளை, சீனிவாச அய்யங்கார், எஸ்.கிருஷ்ணசாமி அய்யர், அனவரத வினாயகம் பிள்ளை, குமாரசுவாமிப் பிள்ளை எனப் பட்டியலை நீட்டிக் கொண்டே போகலாம்.”[48] இவற்றைத் தொடர்ந்து சங்க இலக்கியக் ‘கால ஆய்வுகள்’ தொடர்ந்தன. “சங்க இலக்கியத்தின் காலம் குறித்தும் நூல், புலவர், அரசர், இன்னபிற பொருண்மைகளின் காலம் குறித்தும் ஆய்வுக் கட்டுரைகள் இதழ்களில் வெளியாகின. இந்த ஆய்வுகளில் சி.வை.த., கே.என்.சிவராஜபிள்ளை, வி.கோ.சூரியநாராயண சாஸ்திரி, ச.வையாபுரிப்பிள்ளை, பி.டி.சீனிவாச ஐயங்கார், எம்.எஸ்.பூரணலிங்கம் பிள்ளை, மறைமலையடிகள், கா.சுப்பிரணியம் பிள்ளை, வி.செல்வநாயகம், தெ.பொ.மீ. மா.இராசமாணிக்கனார், கா.வெள்ளைவாரணார் எனப் பலர் கால ஆய்வுகளில் தங்கள் கருத்துக்களைத் தெரிவித்துள்ளனர்”[49] என்பர்.

கால ஆய்வின் முக்கியத்துவத்தை அறிஞர்கள் பலர் சுட்டிக்காட்டியுள்ளனர். “நூல் தோன்றிய காலத்தை அறிந்தால் அன்றி அந்நூலில் உள்ள கருத்துக்களை நாம் முற்றிலும் அறிந்துகொள்ள முடியாது. இலக்கிய சரிதம் அமைக்க முடியாது. இலக்கியச் சான்றுகளால் உணரப்படும் தேச சரித்திரம் அறிதற்கு இயலாததாகும். தமிழ் நாட்டில் உலவிய கருத்துக்களின் வரலாறும் மயக்கத்திற்கு இடமாகவே இருக்கும். ஆதலால் கால

ஆராய்ச்சி மிகவும் இன்றியமையாததாகும்”[50] என்பர். கால ஆய்வு குறித்துப் பல்வேறு வாதங்களும் எதிர்வாதங்களும் தமிழ்ச்சூழலில் நிகழ்ந்துள்ளன. “காலம் குறித்துக் கட்டுரைகள் வந்ததற்கு நூலின் வழி மறுப்புரையும் (வையாபுரிப் பிள்ளையின் செந்தமிழ் இதழ்க் கட்டுரைக்குப் (பத்துப்பாட்டும் அவற்றின் கால முறையும் - செந்தமிழ் - 1943) பலர் நூல் வழி மறுக்கும் நிலை) நூலில் வந்த கட்டுரைகளுக்கு இதழ்களின் வழி மறுப்புரையும் (மு. இராகவையங்கார் மீது கண்டனம் என்ற தலைப்பில் ஊழியன் இதழில் மறுக்கும் நிலை) எழுதப் பெற்றுள்ளன. ஒரு இதழில் கட்டுரைக்கு அதே இதழில் மறுப்புரையும் மறுப்புரைக்கு விடையும் இடம்பெற்றுள்ளது”[51] இந்நிலை மட்டுமின்றி நூல்களில் வந்த கட்டுரைகளுக்கு மலர்கள் வழியாக மறுப்பும் ஆதரவும் தரும் கட்டுரைகளும் கால ஆய்வுகள் குறித்து நிகழ்ந்துள்ளன. இந்த ஆய்வின் வழி, பல ஆராய்ச்சியாளர்களுக்குள் கடும் விவாதங்கள் (வையாபுரிப் பிள்ளையை தமிழினத் துரோகி என்று அழைத்தல் முதலானவை) நிகழ்ந்தன. ஒவ்வொருவரும் சங்க இலக்கியத்தை முன்னுக்கும் பின்னுக்கும் இழுத்து முடிவுகளைத் தெரிவித்தனர். இதனூடே சமய விவாதங்களும் இன வாதங்களும் முன்னெடுக்கப்பட்டன.”[52] என்பர்.

இந்த ஆய்வின் வழி தமிழ்ச் சூழலின் வரலாற்று ஆய்வில் ஆரியர், திராவிடர் பற்றிய வரலாறும் விவாதிக்கப்பட்டது. “இது சமஸ்கிருதத்திற்கு எதிராகத் தமிழில் அமைந்தது எனலாம். மேலும், இந்த ஆய்வு தமிழர் தேசிய இன ஆராய்ச்சியாகவும் முன்னெடுக்கப்பட்டது.”[53]

சங்க இலக்கியத்தின் பெருமைகளையும் சிறப்புகளையும் விளக்கும் வகையில் பல்வேறு தனிநிலை ஆய்வுகள், இதழ்களில் இடம்பெறத் தொடங்கின. அவை “விருந்தோம்பல், அகம், புறம், பண்பாடு என இன்னபிற பொருண்மைகளையெல்லாம் எடுத்துக்காட்டும் ஆய்வுகளாக வளர்ந்தன. இக்காலச் சூழலில் இவ்வாய்வுகள் இயக்கவாதங்களாகவும் மாறத் தொடங்கின. அவற்றுள் முழுமுதல் தன்மைவாதம் (புகழ்ச்சி பேசல்) தூயத் தமிழ் வாதம் (தமிழ் முயற்சி), பழந்தமிழ்வாதம், சமயவாதம், மீட்சி இயக்கவாதம், திராவிட இயக்க வாதம் என்றெல்லாம் சங்க இலக்கியத் தனி நிலை ஆய்வுகளைச் சமகால அரசியலோடு முன்னெடுத்தனர். இதனால் வீரத்தாய், மறத்தமிழன், புறநானூற்றுத் தமிழன், கல்தோன்றி மண்தோன்றா..(பு.வெ.மா) என்ற வாசகங்கள் தன்சார்ந்த இயக்கவாதங்களாக அறிமுகப்படுத்தப்பட்டன”[54] என்பர்.

சங்க இலக்கிய ஆய்வுகள் இவற்றோடு நின்றுவிடாமல் அரசியல், உளவியல், அறிவியல், வானவியல், மொழியியல், சமூகவியல், தொல்லியல், மானுடவியல் என இன்னும் பிற துறைகளோடும் இணைந்து மேற்கொள்ளப்பட்டன. "வையாபுரிப்பிள்ளை செந்தமிழில் (1943 - தொ.41) பட்டினப்பாலையைச் சாசனத்துடன் ஆய்வு செய்துள்ளார், செந்தமிழ்ச் செவ்வியல் பி.எல்.சாமி சங்க இலக்கியத்தை அறிவியலோடும், இ.மு.சுப்பிரமணியப்பிள்ளை பத்துப்பாட்டும் வானநூலும் (சி.26,ப.8) என்ற தலைப்பிலும் லூர்து சாமியின் தமிழிலக்கியம் - தாவரவியல் (சி.23) கட்டுரையும், ந.மு.வேங்கடசாமி நாட்டார் (சி.6,ப.9) கட்டுரையும் தமிழ்ப்பொழிலில் கே.சோமசுந்தரம் பிள்ளையின் பண்டைத் தமிழரின் அரசியல் நிலை (து.3), தமிழ் கல்சரில், ஏ.சதாசிவத்தின் முல்லைக்கொடி இதழில் இளம் தமிழன், பண்டைத் தமிழரும் அரசியலும் (1943) போன்ற இன்னபிற கட்டுரைகள் யாவும் பிறதுறையோடு சங்க இலக்கியத்தை அணுகிப் புது விவாதங்களை உண்டாக்கின"[55] என்பர்.

தமிழ் இலக்கியங்கள் நூல்வடிவம் பெற்ற பிறகு, அதனை வாசித்து அதிலிருந்து வரலாற்றைக் கட்டமைக்க முயற்சித்தல் என்ற செயல்பாட்டின் தொடக்க நிலை "1902-க்கும் 1920-க்குமான காலகட்டத்தில்"[56] நிகழ்ந்தது என்பர். "தமிழ் நூல்களை வாசித்தல் இக்காலகட்டத்தில் தீவிரமாக நிகழ்ந்தது. அப்படியானதொரு வாசித்தல் முறைமையே தமிழர் வரலாற்றினை எழுதுவதற்கு அடிப்படைக் காரணமாக அமைந்தது. 1920 - களுக்குப் பிறகே 'தமிழர் வரலாறு' தொடர்பான அனைத்துச் செய்திகளும் ஓரளவு முழுமை பெறுகின்றன"[57] என்று கருதுவோரும் உள்ளனர். இதனை எல்லாம் பார்க்கும்போது சங்க இலக்கியங்களின் பதிப்புத் தொடங்கிய காலத்திலும், அதற்கு பிறகான கால கட்டத்திலும் சங்க இலக்கிய வாசிப்பானது தீவிரமாக நிகழ்ந்துள்ளது என்பதை அறிந்துகொள்ள முடிகின்றது.

### 1.9. இந்திய விடுதலை இயக்கமும் சங்க இலக்கிய வாசிப்பும்

ஐரோப்பியர் இந்தியாவுக்கு வருகை தந்து, புரிந்த ஆட்சியினாலும், கல்வியினாலும், சமயத்தினாலும் உடன் விளைவாக இந்தியாவில் சமூக, அரசியல் இயக்கங்கள் தோற்றம் பெற்றன. அவற்றுள் ஒன்று இந்திய விடுதலை இயக்கம். ஆங்கிலேயர் ஆட்சியின் நிர்வாக மையங்களுள் ஒன்றாகச் சென்னை விளங்கியது. இந்திய விடுதலை இயக்கத்தின் தோற்றத்தோடு தமிழ்நாடு நெருங்கிய உறவு கொண்டிருந்தது. இந்திய விடுதலை இயக்கத்தின் தாக்கம் தமிழகத்தில் வேகமாகப் பரவியது. இதன் காரணமாகப் "பழம்

பெரும் தமிழ் இலக்கியங்களை ஆராய்ச்சி செய்வதிலும் இந்தியவிடுதலை இயக்கப் பார்வை செல்வாக்கு செலுத்தியது. இந்த வகையில் சங்க இலக்கியம் இந்திய விடுதலை இயக்கத்துக்கு மூல ஆற்றலாக இருந்து செயல்பட்டுள்ளதைக்"[58] காண முடிகின்றது.

தேசிய உருவாக்கம் என்பது, பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் இந்தியாவின் கடற்கரைப் பகுதிகளான வங்காளம், மராட்டியம், குஜராத், தமிழ்நாடு ஆகியவற்றில் முதலில் தோன்றியது. "இந்தியா என்ற கருத்தாக்கமும், இந்திய தேசிய இயக்கமும் கூட இந்நாடு முழுக்கத் தோன்றியிருந்த சமய இயக்கங்களின் பின்னணியில்தான் உருவாயின"[59] எனலாம். அவை இந்து என்னும் புதிய மதக் கோட்பாட்டுக்கு ஆக்கம் தேடின. அது மட்டுமல்ல, ஓரிந்தியக் கொள்கைக்கு வித்திட்டன"[60] என்பர்.

இந்து மதத்தில் பல்வேறு சமய இயக்கங்கள் தோற்றம் பெற்றன. அவற்றுள் குறிப்பிடத்தக்கன, "பிரம்ம சமாஜம் (1828), பிராத்தினை சமாஜம் (1858), ஆரிய சமாஜம் (1875), இராமகிரு'ணா மி'ன் (1886), பிரம்ம ஞான சபை எனப்படும் "தியசாபிகல் சொசைடி" (1875) சமரச சுத்த சன்மார்க்க சங்கம் (1865) முதலானவையாகும்."[61] இந்த இயக்கங்கள் எல்லாம் இந்து மதத்தில் சீர்திருத்தம் செய்தல், மறுமலர்ச்சியை உருவாக்குதல் என்ற போக்கில் இயங்கத் தொடங்கின. அது மட்டுமில்லாமல் இந்தியப் பண்பாடு, நாகரிகம், வேதப்பெருமை என ஒருமைப் பாட்டுணர்வை வளர்க்க முயன்றன.

இக்காலகட்டத்தில் மேலை நாட்டவர்களால் ஆரிய மேன்மை பேசப்பட்டது. "இந்து என்ற கருத்தாக்கத்தை முதலில் புனைந்தது அரேபியர், ஆங்கிலேயர் போன்ற வெளிநாட்டவர்கள் ஆவர். வில்லியம் ஜோன்ஸ், உம்போல்ட், மாக்ஸ் முல்லர் போன்றோரின் ஆய்வுகள், ஆரிய இனம், ஆரியப் பண்பாடு என்ற கருத்தாக்கங்களை உருவாக்கின. சமஸ்கிருத மொழியறிவுடையவர்களை சமஸ்கிருத மரபினத்தவர் (ளயளெமசவைை சயஉந) என உம்போல்ட் முதலில் வரையறுத்தார். பின்னர் ஆரிய இனத்தவர் (யுசலயெ சயஉந) என்று மாற்றம் செய்தார். இந்த ஆரியர்கள் யார் என்ற கேள்வியை எழுப்பி, நவீன ஐரோப்பியர்கள், இந்தியப் பார்ப்பனர்கள் ஆகிய இருவருக்கும் அவர்கள்தாம் மூதாதையர்கள் என்று ஜெர்மானிய ரொமாண்டிக் சிந்தனையாளர்கள் விடை வழங்கினர்."[62] "இதன் விளைவாகவே, சாதி அடையாளங்களுக்கு அப்பால் எல்லாரையும் ஒன்றிணைக்கும் வகையில் இந்து மதத்திற்குப் புதிய விளக்கங்கள் தரப்படலாயின. இந்து மதத்திற்குப் பொதுவான கோட்பாடு அடிப்படைகளை உருவாக்கும் முயற்சிகளும்

செய்யப்பட்டன. இதன் பொருட்டுப் பகவத் கீதை போன்ற நூல்களுக்குப் புதிய அர்த்தங்கள் தரப்பட்டன. இந்து மதம் இந்திய நாகரிகம் ஆகியவற்றின் பழம்பெருமைகள் தேடிக் கண்டு பிடிக்கப்பட்டன. இத்தகைய முறையில் புதிய அர்த்தங்கள் வழங்கப்பட்ட இந்து மதமும் இந்திய நாகரிகமும் இந்தியத் தேசியத்தின் சிறப்பியல்புகளாக இருந்து வந்துள்ளன. இந்தியாவின் வரலாற்றை, பண்டைய இந்தியா, முகலாயர் கால இந்தியா, பிரிட்டி‘ ஆட்சிக்கால இந்தியா என்று ஐரோப்பிய (குறிப்பாக ஆங்கிலேய) சிந்தனையாளர்கள் வகைப்படுத்தினர். இவ்வாறு வகைப்படுத்துவது இந்தியத் தேசிய வாதிகளுக்கு உகந்ததாகவே இருந்தது.”[63]

“இந்து, இந்துத்துவம், இந்திய தேசியம், இந்திய நாகரிகம் போன்ற கருத்தாக்கங்களின் மூலவர்களாக இருந்த ஐரோப்பியர்களில் முக்கியமானவர்கள், 1875 - இல் அமெரிக்காவின் தியோசபிகல் சொசைட்டி (பிரம்ம ஞான சபை) என்ற அமைப்பை நிறுவிய கர்னல் ஓல்காட், ப்ளாவிப்ஸ்கி அம்மையார் ஆகியோராவர். பார்ப்பனியப் பண்பாட்டைக் கொண்டும் இந்தியா முழுவதற்கும் சமஸ்கிருதத்தைப் பொதுமொழியாக ஆக்குவதன் மூலமும் இந்தியத் தேசியத் தன்மையை, தேசிய உணர்வை உருவாக்கவும், ஊக்குவிக்கவும் அவர்கள் முயன்றனர்.”[64] இவ்வாறாக ஆரிய வேதம் பண்பாட்டோடு இந்திய நாகரிகத்தைக் கட்டமைக்க முயன்றனர்.

“ஆரிய மதத்தையும் பிற மதங்களையும் படிப்பது, பொருள் முதல்வாதத்தை வளரவிடாமல் தடுப்பது, பிரம்ம ஞான சபையின் நோக்கங்களாகச் சொல்லப்பட்டன. தேசிய சமஸ்கிருத இயக்கத்தின் (National Sanskrit movement) பகுதியாக அடையாறு நூலகம் தொடங்கப்பட்டது.”[65] இப்படியாக இவர்களது முயற்சியால், இந்தியா வேதப் பெருமையுடைய நாடு, இந்திய மதம் என்பது ஆரிய மதம், வடமொழி உயர்வானது முதலான கருத்துக்கள் இந்தியத் தேசியம் என்பதன் அடிப்படைகளாக உருவாக்கப்பட்டன.

“1878 ஆம் ஆண்டில் தொடங்கப்பெற்ற ஆங்கில ஏடான ‘இந்து’ பார்ப்பனிய மறுமலர்ச்சிக்கு ஊதுகுழலாகச் செயல்படத் தொடங்கியது.”[66] என்ற கருத்துடைய ஆய்வாளர்களும் உள்ளனர். “1875 ஆம் ஆண்டில் கர்ணல் எச். ஆல்காட்டு என்பவரும், எச்.பி பிளாவாட்சுக்கி அம்மையார் என்பவரும் சேர்ந்து அமெரிக்காவின் நியூயார்க் நகரில் இறைநெறிக் கழகம் (Theosopical socity) என்னும் ஓர் அமைப்பைத் தொடங்கினர்.”[67] பார்ப்பன மறைகளும் பிறவும் தம் முன்னோர்கள் மொழிந்த பெரு நூல்கள் என்னும்

நிலையில் நின்று இந்தியாவை ஓர் ஆரிய நிலமாகவும் ஆரியப் பண்பாட்டுக் களமாகவும் வைத்து வரலாற்றை விளக்கத் தொடங்கிய கருத்தோட்டத்தின் முகிழ்ச்சியாகவே அந்த இறை நெறிக்கழகம் வெளிப்பட்டது”[68]

ஆல்காட்டும், பிளாவாட்சுக்கி அம்மையாரும் பல சமஸ்கிருதப் பள்ளிகளை அமைக்கத்தூண்டினர். “தமிழ்நாட்டில் மதுரை, திருச்சி முதலிய இடங்களில் இறைநெறிக் கழகத்தின் சார்பில் சமஸ்கிருதப் பள்ளிகள் நிறுவப்பட்டன. மேலும் 1886 ஆம் ஆண்டு ஆல்காட் தேசிய சமஸ்கிருத இயக்கத்தைத் தொடங்கிவைத்தார்.”[69]

இங்ஙனம் “பார்ப்பனிய மீட்பையும் சமஸ்கிருதப் பரப்புதலையும் குறிக்கோளாகக் கொண்டு இறைநெறிக் கழகம் செயல்பட்டது. அதில் தமிழகத்திலிருந்த ஆங்கிலக் கல்வி கற்ற பார்ப்பனர்கள் முகாமையினராகிச் செயல்பட்டனர். இந்நிலையில் இறைநெறிக் கழகத்தில் சிலகாலம் உறுப்பினராக இருந்தவரும்”[70] ஆங்கில அரசின் அதிகாரியாக இருந்து விலகியவருமான ஆலன் ஆக்டேவியன் குயூம் என்பவர் 1885 இல் இந்தியத் தேசியக் காங்கிரசைப் பம்பாயில் தொடங்கினார்.

1884 இல் நிறுவப்பட்ட சென்னை மகாஜன சபை இந்திய தேசியக் காங்கிரசை உருவாக்குவதில் பெரும்பங்காற்றியது. “1885 டிசம்பர் 28,29 தேதிகளில் நடைப்பெற்ற காங்கிரஸ் மகா சபைக் கூட்டத்தில் மொத்தம் 72 பிரதிநிதிகள் கலந்து கொண்டனர். இதில் சென்னையில் இருந்து சென்றவர்கள் 21 பிரதிநிதிகள் ஆவர். மகா ஜன சபையின் முக்கியப் பிரமுகர்களான திரு. ஜி.சுப்பிரமணிய ஐயர், நீதிபதி எஸ்.சுப்பிரமணிய ஐயர், திரு. பி.அனந்தாச்சாருலு, திரு.வி.வீரராகவச்சாரியார், திரு.ரங்கய்யா நாயுடு முதலானோரும், தஞ்சாவூர் மக்கள் சங்கத்தின் தலைவர், எஸ்.ஏ. சுவாமிநாத அய்யர், மசுலிப்பட்டணம் சிங்கராஜி, வெங்கட சுப்பராய்டு, அனந்தப்பூர் வி.கேசவ பிள்ளை ஆகியோரும் முதல் காங்கிரஸ் மகா சபையின் சிறப்பிற்குப் பாடுபட்ட சென்னை மாநிலப் பிரதிநிதிகள் ஆவர்.”[71]

ஜி.சுப்பரமணிய ஐயரும், மு.வீரராகவாச்சாரியாரும் ‘இந்தியா ஒரு தேசிய இனம்’ என்று வலியுறுத்தி உரையாற்றினர். மு.வீரராகவாச்சாரியார் “நம்மிடையே தாய்மொழிகளின் வேறுபாடுகளும், சமூக பழக்க வழக்க மாறுபாடுகளும் நிலவிய போதும், நாம் தேசிய இனத்தின் உண்மையான கூறுகளைக் கொண்டுள்ளோம்”[72] என முழங்கினர். இவ்வாறு தேசியம், தேசிய இனம் என்பனவற்றின் தெளிவுரைகளை மாநில அரசியல்

அமைப்பின் அங்கத்தினர்கள் எடுத்துவைத்தது இந்தியத் தேசியத்தின் உருவாக்கத்திற்குப் பெருந்துணை புரிந்தது.

இவ்வாறு “இந்தியா என்ற கருத்தாக்கத்தை வலிமையாகக் கட்டமைக்க முயன்ற இந்தியத் தேசிய இயக்கம், 1885 முதல் 1905 வரை இருபதாண்டு காலம் அரசுப் பணிகளில் இடம் பெறுவது, அரசாங்கத்தை வாழ்த்திப் பாடுவது என்ற நிலையிலேயே இருந்தது. 1905 இல் வங்காளப் பிரிவினையால் கொதித்தெழுந்த தேசிய உணர்ச்சி, திலகர் தலைமையில் தீவிரம் அடைந்தது.”[73]

“இந்தியத் தேசிய அரசியலில் தீவிரவாதிகளாகக் குறிப்பிடப்பட்டவர்கள் சமூகச் சீர்திருத்தத்தில் மிகவும் பிற்போக்குத் தன்மை உடையவர்களாக இருந்தனர், அரசியலில் மிதவாதத் தன்மை கொண்டவர்கள் சமூகச் சீர்திருத்தத்தில் முற்போக்குத் தன்மையுடன் செயல்பட்டனர்.”[74] பல்வேறு நிறை, குறைகளுடன் வளர்ந்த இந்தியத் தேசிய இயக்கம் காந்தியடிகள் வருகையால் வளர்ந்தது.

“தீவிரவாதிகளின் இந்து - இந்திய தேசியம் முஸ்லீம்களை மட்டுமல்லாது, தாழ்த்தப்பட்ட சாதியினர், பிற்படுத்தப்பட்ட சாதியினர், பெண்கள் ஆகியோரையும் அந்நியப்படுத்தியதால், அந்தத் தீவிரவாதத்தைத் தணிக்கவும், முஸ்லிம்கள் தாழ்த்தப்பட்ட சாதியினர், பெண்கள் முதலியோரைக் காங்கிரஸ் பக்கம் இழுத்துக் கொள்ளவும் காங்கிரசுக்கு ஒரு தலைமை தேவைப்பட்டது. காந்தி அத்தகைய தலைவராக வந்தமைந்தார்.”[75]

தேசிய இயக்கத்தின் வீச்சு தமிழகத்திலும் தாக்கங்களை ஏற்படுத்தியது. “இதனால் ஆங்கிலேயருக்கு எதிரான இயக்கத்தை வலிமையானதாகக் கட்டமைக்க முனைந்தனர் தமிழகத் தேசியவாதிகள். பாரதியார், வ.வே.சு ஐயர், வ.உ.சி, திரு.வி.க., சுப்பிரமணிய சிவா, திருப்பூர் குமரன், இராசகோபாலாச்சாரியார், காமராசு, ம.பொ.சி முதலியோரின் தேசிய இயக்க ஈடுபாட்டினால் தேசிய உணர்வு தமிழ்நாட்டில் பரவியது.”[76] இதனால் “இந்தியாவின் கடந்த காலத்தைப் பற்றிய ஆய்வுகள் தேசியக் கண்ணோட்டத்துடனேயே நடைபெற்றன. இதனால் பழமையான இந்திய அரசாங்க முறைமைகள் பற்றிய ஆராய்ச்சிகள் ஊக்குவிக்கப்பட்டன. இந்திய தேசியம் பற்றிய கருத்துக்களை உருவாக்கப் பழம்பெரும் நூல்களைத் துருவித் துருவித் தேடும் முயற்சி மேற்கொள்ளப்பட்டது. இதனால் ஓலைச் சுவடிகளைத் தேடுவதைத் தேசிய இயக்கம் ஊக்குவித்தது. இதன்

தாக்கம் தமிழகத்திலும் பெரும் வீச்சாய்ப் பரவியது."[77] தேசிய இயக்கத்தின் பணி, அரசியல் விடுதலை என்பதையும் தாண்டி, மொழி, பண்பாடு ஆகியவற்றை மறுமலர்ச்சியடைய வைத்தல் என்பதாக அமைந்தது.

"தமிழகத்தில் ஓலைச் சுவடிகளைத் தேடி அச்சுக்குக் கொண்டு வரும் பணியில் உ.வே. சாமிநாதையர், சி.வை.தாமோதரம் பிள்ளை முதலானோர் முன்னிலையில் நின்றனர். இதன் காரணமாகச் சங்க இலக்கியங்கள் வெளிவந்தன. தேசிய இயக்கத்தின் தாக்கம் சங்க இலக்கிய ஆய்வுகளிலும் வெளிப்பட்டது."[78] அனைத்து இந்திய ஒருமைப்பாட்டு உணர்வினை வெளிப்படுத்தும் செயல்பாடுகள் 1870-களிலே தொடங்கிவிட்டன. இதனைச் சமய மறுமலர்ச்சி இயக்கங்களும், சீர்திருத்த இயக்கங்களும், அரசியல் இயக்கங்களும் தொடர்ந்து செய்தன.

"1870 முதல் 1900 வரை அக்காலத்திய அரசியல் சமூக இயக்கங்களில் பெரிதும் கலந்து கொண்ட பகவான்லால் இந்தரஜி, ஆர்.ஜி.பந்தார்கர், ஆர்.எல்.மித்ரா, பாலகங்காதரத் திலகர் ஆகியோர், ஏகாதிபத்திய கருத்து பொய்யானது என்பதை அம்பலப்படுத்த முயன்றனர். தங்கள் நாட்டின் கடந்த கால வரலாற்றின் மிகப் பல கூறுகளை ஆராய்ந்ததன் மூலம், அவர்கள் தங்கள் காலத்திலேயே அரசியல் சமூகத் துறைகளில் நாடு முன்னேறுவதற்குச் சிறந்ததொரு சூழ்நிலையை உருவாக்க முயன்றனர். அது முதல், இந்தியாவின் கடந்த காலத்தைப் பற்றிய ஆய்வு தேசியக் கண்ணோட்டத்துடனேயே நடைபெற்றிருக்கிறது."[79]

இவ்வாறு இந்தியா முழுவதிலும் தேசியம் பற்றிய சிந்தனையுடன் ஆய்வுகள் நடைபெறத் தொடங்கின. "ஆங்கிலேயர்களின் காலனி ஆதிக்கத்தை அசைப்பதற்கு நடத்திய போராட்டத்தில் அவர்கள் தேசபக்தி, தேசியப் பெருமை போன்ற உணர்வுகள் மிகவும் தேவைப்படுவதை உணர்ந்தனர். இதன் காரணமாகவே பாரத நாட்டின் பழமையில் நாம் பெருமை கொள்ளுமளவுக்கு ஏதும் புலப்படாவிட்டாலும் கூட, இப்புதிய அறிவு ஜீவிகள் ஒரு புகழ்வாய்ந்த சரித்திரத்தைக் கடந்த காலத்திருந்து துருவித் துருவிக் கண்டு பிடித்தார்கள்"[80] என்பர்.

"இந்தியத் தேசிய இயக்கத்தின் தாக்கம் தமிழ்ப் படைப்பிலக்கியங்களிலும் வெளிப்பட்டது. கவிதை, கட்டுரை, சிறுகதை, புதினம் எனத் தமிழில் தோன்றிய அத்தனை இலக்கிய வகைகளிலும் விடுதலைப் போராட்ட உணர்வுகளும், இந்தியத் தேசியம் பற்றிய

கருத்துக்களும் நிறைந்திருந்தன."[81] மகாகவி பாரதியார், "இந்தியத் தேசியத்தை வளர்தெடுத்த பாரதி"[82] யாகக் கொண்டாடப்பட்டார். நாமக்கல் வெ.இராமலிங்கம் பிள்ளை, கவிமணி தேசிய விநாயகம் பிள்ளை, வ.உ.சிதம்பரம்பிள்ளை, திரு.வி.கலியாணசுந்தரம் பிள்ளை, ச.து.சுப்பிரமணிய யோகியார் முதலானோரின் எழுத்துக்களும், பேச்சுக்களும் இந்தியத் தேசிய உணர்வை வளர்த்தெடுத்தன."[83]

இவ்வாறு, அனைத்திலும் தேசிய இயக்கம் தனது செல்வாக்கை செலுத்திய நிலையில், அது "இலக்கிய ஆய்வுகளிலும் தொழிற்பட்டது. அக்காலத்தில் அச்சில் வெளிவந்த சங்க இலக்கியங்களை ஆராயப் புகுந்த தேசிய இயக்கச் சிந்தனையாளர்கள், அவற்றைத் தம் இயக்க வளர்ச்சிக்குப் பயன்படுத்திக் கொண்டனர். சங்க இலக்கியங்கள் தேசிய ஒருமைப்பாட்டை வலியுறுத்தும் இலக்கியங்களாக அவர்கள் பார்வைகளில் விளக்கம் பெற்றன."[84]

அனைத்திந்திய தேசிய ஒருமைப்பாட்டை கட்டமைக்கும் முயற்சியில் வரலாற்றாசிரியர்கள் தீவிரம் காட்டினர். அவ்வாறான "வரலாறெழுது நெறி தென்னிந்தியாவில் முப்பதுகளிலேயே காணப்பட்டது. இராமச்சந்திர தீட்சிதர், மகாலிங்கம், சத்தியநாதைய்யர் போன்றோரது நூல்களில் இப்பண்பினைக் காணலாம். இவ்வாய்வுகள், சிறப்பாக நீலகண்ட சாஸ்திரியினுடையவை, ஒரு புறம் தென்னிந்தியாவை இந்திய வரலாற்றுப் பெருவட்டத்தினுள் இணைப்பனவாகவமைந்த அதே வேளையில், மறுபுறத்திற் பிரதேசத்தின் வரலாற்றுக் காலகட்ட அடிப்படையிலும் அரசப் பரம்பரைகளின் அடிப்படையிலும் தெளிவுபடுத்துபவையாகவும் அமைந்தன"[85] என்பர்.

இந்தியா முழுவதிலும் இந்தியத் தேசியம் என்பதை முன்வைத்து கடந்த கால ஆய்வுகள் செய்யப்பட்ட நிலையில், தென்னிந்தியாவில் குறிப்பாகத் தமிழகத்தில் இந்த வரலாறெழுதும் நெறி வேறுப்பட்ட இரண்டு நிலைகளில் இயங்கியது. "இதற்குத் திராவிடர் - ஆரியர் என்ற இன அடிப்படையிலான கருத்துக்களின் வளர்ச்சியே காரணமாக அமைந்தது. திராவிட இன அடிப்படையில் தமிழ் இலக்கியத்தை ஆராய்ந்து அறிஞர்கள், தமிழின் தொன்மை, தனித்தன்மை, பெருமை என்ற அடிப்படையில் தங்கள் ஆய்வுகளை நிகழ்த்த, இதற்கு நேரெதிர் முறையில் இந்தியத் தேசியம் என்ற அடிப்படையில் வரலாற்றை எழுதியவர்கள் விளக்கிச் சென்றனர். இந்தியத் தேசியச் சிந்தனையுடன் வரலாற்றைக் கட்டமைக்க முனைந்த அறிஞர்கள் தமிழின் பெருமைகளை ஏற்றுக்கொண்ட அதே வேளையில், மிகப் பக்குவமாக இந்தியப் பெருவட்டத்தில்

தமிழகத்தை இணைக்கும் முயற்சியில் ஈடுபட்டனர். இதனால் தென்னிந்திய ஆராய்ச்சி ஒரு வேறுபட்ட தளத்தில் இயங்க ஆரம்பித்தது. இந்த இரட்டைநிலைப் போக்குத் தமிழகத்தில் வேரூன்றியது. இந்த நிலை சங்க இலக்கிய ஆய்வுகளில் வெளிப்பட்டது."[86] "இதன் காரணமாகச் சங்க இலக்கியமானது துருவித் துருவி ஆராயப்பட்டது"[87] என்பர். இந்தியத் தேசியம் கட்டமைக்கப்பட்ட ஏதுவான வரலாற்றுக் குறிப்புகளைப் பண்டைய இலக்கியங்களில் தேடுதல் என்பது இன்றியமையாத பணியாக ஆயிற்று.

### 1.9.1. கே.ஏ.நீலகண்ட சாஸ்திரி

சங்க இலக்கியங்களின் பதிப்புகளும், 1922 - இல் நடைபெற்ற சிந்து சமவெளி நாகரிகக் கண்டுபிடிப்பும் தமிழர்களின் தனித் தன்மையான நாகரீக வரலாற்றை வெளிப்படுத்துவதாகத் திராவிட அறிஞர்கள் கூறிவந்தனர். அது பற்றி எழுதும் தென்னிந்திய வரலாற்றாசிரியர் கே.ஏ.நீலகண்ட சாஸ்திரி,

"பண்டைக்காலத்தில் தனித்தனியாக இருந்த தமிழ்ப் பண்பாடும் ஆரியப் பண்பாடும் ஒருங்கிணைந்த இனிய கலவையே சங்க காலத் தமிழ் பண்பாடு என்பது தெளிவாகத் தெரிகின்ற உண்மை"[88] என்று கூறுகின்றார். "திராவிடச் சிந்தனையின் அடிப்படையில் சங்க இலக்கியத்தை ஆராய்ந்த அறிஞர்கள், ஆரியக் கலப்பற்ற தூய தமிழினத்திற்கான இலக்கியத்தைக் கண்டனர்"[89]. அதற்கு நேரெதிராக வட இந்தியப் பண்பாடும் தென்னிந்தியப் பண்பாடும் சேர்ந்த கலவையைச் சங்ககாலப் பண்பாடு என்று சாஸ்திரியார் மதிப்பிடுகிறார். இப்படிப் பார்ப்பதன் மூலம், இந்தியப் பண்பாட்டின் ஓரங்கமே 'தமிழ்ப் பண்பாடு' என்ற கருத்தையும், ஆரியமேன்மைக் கோட்பாட்டை நிலை நிறுத்தவும் சாஸ்திரியாரால் முடிகிறது.

மேலும் கே.ஏ.நீலகண்ட சாஸ்திரி கூறுவதாவது, "பிற்காலத்தில் இயற்றப்பட்ட வேதத்தைச் சார்ந்த நூல்களும் இதிகாசங்களும் வட இந்தியாவில் தோன்றியவை. அந்தப் பகுதிச் செய்திகளே அவற்றில் மிகுதியாக இடம் பெறுகின்றன. எனினும் தென்னிந்தியாவில் வட இந்தியச் செல்வாக்கு எவ்வாறு பரவியது என்பது பற்றிய தெளிவான குறிப்புகளை அவற்றில் நாம் காண்கிறோம். இந்தப் பண்பாட்டு இயக்கத்திற்கு, அவற்றைத் தவிர வேறு ஆதாரங்கள் இல்லை. தமிழகத்தின் மிகப் பழைய நூல்களாகிய சங்க நூல்களில் அந்தப் பண்பாட்டு இயக்கத்தின் விளைவுகளைத் தெளிவாகக் காண்கிறோம். தமிழகத்தின் பண்பாட்டியல்புகளோடு தெற்கு நோக்கிப் பரவிக்

கொண்டிருந்த வட இந்தியப் பண்பாட்டியல்புகளில் பல முரண்பாடின்றி ஒருங்கிணைந்ததன் பயனாக நல்ல வளர்ச்சி பெற்ற ஒரு நாகரிகத்தின் தன்மைகளைச் சங்க நூல்கள் நமக்குக் காட்டுகின்றன"[90] என்று கூறுகிறார். "ஆரியக் கலப்பே தமிழ்ப் பண்பாட்டை வளர்த்தெடுத்ததாகச் சாஸ்திரியார் மதிப்பிடுவதைக் காணமுடிகிறது"[91] என்பர்.

சங்க இலக்கிய நூல்கள் பற்றிய கால ஆய்வுகள் தென்னிந்திய வரலாற்றாய்வாளர்கள் இடையே பெரும் விவாதத்திற்கு உரியதாக இருந்து வந்திருக்கிறது. கே.ஏ.நீலகண்ட சாஸ்திரி, "சங்க காலம் கிறித்து ஆண்டு தொடக்க நூற்றாண்டுகளில் அமையும் என்று கருதலாம்"[92] என்றும் "மதுரையில் அரசனின் ஆதரவோடு தமிழ்ப் புலவரவை ஒன்று சில காலம் உண்மையாகவே இருந்து இருக்கலாம்"[93] என்றும் குறிப்பிடுகிறார். எஸ்.கிருஷ்ணசுவாமி ஐயங்கார் "மூன்றாம் சங்கம் நிலைபெற்ற காலம் கி.பி. இரண்டு முன்றாவது நூற்றாண்டுகளேயென்று கொள்வது இதுவரைக்கும் நமக்கு கிடைத்த சாதனங்களுக்கிணங்கிய கொள்கையாகும்"[94] என்று குறிப்பிடுகின்றார். வி.ஆர்.ராமசந்திர தீட்சிதர் "சங்கத்தின் தொடக்கத்தை கி.மு.5-ஆம் நூற்றாண்டாகவும், முடிவை கி.பி 5-ஆம் நூற்றாண்டாகவும் கொள்ளுவார்."[95] கே.ஆர். சீனிவாச ஐயங்கார் "கி.மு-500 யும் கி.பி-500 யும் சங்க காலத்தின் இரு கோடுகளாக அமைத்தால் நாம் தவறிவிடமாட்டோம்"[96] என்பார். இவ்வாறு காலத்தைப் பின்னோக்கிக் கூறுவதனால் மேற்குறித்த ஆய்வாளர்கள் ஆரியப்பண்பாட்டின் ஓர் அங்கமே திராவிடப் பண்பாடு என்பதை கூற முனைகின்றனர் எனலாம். இரா.நாராயணன் "பொதுவாகத் தேசிய இயக்கச் சிந்தனையாளர்கள் காலத்தைக் கூடிய அளவிற்குத் திராவிட இயக்கச் சிந்தனையாளர்களைக் காட்டிலும் பின்னோக்கிக் கூறினர் எனக் கருதலாம்"[97] என்கிறார்.

### 1.9.2. ரா.இராகவையங்கார்

சேரன் செங்குட்டுவனைப் பற்றிய ஆய்வு நூலை 1915 - இல் வெளியிட்டுள்ளார். அதில் செங்குட்டுவனின் காலம் கி.பி. 5 ஆம் நூற்றாண்டு என்று கூறுகிறார். இதிலிருந்து சங்க இலக்கியங்களின் காலத்தைப் பின்னோக்கிக் கொண்டுவருகிறார். அது மட்டுமன்றி "பெரும்பாணாற்றுப்படைத் தலைவன் தொண்டைமான் இளந்திரையனைத் துரோணர் மரபினராக நிறுவுகிறார்"[98] ரா.இராகவையங்கார். ஆரிய மேன்மைக் கோட்பாட்டை நிலை நிறுத்தும் போக்கு இங்கே தெளிவாகிறது.

### 1.9.3. எம்.சீனிவாச ஐயங்கார்

தமிழ் இலக்கியத்தில் சங்க இலக்கியத்தை வைதீக மதக் கலப்பற்ற இலக்கியமாகத் திராவிட இயக்கத்தினர் முன்வைத்த வேளையில், தேசிய இயக்கத்தினர் அதனை மறுத்த எம்.சீனிவாச ஐயங்கார், "தமிழில் ஒழுக்கவியல் அன்றேல் மதம் சாராத இலக்கியங்கள் இல்லை. ஆரியச் செல்வாக்கில்லாத ஒழுக்கவியலோ, மதமோ இந்தியாவில் இல்லை"[99] என்று கூறுகிறார். இதிலிருந்து ஆரியக் கோட்பாட்டை மேல்நிலைப்படுத்தும் தேசியவாதிகளின் செயல்பாட்டை அறிய முடிகிறது.

### 1.9.4. சாமி.சிதம்பரனார்

"தேசிய இயக்கக் கருத்தியலின் வளர்ச்சிக்குச் சங்க இலக்கியத்தைப் பயன்படுத்தியவர்களில் சாமி.சிதம்பரனாரும் ஒருவராவர். தொல்காப்பியத் தமிழர், பத்துப்பாட்டும் பண்டைத் தமிழரும், 'எட்டுத்தொகையும் தமிழர் பண்பாடும்' முதலான இவரின் நூல்கள் தேசிய இயக்கத்தின் கருத்துப் பிரச்சாரமாக வெளிவந்தன. இந்தியா முழுவதும் ஒரேவிதப் பண்பாடு நிலவியது என்ற தேசிய இயக்கக் கருத்தின் அடிப்படையில் இவருடைய நூல்கள் எழுதப்பட்டன. இவருடைய எழுத்தில் இருந்து அக்காலத்தில் நிலவிய இருவேறுபட்ட கருத்தியல் மோதல்கள் வெளிப்படையாகத் தெரிகின்றன."[100] என்று இரா.நாராயணன் கூறுகிறார்.

இந்தியப் பண்பாட்டைப் பற்றி சாமி. சிதம்பரனார் கூறும் கருத்தானது, "தொல்காப்பிய காலத்திலே தமிழர்களிடம் இருந்த நாகரிகம், தமிழர் நாகரிகம் என்றுதான் எண்ணவேண்டும். அந்த நாகரிகம் ஆரியருக்கும் தமிழருக்கும் ஒத்த நாகரிகமாகத்தான் காணப்படுகின்றது. தொல்காப்பியத்தில் ஆரியர் என்ற பெயரோ திராவிடர் என்ற பெயரோ காணப்படவில்லை. இந்தியாவின் அடிப்படை நாகரிகம் ஒன்றுதான் என்று கூறும் சரித்திராசிரியர்கள் உண்டு. "இந்திய மக்கள் வணங்கும் தெய்வங்கள், பிறப்பு, இறப்பு பற்றிய நம்பிக்கைகள், நீதி, அநீதி இவைகளைப் பற்றிய நம்பிக்கைகள், பாவ புண்ணியம், மோட்சம், நரகம் பற்றிய கொள்கைகள், இவைகள் ஒன்றுதான். இவைகள்தான் பண்பாட்டுக்கு அடிப்படையானவை. அவரவர்கள் வாழும் இடத்தைப் பொறுத்து நடை, உடை, பாவனைகளும், மொழிகளும் வேறுபட்டிருக்கலாம். இதனால், இந்திய மக்களின் பண்பாடு வெவ்வேறு என்று சொல்லிவிட முடியாது என்பதே இச்சரித்திராசிரியர்களின் கொள்கை. இந்தக் கொள்கைக்குத் தொல்காப்பியம்

ஆதரவளிக்கிறது."[101] இவர் இந்திய நாகரிகமும் திராவிட நாகரிகமும் ஒன்று என்று கூறுகிறார்.

இலக்கியம் உன்னதமானது என்னும் கருத்தினடிப்படையில், பின்வரும் கருத்தை வெளிப்படுத்துகிறார் சாமி.சிதம்பரனார். "இன்றைய சமுதாய முன்னேற்றத்திற்கு, ஏற்ற கொள்கைகள் எவையெவையென்று தாம் எண்ணுகின்றனரோ அவைகள் எல்லாம் இலக்கியங்களிலே இருக்கின்றன என்று சொல்ல முன்வருகின்றனர். எழுதியும் தீர்த்துவிடுகின்றனர். ஆரியர் - தமிழர் என்ற வேற்றுமையைக் கிளப்பும் ஒரு கும்பல், தங்கள் வெறுப்புக் கிளர்ச்சிக்குத் தமிழையும், தமிழ் இலக்கியங்களையும் பயன்படுத்திக் கொள்ளுகின்றது. பழந்தமிழ் இலக்கியங்களில் பாரத நாட்டுப் பண்பாட்டில் வேற்றுமை இல்லை என்பதற்கான ஆதரவுகள் நிறைந்திருப்பதை இக்கும்பல் மறைத்துவிடுகின்றது"[102] என்கிறார். திராவிட இயக்கம் தமிழ்ச் சமூக அமைப்பைச் சங்க இலக்கியத்தின் வழியாகக் கட்டமைப்பதாக சாமி.சிதம்பரனார் கருத்துரைக்கிறார்.

வடமொழி நூற்கருத்துக்களுக்கும் தமிழ்மொழி நூற்கருத்துக்களுக்கும் உள்ள ஒற்றுமை, வேற்றுமைகள் என்று சாமி.சிதம்பரனார் காட்டும் கருத்து இன்றியமையாதது. "தெய்வங்கள், தெய்வ வணக்க முறைகள், இல்லற தர்மம், அரசியல் நீதி, சமுதாய உயர்வு, தாழ்வு, இவ்வுலக மறுவுலக வாழ்வு பற்றிய உண்மைகள், போர் முறைகள், புராணங்கள், வேதம், வேள்வி, தவம், தவப்பயன், பொதுநீதி ஆகியவை பற்றிய கருத்துக்கள், பாரதநாடு முழுவதும் ஒரே விதமாகவே பரவியிருந்தன. பண்டைத் தமிழ் நூல்களிலே இவைகளைப் பற்றிக் காணப்படும் கொள்கைகளுக்கும் வடமொழி நூல்களின் கொள்கைக்கும் முரண்பாடில்லை"[103] என்கிறார் சாமி.சிதம்பரனார். இந்தியா முழுவதும் ஒரேவிதமான பண்பாடு இருந்ததென்பதும் அது தமிழ் நூல்களிலும், வடமொழி நூல்களிலும் வேறுபாடில்லாமல் ஒரே விதமாகப் பிரதிபலிக்கின்றன என்று இவர் கூறுவது கருத்தியல் கொள்ளத்தக்கது. இந்தியத் தேசியக் கண்ணோட்டத்துடன் இலக்கியங்களை அணுகுகிறார் என்பதையும் சங்க இலக்கியத்தையும் அதே கண்ணோட்டத்துடன் ஆய்வு செய்துள்ளார் என்பதையும் அறியமுடிகின்றது.

### 1.9.5. எஸ். வையாபுரிப்பிள்ளை

ஆரியரது கூட்டுறவில் விளைந்த இலக்கியம் சங்க இலக்கியம் என்று இவர் கூறும் கூற்றானது தமிழ் ஆராய்ச்சியுலகில் மிகுந்த புயலைக் கிளப்பியது எனலாம். "தொகை

நூல்களும், முற்சங்க இலக்கியங்களுள், ஆரியரது கூட்டுறவு காணப்பெறாத நூல்களே இல்லை. சங்க இலக்கியங்கள் அனைத்திலும் இது காணப்படுகிறது"[104] என்கிறார் அவர். ஆரியர்கள் இந்திரன், வருணன் போன்ற பெருந்தெய்வங்களுடன் தமிழர்களின் சிறுதெய்வங்களைச் சேர்த்து ஒற்றுமையை உண்டாக்கித் தங்கள் நாற்குலப் பண்பாட்டைத் தென்னாட்டில் கைக்கொள்ளச் செய்தனர். இதை எல்லாம் தமிழ் மக்கள் விரும்பி ஏற்றுக் கொண்டனர் என்று கூறுகிறார். எஸ்.வையாபுரிப் பிள்ளையின் சங்க இலக்கிய ஆய்வில் வேதப்பெருமை, வேதியர் பெருமை என்ற தேசியவாதிகளின் சிந்தனை வெளிப்படுவதைக் காணமுடிகிறது"[105] என்று கடுமையாக விமர்சிப்போரும் உள்ளனர். இவ்வாறாக இந்திய தேசியத்தை முன் வைத்து, ஆரிய மேன்மைக் கோட்பாட்டை நிலை நிறுத்தவும் அல்லது வட்டார தேசியங்களைச் சமப்படுத்தும் வகையிலும் சங்க இலக்கிய ஆய்வுகள், செய்யப்பட்டுள்ளன என்பது தமிழலக்கிய ஆய்வுப் பரப்பைப் பருந்துப் பார்வையில் நோக்குகிறபோது கிடைக்கும் முடிவாகும்.

### 1.10. சங்க இலக்கியம் சைவ சமய வாசிப்பு

பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியிலும் இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்திலும் பல்வேறு வகையான சமய இயக்கங்கள் உருவாகி இருந்தன. அவைகளின் கருத்தியல் நிலைக்கு ஏற்ப சங்க இலக்கியங்கள் மறுவாசிப்பு செய்யப்பட்டன. அது மட்டுமில்லாமல் திருக்குறள், சிலப்பதிகாரம் போன்ற நூல்களும் சமயக் கருத்தியல் சார்ந்து வாசிக்கப்பட்டு விளக்கப்பட்டன. தமிழின் தொன்மையானதும் பல்வகை நெறிகளைக் கொண்டதுமான சங்க இலக்கியங்கள் பதிப்பிக்கப்பட்டுப் பரவலாக்கப்பட்டபோது, அதனை இவ்வியக்கங்கள் தங்களுக்குரியனவாக அடையாளப்படுத்தின. "இவர்கள் ஒரே பிரதியை வெவ்வேறு அடையாளங்களுடன் வாசித்தமை சுவாரசியமானது. குறிப்பாக சங்க இலக்கியத்தைப் பல்வேறு நிலைகளில் அரவணைத்தும் புறக்கணித்தும் வந்த சைவ சமயம், பத்தொன்பது மற்றும் இருபதாம் நூற்றாண்டுகளில் அவ்விலக்கியத்தை எதிர்கொண்ட முறைமை சுவாரசியமானது"[106] என்கிறார் ஐ. சிவக்குமார்.

சங்க இலக்கியம் பாடப்பட்ட காலத்தின் கல்வெட்டுகளை ஆராயும் போது சமண, பௌத்த சமயங்களின் மேலாண்மை நிலவியதை அறிய முடியும் எனப் பேரா. சிவத்தம்பியும் க. ராஜனும் குறிப்பிடுகின்றனர். ஆனால் சங்க இலக்கியத் தொகுப்பு மரபைப் பார்க்கும் போது (பாண்டிய, சேர மரபோடிணைந்த) வைதிக சமயத்தின்

அதிலும் சைவ சமயத்தின் - மேலாண்மையே தெரிகிறது. கடவுள் வாழ்த்து மற்றும் பாடல் வைப்புமுறைமைகளில் சைவ சமயம் முதன்மைப்படுத்தப்பட்டதையும் அறியமுடிகிறது. இறையனார் களவியல் உரையில் சங்க மற்றும் சங்க இலக்கியங்கள் குறித்த கதை அல்லது தகவல்கள் விரிவாக இடம் பெற்றுள்ளன. பின்னர் சங்க இலக்கிய உரைகள், பன்னிரு திருமுறைத் தொகுப்பு, பரஞ்சோதி திருவிளையாடற் புராணம், நம்பி திருவிளையாடல், சீகாளத்தி புராணம், திருப்பரங்கிப் புராணம் முதலானவற்றிலும் சங்க நூல்களுக்கு, சங்கப் புலவர்களுக்குச் சைவச் சார்பு கற்பிக்கப்படுகிறது"[107] என்கிறார்.

சைவ சமய ஈடுபாடுடைய திருத்தணிகை விசாகப் பெருமாளையர், ஆறுமுக நாவலர் ஆகியோர் தங்களிடம் பத்துப்பாட்டுப் பிரதிகள் முழுமையாக இருந்தும் அவற்றிலிருந்து திருமுருகாற்றுப்படையை மட்டுமே முதன்மைப்படுத்தினர். உரையாசிரியர்களில் சைவச்சார்பு பெரிதும் உடைய நச்சினார்க்கினியர், பத்துப்பாட்டு முழுமைக்குமே உரையெழுதியவர் என்பது குறிப்பிடத்தக்கது. பின்னர் சங்க இலக்கியங்கள் பதிப்பிக்கப்பட்டு பரவலாக்கப்பட்டபோது, மீண்டும் அவற்றுக்குச் சைவச் சார்பு அளிக்கப்படுகிறது.

பத்துப்பாட்டு பதிப்புரையில் அதனை அறிமுகப்படுத்தும் உ.வே.ச. "பாண்டிவள நாட்டில் மதுரைப்பதியில் அங்கையற்கணம்மையோடு எழுந்தருளியிருக்கும் சோமசுந்தரக் கடவுளருளிய சங்கப் பலகையில் அக்கடவுளோடு ஒப்ப வீற்றிருந்து தமிழாராய்ந்த மகிமை பொருந்திய நக்கீரனார் முதலிய நல்லிசைப் புலவர்களால் அருளிச் செய்யப்பட்டு அச்சான்றோர்களாலேயே தொகுக்கப்பட்டவை"[108] (உ.வே.சாமிநாதையர்,1889:முகவுரை) என்கிறார். முத்துரத்தின முதலியார் தான் பதிப்பித்த குறுந்தொகை முகவுரையில், "தமிழ்த் தெய்வமாகிய சேவற் கொடியுயர்த்த குமாரக் கடவுளையே காப்புடைச் செய்யுளாகக் கொண்ட இந்நூலிடைத் தமிழ் மொழியின் நயங்கள் ஆங்காங்கு தேனூறலாக அமைந்து கிடக்கின்றன"[109] எனக் குறுந் தொகைச் சுவைக்கும் குமரக் கடவுளுக்கும் முடிச்சுப்போடுகிறார்.

பார்ப்பனருக்கு எதிரான போக்கு தமிழகத்தில் வளர்ந்தபோது அது சைவ சமய எழுச்சியாகவும், திராவிட உணர்வாகவும் பரிணாமம் பெற்றது. சைவ சமயம் இந்து மதத்திலிருந்து வேறானதாகவும், தமிழருக்கான பழம்பெருமை வாய்ந்த சமயமாகவும் அடையாளப்படுத்தப்பட்டது. இவையெல்லாம் இலக்கியத்தின் வழியாகக் கட்டமைக்கப்பட்டது.

இந்திய மொழியியல், இலக்கியங்கள், குறிப்பாக வேதங்கள் குறித்த ஐரோப்பிய அறிஞர்களின் ஆய்வுகள், இந்தியாவில் தேசம், தேசியம் குறித்த சிந்தனைகளுக்கு வித்திட்டன. "பன்னிரண்டாவது நூற்றாண்டில் தோன்றிய பாரதப் பண்பாடு, இலக்கியங்கள், பத்தொன்பதாவது நூற்றாண்டில் சமகாலத் தேவைக்குத் தகுந்தவாறு மறுமலர்ச்சி அடைந்தன"[110] என்பர்.

"சர்வில்லியம் ஜோன்ஸ், வில்ஹெம்.்.பான் ஹீம் போல்ட், மாக்ஸ் முல்லர் முதலானவர்களின் ஆய்வுகள் ஆரிய இனம், ஆரியப் பண்பாடு என்ற கருத்தாக்கங்களை உருவாக்கின."[111] இவர்கள் செய்த ஆய்வுகள் சமஸ்கிருத மொழி பற்றிய தன்னுணர்ச்சியையும், தேசிய இலக்கியம் குறித்த சிந்தனையையும் ஊக்குவித்தன. அக்காலத்தில் தோன்றிய மத இயக்கங்களும் தேசிய இயக்கம் குறித்த சிந்தனைக்கு வித்திட்டன.

இந்து மதத்தில் தோன்றிய முக்கியமான இயக்கங்கள் பிரம்ம சமாஜம் (1828) பிராத்தனை சமாஜம் (1867), ஆரிய சமாஜம் (1875), இராமகிருஷ்ணா மிஷன் (1886), பிரம்ம ஞான சபை (1875) இந்தியாவின் ஒருமைப்பாட்டை கட்டமைப்பதில் முக்கிய பங்கு வகித்தன. "பிரம்ம சமாஜத்தைச் சேர்ந்த சிலர் 1875 - இல் இந்திய சங்கத்தை (Indian Asssociation) நிறுவினர். அதன் உறுப்பினர்கள் என்ற முறையில் தென்னிந்தியாவிற்கு வருகை புரிந்த அவர்கள், இந்தியாவிலுள்ள எல்லா இன மக்களையும் பொதுவான அரசியல் நலன்கள், விருப்பங்கள் ஆகியவற்றின் அடிப்படையில் ஒன்றுபடுத்த வேண்டும் என உற்சாகமாக வாதாடினர். பெங்களூர் செல்லும் வழியில் சென்னைக்கு வந்து ஒரு கூட்டத்தில் பேசிய விபின் சந்தரபால், இந்தியா கடந்த காலத்தில் ஒரு புவியியல் பரப்பாகவே இருந்தது என்ற போதிலும் இப்போது அது ஒன்றுபட்ட ஒரே சீரான தேசமாக மாறும் என்று கூறினார்."[112]

இப்படியாக "சமூக, சமய, பண்பாட்டு இயக்கங்கள் வாயிலாக இந்தியா ஆரிய நாடு, இந்திய மதம், இந்து மதம், இந்தியப் பண்பாடு வேதங்களால் கட்டப்பட்டது முதலான கருத்துக்கள் வலிமையாக முன்னிறுத்தப்பட்டன. இதுவே பின்னாளில் இந்தியத் தேசிய இயக்கத்தின் கருத்தாகவும் பின்பற்றப்பட்டு வளர்த்தெடுக்கப்பட்டது எனலாம்."[113] "அந்தக் காலத்தில் சமுதாய அரசியல், ஆற்றல், யாவும் மத இயக்கங்களின் வாயிலாகத்தான் வெளிப்பட வழியிருந்தது"[114] என்ற கருத்தும் உண்டு. "அந்நியருக்கு

எதிரான எதிர்ப்பு எழுந்த வேளையில், அது சமயத் துறையிலேயே முதலில் வெளிப்பட்டது”[115] என்பர்.

இந்திய அளவில் இவ்வாறு சமய எழுச்சி ஏற்றப்பட்ட காலகட்டத்தில், இந்தியா முழுவதும் உயர்சாதியினரும் பிராமணர்களும் இந்து மதத்திற்கும் இந்தியத் தேசியத்திற்கும் புத்துயிர் அளித்து வந்தனர். அக்காலகட்டத்தில் தமிழகத்தில் பார்ப்பனருக்கு எதிரான போக்கு வளர்ந்துகொண்டு இருந்தது. அது சைவ சமய எழுச்சியாகவும், திராவிட உணர்வாகவும் பரிணாமம் பெற்றது. சமயத்துறையில் சீர்திருத்தம் செய்வதற்கு வடமொழியும் வேத சாத்திரங்களும் தடைகளாக இருக்கக் கூடாது எனத் தமிழ்நாட்டுச் சான்றோர் சிலர் கருதியுள்ளனர். இதனால் சமயத் துறையில் சீர்திருத்தங் காண விழைந்த பெருமக்கள் வைதிக சமயத்தையும் வட மொழியையும் சில நேரங்களில் புறக்கணிக்க முயன்றுள்ளனர். அந்தக் கால கட்டத்தில் இந்தியா முழுவதும் சமயச் சீர்த்திருத்த இயக்கங்கள் தோன்றின. அதே கால கட்டத்தில் தமிழகத்தில் இராமலிங்க வள்ளலார் (1828 - 1874) ‘சமரச சுத்த சன்மார்க்க சங்க’த்தைத் தோற்றுவித்தார்.

சமயத்துறையில் வள்ளலார் கொண்டிருந்த கருத்துக்கள் மிகவும் புரட்சிகரமானவையாகும். “வருணாசிரம தருமம், ஆரிய தருமத்தின் அடிப்படை. வேதங்கள் எல்லாச் சாதியாருக்கும் இடம் கொடுக்கத் தவறிவிட்டன. ஆகையால் அவை முழுமுதற் கடவுளைப் பற்றிப் பேசத் தகுதியற்றன என்பது வள்ளலாரின் துணிவாகும்”[116] என்பர். “திருமூலர் கண்ட ‘ஒன்றே குலம் ஒருவனே தேவனும்’ என்ற கொள்கையே வடலூர் வள்ளலாரின் கொள்கையாகும்.”[117]

“இராமலிங்க அடிகள் பரப்பிய இந்த இயக்கம் பின்னாளில் ‘ சைவ சமய எழுச்சியாக’ வடிவம் பெற்றது. இந்தியா முழுவதும் உயர்சாதியினரும், பார்ப்பனர்களும் இந்து மதத்திற்குப் புத்துயிர் அளித்த வேளையில், பார்ப்பனருக்கு எதிரான போக்கு வளர்ந்த தமிழகத்தில், அது சைவ எழுச்சியாகப் பரிணமித்தது. இந்து மதத்திலிருந்து வேறானதாகவும், தமிழருக்கான பழம்பெருமை வாய்ந்த சமயமாகவும் சைவ சமயம் பேசப்பட்டது. இதனைத் தமிழக உயர்சாதியினர் குறிப்பாக வேளாளர்கள் முன்னின்று நடத்தினர்.”[118]

“பிரம்மசமாஜமாக இருந்த மனோன்மணியம் சுந்தரம் பிள்ளைதான் திருவனந்தபுரம் சைவசபையைத் தொடங்கக் காரணமானவர்களில் ஒருவரானார். அவர்தான் பின்னர் ‘ஆரியம் போல் உலக வழக்கழிந்தொழினும் உன் சீரிளமை திறம் வியந்து செயல் மறந்து வாழ்த்துதுமே’ எனத் தமிழை வாழ்த்தினார், சைவத்தையும் திராவிடத்தையும் இணைத்துப்பார்த்தார். தனது மாணவப் பருவத்தில் இந்து மதம் சார்ந்து இதழ் நடத்திய மறைமலையடிகள் தான் இந்து சமயத்திற்கும், இந்தியத் தேசியத்திற்கும் எதிராக சைவ சமயத்தையும் திராவிடக் கருத்தாக்கத்தையும் முன்னெடுத்தார்”[119] என்று ஐ.சிவக்குமார் கூறுவது குறிப்பிடத்தக்கது.

இந்தியா என்னும் பொதுவெளியில் திராவிடமொழிகள், இனங்கள் என்று தனித்துவம் அடையாளப்படுத்தப்பட்டு நிலைநிறுத்தப்பட்டதும் பெரும் வரலாறேயாம். “மொத்த தத்துவ இந்தியத் தன்மைக்குள்ளிருந்து தென்னிந்தியாவிற்கும் திராவிட மொழிகளுக்குமான தனித்தன்மையையும் அடையாளத்தையும் கண்டறிந்து சொன்னவர்கள் ஐரோப்பியர்கள்தான். பின்னர் இவ்வடையாள அரசியலை முன்னெடுத்தவர்கள் சைவர்களே. இவ்வடையாள அரசியல் சைவ சமயம் - இந்து மதம், திராவிடர் - ஆரியர், தமிழ் - சமஸ்கிருதம், பிராமணரல்லாதோர் - பிராமணர் முதலான முரண்பாடுகளின் அடிப்படையில் முன்னெடுக்கப்பட்டது. சைவ சமயம் இந்து மதத்திலிருந்து வேறானதாகவும் தமிழுக்கான பழம்பெருமை வாய்ந்த சமயமாகவும் அடையாளப்படுத்தப்பட்டது.”[120]

இக்காலக்கட்டத்தில் பல தமிழ் நூல்கள் தேடிக் கண்டுபிக்கப்பட்டு பதிக்கப்பட்டன. குறிப்பாக சங்க இலக்கியங்களை அச்சில் கொண்டுவருவதில் பெரும்பங்காற்றியவர்கள் சி.வை.தாமோதரம்பிள்ளையும், உ.வே.சாமிநாதையரும் ஆவர். “ஈழச் சைவ வேளாளரான சி.வை.தாமோதரம் பிள்ளை, தாம் பதிப்பித்த கலித்தொகை, வீரசோழியம் ஆகியவற்றுக்கு எழுதிய முன்னுரையில் தமிழ், திராவிடம் குறித்த உறுதியான கருத்துக்களை முன்வைத்தார். இவர்களைத் தொடர்ந்து தமிழ்ச்சுவை எழுச்சியின் அசைவுகள் வேகம் பெற்றன. இதன் காரணமாகத் தமிழகத்திலும், யாழ்ப்பாணத்திலும் சைவ சித்தாந்த மகா சமாஜங்களும், சைவ சபைகளும், சைவ சித்தாந்த சங்கங்களும், கழகங்களும், சைவப்பிரகாச சபைகளும் தோன்றிச் செயல்பட்டன”[121] என்பர்.

இவ்வாறு உருவான இயக்கங்கள் சங்க இலக்கிய ஆராய்ச்சி மாநாடுகளை நடத்தின. “இம்மாநாடுகளில் நிகழ்த்தப்பெற்ற சொற்பொழிவுகளைத் தொகுத்து நூல்களாக வெளியிடும் பணிகளையும் கழகத்தினர் செய்தனர். அதன் காரணமாக, நற்றிணைச்

சொற்பொழிவுகள், கலித்தொகைச் சொற்பொழிவுகள், பரிபாடல் சொற்பொழிவுகள், அகநானூற்றுச் சொற்பொழிவுகள், புறநானூற்றுச் சொற்பொழிவுகள், பத்துப்பாட்டு சொற்பொழிவுகள் எனத் தமிழரின் பெருமை பேசும் நூல்கள் வெளிவரத் தொடங்கின."[122] அதுமட்டும் இல்லாமல் தமிழர் குறித்த நூல்களை மறைமலை அடிகள், கா.சு.பிள்ளை போன்றவர்கள் எழுதி வெளியிட்டனர்.

இவ்வாறாக, இந்தியத் தேசியத் தளத்திலும், இந்திய எழுச்சித் தளத்திலும் மோதல்கள் தொடர்ந்த நிலையில், இதன் தாக்கம் பழந்தமிழ் இலக்கியங்களை ஆய்வதிலும் வெளிப்பட்டது. "தமிழுக்குச் சைவ முதன்மை தருவதற்காக, எட்டாம் நூற்றாண்டில் இறையனார் களவியலுரை குறிப்பிடும் 'சங்கம்' குறித்த பதிவுகளை இருபதாம் நூற்றாண்டில் இப்பதிப்புரை மீள்கட்டுமானம் செய்கிறது. அதேபோல் சங்கம் என்ற ஓர் அமைப்பு இருந்தது என நிரூபித்தால் மட்டுமே சைவத்துக்கும் தமிழுக்குமான தொன்மையான உறவை, உறவுத் தொடர்ச்சியைக் கூறிக்கொள்ள முடியும். எனவேதான் சைவர்கள் சங்கம் என்னும் ஓர் அமைப்பு இருந்தமை பற்றியும் அச்சொல்லின் தொன்மை குறித்ததுமான ஆய்வுகளில் ஈடுபட்டனர்"[123] என்பர்.

சங்கம் என்ற கருத்துருவாக்கம் தமிழ் ஆய்வாளர்களிடையே பெரும் விவாதத்தை ஏற்படுத்தியது. "சங்கம் என்னும் அமைப்பின் இருப்பு குறித்த ஆய்வுகளில் தேசிய இயக்கத்தினருக்கும் சைவக் கருத்தியல்வாதிகளுக்கும் இடையே பெரும் முரண்பாடு ஏற்பட்டது."[124] பி.டி. சீனிவாசையங்கார் சங்கச் செய்யுள் என்ற தொடரையே பொருளற்ற தொடர் என்றும், சங்கச் செய்யுளைச் சான்றோர் செய்யுள் எனக் குறிப்பிடலாம் என்றும் கூறுகிறார். இறையனார் களவியலுரையில் கூறப்பட்டிருக்கும் சில செய்திகள், நம்புதற்கு இயலாதன என்று இவர் கூறுவது குறிப்பிடத்தக்கது. "இதேபோல் சங்கம் என்பது வரலாற்றில் வலுக்கட்டாயமான திணிப்பு எனக் கே. என். சிவராஜபிள்ளை கருதுவதுடன் சங்கம் என்ற அமைப்பே இல்லை என்று மறுக்கிறார். சங்கம் என்ற அமைப்புப் பற்றிய செய்திகளில் மிகுந்த கற்பனைக் கலப்புள்ளதாக வையாபுரிப்பிள்ளை குறிப்பிடுகிறார்.[125]

சங்கம் பற்றிக் கா.சிவத்தம்பி பின்வருமாறு கூறுகிறார். "இறையனார் களவியலுரையிலே தரப்பட்டுள்ள சங்கம் பற்றிய கட்டுக்கதை, தமிழை இந்து மயப்படுத்துவதற்கான, முக்கியமாக அதனைச் சைவ மரபின் ஓரங்கமாக ஆக்குவதற்கான, ஒரு முயற்சியேயாகும்"[126] என்கிறார். அவர் "தமிழகத்தில் சங்கம் என்னும் சொல்லை மக்களிடையே பரப்பியவர்கள் புத்த, சமணத் துறவிகள் என்ற கருத்துத் தென்னிந்திய

வரலாற்றாய்வாளர்களால் கருதப்படுகிறது. பி.டி.சீனிவாச ஐயங்கார், க.அ. நீலகண்ட சாஸ்திரி, வி.ஆர்.ஆர்.தீக்ஷிதர் முதலான அறிஞர்கள் இக்கொள்கை உடையவர்களாகவே காணப்படுகின்றனர்.[127]

இவ்வாறு தேசிய இயக்கத்தினரின் கருத்தாடலுக்கு நேர் எதிரான கருத்தாடலைச் சைவ இயக்கத்தினர் முன்வைத்தனர். சங்க இலக்கியங்கள் எதிலும் 'சங்கம்' எனும் சொல் பயின்று வரவில்லை என்றும், சங்கம் எனும் சொல்லே வட சொல்தான் என்றும் கூறுபவர்களை நோக்கி ந.மு. வேங்கடசாமி நாட்டார் விவாதிக்கிறார். "சங்கம்' என்னும் பொருளுள்ள தமிழ்ச்சொல் இல்லாமற் போகவில்லை. 'அவை' என்னுஞ் சொல் அத்து முதலிய சாரியை பெற்றும், பெறாதும் தொல்காப்பியத்தும், தொகை நூல்களிலும் பலவிடத்துப் பயின்று வருவதுண்டாகலின், அதுவே முன்னர் வழங்கியிருத்தல் வேண்டும் மற்றும் மன்றம், பொதியில், பட்டி, தொகை என்னும் சொற்கள் சான்றோர் செய்யுளில் பயின்று வருகின்றன. இச்சொற்களும் சங்கம் என்னும் பொருளுடையனவாகும்"[128] என்கிறார்.

சங்க வரலாற்றை உறுதிபடுத்த முயலும் ந.சி.கந்தையாபிள்ளையின் கூற்று கவனிக்கத்தக்கது. "சங்கம் 197 பாண்டியர்களால் ஆதரிக்கப்பட்டதென முன் கூறினோம். ஒரு அரசனின் ஆட்சிக்காலம் இருபது எனக்கொண்டால், 197 அரசரின் ஆட்சிக் காலமும் 3940 ஆண்டுகளாகும். தென் மதுரையில் நடந்த சங்கம் 89 பாண்டியரால் ஆதரிக்கப்பட்டது. 89 பாண்டியரின் காலமும் 1780 ஆண்டுகளாகும். நாம் 3940 ஆண்டிலிருந்து 1780 ஆண்டுகளைக் கழித்தால் மீந்திருப்பன 2160 ஆண்டுகளாகும். இக்காலத்தில் தென்மதுரையைக் கடல் கொண்டிருக்கலாம். இக்கணக்கு கி.மு.2015 இல் பெரிய வெள்ளப்பெருக்கு உண்டானது எனக் கூறும் யூதரின் காலக்கணக்கோடு ஏறக்குறைய ஒத்திருக்கின்றது. ஆகவே கி.மு.3940 இல் தலைச்சங்கம் தொடங்கிற்று எனக் கூறலாம்"[129] இவர் சங்க இலக்கிய காலக்கட்டத்தினை கி.மு. நான்காம் நூற்றாண்டுக்கு கொண்டு செல்வது கருத்தில் கொள்ளத்தக்கது.

இறையனார் களவியலுரை குறிப்பிடும் சங்கம் குறித்த எண்ணிக்கைக் கணக்குள் அனைத்தையும் நியாயப்படுத்தும் வகையில் ந.சி.க. கருத்துரைக்கிறார். தமிழ்ப் புலவர்கள் உள்ளவற்றை உள்ளவாறே கூறும் இயல்பினரென்பது சங்கச் செய்யுட்களால் தெளிவுறும். 'இராமர் 11 ஆயிரம் ஆண்டு அரசு புரிந்தார். தசரதன் அறுபதுனாயிரம் ஆண்டு வாழ்ந்தான்' என இயற்கைக்கு மாறான எதையும் இறையனார் களவியலுரை கூறாமை

கருத்திற் பதிக்கத்தக்கது. கொதோதசு ஆசிரியர் ஓர் அரசனுக்குள்ள சராசரி காலம் 33 ஆண்டுகள் எனக் கணக்குச் செய்துள்ளார். மூன்று சங்கங்களும் நடைபெற்ற காலத்தில் இருந்த அரசரின் எண் 197. இவ்வரசர் ஒவ்வொருவருக்கும் முப்பது ஆண்டுகள் ஈந்தால் 5970 ஆண்டுகளாகும். இவ்வாண்டுகள் சந்திர அளவின்படி கணக்குச் செய்து சூரிய ஆண்டாக்கின் 5470 வரையிலாகும். இறையனார் களவியலுரையில் மூன்று சங்கங்களும் 9990 ஆண்டுகள் நடைபெற்றனவாகக் கூறப்பட்டுள்ளது. பழைய காலக்கணக்குகளில் இவ்வாறு சில பிழைகள் நேர்தல் இயல்பு"[130] எனத் தாம் சார்ந்த கருத்தியலுக்குத் தேவையான சமாதானங்களைக் கூறிச் சங்க வரலாற்றை எழுதிச் செல்வதை உணரமுடிகிறது.

சைவ எழுச்சியில் ஆர்வம் காட்டியவரான அ.சிதம்பரனார், 'சங்கம்' குறித்த செய்திகளை ஆராய்கிறார். "கடைச் சங்கப் புலவரான ஔவையாரும், தலையாளங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனும் கடைச்சங்கத்தைப் பற்றிப் பாடியிருப்பாரேல், தமிழ்ச் சங்கம் நடைப்பெற்றதைப் பற்றி யாரேனும் ஐயம் கொள்ளுவார்களா? அப்படி கொள்ளுவார்கள் ஆனால் அவர்களை என்னென்பது?

"உலகத்தார் உண்டென்பது இல்லென்பான் வையத்து
அலகையாய் வைக்கப்படும்" (குறள் - அரு)

என்னும் முதுமொழிக்கு இலக்காவான். அகம்-புறம் முதலிய தொகை நூல்களில், தமிழ்ச்சங்கங்களில் உறுப்பினர்களாயிருந்த புலவர்களுடைய பாட்டுக்களே உள்ளன. ஆதலின், சங்கங்கள் நடைபெற்றதைப் பற்றி ஐயுறக் காரணம் சிறிதும் இல்லை"[131] இவ்வாறு சங்க வரலாற்றின் உண்மை குறித்து, உணர்ச்சி நிலையில் நின்று பேசும் அவருடைய கூற்று குறிப்பிடத்தக்கது.

சைவச் சார்புடையவரான கார்மேகக் கோனார், கடைச்சங்க நூல்களுள் சகரத்தை முதலாகக் கொண்ட சவட்டுதல், சமழ்ப்பு, சந்து முதலிய சொற்களும் வழங்கப் பெற்றுள்ளமையின் அம்முறையில் பின்பு உண்டான தமிழ்ச்சொல்லே சங்கம் என்று கொள்ளினும் இழுக்காகாது. "புலம்புரிச் சங்கம் பொருளொடு முழங்க" என்று மணிமேகலை யாசிரியர் இச்சொல்லை எடுத்தாண்டிருத்தல் காண்க"[132] இவ்வாறு தொல்காப்பியர் சூத்திரத்தை எடுத்துக்கொண்டு 'சங்கம்' என்ற சொல்லை தமிழ்ச் சொல் என்று வாதிடுவதை பார்க்கமுடிகிறது.

சைவ இயக்கச் சார்புடையவரான ம.ரா.போ.குருசாமி சங்கம் என்ற அமைப்பு இருந்திருக்க வேண்டும் என்பதை விளக்கும்போது, "பழைய நூற்சான்றுகளையும், இடைக்கால்தெழுந்த இலக்கியச் சான்றுகளையும், ஒருங்கவைத்து நோக்குவோமாயின், சங்கம் இருந்ததற்கான சான்றுகள் பல கிடைக்கின்றன. சங்கம் என்னும் அமைப்பு இருந்ததில்லை என முன்னோர் எவரேனும் கருதியிருப்பின், ஓரிடத்தேனும் அச்செய்தி காணப்படுதல் வேண்டும். சங்கம் இருந்தமைக்குரிய சான்றுகள் தவிர, அதன் உண்மையை மறுக்கும் சான்று ஒன்று கூடக் காணக் கிடைக்கவில்லை. எனவே, இறையனார் களவியலுரை கூறுகின்ற அமைப்பிலே சங்கங்கள் இல்லாமல் இருந்திருக்கலாம். ஆனால், சங்கம் என்னும் அமைப்புக் கட்டாயம் இருந்திருக்க வேண்டும்"[133] என்கிறார்.

மறைமலையடிகள், "சைவம் என்பது தமிழர்களின் மிகத் தொன்மையான சமயம், ஆரியர்களின் வருகைக்கு முன்பிருந்தே தமிழ் நாட்டில் சைவம் தழைத்து வந்தது என்பதனைச் சிந்துவெளிச் சான்றுகள் சங்க இலக்கியங்களைக் கொண்டு நிறுவுகிறார்"[134] என்பர்.

இவ்வாறாகச் சைவம் வெவ்வேறு நிலைகளில் இயங்கியது மட்டுமின்றி சங்க இலக்கியங்களையும் வெவ்வேறு கண்ணோட்டத்துடனே வாசித்தன. தமிழரின் சங்கம் குறித்தும், சமயம் குறித்தும் பல்வேறு விவாதங்கள் முன்வைக்கப்பட்டன. இதன் காரணமாகச் சங்கம், சங்ககாலம், சங்க இலக்கியம் முதலான கருத்துக்கள் தமிழ் மண்ணில் நிலைபெற்றன. சங்க இலக்கியம் புதுவிளக்கம் பெற்றது எனலாம்.

### 1.11. சங்க இலக்கியம் திராவிட இயக்க வாசிப்பு

அரசியல், சமயம், மொழி சார்ந்த எந்தவோர் இயக்கம் தோன்றவும், வளரவும் சமுதாயச் சூழலே அடிப்படையாக உள்ளது. அதேபோல் திராவிட இயக்கம் தோன்றவும் சமுதாயச் சூழலே காரணமாக இருந்திருக்கின்றது. 19 - ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் ஆங்கில ஆட்சியானது இமயம் முதல் குமரிவரையிலும் விரிவடைந்திருந்தது. அன்றைய சூழலில் பார்ப்பனர்களின் ஆதிக்கம் மேலோங்கி இருந்தது.

"வில்லியம் பெண்டிங்கு பேராளுநராக இருந்தபோது, 1835 மார்ச்சு ஏழாம் நாள் முதல் ஆங்கிலம் இந்தியாவின் ஆட்சி மொழியானது. அப்போது கல்வி வாரியத் தலைவராக இருந்த மெக்காலே, "குருதியிலும் நிறத்திலும் இந்தியர்களாக இருந்தாலும்,

கலையிலும் கருத்துகளிலும் ஒழுக்கங்களிலும் அறிவுத்திறத்திலும் ஐரோப்பியராக இருக்கவல்ல ஒரு படித்த வகுப்பு இங்குத் தோன்ற வழி வகுத்தார்"[135] "மெக்காலேயின் கல்விக் கொள்கை, மேலைக் கல்வியைப் பெற்றவர்கள் அரசுத்துறையில் சில பொறுப்புகளை ஏற்பவர்களாகவும் அதன் வழியாகக் சமூகத்தில் பிற மக்களுக்குக் கல்வி அறிவைப் பரப்புவர்களாகவும் ஆக வேண்டும் என்பதையும் குறிக்கோளாகக் கொண்டிருந்தது."[136] என்பர்.

அதுநாள் வரை, கல்வியைத் தம் முற்றுரிமையாகக் கொண்டிருந்த பார்ப்பனர்கள், ஆங்கில ஆட்சியிலும் கல்வித் துறையில் தங்கள் மேலாண்மையை நிலை நிறுத்திக் கொள்ளவும், ஆட்சித் துறையில் ஆங்கிலேயர்க்கு அடுத்த நிலை அதிகாரத்தைப் பெறவும் ஆங்கிலக் கல்வியைக் கற்றனர். "அந்தணர்களின் ஆசாரப்படி ஆங்கிலம் 'நீசமொழி'யாகும். அதைப் பயில்வது ஆசாரக்கேடு. அப்படியிருந்தும் ஆங்கிலத்தின் மூலம் ஆங்கிலேயரிடமே கல்வி பெறுவதற்குத் தயங்கவில்லை."[137]

தாம் பெற்ற ஆங்கிலக் கல்வியின் விளைவாகப் பார்ப்பனர், அதிகார வகுப்பினராகிக் குமுக மேலாண்மை பெற்றனர். கி.பி.1891 - ஆம் ஆண்டு மொத்த மக்கள் தொகையில் 3.1 விழுக்காட்டினராக இருந்த பார்ப்பனர்கள், பட்டதாரிகளில் 68.8 விழுக்காட்டினராக இருந்தனர்."[138] 1895 சனவரித் திங்களில் வெளியிடப்பட்ட இரிகெட்சு அறிக்கை (சுஉைமநவள சுநிழசவ) சென்னை மாநிலத்தில் பணியாற்றிய 246 வட்டாட்சியருள் 117 பேர் மராத்தியப் பார்ப்பனராகவும், 68 பேர் பிற பார்ப்பனராக இருந்தனர்"[139] என்பதைக் காட்டுகிறது.

மொத்தத்தில் தமிழ்நாட்டின் அதிகார வகுப்பினரில் 75 விழுக்காட்டிற்கு மேற்பட்டோர் பார்ப்பனராக இருந்தனர் என்பது இதனால் புலப்படுகிறது. இவ்வாறான சூழலில் பார்ப்பனர் அல்லாதார் இயக்கம் (திராவிட இயக்கம்) 20 ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் உருவானது. இவ்வியக்கமானது பிராமணரல்லாத மக்களின் முன்னேற்றத்திற்காகப் பாடுபட்டு வந்தது.

"19ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி முழுவதும் தமிழ்ச் சூழல்களில் நிகழ்ந்துவந்த பண்பாட்டு அசைவுகள் நீதிக்கட்சியில் (1916) ஒன்றுபட்டன. அது பிராமணர் அல்லாத எல்லாச் சாதிகளையும் ஓரணியில் ஒன்றுபடுத்தும் முயற்சி . இது வெற்றி பெற்றது தமிழ் என்ற அடையாளத்தைவிட, பிராமணரல்லாதார் என்ற அடையாளம் எதிராளியைக்

குறிப்பிட்டுச் சொல்கிறது. முன்பு குறிப்பிட்ட மரபான சமூக சக்திகளும் கல்வி, வேலைவாய்ப்பு நோக்கி நகரும் புதிய நடுத்தர வர்க்கத்தினரும் (Traditional and Transitional classes) ஒன்றுபடும் தளமாகப் பிராமணரல்லாதார் என்ற தளம் அமைந்தது."[140] இவ்வாறு இன அடையாளம் முன்னிறுத்தப்பட்டது.

"நீதிக்கட்சியினர் தமிழ் மொழிவழிச் சொல்லாடலை விட, சாதிச் சமூகம் என்ற சொல்லாடலைத் தீவிரப் படுத்தினர் என்பது உண்மைதான். இருப்பினும் சாதி ஒழிப்பு அவர்களது திட்டமாக இருக்கவில்லை. பிராமணரை விலக்கிய சாதி அனுசரிப்பு அவர்களது திட்டமாகத் தெரிகிறது"[141] "நீதிக்கட்சி தமிழ் மொழி பற்றியோ இந்துமதம் பற்றியோ கறாரான நிலைப்பாடுகள் கொள்ளவில்லை. நீதிக்கட்சியாரிடம் இந்து மத அபிமானம் தொழில்பட்டது. ஆனால், தமிழ்ச் சூழல்களில் சாதிக் கட்டமைப்பு அவர்களால் தீவிரமாகக் கவனத்திற்குள் கொண்டுவரப்பட்டது"[142] என்பர்.

பிராமணர், பிராமணர் அல்லாதார் முரணில் குறிப்பிடத்தக்க ஆளுமையாக, வரலாற்று நாயகராக மேலெழுந்தவர் ஈ.வெ.ரா. பெரியார். "பிராமணரல்லாதார் அரசியல் ஓரளவு நிலைப்பட்டுவிட்ட தறுவாயில் பெரியார் காங்கிரசிலிருந்து வெளியேறி சுயமரியாதைப் பிரசாரம் செய்யத் தொடங்கினார். பெரியார் நேரடியாக நீதிக்கட்சியில் போய் இணையவில்லை என்பது முக்கியமானது. சாதி, மதம் ஆகியவற்றிற்கெதிரான நிலைப்பாடுகளும் ஒடுக்கப்பட்ட மக்களின் சுய விழிப்புணர்வும் பெரியாரின் சுயமரியாதை இயக்கத்தில் முக்கிய தீர்மானகரமானவை."[143] அது மட்டுமில்லாமல் தமிழ் அடையாளத்தைத் திராவிட அடையாளம் எனப் பெரியார் விரிவுபடுத்தினார்.

ஐரோப்பிய அறிஞர்களாகிய பெர்சிவல், வின்சுலோ, கால்டுவெல், போப் முதலியோர் வெளியிட்ட கருத்துகள் தமிழரிடம் அவர்தம் இனம், மொழி பற்றிய பெருமித உணர்வைத் தூண்டின. தமிழறிஞர்களும், எழுத்தாளர்களும் தங்கள் தொல்பழம் பெருமைகளைக் கண்டறியவும், கண்டறிந்தவற்றை விளக்கவும் மேற்குறித்த அறிஞர்களின் கருத்துக்கள் பெருமளவுக்கு உத்வேகமாக அமைந்தன. "தமிழர்கள் இந்தியாவின் பிற இனங்களிலும், மக்களிலும் குறிப்பாக, ஆரியர்கள் எனக் கருதப்பட்ட பார்ப்பனர்களிடமிருந்து வேறுபட்டவர் என்ற எண்ணத்தை உருவாக்கின."[144] இக்கருத்தை அறிவியல் அடிப்படையிலும் புதிய ஆய்வு நோக்கிலும் மேலை அறிஞர்கள் முன்வைக்கின்றனர் என்ற நம்பகத்தன்மையையும் அவர்கள் உருவாக்கினர்.

“கால்டுவெல்லின் நூல் வெறும் மொழியியல் ஆய்வாக அமையாமல் கூடுதலாக இருவகை நாகரிகங்கள், இருவகைப் பண்பாடுகள், இருவகைச் சமூக அமைப்புகள் என்று பேசியிருந்தது. ஆரியம், திராவிடம் என்பவையே அவை. அவை இரண்டுக்குமிடையில் வரலாற்றில் ஒரு துவந்த யுத்தம் நிகழ்ந்து வந்துள்ளது என்ற நிலைப்பாட்டிற்கு அது இட்டுச்சென்றது. தமிழில் அறுபடாத தொடர்ச்சியுடன் ஓர் எழுத்திலக்கிய வரலாறு உள்ளது என அது கூறியது. மொழி, இலக்கியம், பண்பாடு, சமூக அமைப்பு என்ற தொடர்புபடுத்தல் வலுவாகவே பதிவாகியிருந்தது. தமிழ் மரபில் பிராமண எதிர்ப்பு ஆரம்ப காலங்களிலிருந்தே வேரூன்றியுள்ளது என அந்நூல் நிரூபிக்க முயன்றிருந்தது. இவை எல்லாமே பின்னால் தமிழ் அடையாள அரசியலின் முக்கிய அடிப்படைகளாகின என்பது குறிப்பிடத்தக்கது.”[145] எனவே தமிழ் அடையாள அரசியலின் முதன்மைக் கருத்து வடிவம் கால்டுவெல் வழங்கிய கொடையே எனலாம்.

அதுமட்டுமில்லாமல், “தமிழில் அச்சு எந்திரப் பயன்பாடும், அது ஏட்டிலக்கியங்களை நூல் வடிவம் பெறச்செய்தன என்பதும் 19-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் காத்திரமான நிகழ்வுகளாகின. அச்சு எந்திரம் 1000, 2000 என்ற எண்ணிக்கையில் ஒரே நூலைப் பல பிரதிகளாக்கி அவற்றை வாசிப்பவர்களையும் உண்டாக்கியது. வாசிப்பவர்களுக்கிடையில் ஒத்த மனநிலையை உருவாக்கி நேரடித் தொடர்பே இல்லாதவர்களுக்கிடையிலும் ஒரு குழும உணர்வை அந்நூல்கள் ஏற்படுத்தின”[146] என்பர்.

சங்க நூல்களின் பதிப்பு, “தமிழ் மரபு, இலக்கிய வரலாறு ஆகியவை பற்றிய மிகப் பெரிய விவாதங்களுக்கான தயாரிப்பினைச் செய்தது. படிப்பறிவு பெற்ற அறிவுத் துறையினரையும் பொது அபிப்பிராயங்கள் பரிமாறிக் கொள்ளப்படும் பொது வெளியையும் அது உருவாக்கியது. பதிப்பு என்பது நூல் தேர்வு, பாட பேதங்கள், முன்னிலைப்படுத்துவது (Focus) போன்ற வி‘யங்களோடு தொடர்பு கொண்டது. எனினும் பண்டைத்தமிழின் பன்முகப் பரிமாணங்களை அது வெளிக்கொணர்ந்தது. விவாதிப்பதற்கும் விளக்கமளிப்பதற்கும் ஏராளமான வி‘யங்கள் உள்ளன என்ற நிலையை உருவாக்கியது, அடையாளப்பொருள் கோளியல் (Hermeneuties of Identify) என்ற ஒரு புது முயற்சி தமிழில் இக்காலத்தில் தோன்றி நிலைகொண்டது. பலவகை வாசிப்புகளுக்கான வாய்ப்புகளும் தோன்றின. அவ்வகை வாய்ப்புகள் நடுத்தர வர்கத்தினுள் நுழையத்

தொடங்கிவிட்ட சமூகக் குழுக்களை அடையாளம் காட்டின"[147] என்று இவர் கூறுவது குறிப்பிடத்தக்கது.

சமஸ்கிருதத்தின் ஆரியச்சார்பு, தமிழின் சமயச்சார்பின்மை குறித்தும் ஆய்வாளர்கள் கருத்துச் செலுத்தியுள்ளனர். "சமஸ்கிருத மொழி அதன் வரலாற்றில் எப்போதுமே சமயம் நீங்கிய வடிவில் தன்னைக் காட்டிக் கொண்டதில்லை. அதன் சமயச் சார்புகள் அடிப்படையானவை, பிரிக்க முடியாதவை. தமிழும் கூட சைவத் தமிழ் என்று குறைந்து போவதற்கு அன்று வாய்ப்புகள் இருந்தன. ஆயின் தமிழ் பெருமளவில் மதத்திற்குள் மாட்டிக் கொள்ளவில்லை என்பது மொழி சார்ந்த அடையாள உருவாக்கத்தை உறுதிப்படுத்தியது. சமஸ்கிருதத்தின் அடிப்படையான சமயச் சார்பும் தமிழின் சமயச் சார்பின்மையும் எதிரெதிர் பண்பாட்டு அரசியல் வாதங்களாக உருவாக முடிந்தது"[148] என்பர்.

மேற்கண்ட அடிப்படைகள் அரசியல் நிலையிலும் இடம்பெற்றுவிட்டன. சமஸ்கிருத மொழியைப் பின்பற்றுவோர் ஆரியப் பார்ப்பனராகவும், தமிழ் மொழியையும் பிற தென்னிந்திய மொழிகளையும் பேசுவோர் பார்ப்பனரல்லாத திராவிடராகவும் கருதப்பட்டனர்.

˙ ஈழத்து அறிஞர் வெ. கனகசபை, "தமிழ் மொழி, பண்பாடு பற்றிய ஆய்வில் 1904 இல் முதன் முதலாகப் பெரியதொரு முயற்சியில் ஈடுபட்டார். 'ஆயிரத்தொண்ணூறு ஆண்டுகட்கு முற்பட்ட தமிழகம்' என்னும் அவரது ஆங்கில நூல் தமிழர்தம் பெருமை பேசும் முதல் நூலாக வெளிவந்து தமிழ் அறிஞர்களுக்கு ஊக்கமூட்டியது"[149]

வே.கனகசபை கூறுவதாவது, "கி.பி.9-ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்ட தமிழ் இலக்கியம் எதுவுமில்லை என்பதே இன்று மேலை அறிஞரின் பொதுக்கருத்தாக இருந்து வருகிறது. ஆனால், உண்மை இதற்கு நேர்மாறானது.தமிழிலக்கியத்தின் தலைசிறந்த தற்பண்பு வாய்ந்த பகுதி முழுவதும் கி.பி. 9-ஆம் நூற்றாண்டுக்கு முன் இயற்றப்பட்ட பகுதியே எனலாம். அதற்குப் பின் வந்தவை மிகப் பெரும்பாலும் சமஸ்கிருத ஏடுகளைப் பின்பற்றி இயற்றப்பட்ட கீழ்த்தரமான போலி பகர்ப்புகளாகவோ, மொழிபெயர்ப்புகளாகவோ மட்டுமே கொள்ளத்தக்கவையாயுள்ளன."[150] இவ்வாறான கருத்தே பின்னர் திராவிட இயக்கத்தினர் சங்க இலக்கியத்தை முன்னெடுத்துச் செல்ல உதவிற்று எனலாம்.

மேலும் இவர் கூறுவதாவது, "பண்டைத் தமிழ் இலக்கிய ஏடுகளை நான் கூர்ந்து ஆராய்ந்தபோது எனக்கு ஏற்பட்ட கருத்து ஒன்றே ஒன்றுதான். அவற்றுள் ஒரு பெரும்பகுதி

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் இயற்றப்பட்டது என்பதில் சிறிதும் ஐயம் ஏற்பட வழியில்லை. ஏனெனில் அவை இயற்றப்பட்ட காலத்தில் தமிழர் அராபியருடனும், கிரேக்கருடனும், உரோமருடனும், ஜாவனியருடனும் இவர்களை ஒத்த மற்ற அயல்நாட்டவருடனும் வாணிகத் தொடர்பு கொண்டு இவை காரணமாக உயர் நாகரிகமும் பெருஞ்செல்வ வளமும் உடையவர்களாய் இருந்தார்கள். அக்காலப் பொருளியல் வளத்தில் ஏற்பட்ட முன்னேற்றமே இலக்கியத் துறையிலும் தமிழருக்குப் பேரூக்கமும் தூண்டுதலும் தந்திருக்க வேண்டும் எனலாம்."[151]

இவ்வாறு, "தமிழரின் தொன்மைச் சிறப்பையும் பொருள் வளத்தையும் வியந்து எழுதிய எழுத்துக்கள் தான் , பின்னாளில் திராவிட இயக்கத்தினர் சங்க காலத்தைப் பொற்காலமாக்கித் தங்கள் இயக்க வளர்ச்சிக்குப் பயன்படுத்திக் கொண்டமைக்கு வழிகாட்டியாக இருந்தது எனலாம்".[152]

சங்க இலக்கிய ஆய்வுகள் மட்டும் இல்லாமல் சங்க காலம் பற்றிய ஆய்வுகளும் செய்யப்பட்டன "கால வரன்முறை அறிவு இல்லாது மொழியின் வளர்ச்சியைப் பற்றிய ஆய்வு சாத்தியமற்றது என்பதனால் சங்க இலக்கிய வரிசையின் காலம் பற்றிய தேடல்கள் தொடங்கின. திராவிடம் ஆரியத்திலிருந்து தனியானது, புறம்பானது என்ற கொள்கை நிலைப்பட்டதும், திராவிடத்தின் தனித்துவத்தைக் காண்பதற்கு, ஆரியச் செல்வாக்குக்கு முற்பட்ட திராவிடத்தைப் பற்றி அறிய முற்பட்டனர். இந்த வேளையில்தான், இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் கண்டுபிடிக்கப்பெற்ற சிந்துவெளிப் பள்ளத்தாக்கு நாகரிகம் பற்றிய முடிவுகள் வெளிவரத் தொடங்கின. இதனைத் தமிழ் மறுமலர்ச்சி இயக்கத்தினர் தங்கள் கொள்கை நிலைப்பாட்டுக்குச் சரியாகப் பயன்படுத்திக் கொண்டனர்."[153]

இவ்வாறான கருத்தை முன்னெடுத்துச் சென்றவர்கள் ந.சி. கந்தையா பிள்ளை, கா.அப்பாத்துரை போன்றவர்கள். தமிழர்கள் இந்தியாவின் பூர்வீகக் குடிகள், உலக நாகரிகத்திற்கு வழிகாட்டியாக இருந்தவர்கள். உலகில் தோன்றிய முதல் இனம் தமிழினம் போன்ற கருத்துக்கள் முன்னெடுக்கப்பட்டன. "ஆரியருக்கு எதிரான கருத்துருவாக்கத்தைப் பின்னுவதில் கடுமையாக உழைத்துள்ள அப்பாத்துரை, சிந்துவெளி நாகரிகக் கண்டுபிடிப்பைத் தம் திராவிடக் கொள்கைக்கு ஏற்ப விளக்கினார்"[154] என்பர்.

கா.அப்பாத்துரை தமிழின் தொன்மை வேர்களைச் சிந்துவெளி நாகரிகத்தில் தேடினார். அதையே தனது ஆய்வு முடிவுகளாகவும் முன்வைத்தார். “இந்திய நாகரிகத்தின் வரலாறு, மனித இன நாகரிகத்தின் தோற்றம் ஆகியவை பற்றிய இருபதாம் நூற்றாண்டின் தொடக்கம் வரை நிலவியிருந்த கருத்துக்கள் அத்தனையிலும் சிந்துவெளி புதைபொருளாராய்ச்சி புரட்சிகரமான பெருத்த மாறுபாடுகளை உண்டுபண்ணியுள்ளது. கிரேக்க நாகரிகத்தின் பழமையும் இருக்குவேத ஆரியரின் பழமையும் இப்போது நேற்றைய, இடைக்காலப் புதுமைகளாய்விட்டன. கிரேக்க, சால்டிய, சுமேரிய நாகரிகங்கள் இவற்றுக்கு ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முற்பட்ட பழமையும் பெருமையும் உடையன. தமிழின நாகரிகத்தின் மூல வடிவமான திராவிட நாகரிகமோ இத்தொல் பழ நாகரிகங்களின் தலைமூத்த நாகரிகமாய் அவற்றிலும் ஆயிர பதினாயிரக் கணக்கான ஆண்டுப் பழம் பெருமையுடைய தென்பதை இன்றைய அறிஞருலகம் திட்டவட்டமாக எடுத்துக்காட்டுகிறது.”[155] என்று கூறுகிறார்.

மேலும் இவர், “நமக்குக் கிட்டும் வரலாற்றாதாரம் உலகில் வேறெந்த இனத்துக்கும் கிட்டாத ஒன்று. அது உலக வரலாற்றுக்கே ஒரு புதுத்திசை திருப்பியுதவ வல்லது. சங்க இலக்கியம் மூலம் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழர் அரசியல், சமய, சமுதாய பொருளியல் வாழ்வை நாம் அறிவதுபோல், உலகில் வேறெந்த நாட்டவரும் எந்த மொழி, இலக்கிய மூலமாகவும், எந்தக் காலத்துக்கும் முழு வரலாற்றோவியம் காணமுடியாது. இதை எல்லா வரலாற்றாசிரியர்களும் ஒப்புக்கொண்டுள்ளனர்”[156] என்கிறார். இவ்வாறான கருத்துக்கள் திராவிட இயக்கத்துக்கு வலுச் சேர்ப்பனவாக இருந்தன.

“தேசியம், சனநாயகம், மதச்சார்பற்ற தன்மை ஆகியவற்றைக் குறிக்கோள்களாகக் கொண்ட திராவிட இயக்கம் மதச்சார்பற்ற இலக்கியத்தைத் தேடியது. அதற்குச் சரியாகக் கிடைத்த சங்க இலக்கியத்தைத் தேடியது. அதற்குச் சரியாகக் கிடைத்த சங்க இலக்கியத்தின் வாயிலாகத் தமிழர் வரலாற்றைக் கட்டும் வேலையைச் செய்தது”[157] என்று கருதுவோரும் உள்ளனர். திராவிட இயக்கம் ஒரு சமூக மறுமலர்ச்சி இயக்கமாகத் தன் செயல்பாடுகளை முன்னெடுத்த இயக்கம் என்பதால், அது இலக்கியப் படைப்புகளையும் அக்கறையோடு கவனித்தது.

“சங்க இலக்கியத்தைப் பாமர மக்களிடத்துக் கொண்டு சேர்த்த செயலைத் திராவிட இயக்கம் முன்னின்று நடத்தியது. திராவிட நாடு கோரிக்கை, மதச்சார்பற்ற

போக்கு முதலான திராவிட இயக்கக் கொள்கைகளைப் பிரச்சாரம் செய்ய சங்க இலக்கியத்தை அது சரியாகப் பயன்படுத்திக்கொண்டது. தங்களின் அரசியல் தேவையை நிறைவேற்ற சங்க காலத்தின் வளமார்ந்த சமூகத்தைப் படம்பிடித்துக் காட்டி அவற்றோடு சமகாலத் தமிழகத்தின் வறுமைநிலையை ஒப்பிட்டது. இப்படித் திராவிட இயக்கத்தின் வளர்ச்சிக்குச் சங்க இலக்கியத்தைப் பயன்படுத்திய போக்கைச் சி.என்.அண்ணாதுரையின் எழுத்துக்கள் வெளிப்படுத்துகின்றன"[158] என்பர்.

திராவிட இயக்க முன்னோடிகளுள் சி.என்.அண்ணாதுரையின் ஆய்வுப் பங்களிப்பு குறிப்பிடத்தக்கது. "அண்ணா இலக்கியவழி அணுகுமுறை, அவர்தம் விருப்பு, வெறுப்புகட்கு அப்பாற்பட்டு, மதம் இருந்த இடத்தில் மொழியையும் இலக்கியத்தையும் அமரவைத்தது. மதம் எவ்வகையான மேட்டுக்குடித் தகவுகளைச் சார்ந்திருக்குமோ அவ்வகையான தகவுகளின் அரசியலை இலக்கிய சொல்லாடல்கள் மூலம் நிகழ்த்த முடிந்தது. அதாவது, பிராமணரல்லாத மேட்டுக் குடித் தகவுகளை மொழி, இலக்கியம் மூலம் நிலைநிறுத்த முடிந்தது."[159]

"பண்டைத் தமிழ்ச் சமூகம் குறித்த பிரமாண்டத்தை அவர்களால் உருவாக்கிக் காட்டமுடிந்தது."[160] "இந்த அரசியலுக்குத் திராவிட இயக்கத்தின் இரண்டாம் தலைமுறையினர் தலைமை தாங்கினர். தனித்தமிழ், செவ்வியல், செம்மொழி, வீரம், மானம், மூவேந்தர் மரபு, சோழர்காலத் தமிழின் பொற்காலம்"[161] போன்றவை தமிழர் அடையாள அரசியலின் மையப் புள்ளிகளாகின.

திராவிட இயக்கத்துக்கு ஆதரவாக நூல்களை வெளியிட்டவர் மு.வரதராசனார். சங்க இலக்கியம் தொடர்பான இவருடைய சிறு சிறு வெளியீடுகள் தமிழரின் ஒழுக்கம் மிகுந்த வாழ்க்கைப்பற்றியும், அவர்களின் தூய்மையான காதல் பற்றியும், செறிவான வீரம் பற்றியுமான நூல்களாக இருந்தன. இந்நூல்கள் பாமரர்களுக்கு ஏற்றவிதத்தில் எளிமையான நடையை உடையனவாக எழுதப்பட்டன. இந்நூல்கள் எல்லாம் தமிழர் மரபையும், தமிழர் பண்பாட்டையும் கட்டமைக்கும் வேலையைச் செய்தன.

இரா. நெடுஞ்செழியன், "நற்றிணைக் காட்சிகள் என்ற நூலில் நற்றிணையில் இடம்பெறும் 34 பாடல்களுக்கு எளிய நடையில் கதை போன்று விளக்கம் தருகிறார். இப்பாடல்களுக்கு விளக்கம் தரும்போது தம்முடைய இயக்க வளர்ச்சிக்கு ஏற்றவிதத்தில் செயல்படுவதைக் காணமுடிகிறது"[162] என்கிறார். இவரைத் தொடர்ந்து மு.கருணாநிதி,

சங்கப் பாடல்களில் தம்மைக் கவர்ந்த நூறு பாடல்களைத் தேர்ந்தெடுத்து இன்றைய மொழிநடைக்கு மாற்றிப் பாமர மக்களும் படித்துச் சுவைக்கும் வண்ணம் எழுதியுள்ளார். இந்நூல் 'சங்கத் தமிழ்' என்ற பெயரில் வெளிவந்துள்ளது. இவ்வாறு திராவிட இயக்க சிந்தனை வெளிப்பாடுகளாகச் சங்க இலக்கிய நூல்கள் வெளிவந்தன எனலாம்.

ச.சோமசுந்தர பாரதியார் பழந்தமிழ் நாடு (1955), நற்றமிழ் (1955), சேரர் தாயமுறை (1960), மயிலை சீனி. வேங்கடசாமி 'சேரன் செங்குட்டுவன்', இளவழகனார் 'பண்டைத் தமிழர் இன்பியல் வாழ்க்கை' (1945), லெ.ப.கரு.இராமநாதன் செட்டியார் 'பத்துபாட்டுவளம்' (1968), சி. இலக்குவனார் 'பழந்தமிழ்' (1962) எனத் திராவிட இயக்கச் சிந்தனையின் தொடர்ச்சியாகச் சங்க இலக்கிய ஆய்வுகள் வெளிவந்தன.

### 1.12. சங்க இலக்கியம் மார்க்சிய வாசிப்பு

தமிழ்நாட்டின் அரசியல் களத்தில் திராவிட இயக்கங்களுக்கு எதிர்நிலையில், பொதுவுடைமை இயக்கம் செயல்பட்டது. அப்பொழுது, "தமிழ் பற்றியும் சங்க இலக்கியம் பற்றியும் திராவிட இயக்கத்தவர் முன்வைத்த கருத்தாக்கங்களைப் பொதுவுடைமை இயக்கத்தினர் எதிர் கொள்ள வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. இச்சூழலில்தான் மார்க்சியர் சங்க இலக்கிய ஆராய்ச்சியில் கவனம் செலுத்தத் தொடங்கினர்."[163]

"சங்க இலக்கியம் குறித்தும் மார்க்சிய அடிப்படையில் ஆய்வு நிகழ்த்தும் போக்கு 1970 களில் செல்வாக்குப் பெற்றது. பேராசிரியர் நா. வானமாமலை, பேராசிரியர் கா.சுப்பிரமணியம், பேராசிரியர் கா.சிவத்தம்பி ஆகியோர் சங்க இலக்கியம் குறித்து காத்திரமான ஆய்வுகளை இக்காலப்பகுதியில் நிகழ்த்தியுள்ளனர்"[164] என்பர்.

"சங்க இலக்கியம் என்று குறிக்கப்படுகின்ற பதினெட்டு நூல்களில் புறநானூற்றுச் செய்திகளைத் திராவிட இயக்கத்தவர் மிகுதியும் எடுத்துப் பேசியதால் மார்க்சியரும் புறநானூற்றை மட்டும் விரிவான ஆராய்ச்சிக்கு உட்படுத்தினர். இனவியல் நோக்கில் சங்க இலக்கியத்தை வரலாற்றுத் தேவைக்கருதி, திராவிட இயக்கத்தவர் பேசியபொழுது வர்க்க அடிப்படையில் மார்க்சியர் ஆய்வு செய்தனர்."[165] இதற்குக் காரணம் சங்க காலத் தமிழரின் போர், பண்பாடு, மெய்யியல், அரசியல், வறுமை பற்றிய செய்திகள் புறநானூற்றில் மிகுதியும் விரவி வந்துள்ளமை ஆகும். "தொல்காப்பியத்துள் பொருளதிகாரம், சங்க இலக்கியங்களுள் புறநானூறு ஆகியவற்றை மட்டுமே மார்க்சியர் ஆய்வு செய்துள்ளனர்.

அகப்பாடல்களை ஒதுக்கிவிட்டனர். பொருளியல், அரசியல், சமூகவியல், கருத்துக்களுக்கு முக்கியத்துவம் தரத் தவறினர். அதைப் பிராய்டிசம்"[166] என்று கூறி ஒதுக்கினர் என்று சு. துரை மதிப்பிடுகிறார்.

மேலும், சங்கப்பாடல்களைத் தொகுக்கும்பொழுது ஆளும் வர்க்கத்திற்கு எதிரான பாடல்களையும் ஒழுக்க வரையறைகளை மீறிய பொருந்தாக் காமப்பாடல்களையும் நீக்கித் தொகுத்துள்ளனர் என்பர் மார்க்சியர். "தொகுப்பித்தோர் தொகுப்போர் ஆகியோரின் சார்புத்தன்மையின் அடிப்படையில் தொகுப்பு அமையும் என்பதை நாம் ஏற்கலாம்"[167] என்கிறார் அவர்.

"மார்க்சியர்களில் பலர் சங்கம் பற்றிய ஆய்வுக்குள் செல்லவில்லை. கே. முத்தையா, கோ.கேசவன் ஆகியோர் மட்டும் சங்கம் பற்றி ஆராய்ந்துள்ளனர். 'சங்கம்' என்னும் சொல் சமணர்களோடு தொடர்புடையது என்றும் சமணத்தை ஒழிக்கப் புகுந்த சைவர்களின் கட்டுக்கதை இது என்றும் கே. முத்தையா குறிப்பிடுகின்றார்."[168] "முதல் சங்கம், இடைச்சங்கம், கடைச்சங்கம் என்பதெல்லாம் பிற்காலத்தில் இந்து மதப்புராணிகர்களின் கற்பனைகள். புத்த, சமண மதத்தினரின் 'சங்க'த்திற்குச் சைவ முலாம் பூசுவதற்காகவே, 'முதற்சங்கம்' என்று ஒன்று இருந்ததென்றும், அது முப்பதாயிரம் ஆண்டுகள் சிவபெருமான் தலைமையில் இயங்கியதென்றும் கூறினர்."[169] கோ.கேசவனும் சமண சங்கத்திற்கு எதிர்க்கோட்பாடாகவே சைவர்கள் சங்கம் எனும் கருத்தை உருவாக்கினர் என்று கூறுகிறார்.

"சமண சமயத்திற்கு ஆதரவாக வணிகர்களும், சைவ சமயத்திற்கு ஆதரவாக வேளாளர்களும் இருந்தனர் என்பது கோ. கேசவன் கருத்து. எனவே, வணிகர்களுக்கு எதிராகச் சைவர்கள் உருவாக்கிய ஒரு கருத்தாக்கமே 'சங்கம்' என்று கோ. கேசவன் கருதுகிறார்."[170]

காலம் பற்றிய ஆய்வில் மார்க்சியர் ஆர்வம் காட்டவில்லை. தேவைப்படும்பொழுது "எஸ்.வையாபுரிபிள்ளை போன்றோரின் முடிவுகளை வழிமொழிந்தனர்"[171]. "தமிழ்ப் பெருமை சொல்வதில் மார்க்சியருக்கு உடன்பாடில்லை. அன்றியும் காலம் என்பது ஓர் அருவக் கருத்து. பொருண்மை வாதத்தில் பிடிப்புக் கொண்ட மார்க்சியருக்குக் காலம் என்பதைக் காட்டிலும் சங்க காலச் கமூகம் எத்தகைய வர்க்க சமூகம் என்ற பொருண்மை வாதக் கண்ணோட்டத்தில்தான் ஈடுபாடு இருந்தது"[172] என்பர்.

“பண்டைத் தமிழ்ச் செய்யுள் என்பது பின்னியல்களில் காட்டப் பெறுமாறு வாய்மொழி இலக்கியம் என்பது ஓர் உண்மையாகும் என்னும் முடிவை நிலை நிறுத்த, அவர் மன்னர், பாணர், புலவர், ஊர், பாணர்களின் போலச் செய்தல் ஆன கல்விமுறை, வாய்மொழி வாய்ப்பாட்டுமுறை தேர்ந்த சொல், தொடர் போன்ற முறைமைகளை முன்வைத்துச் சங்க இலக்கியங்களில் மனித உழைப்பு, மனித உற்பத்தி உறவுகள் எனக் கைலாசபதியின் ஆய்வுச் சிந்தனை விரிகிறது.”[173]

“பேராசிரியர் கா.சிவத்தம்பியின் சங்க இலக்கியம் குறித்த ஆய்வுக் கட்டுரைகள் அடங்கிய நூலாகப் “பண்டைத் தமிழ்ச் சமூகம் - ஒரு வரலாற்று புரிதலை நோக்கி” அமைந்துள்ளது”[174] “சங்க காலத் தமிழ்ச் சமூகம் ஒருவழிப்போக்கான சமுதாய வளர்ச்சியுடையதன்று. புவியியல் சூழலுக்கேற்ற முறையில் வெவ்வேறு விதமான சமுதாய வளர்ச்சி (குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை) யுடையதாக இருக்கின்றது.”[175] எனவே சங்க காலம் என்ற ஓரே காலத்தில் வெவ்வேறு வாழ்க்கை முறை கொண்ட சமனற்ற அல்லது சமச்சீரற்ற பொருளாதார வளர்ச்சி தமிழகத்தில் நிலவியது என்று கூறுகிறார். மேலும், ஒரே காலத்தில் வேறுபட்ட நிலைகளில் காணப்பட்ட பண்பாடுகளையே திணைகளாக, இலக்கிய மரபுகளாகத் தொல்காப்பியர் அமைத்தார் என்பதையும் மார்க்சிய அடிப்படையில் நிறுவுகிறார்.

“சங்ககாலத்தில் ஏற்பட்ட அரசமைப்பு உருவாக்கத்தினைச் சங்க இலக்கியத்தில் இடம்பெறும் கோ, இறை, கிழவன், மன்னன், வேந்தன், அரசன் ஆகிய சொற்களின் பயன்பாட்டு அடிப்படையில் மற்றொரு கட்டுரையில் விளக்குகிறார். அதேபோன்று தொல்லியல் சான்றுகளின் அடிப்படையில் சங்க இலக்கியத்தின் காலத்தைக் கி.மு 200 முதல் கி.பி. 250 வரை என மறுவரையறை செய்கிறார். முல்லைத்திணை ஒழுக்கம் குறித்த சிவத்தம்பியின் கட்டுரை மிகவும் முக்கியமானது. முல்லை நிலத்தில்தான் தனிநபர் சொத்துரிமை ஒரு நிறுவனமாகப் போற்றிப் பேணப்பட்டது. ஆகவே, வாரிசுரிமைச் சிக்கல்கள் தோன்றி, அதனடிப்படையில் மணவாழ்வில் மெய்யான பற்றுறுதி ‘கற்பு’ எனக்கோரப்பட்டது. இதன் விளைவாகக் ‘கற்பு’ எனும் மணவாழ்விற்கான மெய்யான பற்றுறுதி முல்லைத் திணைக்குரிய ஒழுக்கமாக மாறியது. இவ்வாறு சங்க இலக்கியம் எழுந்த சமூகத்தின் பொருளாதாரப் பண்பாட்டு வளர்ச்சி நிலைகள் குறித்த முக்கியமான முடிவுகளை - மதிப்பீடுகளைச் சிவத்தம்பியின் ஆய்வுகள் வழங்கியுள்ளன.”[176] எனலாம்.

“கோ.கேசவன் ‘மண்ணும் மனித உறவுகளும்’ என்னும் நூலில் பழந்தமிழ் இலக்கியங்களை மார்க்சியப் பார்வையில் ஆய்வு செய்துள்ளார். மேலும் புலவரும் புரவலரும் என்னும் தலைப்பில் புலவர்களின் காலமும் புரவலர்களின் காலமும் உற்பத்தி முறைகளோடு தொடர்பு கொண்ட சமூகம் என்று கூறுகிறார். “சங்க இலக்கியப் போரைப் பற்றியும் வீரத்தைப் பற்றியும் - அகப்பாடல்கள் உட்பட - பாடுவதற்கும் அந்தக் கருத்துக்கள் சமூகத்தில் மேலாண்மை பெற்றதற்குக் காரணங்கள் யாவை? பழைய மக்களின் தொழிலாக வேட்டையாடல், ஆடு மாடுகள் வளர்த்தல், விவசாயம் செய்தல், குடிசை, கைத்தொழில்கள், வாணிபம் ஆகியவை குறிக்கப்படுகின்றன. இதனால் மனிதனின் உழைப்பாற்றல் தம் தேவைக்கு அதிகமாகவே உற்பத்தி செய்ய முடிந்தது. மேலும், இரும்பின் பயன்பாடு இதற்கு அரிய தூண்டுகோலாக விளங்கியது. இரும்பின் பயன்பாடு அதிகமாகத் தெரிந்ததன் விளைவாகப் பண்டைய உலகத்தில் வேளாண்மை வளர்ச்சி துரிதமாகியது எனும் பல ஆய்வு முடிவுகளைக் கேசவன் முன்வைத்துள்ளார்”[177] என கரு.அழ.குணசேகரன் கூறுகிறார்.

சங்கப்பாடல்களை அழகியல், கவிதையியல், கலையியல் அடிப்படையில் விரிவான ஆராய்ச்சிக்கு மார்க்சியர் உட்படுத்தவில்லை, கவிதை அழகியல் பற்றித் தொல்காப்பியர் பொருளதிகாரத்தில் கூறியுள்ள செய்திகளைக்கூட, மார்க்சியர் ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளவில்லை. உருவம் பற்றிய அக்கறை இன்றி, உள்ளடக்கம் பற்றியே மார்க்சியர் ஆய்வு நிகழ்த்தியுள்ளனர்”[178] என சு.துரை குறிப்பிடுகின்றார். “தமிழ், தமிழினம், தமிழ்ப்பண்பாடு, தமிழர் நாகரிகம் என்று பேசிய திராவிட இயக்கத்தினரின் கருத்தாடல்களுக்கு எதிரான முடிவுகளை மார்க்சியர் முன்வைத்தனர்.”[179] என்கிறார் அவர்.

சங்க இலக்கிய நூல்களுள் புறநானூறு பற்றி மிகுதியாக மார்க்சியர் திறனாய்வு செய்தனர். “இனக்குழு அழிந்து நிலவுடைமை வளர்ச்சி பெற்ற காலம் புறநானூற்றுக் காலம் என்பது மார்க்சியரின் கருத்து.”[180] “இந்நூலை ஆழ்ந்து படித்தால் இனக்குழு (Tribal) வாழ்க்கை அழிந்து நிலவுடைமைச் சமுதாயம் வளர்ச்சி பெறுகிற காலத்தை இந்நூலில் சொல்லப்படும் நிகழ்ச்சிகள் குறிக்கின்றன என்றறியலாம்”[181] என்பர்.

“புறநானூறு, பொருள் முதல்வாதக் கருத்துகள் உடையது என்று கூறி அக் கருத்துக்கள் வெளிப்பட்டுள்ள பாடல்களை மார்க்சியர் சுட்டிக் காட்டியுள்ளனர்.

மண் திணிந்த நிலனும்

நிலனேந்திய விசும்பும்

வளித் தலை இய தீயும்

தீ முரணிய நீரும் என்றாங்கு

ஐம்பெரும் பூதத்தியற்கை

என்று புறநானூறு கூறுகிறது. தொல்காப்பியர் எவற்றை உலகிற்கு அடிப்படை என்று கூறினாரோ அவற்றையே புறநானூற்றுப் பாடலொன்றும் வெளிப்படுத்துகிறது என்று இப்பாடலை மார்க்சியர் குறிப்பிடுவர்"[182]

"பெரியோரை வியத்தலும் இலமே (புறம்.192) என்னும் பாடல் நிலக்கிழார்களுக்கும் மன்னர்களுக்கும் எதிராகப் பாடப்பட்டது என்பர் மரபு மார்க்சியர். அக்காலத்தில் பெரியோர் எனப்பட்டவர் மன்னர்கள், நிலக்கிழார்கள் போன்றவர்கள். அன்னாரைப் புகழ்வதே நெடுங்கால வழிமுறை வந்த புலவர் கொள்கை. ஆனால், புத்த, சமண மதக் கருத்துக்களால் ஊக்குவிக்கப் பெற்ற பூங்குன்றனாரோ அக்காலப் பெரியோர்களான மன்னர்களையும் நிலக்கிழார்களையும் வியந்து புகழமாட்டேன் என்கிறார்" என்பது மரபு மார்க்சியர் கருத்து."[183]

'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்னும் கணியன் பூங்குன்றனாரின் பாடல் அடியின் தோற்றத்திற்கான சமூகவியல் அரசியல் பின்னணியைக் கண்டறிந்து கூறுவதில் மார்க்சியர் கவனம் செலுத்தியுள்ளனர். குல மரபுகள் மறைந்து அரசுகளும் தேச உணர்வும் தோன்றும் போதே இச்சிந்தனை மலர்ந்துள்ளது என்பது க.கைலாசபதியின் கருத்து. "யாதும் ஊரே யாவரும் கேளிர் எனும் புலவரின் கற்பனையில் பிறந்ததன்று குலமரபுகள் தனித்தனியாகக் குறுகிய வரம்புகளுக்குள் வாழ்ந்த நிலைபோய், அரசுகளும் தேச உணர்வும் தோன்றும் போதே யாவரும் கேளிர் என்னும் பரந்த மனப்பான்மையும் உதிக்கின்றது"[184] என்பார் கைலாசபதி.

புறநானூற்றுப் புலவர்கள் ஆளும் வர்கத்திற்குச் சார்பாக இருந்தவர்கள் என்றும் ஆளும் வர்க்கத்திற்கு எதிராக இருந்தவர்கள் என்றும் இருவேறு நிலைப்பாடுகளை மார்க்சியர் மேற் கொண்டுள்ளனர். நால்வகைப் படை மூலம் மட்டும் அன்றி பண்பாடு வடிவங்கள் மூலமும் அரசு ஆதிக்கத்தை ஏற்றுக் கொள்ளும் உளவியலுக்கு மக்களைத் தயார் செய்ய முடியும் என்று புறநானூறு கூறுவதாக மார்க்சியர் கருதுவர்.

“தமிழ் இலக்கியம் தொன்மை வாய்ந்தது, பழந்தமிழர் வாழ்வில் வீரம், காதல் முதலியன சிறப்புற்று விளங்கின என்று திராவிட இயக்கம் சார் தமிழறிஞர்கள் முன் வைத்த கருத்துக்களை மார்க்சியர் எதிர் நிலையில் எதிர்கொண்டனர்.”[185]

“தொன்மை என்ற காரணத்திற்காகவும், வர்க்க முரண்பாடுகளை மூடிமறைத்து பழம் பெருமைக்குள் பிரச்சினைகளை மடக்கி அடக்கி விடுவதற்காகவும் நம் முன்னே நிறுத்தப்படும் சங்ககாலம் மற்றைய வர்க்க சமுதாயங்களைப் போலவே சுரண்டலும், அடக்குமுறையும், சூறையாடலும், அதிகாரத்துவமும் நிறைந்தது என்பதையும் நாம் மறந்துவிட முடியாது என்று கைலாசபதி கூறுவார்”[186] “தமிழினம், தமிழிலக்கியம் ஆகியவற்றில் மார்க்சியர் ஆர்வம் கொள்ளவில்லை. ‘தமிழ்த் தேசியம்’ என்னும் கருத்தாக்கத்தில் அவர்களுக்கு உடன்பாடு இன்மை அதற்குக் காரணம் எனலாம். மார்க்சியர் ‘இந்தியத் தேசியம்’ என்னும் கோட்பாடு அடிப்படையில் தம் ஆய்வுகளை நிகழ்த்தினர்.”[187]

திராவிட இயக்கத்தினரும், தமிழறிஞர்களும், மேலை நாகரிகத்திற்கும் தமிழ்மொழி, தமிழினம், தமிழ்ப்பண்பாடு, தமிழர் நாகரிகம் ஆகியவற்றைப் பெருமை கொண்டனர். பொதுவுடைமை இயக்கத்தினர் சமுகவியல், பொருளியல் அடிப்படையில் தம் ஆய்வுகளை முன்வைத்துள்ளனர். மற்றும் ‘சர்வதேசியம்’ , ‘இந்திய தேசியம்’ ஆகியவற்றின் அடிப்படையில் ஆய்வுகளை நிகழ்த்திய மார்க்சியர்கள், தமிழ்த்தேசியம் என்னும் கருத்தாக்கத்தில் ஈடுபாடு இன்மையால் தமிழ்த்தேசிய மறுமலர்ச்சிக்கு மறுதலையாக உள்ள இந்தியத் தேசிய மறுமலர்ச்சி இயக்கத்தை ஒட்டியே தமது விமர்சனப் போக்கை அமைத்துள்ளனர்.

### 1.13.சாதிய இயக்கங்களின் சங்க இலக்கிய வாசிப்பு

தமிழ்ச் சமூக அமைப்பானது சாதிகளை அடிப்படையாகக் கொண்டு இயங்கி வருகின்றது. சாதி குறித்த வரையறைகளும், அதன் தோற்றம் பற்றியும் பல்வேறு விதக் கருத்துக்கள் கூறப்படுகின்றன.

ஆரியர்களின் மனுதர்மத்திலிருந்து சாதிகளின் தோற்றம் பற்றி அறியமுடிகின்றது. சாதிப் பிரிவானது மனிதர்களால் உருவாக்கப்பட்டதன்று. அது இறைவனால் ஏற்படுத்தப்பட்டது என்று சாதிமுறைக்கு இறைமைத் தன்மை கொடுத்துப் பேசப்படுகின்றது.

“பிரம்மா மனிதரைப்படைக்கும் போதே பிரம்மர், சத்திரியர், வைசியர், சூத்திரர் என நான்கு வருணத்தவர்களாகப் படைத்தார். பிரம்மா தம் முகத்திலிருந்து பிரம்மணர்களையும், தோளிலிருந்து சத்திரியர்களையும், தொடையிலிருந்து வைசியர்களையும், காலிலிருந்து சூத்திரர்களையும் பிறப்பித்தார்”[188] என்பதிலிருந்து சாதிய முறை தெய்வீகமாக்கப்படுவது அறியப்படுகின்றது. மேலும் அது பிராமணரை உயர்ந்தவராகக் கூறுகின்றது.

செய்யும் தொழிலால் ஏற்பட்ட வேறுபாட்டினாலும் சாதியம் தோற்றம் பெற்றது என்றும் கூறப்படுகின்றது. இவ்வாறு உருவாக்கப்பட்ட சாதிய அமைப்பானது பிறப்பினால் நிறுவுகிற அமைப்பாக மாறி அது ஒவ்வொரு சாதிக்குமான அதிகாரம், தொழில், தங்கும் இடம், ஆச்சார நெறிமுறைகள், கல்வி, உடை எனச் சின்னஞ்சிறு அசைவுகளுக்கும் அளவுகோல் அமைக்கப்பட்டு இருக்கின்றது. இதனால் சாதி வேற்றுமைகள் பார்க்கும் போக்கு ஏற்பட்டுள்ளது. இதன் காரணமாக ஒவ்வொரு சாதியும் தங்களுக்கான உரிமைகளைப் பெறப் போராட வேண்டிய சூழல் ஏற்பட்டுள்ளது.

சாதி முறை வேறுபாடுகளுடன் வளர்ந்து வந்த இச்சமூகம் தொடர்ந்து தன்னைத் தக்கவைத்துக் கொள்வதிலும் தகவமைத்துக் கொள்வதிலும் கவனம் செலுத்தியது. இது ஆங்கிலேயர் ஆட்சியிலும் தொடர்ந்தது என்று கூறலாம். இந்தியச் சாதிப் படிநிலையில் உயர்நிலையில் இருந்த பிராமணர்கள் ஆங்கில ஆட்சியில் தங்களைத் தக்க வைத்துக்கொள்வதற்கான முயற்சிகளில் ஈடுபட்டனர். வேலை வாய்ப்பை பெறுவதிலும், அரசு உயர் பதவிகளை அடைவதிலும் முன்னிலை பெற்றனர். அதற்காக ஆங்கில ஏகாதிபத்திய ஆட்சியுடன் ஒத்துப் போயினர். இதனால் ஒவ்வொரு மாநிலத்திலும் சமூக அரசியல் இயக்கங்களைக் கட்டமைத்தனர்.

“அவற்றில் குறிப்பிடத்தக்கன பிரிட்டிஷ் இந்தியன் அசோசியேஷன் (கல்கத்தா - 1851), மெட்ராஸ் நேடிவ் அசோசியேஷன் (சென்னை - 1852), இந்தியன் அசோசியேஷன் (கல்கத்தா - 1876), பம்பாய் அசோசியேஷன் (பம்பாய் - 1876), மகா ஜனசபை (சென்னை - 1884), பூனா சர்வ ஜனிக சபை (பூனா - 1872) என்பனவாகும். இவ்வியக்கங்கள் ஆங்கிலேயருடன் ஒத்துழைத்து ஆட்சித்துறை அதிகாரங்களைப் பெறுவதிலேயே குறியாக இருந்தன. இவ்வமைப்புக்களை உருவாக்கியவர்களும் வழி நடத்தியவர்களும் இவ்வமைப்புக்களில் பங்கு பெற்றவர்களும் பெரும்பாலும் பிராமணர்களாகவே இருந்தது குறிப்பிடத்தக்கதாகும்.”[189]

இந்த அமைப்புகள் பின்னாளில் இந்திய தேசிய காங்கிரஸ் பிராமணர்களுக்கு முன்னுரிமை கொடுத்தது. பிராமணர்களின் ஆதிக்கம் அதிகரித்ததன் விளைவாகப் பின்னாளில் பெரியார் காங்கிரஸிலிருந்து வெளியேறினார். இவ்வாறு இந்தியத் தேசியக் காங்கிரஸ் பிராமணர்களின் புகலிடமாக அடையாளம் காட்டிக்கொண்டதனாலேயே பிராமணர் - பிராமணர் அல்லாதார் என்ற பிரிவினை தமிழகத்தில் தோற்றம் பெற்றது.

அரசியலிலும், அரசு வேலைவாய்ப்புகளிலும் புறக்கணிப்பதாக உணர்ந்த பிராமணரல்லாதார் 1916 - இல் தென்னிந்திய நலவுரிமைச்சங்கத்தைத் தோற்றுவித்தனர். இச்சங்கத்தால் வெளியிடப்பட்ட பார்ப்பனரல்லாதார் கொள்கை அறிக்கை பார்ப்பனர் அல்லாத சாதிகளை எழுச்சிப்பெறச் செய்தது. “இவர்கள் மக்கள் தொகை, வரி செலுத்தும் விகிதாச்சார அடிப்படையில், சட்ட சபையிலும், உத்தியோகத்திலும் வகுப்புவாரி பிரதிநிதித்துவம் ஏற்படவேண்டும் என்ற கொள்கையில் இயங்கினர். இதன் காரணமாகப் பல்வேறு சாதியச் சங்கங்கள் தோற்றம் பெறுவதற்கான சூழல் வந்து வாய்த்தது எனலாம்”[190]

நீதிக்கட்சி, தாழ்த்தப்பட்டவர்களுக்குப் பல சலுகைகள் அளித்திருந்தாலும் வகுப்புரிமை மசோதாக்கள் நிறைவேற்றப்பட்டு இருந்தாலும் அவை போதுமானதாக இல்லை என்பதை அறிய முடிகின்றது. சமூகத்தில் அவர்களுக்கான இடம் கொடுக்கப்படவில்லை. எப்போதும் போலவே தாழ்த்தப்பட்டவர்கள் கடைநிலையிலேயே வைக்கப்பட்டனர். இவர்கள் மற்றவர்களிடமிருந்து வேறுபட்டவர்களாகவே தங்களை அடையாளப்படுத்திக் கொண்டனர்.

“சூத்திரன் எனக் கூறிக்கொள்ளப் பிடிக்காத பிராமணரல்லாத சாதி இந்துக்கள் தங்களைத் ‘திராவிடர்கள்’ என்று அழைத்துக் கொண்டார்கள். 1895 - இல் தங்கள் இனத்துக்கு ஒரு பெயர் சூட்டிக்கொள்ள விரும்பிய இம்மக்கள் (தாழ்த்தப்பட்டோர்) ‘திராவிடர்’ எனப் பெயர் மாற்றிக் கொண்ட சூத்திரர்களிடமிருந்து தாங்கள் தனிப்பட்டவர்கள் என்பதை விளக்கும் வகையில் ‘ஆதிதிராவிடர்’ என்ற பெயரைத் தேர்ந்தெடுத்துக் கொண்டனர்.”[191] இக்கூற்று அதை தெளிவாக்குகின்றது.

இந்திய மண்ணில் தோன்றிய எல்லா இயக்கங்களும் சாதியத்தை முன்வைத்தே தம்முடைய இயக்கங்களை முன்னெடுத்துச் சென்றுள்ளன. சாதியப் பின்னணியோடு தமது இயக்கத்தை வளர்த்தெடுத்தன. இதில் இந்திய உணர்வும், திராவிட இன உணர்வும்

கொண்ட கருத்தியல்கள் உருவாக்கப்பட்டன. இவற்றின் ஊடாக ஒவ்வொரு சாதியும் தங்களை அடையாளப்படுத்திக் கொள்வதில் கவனமாக இருந்துள்ளன. பல காலமாக வருணாசிரமத்தில் இறுகிக் கிடந்த சாதிகள் ஐரோப்பியரின் வருகையினால் பல மாற்றங்களுக்கு உள்ளாயின.

“கிறித்துவத் தந்தைமார்களின் மதப்பிரச்சாரம், மெக்காலே கல்வித் திட்டம், தோட்டத் தொழிலுக்காக ஏற்பட்ட இடப்பெயர்ச்சி, தொழிற்சாலைகளின் வளர்ச்சி ஆகிய காரணங்களால் சாதிய எழுச்சிகள் தோன்றின. எப்பொழுதெல்லாம் புதிய ஒரு சூழல் வரலாற்றில் வாய்க்கிறதோ அப்பொழுதெல்லாம் சாதிகள் விழிப்புற்று, தங்களுக்குள் ஒன்று திரண்டு, தங்களுக்கான உரிமைகளைத் தேடிப் போராடுவதில் ஈடுபட்டுள்ளன.”[192]

பிராமணர்கள் வர்ணாசிரம பாதுகாப்பு சங்கம், சனதான தர்மசங்கம், பிராமண சமாஜம், பிராமண மகாசபை முதலிய சங்கங்கள் வழியாகத் தம்மைக் காத்துக்கொண்டனர். அவர்களைப் போலவே “நாடார், செட்டியார், வெள்ளாளர் முதலிய பல சாதியினரும் சங்கங்கள் அமைத்தனர். மதம் மாறிக் கலகம் செய்தனர். தங்கள் சாதி பற்றிய வரலாற்று நூல்களை எழுதினர். ஒவ்வொரு சாதி வரலாறும் கடவுளோடு இணைத்து, புராணத் தன்மையோடு எழுதப்பட்டது. 1872 - இல் மக்கள் கணக்கெடுப்பின்போது, தங்களைச் ‘சூத்திரர்’ என்று குறிப்பதை எதிர்த்துச் சைவ வேளாளர்கள் இயக்கமாகத் திரண்டு போராடினர். இதன் விளைவாக மறைமலையடிகள் சைவ வேளாளர் வரலாற்றை எழுதினார்”[193] என்பர்.

தாழ்த்தப்பட்ட மக்களும் ஆதி திராவிட ஜனசபா (1892), பறையர் மகாஜன சபா (1894) என்று சங்கங்களைத் தொடங்கி தம் சங்கக் கருத்துக்களை வெளியிட இதழ்களை நடத்தியுள்ளனர். “வேகம் மிகுந்த சாதிய எழுச்சியானது, அரசியல், கல்வி, மதம், இலக்கியம் முதலிய அனைத்துப் பண்பாட்டுத் துறைகளிலும் எதிரொலித்தது. ஏற்கனவே தமிழ்ப்பண்பாடு அரசியல் சூழலோடு இணைத்துப் பேசப்பட்ட சங்க இலக்கியம், இச்சாதியச் சூழலுக்கு ஏற்பவும் வாசிக்கப்பட்டது. சாதிய இயக்கங்கள் மீண்டும் தங்களைப் புதுப்பித்துக் கொண்டு வேகமாக இயங்கி வரும் இன்றைய சூழலில் சங்க இலக்கியத்திலிருந்து தொன்மை தேடும் முயற்சி தொடர்ந்து நடந்து வருகிறது.”[194] என்பர்.

### 1.13.1. சைவ வேளாளர்

சாதிய படிநிலையில் பிராமணருக்கு அடுத்த நிலையில் இருந்த வேளாளர்கள் நிலக்கிழார்களாகவும், உழவுத்தொழில் செய்பவர்களாகவும், வியாபாரத் தொழில் புரிபவர்களாகவும் பழங்காலந்தொட்டே ஆதிக்கச் சக்திகளாக இருந்து வந்துள்ளனர். ஆங்கிலேயர்கள் ஆட்சிக்காலத்தில், 1872-இல் மக்கள் தொகைக் கணக்கெடுப்பின் போது சூத்திரர்கள் எனக் குறித்தபோது இவர்கள் கொதித்தெழுந்தனர். இதனால் தங்களுக்கான வரலாற்றைக் கட்டமைக்கத் தொடங்கினர். அதன் காரணமாக இலக்கிய ஆராய்ச்சியிலும், பண்பாட்டு ஆய்விலும் ஈடுபட்டனர்.

மறைமலையடிகள் வேளாளரின் பழமையைப் பற்றிக் கூறும்போது, "இப்போதிருக்குந் தமிழ் நூல்களில் மிகப் பழையதாகிய தொல்காப்பியத்தில் வேளாளர்களும் அவர்களுக்கே சிறப்பாக உரிய உழவுத் தொழிலும் ஒருங்கே வைத்துச் சொல்லப்படுதல் பெரிதும் நினைவிற் பதிக்கற் பாற்று. தொல்காப்பியம் ஐயாயிரத்து ஐந்நூறு ஆண்டுகளுக்கு முற்பட்ட நூலாகையால், அதிற் குறிக்கப்பட்ட வேளாளர்கள் அந்நூலுக்கு முற்பட்ட காலத்திலேயே அ∴தாவது ஆறாயிர மாண்டுகளுக்கு முன்னரேயே உழவுத் தொழிலைக் கண்டறிந்து பெருக்கி, அதனால் தாமும் நாகரிகத்திற் சிறந்து, பிறரையுஞ் சிறப்புறச் செய்து வாழ்ந்தமை புலனாகும்."[195] என்கிறார்.

"பண்டைத் தமிழ்ப் பாட்டாகிய பட்டினப் பாலையுள்ளும் அதன் ஆசிரியர் உருத்திரங் கண்ணனார் காவிரிப்பூம்பட்டினத்திலிருந்து பழைய வேளாளரைப் பற்றிக் கூறுகின்ற விடத்துக்

'கொலை கடிந்துங் களவு நீக்கியுங்
அமரர்ப் பேணியும் ஆவுதி யருத்தியும்
நல்லானோடு பகடு ஓம்பியும்
நான் மறையோர் புகழ் பரப்பியும்
பண்ணியம் அட்டியும் பசும்பதங் கொடுத்தும்
புண்ணியம் முட்டாத் தண்நிழல் வாழ்க்கைக்
கோடுமேழி நசை உழவர்
நெடுநுகத்துப் பகல்போல
நடுவுகின்ற நன்னெஞ்சினோர்

வடு அஞ்சி வாய்மொழிந்து

தமவும் பிறவும்ஒப்ப நாடிக்

கொள்வதூஉம் மிகை கொளாது கொடுப்பதூஉங்

குறை கொடாது

பல்பண்டம் பகர்ந்து வீசுந் இருக்கை

தொல் கொண்டித் துவன்று இருக்கை'

என்று கூறினார் என வேளாளரின் அறம் நிறைந்த தூயவாழ்க்கையைப் பட்டியல் இடுகிறார். இதனால், உழவுத்தொழிலும், அவ்வுழவுத் தொழிலாற் பெற்ற நெல், துவரை முதலான பல பண்டங்களை விலைப்படுத்தும் வாணிக வாழ்க்கையும் பண்டு தொட்டு வேளாளர் ஒருவர்க்கே உரியவாய் வருதலுந் தெற்றென விளங்கும் என்கிறார்."[196] இக்கூற்றிலிருந்து பழங்காலந்தொட்டே உழவுத்தொழிலுக்கும், வணிகத் தொழிலுக்கும் உரிமையுடையவர்கள் வேளாளர்கள் என்று கூறுவதை அறியமுடிகிறது.

மேலும் மறைமலையடிகள், "பண்டைநாளில் மிழலைக் கூற்றத்தை அரசாண்டவனுங் கொடை கொடுப்பதிற் சிறந்தவனுமான வேள் எவ்வி என்னும் மன்னன் வேளாள வகுப்பினனேயாவன். கடையெழு வள்ளல்களில் ஒருவனும் முந்நூறு ஊரையுடைய பறம்பு நாட்டிற்கும் பறம்பு மலைக்கும் அரசனுஞ், சைவ சமயாசிரியருள் ஒருவரான சுந்தரமூர்த்தி நாயனாராலே கொடுக்கிலாதானைப் பாரியே யென்று கூறினுங் கொடுப்பாரிலை என்று பாராட்டியருளிச் செய்யப்பட்ட வனுமாகிய வேள்பாரி என்னும் மன்னனும் வேளாள வகுப்பினனேயாவன். துவரையை அரசாண்டவனுஞ் சிறந்த கொடையாளியும் ஆகிய இருங்கோவேள் என்னும் அரசனும் வேளாள வகுப்பினனேயாவான். ஒருகாற் குமரி முதல் இமயம் வரை ஒரு மொழி வைத்து உலகாண்ட வேந்தர் பெருமானாகிய சோழன் கரிகாற்பெருவளத்தான், நாஞ்கூர்வேள் என்னும் தலைவனிடத்துப் பெண் கொண்டமை யானும், இக் கரிகாற் சோழனுக்குத் தந்தையாகிய உருவப்ப∴ரேர் இளஞ்சேட் சென்னி என்னும் மன்னர்பிரான் அழுந்தூர்வேள் என்னும் வேளாண் தலைவன்பால் மகட்கொண்டமையானும் பண்டை நாளிலிருந்த சோழ அரசர்கள் வேளாள வகுப்பினராதல் நன்கு தெளியப்படும்."[197] இங்கு அரசத் தொழிலுக்கும் உரிமையுடையவர்கள் வேளாளர்கள் என்ற கருத்தை முன்வைக்கிறார் மறைமலையடிகள். வருணப்பாகுபாட்டில் வேளாளர்கள் நாலாவது வருணத்தோடு பிணிக்கப்பட்டிருக்கவில்லை என்பதை அவர் முன்வைக்கிறார் எனலாம்.

“ ‘வேளாளர் நாகரிகம்’ என்னும் நூலை எழுதிய மறைமலையடிகள், வேளாளரே உலக நாகரிகத்திற்கு வழி காட்டியவர்கள், உழவுத்தொழிலை அறிமுகப்படுத்தி செம்மைப்படுத்தியவர்கள். தமிழகத்தில் தலைமை இடத்தை வகித்தவர்கள். அவர்களே வேலைப் பிரிவினையை வகுத்து, மற்றவர்களை ஏவல் கொண்டவர்கள். உயிர்கள் மீது கருணை கொண்டு சைவப் பழக்கத்தைக் கொண்டவர்கள், மற்ற மக்களைத் தமக்கும் தம் தொழிலுக்கும் உதவியாகப் பதினென் பிரிவினராகப் பிரித்தவர்கள், ஆரியர்களைத் திருத்தி நல்வழிப்படுத்தியவர்கள் என்று விரிவாக எழுதுகிறார். பின்னாளில் ஆரியர்களின் சூழ்ச்சியால் தாழ்ந்த நிலையை அடைந்தனர் வேளாளர். அதனாலேயே ஆரியரின் நால்வருணத்தில் வேளாளர் இடம்பெறவில்லை”[198] என்பதாக எழுதுகிறார்.

வேளாளர்கள் பார்ப்பனர்க்கு எதிராக அல்லது போட்டியாக சாதியக் கருத்துலகில் இயங்கியதை மேற்குறித்த பதிவுகள் வழி, அறியமுடிகிறது. மேலும் தமிழரின் நாகரிகம் வேளாளர் நாகரிகம், தமிழரின் மதம் சைவ மதம் என்ற கருத்தியலும் இவர்களால் பரவலாக்கப்பட்டது என்பதைப் புரிந்துகொள்ள முடிகின்றது.

### 1.13.2.தேவேந்திரகுல வேளாளர்

தென்மாவட்டங்களில் மிகுதியான அளவில் பள்ளர் இனத்தைச் சேர்ந்த மக்கள் வசித்து வருகின்றனர். இவர்கள் தங்களைத் தேவேந்திர வேளாளர்கள் என்ற பெயரில் சாதிய முறையில் இணைந்து வருகின்றனர். “மள்ளர், பள்ளர், பணிக்கர், கடையனார், பலகனார், குடும்பனார், பண்ணாடி, காலடி, வாரியன், மூப்பனார், பாண்டியன், தேவேந்திர குலத்தார், தொண்டைமான் என்றவாறு பல பெயர்களுடனும் பட்டங்களுடனும் வாழும் இம்மக்கள் தங்களைத் தேவேந்திரகுல வேளாளர் என அழைத்துக்கொண்டு ஒருங்கிணைந்து வருகின்றனர்.”[199]

இவர்கள் தேவேந்திர மன்றம், தேவேந்திர குல வேளாளர் சங்கம் என்ற பெயர்களில் சங்கங்கள் அமைத்து அதன் வழியாகத் தாங்கள்தான் இம்மண்ணின் மைந்தர்கள் என்றும், தமிழகத்தை ஆண்ட, அரச பரம்பரையினர் என்று பேசியும் எழுதியும் வருகின்றனர். இம்மக்கள் தங்கள் கருத்துக்களை வெளியிடுவதற்கு மள்ளர் மலர், பாட்டாளி முழக்கம் என்ற இதழ்களையும் நடத்தி வருகின்றனர்.

இம்மக்கள் தமிழ் இலக்கியங்கள் வழியாகத் தங்களுக்கான தொன்மையைத் தேடும் முயற்சியில் ஈடுபட்டுள்ளனர். சங்க இலக்கியம், காப்பியங்கள், சிற்றிலக்கியங்கள்

போன்ற இலக்கியங்களில் தங்களுக்கான சான்றுகளைத் தேடி வருகின்றனர். "மூவேந்தர் யார்?, வேளாளர் யார்?, பள்ளர் அல்ல மள்ளர் ஆம் மன்னர், தமிழ் மூவேந்தர் மரபினரான தேவேந்திரரின் வீழ்ச்சி, தமிழ் இலக்கியத்தில் பள்ளர் (மள்ளர்), தேவேந்திர குல வேளாளர் (அடிப்படைச் சான்றுகள்) என்ற நூல்கள் இம்மக்களுக்கான அடையாளங்களைத் தேடும் முயற்சியில் வெளிவந்த நூல்களாகும். இந்நூல்கள், இம்மக்களை மருதநிலத்துடன் தொடர்புடைய நாகரிக மக்களாகவும், வேளாண்மையைத் தொழிலாக உடையவர்களாகவும் அரச பரம்பரையினராகவும் குறிப்பிடுகின்றன."[200]

தெலுங்கர் ஆட்சிக் காலத்தில் மள்ளர்களாக இருந்தனர் என்றும் இம்மக்கள் பிற்காலத்தில் பள்ளர்களாக மாற்றப்பட்டனர் என்றும் கருத்துக்களை முன்வைக்கின்றனர். மேலும், இவர்கள் மருத நில மக்கள் என்றும் இக்குலக் கடவுள் இந்திரனை சூட்டிக் கொண்டதாகவும் அது நாளடைவில் தேவ இந்திரன் ஆனது என்று இவர்கள் விளக்கம் கூறுகின்றனர்.

"சங்க இலக்கியம் முதல் அனைத்து இலக்கியங்களிலும் மள்ளர்கள்தான் ஆதியிலிருந்து போர்த்தொழிலும், உழவுத் தொழிலும் புரிந்து வந்துள்ளனர். 'வேளாளர்' என்ற பட்டப்பெயருக்கு உரிமையானவர்கள், மள்ளர்கள் எனும் தேவேந்திரகுல வேளாளர்களேயாவர் என்பது தெள்ளத் தெளிவான உண்மையாகும்"[201] என்ற கூற்றில் இருந்து வேளாளர் என்ற பெயருக்கு இவர்கள் உரிமை கொண்டாடுவதைக் காணமுடிகின்றது.

"தமிழகத்தில் மட்டுமின்றி வடநாடுகள் வரை சென்று, தங்களது வீரத்திற்கு நினைவுச் சின்னம் நாட்டிய பெருமை, தமிழ் மள்ளர் வம்ச மன்னர்களான சேர, சோழ, பாண்டியர் தங்களது வில், புலி, கயற்கொடிகளையும் இமயத்தில் தமது செங்கோலை நிறுவினர் என்று தமிழ் இலக்கிய வரலாறு கூறுகிறது. பாண்டிய நாட்டு சோமசுந்தர மள்ளர், இமயம் சென்று கைலாயத்தை வென்று தன் ஆட்சியை நிலைநாட்டினர் என்பது புராணம் கூறும் கருத்து. மள்ளர் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் வடக்கே படை எடுத்துச் சென்று வடபுல அரசர்களை வென்று வந்த செய்தியும், சேரன் செங்குட்டுவன் கனக விசயர் தலையில் கண்ணகி தெய்வத்திற்கான கல்லை எடுத்து வந்த செய்திகளும் பதிற்றுப்பத்தும், சிலப்பதிகாரமும் கூறும் சான்றுகளாகும்."[202] என்று இலக்கியத்தின் வழியாக தங்களை அடையாளப் படுத்திக் கொள்வதை அறியமுடிகின்றது.

“புறநானூற்றிலே போற்றப்படுகின்ற தலைவர்கள் அனைத்தும் மருதநில மள்ளர் குலத் தலைமக்களாகவே உள்ளனர். அகப்பொருள் பற்றிப் பாடும் நூல்களும் மருதநிலத்துத் தலை மக்களான மள்ளர் - மள்ளத்தியர்களையே தலைவன் - தலைவியாகக் கொண்டு இயற்றப்பட்டுள்ளது. கிழவன் - கிழவி என்பது மருதநிலத்து உடைமையாளர்களைக் குறிக்கும். இப்படிச் சங்ககால நூல்களான புறநானூறு, அகநானூறு, பதிற்றுப்பத்து, பத்துப்பாட்டு, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை, நற்றிணை, பரிபாடல், தகடூர் யாத்திரை, புறத்திரட்டு முதலியன எல்லாம் மள்ளர்களைத் தலை மக்களாகக் கொண்டே பாட்டுடைத் தலைவர்களாகக் கொண்டே எழுந்துள்ளன என்பது அறியப்பட வேண்டும்”[203] இவ்வாறு கூறுவதன் மூலம் தமிழர் பண்பாட்டை மள்ளர் பண்பாட்டாகக் காட்டுவது தெரிகின்றது.

### 1.13.3. மறவர்

தேவர் எனக் குறிக்கப்படும் இம்மறவர்குல மக்கள் தென் மாவட்டங்களில் வாழ்ந்து வருகின்றனர். தேவர் இனப்பேரவை, முக்குலத்தோர் பேரவை என்ற பெயர்களில் சங்கம் வைத்துச் செயல்பட்டு வருகின்றனர். இவர்கள் தங்களது பெயரையும், அடையாளத்தையும் சங்க இலக்கியத்திலிருந்து மீட்டுருவாக்கம் செய்யும் முயற்சியில் ஈடுபட்டுள்ளனர்.

இம்மக்கள் கள்ளர், மறவர், அகம்படியர் என்ற மூன்று உட்பிரிவுகளைக் கொண்டுள்ளனர். அகம்படியர் அரசர் அவையில் அகம்படித் தொண்டு செய்து வந்தனர் என்றும் அரண்மனைக் காவல், ஊர்க்காவல், நகர்க்காவல், எல்லைப்புறக் காவல் ஆகிய தொழில்களில் அமர்த்தப்பட்டிருந்தனர் என்றும் கூறப்படுகின்றது. மறவர் முழுநேரப் படைவீரர்களாகவும், நால்வகைப் படைகளிலும் பெருமக்களாகவும் இடம் பெற்றிருந்தனர் என்று கூறப்படுகின்றது. கள்ளர் என்பவர்கள் அரசரால் களவு மற்றும் உளவு வேலைகளில் அமர்த்தப்பட்டவர்கள் என இவர்களைப் பற்றிய செய்திகள் கூறுகின்றன. இம்மக்கள் சங்ககாலத் தமிழரின் வீர மரபுவழி வந்தவர்கள் என்றும், பிராமணர் தொடர்பில்லாத தூய தமிழர் என்றும் கூறிக்கொள்கிறார்கள்.

“இறந்தார்க்கு நடுகல் எடுக்கும் அன்றைய வழக்கத்தை இன்றைக்கும் மதுரை, இராமநாதபுரம், நெல்லை ஆகிய மாவட்டங்களில் வாழும் இக்குலத்தாரிடம் காணமுடிகிறது. குழந்தை இறந்தால் அதனை வாளால் வெட்டிப் புதைக்கும் பண்டைய வழக்கம் சிறிது மாற்றத்தோடு இன்றைக்கும் இவர்களிடம் காணப்படுகிறது. இறந்த

குழந்தைகளின் காதுகளைச் சிறிது அறுத்தோ அல்லது துளையிட்டோ அடக்கம் செய்கின்றனர். தேவன், சேர்வை, தலைவன் என்பன இம்மூவர்க்கும் பொதுவாக உள்ள பட்டப்பெயர்களாகும். இம்மூவகுப்பிற்கும் ஆரியப் பழக்க வழக்கமும் பிராமணர் தொடர்பும் இன்றைக்கும் இல்லாதவர் ஆவர்"[204] என்ற கூற்றானது இன்றைய சூழலோடு பழங்காலப் பண்பாட்டை ஒப்பு நோக்கி அடையாளப்படுத்தும் முயற்சியாகும்.

சங்க கால அரசருக்குத் துணையாக இருந்தவர்கள் மறவர்கள் என்றும், இதனால் படைவீரர், படைத்தலைவர், அமைச்சர் ஆகிய பொறுப்புகளை ஏற்றுச் செயல்பட்டனர் என்றும், சங்க இலக்கியத்தில் காணப்பெறும் மறவர்களை, இன்றைய மறவர்களின் முன்னோர்கள் என்றும் சங்க இலக்கியத்தில் இடம் பெறும் மறவர் பாடல்களை எல்லாம் மறக்குடியினரின் பாடல்களாகவும், எயினர், மறவர், எயிற்றியர், மறத்தியர், மூதின் மகளிர் போன்றவர்களை மறக்குடி முன்னோர்கள் என்றும் குறிப்பதைக் காணமுடிகின்றது.

"போரிலே தன் கணவனையோ மகனையோ இழக்க நேரும் போது மறக்குடிப்பெண்கள், கலங்கிக் கண்ணீர் வடிப்பதில்லை. அரசன் கண்களில் நீர் மல்க, தன் மகன் போரிலே இறக்கவில்லையே என்று மறக்குடி தாயொருத்தி இரங்குகிறாள்"[205] என்று கூறுவதன் மூலம் மறவர் இனப் பெண்கள் வீரத்தாய்மார்கள் எனச் சுட்டப்படுகின்றது. இவ்வாறாக சங்க இலக்கியத்தில் காணப்பெறும் மறவர்களை இக்கால மறவர்களோடு இணைத்து அடையாளப்படுத்தும் போக்குக் காணப்படுகின்றது.

### 1.13.4. அருந்ததியர்

"வரலாற்றில் சக்கிலியர் என வழங்கப்பட்ட இம்மக்கள் அருந்ததியர் சங்கம், அறநெறி மன்றம் என்ற பெயர்களில் சங்கங்களை நாடெங்கும் திறந்து வருகின்றனர். இம்மக்கள் தங்கள் தாய் மொழி தமிழ் எனவும், இனம், மொழி, வீரம், நாடு உட்படத் தமிழ்நெறிப் பண்பாடுகளுடன் மிகச் சிறந்து வாழ்ந்தவர்கள் எனவும் காலத்தால் வஞ்சிக்கப்பட்டவர்கள் எனவும் கூறிப்போராடி வருகின்றனர்."[206] இம்மக்கள் தங்களுக்கான அடையாளத்தை சங்க இலக்கியத்திலிருந்து பெறுவதைக் காணமுடிகின்றது.

"இயேசு கிறிஸ்து பிறப்பதற்கு ஐம்பதாயிரம் ஆண்டுகளுக்கு (கி.மு 50,000) முன்னால் சங்கம் அமைத்து மொழி, வீரம், வாழ்வியல் செழிக்க வாழ்ந்தவர்கள் தமிழர்கள். தமிழ் நிலத்தைச் சேரர், சோழர், பாண்டியர் ஆகிய மூன்று வேந்தர்கள் ஆட்சி செய்தனர். இவர்கள் தவிர குறுநில மன்னர்களும் தமிழ் நிலத்தில் ஆட்சி செய்துள்ளனர்.

இவர்கள் வேளிர் என அழைக்கப்பட்டனர். இவ்வேளிர் பிரிவினருள் ஒரு பிரிவினரான 'அதியர்' குடியினர் அன்றைய தகடூர் (இன்று தருமபுரியும் அதை ஒட்டிய நிலப்பகுதியும்) நிலப்பகுதியை ஆட்சி செய்தனர். இந்த 'அதியர்' குடி வழி வந்தவர்கள் அருந்ததியர்கள்"[207] என்று கூறுவதிலிருந்து தங்களுக்கான அடையாளத்தைத் தொன்மை இலக்கித்திலிருந்து பெற முயற்சி செய்வதைக் காணமுடிகின்றது.

"அகநானூறு, பரிபாடல், கலித்தொகை, ஐங்குறுநூறு, திரிகடுகம், சிலப்பதிகாரம் போன்ற பண்டைய நூல்களுள் 'அருந்ததி' என்ற பெண்ணைப் புலவர்கள் கூறுகிறார்கள். அதியர்குடி (அருந்ததியர்) வழி பெண் அருந்ததி! தவிர, எந்த சாதிப் பெயரும் சங்க இலக்கியங்களில் சாதி அடிப்படையில் அல்லாமல் தொழில் அடிப்படையிலேயே அந்தந்த மக்களைச் சுட்டிக்காட்டுகிறது. பின்வந்த காலங்களிலேயே இவை சாதி என்ற நிலைக்குத் தள்ளப்பட்டன. அதியர் என்ற வேளிர் குடியின் குடிவழிப் பெண்ணின் பெயர் 'அருந்ததி'. இவளைச் சங்க இலக்கியங்கள் சுட்டிகாட்டுகின்றன. இந்தப் பெயரே பின்வந்த காலங்களில் சாதிப் பெயராக அடையாளம் காட்டப்பட்டது. எனவே அருந்ததியர் என்ற பெயர் பன்மையில் அல்லாமல், ஒருமையில் சங்க இலக்கியம் சுட்டிகாட்டுகின்றன என்பதைத் தெளிவாகத் தெரியலாம்."[208] இவ்வாறாகத் தங்கள் சாதிக்கான வரலாற்றைத் தேடுவதையும் அதற்கு சங்க இலக்கியத்தைப் பயன்படுத்துவதையும் அறியமுடிகின்றது.

### 1.13.5. தலித் மக்கள்

'தலித்' என்ற சொல் தனிப்பட்ட சாதியைக் குறிக்காமல் ஒட்டுமொத்த ஒடுக்கப்பட்ட மக்களைக் குறிக்கிறது. "தலித் என்ற சொல் 'தல்' என்ற சமஸ்கிருத மூலத்திலிருந்து வந்ததாகும். அத்துடன் இ∴து ஈப்ரு மொழியுடன் தொடர்புடையதாக அறியப்படுகிறது 'தல்' என்பது சமஸ்கிருதத்தில் நசுக்கப்பட்ட, உள்ளடக்கப்பட்ட, அழிக்கப்பட்ட, சிதறிய. உடைந்த, வெடித்துச் சிதறிய, பிளவுபட்ட போன்ற பொருள்களில் பேசப்படுகின்றது. அதனால்தான், 'தலித்' என்பது இந்தியச் சமூகத்தில் ஒடுக்கப்பட்ட மக்களை, நசுக்கப்பட்ட மக்களைக் குறித்துப் பயன்படுத்தப்படுகிறது."[209]

இப்படி சமூகத்தில் காலங்காலமாக அடக்கப்பட்டு ஒடுக்கப்பட்ட மக்களைக் குறிக்கும் சொல்லாகத் 'தலித்' குறிப்பிடப்படுகின்றது. "தலித் மக்களும் தங்களுக்கான அடையாளத்தை சங்க இலக்கியத்திருந்து காட்டுவதைக் காணமுடிகிறது. தலித் மக்களின் பண்பாட்டைத் தமிழ்ப் பண்பாடாகக் காண முயற்சிப்பார் ராஜ்.கௌதமன். இவருடைய

தலித் பண்பாடு, தலித் பார்வையில் தமிழ்ப் பண்பாடு என்ற நூல்கள் இந்த வேலையைச் செய்கின்றன எனலாம். தலித் மக்களாகக் கானக் குறவர்கள், எயின வேடர்கள், பரதவர், உமணர், ஆயர், உழவர், கைவினைஞர், வணிகர், கலைக்குழுவினர், புலையர் ஆகிய மக்களை இனங்காண்கிறார்."[210]

ராஜ்.கௌதமன் மேலும் கூறுவது "அந்தப் பதினெட்டுத் தொகுப்பு நூல்களிலிருந்து கிடைத்துள்ள தகவல்களை எடுத்துப் பார்த்தால், வடக்கிலிருந்து வந்த, வைதீகமல்லாத (அதாவது ஜைன, பௌத்த மதங்கள்) சமயச் சார்பான பண்பாடுகளால் பேரளவிற்குத் தாக்கம் அடையாத மக்கள் தொகுதிகளை இனம்காண முடிகிறது. இம்மக்களுக்கு, அக்காலப் புலவர்கள் தங்கள் பாடல்களில் முதன்மையான இடம் கொடுத்துப் பாடவில்லை. அரசர்கள், வள்ளல்கள், தலைவர்களைப் புகழ்ந்து அக, புறப் பாடல்களைப் பாடியபோது, இலக்கிய இலக்கண சம்பிரதாயங்களுக்கு, உத்தி விசே'ங்களுக்காகவும் இம்மக்களைப் பற்றிப் பாட நேர்ந்துவிட்டது. இம்மக்களில் உழவர்களைத் தவிர, பிறர் கடற்கரை, காடு, மலை, வறண்டநிலம் முதலிய ஓரப்பகுதிகளில் உணவு சேகரித்தும், விளைவித்தும், வேட்டையாடியும், மீன் பிடித்தும், உப்பு விளைவித்தும், இவற்றை நெல்லுக்குப் பண்டமாற்றமாக விற்றும் தங்கள் உடல் உழைப்பால் வாழ்ந்தார்கள்."[211] உண்மையான உழைக்கும் மக்களைச் சங்கப் புலவர்கள் தம்பாடல்களில் உரிய இடம் கொடுத்து பாடவில்லை என்றும், ஆதிக்க வர்க்கத்தினராலும், வைதிகச் சமயத்தினராலும் இவர்கள் புறக்கணிக்கப்பட்டு ஒடுக்கப்பட்டனர் என்று கூறுகிறார்.

"மேட்டுகுடித் தமிழர்களோடு உறவாடிய படித்த புலவர்கள் இந்த எயின வேடர்களைக் கொலைகாரர்கள் என்றும், கொடிய தொழில் புரிபவர்கள் என்றும், வழிபோக்கர்களிடம் பொருள் இல்லாவிட்டாலும் கூட அவர்களைக் கொன்று பறவைகளுக்கு உணவாக்குவார்கள் என்றும் வசைபாடினார்கள் (அக.375). ஆனால், இதே புலவர்கள்தான் முடியுடைய மூவேந்தர்கள், நானாவிதப் படைகளோடு சென்று வேற்று நாட்டிலிருந்த ஊர்களை எரித்ததையும், உயிர்களைக் கொன்றதையும், விளைந்த நெல்லைச் சூறையாடியதையும், வயல்களைத் தரிசுநிலமாக்கியதையும், பெண்களைக் கொள்ளையடித்து வந்து 'கொண்டி மகளிர்' "வில் அலைத்து உண்ணும் வல்லாண் வாழ்க்கைத் தமிழ்கெழு மூவர்' (அக. 31) என்று போற்றிப் புகழ்ந்தார்கள்."[212]

மேற்கண்ட கூற்றிலிருந்து அறியப்படுவது மேட்டுக்குடித் தமிழர்களோடு உறவாடிய புலவர்கள் உழைக்கும் மக்களைக் கொடுமையானவர்களாகவும், கொள்ளையடிப்பவர்களாகவும் காட்டிவிட்டு, உண்மையிலே கொள்ளையடிக்கும் மன்னர்களைப் புகழ்ந்து பாடியிருப்பதாகவும் குறிப்பிடுகிறார்.

“ஆறுகள், வாய்க்கால்கள், குளம், குட்டைகள், ஏரிகள் இருந்த நீர்ப்பாசனப் பகுதிகளில் உழவர்கள், நெல், கரும்பு, விவசாயம் பார்த்தார்கள். உடலால் உழைத்த இவர்களைப் புலவர்கள் ‘கருங்கை வினைஞர்’ (பெ.ஆ.), ‘வன்னக வினைஞர்’ (புற.61), ‘கைவினை மாக்கள்’ (குறு.309) என்று வருணித்தார்கள்”[213] என்று கூறுவதிலிருந்து அதிகாரவர்க்கத்தால் உழைக்கும் மக்கள் ஒடுக்கப்பட்டனர் என்று எடுத்துக்காட்டுவதாக உள்ளது.

“நாகரிகம், சொத்து, செல்வாக்கு, அதிகாரம், எல்லாத்தோடயும் மேட்டுக்குடித் தமிழ்ப் பண்பாடு சேர்த்துக்கிட்டு நம்ம ஒரிஜனல் பண்பாட்டக் கேவலம்னு ஆக்கிட்டாங்க”[214] என்பதிலிருந்து உழைக்கும் மக்களைத் மேட்டுக்குடி அதிகாரவர்க்கத்தினர் தாழ்நிலைக்குக் கொண்டு வந்தனர் என்கிறார் ராஜ்.கௌதமன். இவ்வாறு சாதிய எழுச்சியின் காரணமாக ஒவ்வொரு சாதியினரும் தங்களுக்கான வரலாற்றைக் கட்டவும், வேர்களைத் தேடவும், அடையாளம் காணவும் முற்பட்டதை அறியமுடிகிறது.

## தொகுப்புரை

- வாசிப்பு என்ற சொல் வாசகன் அல்லது ஆய்வாளன் ஓரிலக்கியத்தை எவ்வாறு அணுகுகிறான், புரிந்து கொள்கிறான், திறனாய்கிறான் என்பதைக் குறிப்பதாகும்.
- நக்கீரர், சீத்தலைச் சாத்தனார் ஆகியோரைப் பற்றிப் புனையப்பட்டுள்ள கதைகள், சங்க இலக்கிய வாசிப்பு என்பது சங்க காலத்திலேயே இருந்திருக்கிறது என்பதை உணர்த்துவதாக அமைகிறது.
- சங்கப்பாடல்களைத் திரட்டித் தொகுத்த தொகுப்பாசிரியர்கள் பாடல்களோடு பல்வேறு குறிப்புகளைத் திரட்டித் தந்துள்ளனர். திணை, துறை, சூழலமைவுக் குறிப்புகள், பண், இசை, வண்ணம், தூக்கு முதலியன பிற்கால வாசிப்பின் விளக்கம் கருதியே அளிக்கப்பட்டிருக்க வேண்டும்.
- சங்க இலக்கியச் செய்யுள்களுக்கு உரையெழுதிய உரையாசிரியர்கள், உரை விளக்கம் மட்டும் கொடுக்காமல், சமகாலச் சமூகத் தேவையை நிறைவு செய்யும் நோக்கத்தோடும் உரை வரைந்துள்ளனர். இதுவும் சங்க இலக்கிய வாசிப்புப் போக்கில் நிகழ்ந்துள்ளது.
- சமயம் சார்ந்த மடங்களைச் சார்ந்த புலவர்கள், சங்க இலக்கியக் கல்வியைத் தடை செய்தனர் என்று தமிழியல் ஆய்வாளர்களில் சிலர் கருதுகின்றனர். சங்க இலக்கியப் பரவலாக்கத்தை இது தடுத்திருப்பது புலனாகிறது.
- 19 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் சங்க இலக்கியத்தை மீட்டுருவாக்கம் செய்யும் முயற்சியில் அறிஞர்கள் இறங்கிய பிறகே, அவற்றுக்கு முக்கியத்துவம் உருவாகியிருக்கிறது. இடைக்காலம் என்னும் பகுதியைக் கடந்துவரச் சங்க இலக்கியம் பெரும்பாடுபட்டிருக்கிறது எனலாம்.
- செந்தமிழ், செந்தமிழ்ச்செல்வி, கலாநிலையம், சித்தாந்த தீபிகை, தமிழ்ப்பொழில் முதலான இதழ்கள் சங்க இலக்கியப் பதிப்புப் பணிகளிலும் ஆய்வுப்பணிகளிலும் தங்களை ஈடுபடுத்திக் கொண்டன. அவை குறித்த கட்டுரைகளைத் தங்களது ஏடுகளில் வெளியிட்டன.
- சங்க இலக்கியப் பதிப்புகள் வெளிவந்த அதே காலகட்டத்தில் பல்வேறு இலக்கியங்கள் பிறமொழிகளிலும் வெளியிடப்பட்டு வெளிநாட்டு ஆய்வாளர்களின் கவனத்தைப் பெற்றன.

- எம்.எஸ்.பூர்ணலிங்கம் பிள்ளை, வெ.கனகசபைப்பிள்ளை, சீனிவாச அய்யங்கார், எஸ்.கிருஷ்ணசாமி அய்யர் முதலான அறிஞர்கள் சங்க இலக்கியங்களைப் பற்றி ஆங்கிலத்தில் கட்டுரைகளை எழுதி இதழ்களில் வெளியிட்டனர்.
- சங்க இலக்கிய ஆய்வுகள் தமிழரின் பெருமைகளையும் சிறப்புகளையும் விளக்கும் வகையில் மட்டும் அமையாமல், அரசியல், உளவியல், அறிவியல், வானவியல், மொழியியல், சமூகவியல், தொல்லியல், மானுடவியல் முதலான துறைகளோடு இணைத்து ஆராயப்பட்டது.
- ஓலைச்சுவடிகளை அச்சுக்குக் கொண்டு வருதலும் அதன் வழியில் இந்திய தேசியத்தின் பெருமையை ஏகாதிபத்தியத்துக்கு உணர்த்துதலுமாகிய செயல்பாட்டில் சங்க இலக்கியங்கள் முன்னணியில் நின்றன.
- இந்திய தேசியச் சிந்தனையுடன் வரலாற்றைக் கட்டமைக்க முனைந்த அறிஞர்கள் தமிழின் பெருமைகளை ஏற்றுக்கொண்ட அதே வேளையில், மிகப்பக்குவமாக இந்தியப் பெருவட்டத்தில் தமிழகத்தை இணைக்கும் முயற்சியில் ஈடுபட்டனர். இதனால் தென்னிந்திய ஆராய்ய் ஒரு வேறுபட்ட தளத்தில் இயங்க ஆரம்பித்தது. இந்த இரட்டைநிலைப் போக்கு தமிழகத்தில் வேரூன்றியது.
- சங்க இலக்கியப் பதிப்புகளும் சிந்துச் சமவெளி நாகரிகக் கண்டுபிடிப்புகளும் தமிழர்களின் தனித்தன்மையான நாகரிக வரலாற்றை வெளிப்படுத்துவதாகத் திராவிட அறிஞர்கள் கருத்துரைத்தனர். கே.ஏ.நீலகண்ட சாஸ்திரி, ரா.ராகவையங்கார், எம்.சீனிவாச ஐயங்கார், சாமி.சிதம்பரனார், எஸ்.வையாபுரிப்பிள்ளை முதலான தமிழறிஞர்கள் இக்கருத்தின் மீது வினையாற்றியுள்ளனர்.
- சங்க இலக்கியம் பாடப்பட்ட காலத்தில் சமண, பௌத்த சமயங்களின் மேலாண்மை இருந்திருக்கக் கூடும்; அக்காலகட்டத்து இலக்கியமல்லாத சான்றுகள் கிடைக்குமானால் இக்கருத்து மெய்ப்படும் என்று கா.சிவத்தம்பியைப் போன்ற ஆய்வாளர்கள் கருதுகின்றனர். ஆனால் சங்க இலக்கியத் தொகுப்பு மரபை நோக்கும்போது வைதிக சமயத்தின் அதிலும் சைவ சமயத்தின் மேலாண்மையை அறிய முடிகிறது.
- சைவ சமய ஈடுபாடுடைய அறிஞர்கள் தங்களிடம் பத்துப்பாட்டுப் பிரதிகள் முழுமையாக இருந்தும் அவற்றிலிருந்து திருமுருகாற்றுப்படையை மட்டுமே முதன்மைப்படுத்தினர் என்பர்.

- தமிழகத்திலும் யாழ்ப்பாணத்திலும் சைவை சித்தாந்த மகா சமாஜங்களும் சைவ சபைகளும் சைவ சிந்தாந்த கழகங்களும் சைவப்பிரகாச சபைகளும் சங்க இலக்கியங்களில் ஆழ்ந்த அக்கறை காட்டின. சங்க இலக்கிய ஆராய்ச்சி மாநாடுகளை நடத்தின. நற்றிணைச் சொற்பொழிவுகள், கலித்தொகைச் சொற்பொழிவுகள், பரிபாடல் சொற்பொழிவுகள், அகநானூற்றுச் சொற்பொழிவுகள், புறநானூற்றுச் சொற்பொழிவுகள், பத்துப்பாட்டுச் சொற்பொழிவுகள் முதலான தொகுப்பு நூல்கள் வெளியிடப்பெற்றன.
- சங்க இலக்கியங்கள், சங்கம் என்ற அமைப்பு ஆகியவற்றில் புத்த, சமண சமயத்தின் பங்களிப்புக் குறித்தும் சைவ சமயத்தின் பங்களிப்பைக் குறித்தும் வரலாற்று ஆய்வாளர்களுக்கும் சைவ சமயச் சார்புடைய ஆய்வாளர்களுக்கும் கருத்து வேறுபாடுகள் நிலவின.
- இறையனார் களவியல் உரையில் கூறப்பட்டுள்ள சங்கம் குறித்த செய்திகள் யாவும் உண்மையே என்று சைவ சமயச் சார்புடைய ந.சி.கந்தையா பிள்ளை, அ.சிதம்பரனார் முதலானவர்கள் வாதிட்டனர்.
- திராவிட இயக்கத்தினர் தங்களது கருத்தியல் செயல்பாடுகளில் இலக்கிய ஆய்வுகளையும் ஒரு பொருண்மையெனக் கொண்டனர். ஆரியக் கலப்பு மிகவும் குறைந்த சங்க இலக்கியத்தையும் அதன் சிறப்பையும் தனது கருத்தியலைப் பரப்பும் நோக்கத்தோடு கையிலெடுத்துக் கொண்டனர்.
- தமிழர்கள் இந்தியாவின் பூர்வீகக் குடிகள், உலக நாகரிகத்துக்கு வழிகாட்டியாக இருந்தவர்கள், உலகில் முதன் முதலில் தோன்றிய மனித இனம் முதலான கருத்துக்கள் திராவிட இயக்க ஆய்வாளர்களால் முன்னெடுக்கப்பட்டன.
- சங்க இலக்கியத்தைப் பாமரர்களிடம் கொண்டு சேர்த்தது திராவிட இயக்கம். தங்களில் அரசியல் குரலுக்குச் சாதகமான பண்புகளைச் சங்க இலக்கியம் கொண்டிருப்பதாகத் திராவிட இயக்கம் கருதியது. எனவே அதனைச் சமகால நிலையுடன் ஒப்பிட்டுப் பொதுவெளியில் முன்வைத்தது.
- அறிஞர் அண்ணா, இரா.நெடுஞ்செழியன், மு.கருணாநிதி ஆகிய திராவிட இயக்கத் தலைவர்கள் சங்க இலக்கியம் குறித்துப் பல்வேறு ஆக்கங்களைச் செய்யவும் எழுதவும் பேசவும் செய்தனர்.
- தமிழ்நாட்டின் மார்க்சிய இயக்கம் தனது இயக்கச் செயல்பாடுகளில் சங்க இலக்கிய ஆய்வுக்குக் குறிப்பிடத்தக்க இடமளித்தது. தமிழ் குறித்தும் சங்க

இலக்கியம் குறித்தும் திராவிட இயக்கம் முன்வைத்த கருத்தாக்கங்களுக்கு எதிர்வினையாற்றியே தீர வேண்டிய கட்டாயத்திலிருந்தது தமிழக மார்க்சிய இயக்கம்.

- தொல்காப்பியத்துள் பொருளதிகாரம், சங்க இலக்கியங்களுள் புறநானூறு ஆகியவற்றை மட்டுமே மார்க்சியர் ஆய்வு செய்துள்ளனர் என்பர். அகப்பாடல்களை மார்க்சியர்கள் உரிய கவனமெடுத்து ஆய்வு செய்யவில்லை என்று மதிப்பிடுவோரும் உண்டு.
- கே.முத்தையா, கோ.கேசவன் ஆகிய சில மார்க்சியர்கள் மட்டுமே சங்க இலக்கிய ஆய்வுகளில் அக்கறை செலுத்தினர். காலம் பற்றிய ஆய்வில் மார்க்சியர்கள் பெரிதும் ஆர்வம் காட்டவில்லை. தேவைப்படும்பொழுது எஸ்.வையாபுரிப்பிள்ளை போன்றோரின் முடிவுகளையே வழிமொழிந்தனர்.
- கா.சிவத்தம்பி, கைலாசபதி முதலான ஈழத்து மார்க்சிய அறிஞர்கள் சங்க இலக்கியம் பற்றிய கணிசமான ஆய்வுகளைச் செய்துள்ளனர். பண்டைத்தமிழ்ச் சமூகத்தின் நிகழ்த்துகலை மரபு குறித்த கா.சிவத்தம்பியின் ஆய்வு குறிப்பிடத்தக்கது.
- மார்க்சியர்கள் சமூகவியல், பொருளியல் அடிப்படையில் தம் ஆய்வுகளை முன்வைத்தனர். சர்வதேசியம், இந்திய தேசியம் ஆகிய கருத்தாக்கங்களின் அடிப்படையிலேயே தங்களது சங்க இலக்கிய ஆய்வையும் முன்வைத்தனர். தமிழ்த்தேசியம் என்ற கருத்துவருவாக்கத்தை மறுத்து இந்திய தேசிய மறுமலர்ச்சி இயக்கத்தின் போக்கினையொட்டியே தங்களது விமர்சனப் பார்வையை அமைத்துக்கொண்டனர்.
- ஆங்கிலேயர்களை இந்தியாவிலிருந்து வெளியேற்றும் முயற்சியினூடாக, இங்கிருந்த பல்வேறு சாதியக் குழுக்கள் தன்னெழுச்சி பெற்றன. இந்த எழுச்சியானது அரசியல், கல்வி, மதம், இலக்கியம் முதலிய அனைத்துப் பண்பாட்டுத் துறைகளிலும் எதிரொலித்தது. ஏற்கனவே தமிழ்ப்பண்பாடு அரசியல் சூழலோடு இணைத்துப் பேசப்பட்ட சங்க இலக்கியம், இச்சாதியச் சூழலுக்கு ஏற்பவும் வாசிக்கப்பட்டது. சாதிய இயக்கங்கள் மீண்டும் தங்களைப் புதுப்பித்துக் கொண்டு வேகமாக இயங்கி வரும் சூழலில் சங்க இலக்கியத்திலிருந்து தொன்மை தேடும் முயற்சி தொடர்ந்து நடைபெற்று வருகிறது.

- சைவ வேளாளர் எழுச்சியானது சங்க இலக்கியத்தில் தங்களது வேர்களைத் தேடும் முயற்சியில் தொடங்கியது. மறைமலையடிகளைப் போன்றவர்கள் இவ்வாறான நோக்கில் சங்க இலக்கியத்தில் தொழிற்பட்டுள்ளனர். பழங்காலந்தொட்டே உழவுத் தொழிலுக்கும் வணிகத் தொழிலுக்கும் உரிமையுடையவர்கள் வேளாளர்கள் என்ற கருத்தை முன்வைத்தனர். அரசத் தொழிலுக்கும் உரிமையுடையவர்கள் வேளாளர்கள் என்றும் வருணப்பாகுபாட்டில் வேளாளர்கள் நாலாவது வருணத்தோடு பிணிக்கப்பட்டிருக்கவில்லை என்றும் கருதுவர்.
- மள்ளர் என்னும் சமுதாயத்தினர் சங்க இலக்கியங்களில் குறிப்பாக புறநானூற்றில் போற்றப்படுகிற தலைவர்கள் அனைவருமே மள்ளர்கள் என்று கருத்துரைக்கின்றனர். அகப்பொருள் பற்றிப் பாடும் நூல்களும் மருத நிலத்துத் தலைமக்களான மள்ளர், மள்ளத்தியர்களையே தலைவன் தலைவியாக் கொண்டு இயற்றப்பட்டுள்ளன என்பர்.
- சங்க கால அரசருக்குத் துணையாக இருந்தவர்கள் மறவர்கள் என்றும், இதனால் படைவீரர், படைத்தலைவர், அமைச்சர் ஆகிய பொறுப்புகளை ஏற்றுச் செயல்பட்டனர் என்றும், சங்க இலக்கியத்தில் காணப்பெறும் மறவர்களை, இன்றைய மறவர்களின் முன்னோர்கள் என்றும், சங்க இலக்கியத்தில் இடம்பெறும் மறவர் பாடல்களை எல்லாம் மறக்குடியினரின் பாடல்களாகவும், எயினர், மறவர், எயிற்றியர், மறத்தியர், மூதின் மகளிர் போன்றவர்களை மறக்குடி முன்னோர்கள் என்றும் குறிப்பதைக் காணமுடிகிறது.
- அருந்ததி இனத்தைச் சேர்ந்தோர் சங்க இலக்கியங்களில் கூறப்பெறும் அருந்ததி என்னும் பெண் அதியர் குடி வழி வந்தவள் என்றும் அவளுடைய பெயரிலேயே பிற்காலக்குடிகள் சாதிப்பெயராக அறியப்பட்டார்கள் என்றும் கூறுவர்.
- தலித் மக்களுக்கான அடையாளத்தைச் சங்க இலக்கியங்களில் தேடும் முயற்சியை ராஜ்கௌதமன் போன்ற ஆய்வாளர்கள் முன்னெடுத்துள்ளனர். தலித் மக்களாக, கானக்குறவர்கள், எயின வேடர்கள், பரதவர், உமணர், ஆயர், உழவர், கை வினைஞர், வணிகர், கலைக்குழுவினர், புலையர் ஆகிய மக்களை இனங்காண்கின்றனர்.
- அரசியல், சாதி அமைப்புகளும் இயக்கங்களும் பல்வேறு வகைகளில் சங்க இலக்கியங்களை வாசித்துள்ளன. பல்வேறு முரண்பட்ட கருத்துக்கள் முன்மொழியப்பட்டு எதிர்கொள்ளப்பட்டு விவாதிக்கப்பட்டுள்ளன. ஆனாலும்

தமிழ்நாட்டில் தொன்மையான அடையாளங்களைத் தேடும் யாவரும் தேடும் களஞ்சியமாகச் சங்க இலக்கியம் இருக்கிறது எனலாம்.

## சான்றெண் விளக்கம்

1. ந.இராணி, சங்க இலக்கியத் தொகுப்பு நெறிமுறைகள், பதிப்புரை
2. மேலது., அணிந்துரை, ப.vi
3. ஏ.வி.சுப்பிரமணியன்,தமிழ் ஆராய்ச்சியின் வளர்ச்சி,ப.17
4. மேலது., ப.17
5. ந.இராணி,மு.நூ., ப.16
6. மேலது., ப.18
7. வீ.அரசு (ப.ஆ),சங்க இலக்கியம் பன்முக வாசிப்பு, ப.11
8. மேலது, ப.9
9. ந.இராணி, மு.நூ., ப.24
10. மேலது., ப.9
11. வீ.அரசு (ப.ஆ), மு.நூ., பக்.11,12
12. மேலது., பக்.50,51
13. மேலது.,ப. 51
14. மேலது.,பக். 51,52
15. மேலது.,ப. 57
16. மேலது.,ப. 59
17. மயிலை சீனி.வேங்கடசாமி. பத்தொன்பதாம் நூற்றாண்டில் தமிழ் இலக்கியம் (1800-1900), ப.66
18. மேலது., ப.66
19. மேலது., ப.66
20. மேலது., ப.67
21. மேலது., ப.67
22. மேலது., ப.68
23. மேலது., ப.68
24. பெருமாள் முருகன், தி இந்து, அக்டோபர் 24, 2013
25. மேலது
26. மேலது
27. மேலது
28. மேலது

29. மயிலை சீனி.வேங்கடசாமி, மு.நூ., பக்.68,69
30. மேலது., ப.66
31. மேலது., ப.70
32. குளோரியா சுந்தரமதி, உ.வே.சா. சங்க இலக்கிய பதிப்புகள், ப.9
33. கா.அய்யப்பன், குறிஞ்சி சங்க இலக்கியம், பக்.21,22
34. மேலது., ப.22
35. ம.வே.பசுபதி, உ.வே.சா. வாழ்வும் தமிழ்த் தொண்டும், ப.97
36. கி.பார்த்திபராஜா, இருபதாம் நூற்றாண்டுத் தமிழியல் ஆய்வு வரலாறு, ப.14
37. பெருமாள் முருகன், தி இந்து, அக்டோபர் 24, 2013
38. இரா.காமராசு, தமிழ் ஆளுமைகள் சிந்தனைத் தடம், ப.76
39. மேலது., ப.78
40. வீ.அரசு (ப.ஆ), மு.நூ, ப.219
41. மேலது., பக்.219,220
42. மேலது., ப.220
43. மேலது., ப.220
44. மேலது., ப.220
45. க.அய்யப்பன், மு.நூ, ப.21
46. மேலது., ப.26
47. வீ.அரசு, மு.நூ, பக்.224, 225
48. மேலது., ப.225
49. மேலது., ப.226
50. மேலது., ப.226
51. மேலது,, ப.227
52. மேலது., ப.227
53. மேலது., ப.227
54. மேலது., பக்.227,228
55. மேலது., பக்.228,229
56. க.அய்யப்பன், மு.நூ, ப.28
57. மேலது, ப.28
58. இரா.நாராயணன், சங்க இலக்கிய அரசியல், ப.17
59. மேலது., ப.17

60. குணா, இந்தியத் தேசியமும் திராவிடத் தேசியமும், ப.159
61. பெ.சு.மணி, இந்தியத் தேசியத்தின் தோற்றமும் வளர்ச்சியும், ப.75
62. எஸ்.வி.இராஜதுரை, இந்து இந்தி இந்தியா, பக்.41,42
63. மேலது., ப.36
64. மேலது., ப.44
65. கவிதா சரன் (இதழ்), அக்டோபர் - நவம்பர், 1997, ப.63
66. குணா,மு.நூ, ப.163
67. மேலது., ப.164
68. மேலது.. ப.164
69. மேலது., ப.186
70. மேலது, ப.186
71. பே.சு.மணி, மு.நூ, ப.369
72. மேலது., ப.370
73. இரா.நாராயணன், மு.நூ, ப.22
74. மேலது., ப.22
75. எஸ்.வி.ராஜதுரை, இந்து இந்தியா, ப.66
76. இரா.நாராயணன், மு.நூ, ப.23
77. மேலது., ப.24
78. மேலது., ப.24
79. மேற்கோள்: இரா.நாராயணன், சங்க இலக்கிய ஆராய்ச்சி, ப.24
80. டி.டி.கோசம்பி (மொ.நூ.), பண்டைய இந்தியா அதன் பண்பாடும் நாகரிகமும் பற்றிய வரலாறு, ப.9
81. இரா.நாராயணன், மு.நூ, ப.25
82. மேலது., ப.25
83. மேலது., ப.25
84. மேலது., ப.27
85. கா.சிவத்தம்பி, தமிழில் இலக்கிய வரலாறு, ப.115
86. இரா.நாராயணன், மு.நூ, ப.28
87. மேலது., ப.28
88. கே.ஏ.நீலகண்ட சாஸ்திரி, தென்னிந்திய வரலாறு (முதல் பகுதி), ப.19
89. இரா.நாராயணன், மு.நூ, ப.29

90. கே.ஏ.நீலகண்ட சாஸ்திரி, மு.நூ,ப.35
91. இரா.நாராயணன், மு.நூ, ப.30
92. மேற்கோள், ந.சுப்பிரமணியன், சங்ககால வாழ்வியல், ப.30
93. கே.ஏ.நீலகண்ட சாஸ்திரி, தென்னிந்திய வரலாறு (முதல் பகுதி),ப.185
94. கிரு‘ணசாமி ஐயங்கார், கடைவள்ளலார் காலம், ப.6
95. மேற்கோள் ,நா.சுப்பிரமண்யன்,மு.நூ,ப.30
96. மேற்கோள், மேலது, ப.30
97. இரா.நாராயணன், மு.நூ, ப.32
98. மேலது., ப.39
99. மேற்கோள், கா.சிவத்தம்பி, தமிழில் இலக்கிய வரலாறு, ப.110
100. இரா.நாராயணன்,மு.நூ,ப.40
101. சாமி.சிதம்பரனார், தொல்காப்பியத் தமிழர், ப.9
102. மேலது., எட்டுத்தொகையும் தமிழர் பண்பாடும், ப.4
103. மேலது., பக்.4,5
104. எஸ்.வையாபுரிப்பிள்ளை, காவிய காலம், ப.61
105. இரா.நாராயணன், மு.நூ, ப.39
106. வீ.அரசு, மு.நூ,ப.230
107. மேலது.,ப.230
108. மேற்கோள், மேலது.,ப.232
109. மேற்கோள், மேலது.,ப.232
110. இரா.நாராயணன், மு.நூ,ப.50
111. மேலது.,ப.110
112. எஸ்.வி.ராஜதுரை, இந்து இந்தி இந்தியா, ப.46
113. இரா.நாராயணன், மு.நூ, ப.55

114. பே.சு.மணி, இந்திய தேசியத்தின் தோற்றமும் வளர்ச்சியும்,ப.61

115. மேற்கோள்: இரா.நாராயணன், மு.நூ,ப.77

116. சே.இராசேந்திரன், தமிழ்க் கவிதையில் திராவிட இயக்கத்தின் தாக்கம், ப.27

117. மேற்கோள்: மேலது.,ப.27

118. இரா.நாராயணன், மு.நூ, ப.56

119. வீ.அரசு, முநூ., ப.233

120. மேலது, ப.233

121. இரா.நாராயணன், மு.நூ, ப.57

122. மேலது, ப.58

123. வீ.அரசு, மு.நூ, ப.235

124. மேலது.,ப.235

125. மேலது, ப.236

126. கா.சிவத்தம்பி, தமிழில் இலக்கிய வரலாறு, ப.65

127. இரா.நாராயணன், மு.நூ,ப.59

128. மேற்கோள், வீ.அரசு, மு.நூ,ப.236

129. ந.சி.கந்தையா பிள்ளை, முச்சங்கம், ப.15

130. மேலது, ப.275

131. அ.சிதம்பரனார், தமிழ்ச் சங்கங்களின் வரலாறு, கழக வெளியீடு, ப.5

132. ஆ.கார்மேகக் கோனார், தமிழ்ச் சங்க வரலாறு, பி.டி.இராசன், (தொ.ஆ), மதுரைத் தமிழ்ச் சங்க வரலாறு, பக்.12,13

133. மா.ரா.போ.குருசாமி, சங்க காலம், மெர்குரி புத்தகக் கம்பெனி, ப.11

134. மேலது.,ப.243

135. குணா, இந்திய தேசியமும் திராவிடத் தேசியமும், ப.129

136. மேலது, ப.130

137. ம.பொ.சிவஞானம், தமிழகத்தில் பிறமொழியினர், ப.26

138. குணா, மு.நூ,ப.133

139. மேலது.,ப.137

140. ந.முத்துமோகன், தமிழ் அடையாள அரசியலின் இயங்கியல், ப.117

141. மேலது.,பக்.117,118

142. மேலது.,ப.118

143. மேலது.,ப.119

144. மேற்கோள்: கு.திருமாறன், தனித்தமிழ் இயக்கம்,ப.90

145. ந.முத்துமோகன், மு.நூ,ப.112

146. மேலது.,ப.112

147. மேலது.,ப.113

148. மேலது.,ப.114

149. இரா.நாராயணன், மு.நூ,ப.101

150. வெ.கனகசபை, ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முற்பட்ட தமிழகம் (மொ.நூ),ப.5

151. மேலது.,ப.5,6

152. இரா.நாராயணன், மு.நூ,ப.103

153. மேலது.,ப.105

154. மேலது.,ப.108

155. க.அப்பாத்துரை, தமிழக வரலாறு, ப.20

156. மேலது., தென்னாட்டுப் போர்க்களங்கள், ப.எ

157. இரா.நாராயணன், மு.நூ,ப.110

158. மேலது.,ப.111

159. ந.முத்துமோகன், தமிழ் அடையாள அரசியலின் இயங்கியல்,ப.123

160. மேலது.,ப.123

161. மேலது.,ப.123

162. மேலது.,ப.120

163. சு.துரை, தமிழ் இலக்கிய ஆய்வில் மார்க்சிய நோக்கு,ப.36

164. பா.ஆனந்தகுமார், தமிழ் ஆராய்ச்சி வரலாற்றில் மார்க்சியப் பேரொளி, ப.13

165. சு.துரை, மு.நூ,ப.36

166. கோவைவாணன் (ப.ஆ), தமிழ் இலக்கிய ஆய்வில் மார்க்சிய நோக்கு,ப.36

167. மேலது.,ப.160

168. சு.துரை, மு.நூ,ப.37

169. கே.முத்தையா, சிலப்பதிகாரம் உண்மையும் புரட்டும்,ப.136

170. சு.துரை, மு.நூ,ப.38

171. மேலது.,ப.42

172. மேலது.,ப.43

173. கோவைவாணன் (ப.ஆ), மு.நூ,ப.146

174. பா.ஆனந்தகுமார், மு.நூ,ப.13

175. மேலது.,ப.14

176. மேலது.,ப.14

177. கோவைவாணன் (ப.ஆ),மு.நூ,ப.152

178. மேலது.,ப.161

179. மேலது.,ப.161

180. சு.துரை, மு.நூ,ப.45

181. மேற்கோள்: மேலது.,ப.45

182. மேலது.,ப.46

183. மேற்கோள்: மேலது., ப.47

184. மேலது.,ப.48

185. மேலது., ப.62

186. மேற்கோள்: மேலது., பக்.62,63

187. மேலது.,ப.64

188. தமிழ்நாடன், மநுதர்மம்,ப.4

189. இரா.நாராயணன், மு.நூ, ப.137

190. மேலது.,ப.188

191. அ.ரவிக்குமார், வேல்சாமி (தொ.ஆ), தேசியம் ஒரு கற்பிதம், ப.150

192. க.பஞ்சாங்கம், சிலப்பதிகாரம் திறனாய்வுகள் - ஒரு பார்வை, ப.77

193. மேலது.,ப.78

194. இரா.நாராயணன், மு.நூ,ப.142

195 மறைமலையடிகள், வேளாளர் நாகரிகம், ப.1

196. இரா.நாராயணன், மு.நூ, பக்.146,147

197. மறைமலையடிகள், மு.நூ,பக்.10,11

198. இரா.நாராயணன், மு.நூ, ப.145

199. மேலது.,ப.150

200. மேலது.,பக்.150,151

201. மேற்கோள்: இரா.நாராயணன், மு.நூ, ப.152

202. மேற்கோள்: மேலது., பக்.152,153

203. மேற்கொள்: மேலது., ப.153

204. க.முத்தையா, சங்க கால மறவர், ப.21

205. மேலது., ப.55

206. இரா.நாராயணன், மு.நூ,ப.157

207. எழில் இளங்கோவன், அருந்ததியர் வரலாறு வினாவும் - விளக்கமும், ப.1

208. மேலது.,பக்.4,5

209. பூ.மூர்த்தி, தலித் சமூகவியல், ப.9

210. இரா.நாராயணன், மு.நூ, பக்.159,160

211. ராஜ்.கௌதமன், தலித் பார்வையில் தமிழ்ப் பண்பாடு, பக்.6,7

212. மேலது., பக்.18,19

213. மேலது., ப.41

214. மேலது., ப.20

# இயல்-II

# திராவிடக் கருத்துநிலை நிறுவனர்களின் இலக்கியக் கோட்பாடுகளும் சங்க இலக்கிய வாசிப்பும்

## 2. திராவிடக் கருத்துநிலை நிறுவனர்களின் இலக்கியக் கோட்பாடுகளும் சங்க இலக்கிய வாசிப்பும்

2.1. திராவிடம் - சொல்லும் பொருளும்
2.2. திராவிடம் - மூவகையான கருத்துக்கள்
2.3. திராவிடம் - பெரியாரின் விளக்கம்
2.4. பயன்பாட்டில் 'திராவிடம்' என்னும் சொல்
2.5. திராவிட இயக்கம் வரையறை
2.6. தென்னிந்திய மக்களின் சங்கம்
2.7. திராவிட தேசியம்
2.8. கருத்துநிலை - விளக்கம்
2.9. திராவிடக் கருத்து நிலை
2.10. பெரியாரின் பண்பாட்டு நடவடிக்கை
2.11. திராவிட இயக்கத்தின் நிலைப்பெயர்வும் கருத்து நிலையும்
2.12. பெரியார் இலக்கியக் கொள்கையும் சங்க இலக்கிய வாசிப்பும்
2.13. பெரியாரின் இலக்கிய வரையறை
2.14. தமிழ்ப் புலவர்கள்
2.15. பிற இலக்கியங்கள் குறித்துப் பெரியாரின் வாசிப்பு
2.15.1. திருக்குறள்

# இயல் - 2

# திராவிடக் கருத்துநிலை நிறுவனர்களின் இலக்கியக் கோட்பாடுகளும் சங்க இலக்கிய வாசிப்பும்

## 2.1.திராவிடம் - சொல்லும் பொருளும்

‘‘தமிழ், திராவிடம் என்னும் இரு சொற்களும், ஒரு பொருள் பன்மொழி (Synonyms)யாகக் கருதப்படுவதும் உண்டு எதிர்ச் சொற்களாக (Antonyms) விளக்கப்படுவதும் உண்டு’’[1] இலக்கிய நூல்களிலும் திராவிடம் என்னும் சொல் பயன்படுத்தப்பட்டு வந்துள்ளது. ‘‘கி.பி.ஏழாம் நூற்றாண்டைச் சார்ந்த குமரிலபட்டரே, முதன் முதலில் அச்சொல்லைக் கையாண்டதாகக் கூறுகின்றனர். ஆனால் மனுஸ்மிருதியிலேயே ‘திராவிடர்’ என்னும் சொல்லைக் காண முடிகிறது.

‘‘சாதி தர்மத்தை அனுசரிக்காதவர்களுக்குப்

பிறந்தவர்கள் திராவிடர்கள்.... திராவிட

தேசத்தை ஆண்டவர்கள் சூத்திரர்கள்

என்று மனுஸ்மிருதி குறிப்பிடுகிறது.’’[2]

தமிழ் இலக்கியங்களிலும் திராவிடம் எனும் சொல் காணப்படுகின்றது. ‘‘17 ஆம் நூற்றாண்டினரான தாயுமானவரின் பாடலொன்றில் ‘திராவிடம்’ என்னும் சொல் இடம்பெறுகின்றது. ‘‘கல்லாத பேர்களே நல்லவர்கள்’’ எனத் தொடங்கும் பாடலில் ‘திராவிடம்’ என்னும் சொல்லைப் பயன்படுத்துகின்றார். அப்பாடலில் ‘திராவிடம்’ என்னும் சொல் தமிழ் மொழியையே குறித்து நிற்கின்றது’’[3] என்பர்.

‘‘தமிழ்க் குழந்தை’ என்னும் பொருளிலேயே திருஞான சம்பந்தர் ‘திராவிட சிசு’ என அழைக்கப்பட்டார். தந்தை பெரியார் தன் சொற்பொழிவு மற்றும் உரைநடைப் பகுதியில் பலவிடங்களில் தமிழ் என்னும் பொருள்படவே திராவிடத்தைக் கையாண்டுள்ளார்’’[4]

“இம்மொழி இனத்தைக் குறிக்க, வடமொழியில் வழங்கிய மிகப் பழைய சொற்களுள் ஒன்று ‘அந்திர திராவிட பாஷா’ என்பது. இத்தொடர் கி.பி. எட்டாம் நூற்றாண்டின் இறுதியில் வாழ்ந்த, குமரிலப்பட்டரால் ஆளப்பட்டுள்ளது. தென்னாட்டு மக்களையும் மொழியையும் குறிக்கும் சொல்லாக, சமஸ்கிருத மொழிநூல் ஆசிரியர்களால் வழங்கப்பட்ட சொல். இச்சொல் தென்னிந்திய மக்கள் அனைவரையும் குறிப்பிடுவதாகவே தோன்றுகிறது.”[5] என்கிறார் கால்டுவெல். எனினும் அவர் திராவிடம் என்னும் சொல்லை தமிழ் தெலுங்கு, கன்னடம், மலையாளம், துளு உள்ளிட்ட இருபத்திரண்டு மொழிகளையும் ஈன்றெடுத்த மொழியெனவே திராவிடத்தைக் குறித்தார். அதனால்தான் தமிழ் உள்ளிட்ட இம்மொழிகளைத் திராவிட மொழிக் குடும்பம் என்று அவர் அழைத்தார்.

**2.2.திராவிடம் - மூவகையான கருத்துக்கள்**

“ ‘திராவிடம் என்னும் சொல்லின் பிறப்பினை ஆராயப் புகுந்த அறிஞர் பெருமக்கள் மூவகையான கருத்துகளை வெளியிட்டுள்ளனர். திராவிடம் என்னும் வடமொழிச் சொல்லே ‘தமிழாகத் திரிந்தது என்பது ஒருசாரர் கருத்து. ‘தமிழ்’ என்னும் சொல்லின் வடமொழித் திரிபே திராவிடமாயிற்று என்பது பிறிதொரு சாராரின் கருத்தாகும். இவையல்லாமல், இச்சொல்லை வேறுவகையாக விளக்கும் அறிஞர்களும் உண்டு”[6].

“ ‘திராவிடம்’ என்னும் வடமொழிச் சொல்லிலிருந்தே தமிழ் என்னும் சொல் உருவாயிற்று என்பர் கால்டுவெல்”[7]. “திராவிட (அ) த்ராவிட - திரமிட - திரமிள(ல) - தமிலோ - தமிழ் என்று திரிந்தது என்பர். இது கால்டுவெல், திராவிடம் எப்படித் தமிழாயிற்று என்பதற்காகக் கொடுத்திருக்கும் விளக்கமாகும். ‘திராவிட’ என்ற வடமொழிச் சொல் அம்மொழி இலக்கியங்களில் ‘திரமிட’ என்ற வழக்கினைப் பெற்றுள்ளது. பிராகிருத மொழிகளிலும், மலையாளம் முதலான திராவிடமொழி இலக்கியங்களிலும் ‘திரமிள’ என்னும் சொல்லாட்சி பரவலாகக் காணப்படுகின்றது. பாலி மொழியில் ‘தாமிலோ’ என்னுஞ் சொல் பயின்று வந்துள்ளது. இச்சொற்கள் எல்லாம் ‘திராவிட’ என்ற சொல்லின் திரிந்த வடிவங்களேயாகும். இவற்றை கோக்கத் ‘தமிழ்’ என்பதும் ‘திராவிட’ என்னும் சொல்லின் திரிந்த வடிவமாகவே இருக்க வேண்டும் என்பர் கால்டுவெல்”[8].

“டாக்டர் எஸ்.கே.சாட்டர்ஜி ‘திராவிடம்’ (திரமிளம்) ‘தமிழ்’ என்ற இரு சொற்களுக்குமிடையே ‘தெர்மிலை’ அல்லது ‘தெரிமிலி’ என்ற சொல் வழங்கியிருக்க வேண்டும் என்பர். அச்சொல்லின் திரிபே தமிழ். திராவிடம் என்பனவாகும் என்று அவர்

அறிவித்துள்ளார். தெரிமிலி - திராவிடா - திராமிடா - திரமிளா - திரமிழா - தமிள - தமிழ - தமிழ் என்பது டாக்டர் சாட்டர்ஜி தமிழ் எனும் சொல்லின் பிறப்புக்குக் காட்டும் காரணங்கள்''[9]. சாட்டர்ஜியின் சொற்பிறப்புப் பற்றிய விளக்கமும் கால்டுவெல் கருதுவது போலவே உள்ளது.

''டாக்டர் கிரையர்சன் (Grierson.J.a) என்பவர் தமிழ், தமிழ, த்ரமிள, த்ரமிட, த்ரவிட, திரவிட என்று தமிழன் திரிபே திராவிடமாயிற்று என்பர். பவழம் என்னும் தமிழ்ச்சொல் 'ப்ரவாளம்' என்று வடமொழியாசிரியர்களால் திரித்து வழங்கப்பட்டுள்ளதைப் போலவே தமிழும் திரித்து வழங்கப்பட்டது என்பர் கிரையர்சன்''[10].

## 2.3.திராவிடம் - பெரியாரின் விளக்கம்

''திராவிடம் என்றாலும், தமிழ்நாடு என்றாலும் ஒன்றுதான்! இது சரித்திர ஆராய்ச்சிக்காரர் முடிவாகும். திராவிடம் என்கிற பேச்சே தமிழ் வார்த்தையாகும். எப்படி எனில், திரு இடம் என்பதுதான் திருவிடமாகி, திராவிடம் என்பதாக ஆகிவிட்டது. தமிழர்கள் திரு என்கின்ற வார்த்தையை ஒரு மேன்மை அணியாக ஒவ்வொன்றுக்கும் உபயோகிப்பது வழக்கம்.''[11] என்று பெரியார் விளக்கம் தருகிறார்.

மேலும், ''தமிழ்நாடு என்றால் திராவிடநாடு என்றும், திராவிட நாடு என்றால் தமிழ்நாடு என்றும் நாம் எடுத்துக்காட்டவேண்டிய அவசியம் சிறிதுமில்லாமல் எத்தனையோ ஆதாரங்கள் இருக்கின்றன. அன்றியும் ''திராவிடமே தமிழ் என்று மாறிற்று'' என்றும், சரித்திராசிரியர்கள் முடிவு கண்டதாகக் குறிக்கப்பட்ட ஆதாரங்கள் ஏராளமாக இருக்கின்றன. பழங்காலத்து அகராதிகளும் அப்படியே சொல்லுகின்றன''[12] என்கிறார்.

## 2.4.பயன்பாட்டில் 'திராவிடம்' என்னும் சொல்

'தமிழ் என்னும் சொல்லின் வடமொழித் திரிபே திராவிடம் என்னும் கருத்து ஏற்புடையதாகவே உள்ளது. இச்சொல்லின் பொருள் விரிவுபடுத்தப்பெற்று, தென்னிந்திய மக்கள் அனைவரையும் சுட்டுகின்ற இனப்பொதுப் பெயராக கொள்ளப்பட்டிருக்கிறது. அச்சொல்லுக்கிருக்கும் வரலாற்றுத் தொடர்ச்சியின் காரணமாக அதனை எளிதில் புறந்தள்ளிவிட இயலாது. அச்சொல் தமிழ் மக்களின் சமூக, அரசியல் வாழ்விலிருந்து உருவாகி வெளிப்பட்டது எனலாம்.

நடைமுறையிலும், பயன்பாட்டிலும் ‘திராவிடம்’ என்னும் சொல், எந்தப் பொருளில் ஆளப்பட்டது என்பதும், சமூக, அரசியல் தளங்களில் அது என்னென்ன விளைவுகளை ஏற்படுத்தியது என்பதையும் பார்க்கும்போது “இருபதாம் நூற்றாண்டு தொடங்கி இன்று வரை, மூன்று அடிப்படைகளில் மட்டுமே திராவிடம் என்னும் சொல் ஆளப்படுகின்றது என்று காண முடிகிறது.

1. தமிழுக்கான மாற்றுச்சொல்
2. தமிழக, ஆந்திர, கருநாடக, கேரளப் பகுதிகளை உள்ளடக்கிய தென்னாடு
3. பார்ப்பனிய மேலாண்மைக்கு எதிராக உயர்த்திப் பிடிக்கப்பட்ட கருத்து நிலை

மொழி, நிலம், சித்தாந்தம் என மூன்று தளங்களிலும், மூன்றையும் குறிக்கும் வண்ணம் ஒற்றைச் சொல் பயன்பாட்டில் இருந்து வருவது வியப்பிற்குரியதே”[13] என்கிறார் சுப.வீரபாண்டியன்.

“ ‘திராவிடம்’ என்னும் சொல், கால்டுவெல்லின், ‘திராவிட அல்லது தென்னிந்திய மொழிக் குடும்பங்களின் ஒப்பிலக்கணம்’ நூல் வெளியீட்டிற்குப் (1856) பின் தமிழகத்தில் பரவலாக அறியப்பட்டது. சுயமரியாதை இயக்கம் தோன்றிய பின்னர், சமூக மொழி, அரசியல் தளங்கள் அனைத்திலும் பயன்படுத்தப்படும் பெருவழக்குச் சொல்லானது”[14].

மொழிக் குடும்பத்தைக் குறிக்க கால்டுவெல் பயன்படுத்திய ‘திராவிட என்னும் சொல்லை, “19 ஆம் நூற்றாண்டின் இறுதியில், தமிழ் நாட்டைச் சேர்ந்த ஒடுக்கப்பட்ட மக்கள் தங்களின் பெயராகப் பெருமிதத்துடன் சூடிக் கொண்டனர் என்று வரலாற்றாசிரியர் மஜீம்தார் குறிக்கின்றார்”[15].

1892 ஆம் ஆண்டு உருவான ‘ஆதி திராவிட ஜன சபையும்’ 1894 இல் உருவான திராவிட மகாஜன சபையும தனது பெயரில் ‘திராவிட’ என்ற சொல்லைச் சூடியிருப்பதைக் காணமுடிகிறது. “அயோத்திதாசப் பண்டிதர், ரெட்டமலை சீனீவாசன் முதலான பெருமக்களால் ஏற்படுத்தப்பட்ட அமைப்புகள், தங்களைத் திராவிடர் என்றும் ஆதி திராவிடர் என்றும் அழைத்துக் கொண்டனர்”[16].

இவற்றை எல்லாம் பார்க்கும்போது ஆதிக்க வகுப்பினருக்கு எதிரான ஒடுக்கப்பட்ட மக்களின் முதல் உரிமைக் குரலாக திராவிடன் என்ற சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது. இவ்வாறு ஒடுக்கப்பட்ட மக்களுக்குச் சமூகச் சமத்துவம் பெற ஒரு தூண்டுதலாய் இருந்த

'திராவிடன்' என்னும் பெயர் பிறகு பார்ப்பனரல்லாத அனைத்துச் சாதியினருக்குமான பொதுப் பெயராக வரலாற்றில் இடம் பிடித்தது.

பார்ப்பனருக்கு எதிராக அச்சொல்லைப் பெரியார் பயன்படுத்துகின்றார். அதற்குப் பெரியார் தரும் விளக்கமானது "500, 600, ஆண்டு வரலாறுகளில் தென்னிந்திய மக்கள் திராவிடர் என்று எழுதப்படுகிறார்கள், பார்ப்பனரல்லாதார் என்றழைப்பது இழித்துரைப்பதாகிறது. தென்னிந்திய மக்களுக்கு (ஆரியர் போல) இலட்சியச் சொல் இல்லை. செர்மனி, பிரான்சு முதலிய நாடுகளைப் போல இந்த நாடும் மொழி கலை, நாகரிகத்தின் பெயரால் அழைக்கப்பட வேண்டும். 'இந்துக்கள்' என்றால் தென்னாட்டவர் சிறுபான்மையராகி விடுவர், வருணாசிரம தருமமுறைப்படி இழிமக்களாகக் கருதப்படுவர். எனவே பொதுவான உணர்ச்சியைப் பெறவும், தாழ்ந்த நிலையினை மாற்றிக் கொள்வதற்கும் 'திராவிடர்' என்னும் பெயர்தேவை"[17] என்று கூறுகின்றார்.

"பார்ப்பனரல்லாத தமிழர்களைக் குறிக்கவே திராவிடர் என்ற சொல் ஏற்றுக் கொள்ளப்பட்டதாகப் பெரியார், பல ஆண்டுகளுக்குப் பின் சொன்ன விளக்கம், 20 ஆம் நூற்றாண்டுத் தொடக்கத்திலேயே பலரின் கருத்தாக இருந்துள்ளது என்பது விளங்குகின்றது. ஆதலின் திராவிடன் என்னும் கருத்தாக்கம், எந்தத் தலைமையினாலும் திணிக்கப்படவில்லை என்பதும் அன்றைய காலச் சூழலின் விளைவாக அது இயல்பாகவே மலர்ந்துள்ளது என்பதும் புரிகிறது"[18] என்கிறார் சுப.வீரபாண்டியன்.

"இந்தச் சொற்பிரயோகத்துக்கான ஒரு வன்மையான தேவையுமுள்ளது. தமிழ்நாட்டில் வாழும் சகல சமூகக் குழுமங்களையும் 'தமிழர்' என்ற தொடராலே சுட்டி விட முடியாது. தெலுங்கு பேசும் சில குழுமங்களையும் (ரெட்டியார், நாயுடு முதலியோர்) கன்னடம் பேசும் சில குழுமங்களும் (நாயக்கர் முதலியோர்) இந்தப் பதக்குடையின் கீழ் வரமாட்டார்கள். அத்துடன் 'தமிழர்' என்னும் சொல், தமிழ்ப் பிராமணர்களையும் உள்ளடக்கிவரும். இதனால் திராவிடர் என்ற பதப்பிரயோகம் அவசியமாகிறது"[19] என்கிறார் கார்த்திகேசு சிவத்தம்பி.

மேலும் "இந்தச் சொற்பிரயோகம், கடந்த காலத்து வரலாற்று நினைவுகளைத் தரும் ஒன்றாகவும் பயன்படுகிறது. இந்தியாவின் ஆரிய வருகைக்கு முற்பட்ட திராவிட வரலாற்றுப் புகழை மீட்பதற்கும் (சிந்துவெளி நாகரிகத்தின் தோற்றம் பற்றிய சில கொள்கைகள்) தமிழ் நாட்டில், ஆரியச் செல்வாக்குக்கு முற்பட்டதாகக் கருதப்படும் தமிழ்

நாகரிகத்தைச் சுட்டவும் (சங்க காலம்) இந்தப் பதம் வாய்ப்பான ஒன்றாக அமைகின்றது.''[20] என்று விளக்கம் தருகின்றார்.

**2.5.திராவிட இயக்கம் வரையறை**

''திராவிட இயக்கம், எண்பது ஆண்டுக்கால (1916 -1995) பலத்தோடும் பலவீனத்தோடும் உள்ளது. அன்றைய சென்னை மாகாணத் தமிழ்ப்பேசும் பகுதிகளில் உருவான அதன் இயங்குதளம் இப்பொழுதும் தமிழ்நாடாகவே உள்ளது. வரலாற்றின் வளர்நிலையில் ஒன்று இரண்டாவதைப் போலவே திராவிட இயக்கம் பல கட்சிகளாகப் பெருகியுள்ளது. இருப்பினும் இந்தத் கட்சிகள் அனைத்தையும், திராவிட இயக்கம் என்றே பொது அடையாளப்படுத்த இயலும். இயக்கத்தின் நோக்கங்கள், இயங்கு தளம், செயல்பாடுகளின் கீழ் - மேல் எல்லைகள் ஆகிய அம்சங்களின் பொதுவான நிலைபாடுகளையும் தொடர்ச்சி நிலைகளையும் கொண்டு இவ்வாறு அடையாளப்படுத்த அந்தவிதத்தில் தென்னிந்திய மிதவியக் கூட்டமைப்பு (நீதிக் கட்சி) தொடங்கி மறுமலர்ச்சித் திராவிட முன்னேற்றக் கழகம்வரை திராவிட இயக்கம் என்று வரையறைப் படுத்தலாம்''[21] என்பர்.

''இங்கு திராவிட இயக்கம் என்பதில் உள்ள திராவிட என்ற சொல் திராவிடர் என்ற பொருளிலும் திராவிட என்ற பொருளிலும் பயன்படுகின்றது. தி.க., என்பதில் திராவிடர் என்ற பொருளிலும் தி.மு.க., அ.இ.அ.தி.மு.க என்பனவற்றில் திராவிட என்ற பொருளிலும் பயன்படுகின்றது. திராவிடர் என்பது இனத்தைக் குறிக்கும் சொல். திராவிட என்பது ஒரு புவியியல் பகுதியைக் குறிக்கும் சொல்லாகும். நீதிக்கட்சியின் பெயரில் திராவிட என்ற சொல் ஒட்டவில்லையெனினும் அது நடத்திய தமிழ் இதழின் பெயர் திராவிடன் என இருந்தது''[22].

''திராவிட என்ற சொல்லைக்கொண்டு 19 – ம் நூற்றாண்டிலேயே சில அமைப்புகள் உருவாகியிருந்தன. ''சிந்தனையாளர் அயோத்திதாசர், 1890ல் திராவிட மகாஜன சங்கம் என்ற அமைப்பை உருவாக்கி, இந்து மதத்தின் வருணாசிரமத்தைத் தோலுரித்துக் காட்டினார்.''[23] தாழ்த்தப்பட்ட சமுதாயத்தைச் சேர்ந்த ஜான் ரத்தினம் என்பவர் 1892- ல் திராவிடர் கழகம் என்ற அமைப்பை உருவாக்கினார்''[24]

## 2.6.தென்னிந்திய மக்களின் சங்கம்

சமூக இயக்கங்களின் தொடர்ச்சியாகவும், காலச்சூழலின் காரணமாகவும், உரிமை மீட்பு என்கிற நோக்கத்துடன் பரவலான முயற்சியுடன் ஓர் இயக்கம் உருவானது என்பது 1912 ஆம் ஆண்டில்தான். அது “சென்னை ஒற்றுமை சங்கம்” (தி மெட்ராஸ் யுனைடெட் லீக்). இந்த அமைப்பின் செயலாளராக இருந்தவர் டாக்டர்.சி.நடேசன். அமைப்பின் நோக்கத்தை வெளிப்படுத்தும் விதத்தில் அதன் பெயர் இல்லை என்பதனால் பிராமணல்லாதார் இயக்கம் என்ற பெயர் சூட்டுவது பற்றி ஆலோசிக்கப்பட்டது. ஆனால், அல்லாதார் என்ற சொல் எதிர்மறைச் சொல்லாக உள்ளது என்பதனால் 1913 ஆம் ஆண்டு ‘திராவிடர் சங்கம்’ என பெயர் மாற்றப்பட்டது (The Dravidian Association) இவ்வமைப்பானது பனகல் அரசரும், டாக்டர் சி.நடேச முதலியாரும் இணைந்து ஏற்படுத்தியது.

அனைத்து பார்ப்பனரல்லாத இனக்கூறுகளையும் இணைத்த பெருமை நடேச முதலியாரைச் சாரும் சென்னையில் இருபெரும் தலைவர்களாக விளங்கிய டாக்டர் டி.மாதவநாயர், சர்.பி.தியாகராயச் செட்டியார் ஆகியோரை அழைத்துச் சென்னையில் ஒரு பார்ப்பனரல்லாத அமைப்பை தோற்றுவிக்க எண்ணி “1916 ஆம் ஆண்டு நவம்பர் திங்கள் 20 ஆம் நாள் ஏறக்குறைய 30 பார்ப்பனரல்லாத தலைவர்கள் சென்னை விக்டோரியா பொது மண்டபத்தில் கூடினர். இவர்கள் கூடியதன் பயனாகச் சென்னையில் ஒரு கூட்டு வர்த்தகக் குழுவை நியமிக்க முடிவு செய்யப்பட்டது. இது தென்னிந்திய மக்களின் சங்கம் எனப்பட்டது”[25]

அக்காலத்தில் வெளிவந்த மூன்று நாளிதழ்களில் இரண்டு பார்ப்பனர்களாலும் (இந்து, சுதேசமித்திரன்) ஒன்று ஐரோப்பியராலும் (மெட்ராசு மெயில்) வெளியிடப்பட்டு வந்தது. எனவே பார்ப்பனரல்லாதவர் குறைகளை எடுத்துக் கூறும் வகையில் தமிழ், தெலுங்கு, ஆங்கிலமொழி செய்தித் தாள்களைத் தொடங்கி நடத்துவதே தென்னிந்திய மக்கள் சங்கத்தின் நோக்கமாக அறிவிக்கப்பட்டது இதிலிருந்து உருவானதே தென்னிந்திய தாராளக் கூட்டமைப்பு, “1916 – ல் நவம்பர் திங்கள் 29 ஆம் நாள் உருவாக்கப்பட்டது இக்கூட்டமைப்பு. இதற்கு சர்.பி.தியாகராயர் தலைமை தாங்கினார்”[26].

டாக்டர் நாயர் பதிப்பித்த முதல் ஆங்கில இதழ் 1917 ஆம் ஆண்டு பிப்ரவரி 26 ஆம் நாள் வெளிவந்தது. தமிழ் நாளிதழ் திராவிடன் 1917 ஆம் ஆண்டு நடுப்பகுதியில்

வெளியிடப்பட்டது. தெலுங்கு ஆந்திர பிரகாசிகா 1885 ஆம் ஆண்டு முதல் வெளிவந்து கொண்டிருந்தது.

“1917 ஆம் ஆண்டுக்குப்பின்னர் தென்னிந்திய தாராளக் கூட்டு நீதிக் கட்சியாக உருவாகியது இக்கட்சியினர் சரிசமமான உரிமைகளையும் வாய்ப்புகளையும் வேண்டியதாலும் கட்சியின் கொடியில் தராசுச் சின்னம் பொறிக்கப்பட்டதாலும், நீதி என்ற இதழ் மூலமாக கொள்கையை வெளியிட்டதாலும் நீதிகட்சி என்ற பெயர் ஏற்பட்டது.”[27]

“நீதிகட்சியில் தெலுங்கு, தமிழ் தேசிய இனத்தலைவர்களே மிகுந்திருந்தனர். இவர்களிலும் தெலுங்கு தேசிய இனத் தலைவர்களே ஆதிக்கம் பெற்றிருந்தனர் இந்தப் பெயரிடுதலில் (nomen clature) தென்னிந்தியா, பிராமணல்லாதார் தொடர்களே உள்ளன. நீதிக்கட்சியின் தெலுங்கு தேசிய இனத்தலைவர்கள் திராவிடர் என்பதை ஒப்புக்கொள்ளாததால் கட்சியின் பெயரில் திராவிடர் சேர்க்கப்படவில்லை’ எனப் பின்னாளில் ஈ.வெ.இராமசாமி குறிப்பிட்டுள்ளார். (குடி அரசு 17.6.44)”[28]

திரு.எம்.சி.இராசா கொண்டுவந்த தீர்மானத்தின்படி (மார்ச் 1922) பஞ்சமர், பறையர் ஆகியோரின் பெயர்கள் அரசாங்க ஆவணங்களில் மாற்றப்பட்டன. “தமிழ்த் தேசிய இனத்திராக இருப்பின் ஆதிதிராவிடர் என்றும் தெலுங்கர்களாக இருப்பின் ஆதிதெலுங்கர் என்றும் பெயரிடப்பட்டனர். (அரசு ஆணை எண்.817) சட்டம் (பொதுத்துறை) நாள் 25-3-1922”[29] இங்கு தெலுங்கர்கள் திராவிடர் என்ற இனப் பெயரைச் சூட்டிக் கொள்ளாமல், தெலுங்கர் என்ற தேசிய இனப் பெயரைச் சூட்டிக் கொண்டனர். ஆனால் தமிழர்கள், இனப்பெயரை சூட்டிக்கொண்டது கவனிக்கத்தக்கது.

நீதிக்கட்சியின் பெயரைத் ‘திராவிடர் கழகம்’ என மாற்றும் பொழுது “அதில் தெலுங்குத் தலைவர்களின் ஆதிக்கம் இல்லை. மாறாகப் பலர் அதிலிருந்து வெளியேறியும் காங்கிரசில் சேர்ந்தும் இருந்தனர்”[30] என்பர். இந்நேரத்தில் பெரியார், “இந்தியர் என்பதை மறுக்கிற படியாலும் இன உணர்ச்சியும் எழுச்சியும் பெற வேண்டுவதாலும் திராவிடர் என்ற பெயரைக் கொண்டோம்” (குடி அரசு (9.12.44) என்கிறார். அது நீதிக் கட்சியின் பெயரில் உள்ள தென்னிந்தியர் (south India) என்ற கண்ணோட்டத்தை இது மறுக்கிறது.

பெரியாரின் ‘‘இந்தியர் என்பது தப்பு என்பது மட்டுமல்ல, வெறும் கற்பனையும் கூட’’ குடி அரசு 17.06.44 என்கிறார். இங்கு இந்தியர் என்பது மறுக்கப்பட்டு திராவிடர் என்ற இன உணர்ச்சியே முதன்மைப்படுத்தப்படுகிறது. ‘‘திராவிடர் என்பதற்கு எப்பொழுதுமே ஒரே பொருளையே பெரியார் கொண்டிருந்தார் என்றும் கூறமுடியாது. திராவிடர் என்றால் தமிழர், தெலுங்கர், மலையாளி, கன்னடர் ஆகியோரைக் குறிக்கின்றது எனக் குறிப்பிடுகின்றார். பிரிதோரிடத்தில் ஆரியர் தவிர்த்த ஏனைய மக்களை, முசுலீம்கள் மற்றும் கிறித்தவர்கள் உட்பட திராவிடர் எனக் குறிப்பிடுகின்றார்.’’[31]

‘‘வர்ணாசிரம தருமத்தை ஆதரிப்பவர் ஆரியர்! அது கூடாது என்பவர் திராவிடர்! சுதர்மம் கோருவோர் ஆரியர்! சமதர்மம் கோருவோர் திராவிடர். திராவிடர் என்பது ஒரு குறிச்சொல் என்று குறிப்பிட்டுள்ளார்’’[32] என்பர். அண்ணாதுரையைப் பொறுத்தமட்டில் வருணாசிரம தருமத்தை எதிர்த்தலே திராவிடரா இல்லையா என்பதற்கான அடையாளமாகும்.

1916 ஆம் ஆண்டின் இறுதியில், தென்னிந்திய நல உரிமைச்சங்கம் உருவாக்கப்பட்டபோது சங்கத்தின் சார்பில் ஆங்கிலம், தமிழ், தெலுங்கு ஆகிய மூன்று மொழிகளில் மூன்று நாளேடுகள் (ஜஸ்டிஸ், திராவிடன், ஆந்திரப்பிரகாசிகா) வெளியிடப்பட்டன. இதில் தெலுங்கு நாளேட்டிற்கு மட்டும் ‘ஆந்திரப் பிரகாசிகா’ என்று பெயர் வைக்கப்பட்டுள்ளது. தமிழில் மட்டும் ஏன் ‘தமிழன்’ என்று பெயர் வைக்காமல் ‘திராவிடன்’ என்று பெயர் சூட்டினர் என்று பார்க்கும்போது, ‘ஆந்திரப் பிரகாசிகா’ என்பது மொழி உணர்வை வெளிப்படுத்தும் பெயராக இருக்கலாம், ஆனால் தெலுங்கு பிரகாசிகா என்று பெயர் வைத்திருந்தால் அப்படிக் கூறலாம். ‘ஆந்திரா’ என்பது நிலப் பகுதியின் பெயராக இருக்கின்றது. ‘ஆந்திர பிரகாசிகா’ என்பது 1885 ஆம் ஆண்டே வார இதழாகப் பதிவு பெற்றிருந்த ஒரு ஏடு. அதனைத் தாம் வாங்கி நாளேடாக மாற்றியது மட்டுமே நீதிக்கட்சி செய்த வேலை’’[33] என்று கூறப்படுகின்றது.

ஆனால் தமிழ் நாளேட்டிற்கு ‘திராவிடன்’ என்று பெயர் வைத்தது ‘‘அன்றைய சூழலையும் அன்றைய பொதுக்கருத்தையும் ஒட்டியதே என்பதை நாம் அறிதல் வேண்டும்’’[34]

‘திராவிடம்’ இங்கே ‘தென் இந்தியா’ ஆனது எவ்வாறு என்று பார்க்கும்போது, ‘திராவிடர்’ என்பது பார்ப்பன எதிர்ப்பைக் குறிக்கிறது. ஆனால் ‘தென் இந்தியர்’ என்பது

‘‘ஐயத்திற்கு இடமின்றி, தமிழர்களுடன், தெலுங்கர், கன்னடர், மலையாளி ஆகியோரையும் சேர்த்துக் குறிக்கும் சொல்லே அது. திராவிடன் என்னும் சொல் கூட, பார்ப்பனரல்லாதோரை மட்டும் குறிக்கும் சொல் என்று நாம் கூறவில்லை. பலவிடங்களில், பிற மொழியினரையும் இணைத்தே அது பொருள் தருகிறது.’’[35]

**2.7.திராவிட தேசியம்**

20-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் திராவிட தேசியம் வளர்ந்தமைக்கு அடிப்படைக் காரணங்கள் இருக்கின்றன. அதாவது ‘‘கால்டுவெல்லின் ஆய்வு வெளி வந்த பின்பு நாம் அனைவரும் ஒரே மொழிக் குடும்பத்தினர் என்னும் உணர்வு தமிழகத்தில் ஏற்பட்டது. அடுத்து, வடவர்களை எதிர்க்க வேண்டுமெனில், தென்னாட்டவர் கூட்டணி சேர வேண்டும் என்ற எண்ணம் எழுந்தது. இரண்டுமே, அன்றைய நிலையில் மிக இயல்பானவை’’[36] என்று கருதுவர்.

ஆனால் தமிழ் நாட்டில் ஏற்பட்ட திராவிடர் உணர்வு, ஏன் பிற பகுதிகளில் ஏற்படவில்லை என்ற கேள்வி எழுகின்றது. கன்னடர்களோ, தெலுங்கர்களோ, மலையாளிகளோ, தங்களைத் திராவிடர்கள் என்று ஒரு நாளும் எண்ணவில்லை என்று கூறப்படுகின்றது.

அதற்கான காரணங்களை சுப.வீரபாண்டியன் கூறுகின்றார். ‘‘கால்டுவெல்லின் ஆய்வு முடிவுகள், தமிழர்களிடம் ஏற்படுத்திய பெருமித உணர்வைப் பிறரிடம் ஏற்படுத்தியிருக்க முடியாது. தங்கள் மொழியைக் காட்டிலும் தமிழே மூத்த மொழியும் திருந்திய மொழியும் ஆகும் என்னும் உண்மையை அவர்களால் மகிழ்வுடன் உள்வாங்கிக் கொள்ள இயலாமல் போயிருக்கலாம். நாம் தமிழருடன் ஒருங்கிணைந்தால் முதன்மையும், சிறப்புகளும் அவர்களுக்கே போய்விடக்கூடும் என்று அஞ்சியிருக்கலாம். எல்லா வழியிலும், கால்டுவெல்லின் ஆய்வு முடிவுகள், ஒரு விதத்தாழ்வு மனப்பான்மையையும், காழ்ப்புணர்வையுமே அவர்களிடம் ஊட்டியிருக்கும் என்பதில் ஐயமில்லை. அதனால் அவர்கள் நம்மிடமிருந்து அந்நியப்படவும், நம்மைப் போட்டியாளர்களாகவோ, பகையாளிகளாகவோ கருதவும் இடம் ஏற்பட்டிருக்கும்’’[37] என்கிறார்.

‘‘தமிழகம், மராட்டியம் நீங்கலாக இந்தியாவில் வேறு எங்கும் பார்ப்பன எதிர்ப்பு கூர்மைப்படவில்லை. மராட்டியத்தில் சிவாஜியின் காலத்திலிருந்தே அதற்கான காரணங்கள் உள்ளன. 19 ஆம் நூற்றாண்டில் அங்கு தோன்றிய மகாத்மா ஜோதிராவ்புலே என்னும்

மாபெரும் சிந்தனையாளரும் அதன் முக்கியக் காரணமாவார். அவருக்குப் பின்னால், அறிஞர் அம்பேத்கர் அதனை மேலும் கூர்மைப்படுத்தினார்.''[38] என்பர். தமிழ்நாட்டிலும், மராட்டியத்திலும் பார்ப்பன எதிர்ப்பு உருவாகி இருக்கும் நிலையில் வடநாட்டில் இல்லாமல் போனதற்கான காரணம் யாது என்ற வினா எழுகிறது. ''வடநாட்டில் பார்ப்பனர் சத்திரியர், வைசிரியர், சூத்திரர் என நால்வருணப் பாகுபாடும், பஞ்சமர் என்னும் ஐவருணத்தாரும் உள்ளனர். தமிழ் நாட்டிலோ சத்திரியர்களோ, வைசியர்களோ கிடையாது. பார்ப்பனர், சூத்திரர், தாழ்த்தப்பட்டோர் என மூன்று பிரிவுகளே உள்ளன. எனவே பார்ப்பனருக்கும், பார்ப்பனரல்லாதோருக்கும் நேரடி மோதல் ஏற்படும் வாய்ப்புகள் கூடுகின்றன.''[39] இதனால் பார்ப்பனருக்கு எதிராக வட நாட்டில் எந்த இயக்கமும் உருவாகவில்லை என்பதை விளங்கிக்கொள்ள முடிகின்றது.

மேலும் ''கன்னடம், தெலுங்கு, மலையாளம் ஆகிய மொழிகள் தோன்றிய காலத்திலிருந்தே சமஸ்கிருதமயமாதலை ஏற்றுக் கொண்டு விட்டன. வடமொழி இல்லாமல், தங்கள் மொழிகள் தனித்தியங்க வல்லன என்னும் எண்ணமே அவர்களுக்கு இல்லை. அதனால் சமஸ்கிருத எதிர்ப்பு அவர்களிடம் இல்லை. சமஸ்கிருதத்தை எதிர்க்காத காரணத்தால், கன்னடம், தெலுங்கு, மலையாளம் ஆகிய மொழிகளைப் பார்ப்பனர்களும் எதிர்க்கவில்லை''[40] இதனால் பார்ப்பன, சமற்கிருத எதிர்ப்போ அதன் விளைவாக ஏற்படக்கூடிய திராவிடன் என்ற எண்ணமோ அவர்களுக்கு எழவில்லை ''தமிழ் நாட்டிலோ, பார்ப்பன எதிர்ப்பு, வடமொழி எதிர்ப்பு ஆகியன சித்தர்களின் காலத்திலிருந்தே இருந்து வந்திருக்கின்றன. வள்ளலார் போன்றவர்கள் வடமொழியை எதிர்த்தனர். மறைமலையடிகள், வடமொழியை எதிர்த்தே தனித்தமிழ் இயக்கம் கண்டார். இந்தச் சூழலில், பார்ப்பனர்கள் தமிழருக்கும், தமிழர்கள் பார்ப்பனர்களுக்கும் எதிரிகளாகி விட்டனர். பார்ப்பன எதிர்ப்பை அழுத்தமாக வெளிப்படுத்த 'திராவிடர்' என்னும் மரபு இனம் சார்ந்த சொல் தேவையாகிவிட்டது''[41] என்பர். திராவிடர் என்பதற்குக் கொடுக்கப்படும் பல விளக்கங்கள் கவனத்துக்குரியன. விளக்கங்களில் வேறுபாடுகள் இருப்பினும் பார்ப்பனரல்லாதோரை மட்டுமே மனதில் கொண்டு இவை அமைகின்றன. அதே நேரத்தில் திராவிடர் கழகத்தினர் திராவிடர் எனக் குறிப்பிடும்பொழுது அது தமிழ்த்தேசிய இனத்தினரைக் குறிப்பதாகவும் காணப்படுகிறது.

‘‘திராவிட தேசியத்திற்கான உளவியல் உருவாக்கம் இயல்பாகவே அமைந்து விட்டாலும் சுயமரியாதை இயக்கத்திற்குப் பின்பே, அது ஒரு திட்டவட்டமான வடிவமைப்பைப் பெறுகின்றது’’[42]

சுயமரியாதை இயக்கத்தை உருவாக்குவதற்கு முன்பு பெரியார் காங்கிரசு கட்சியில் இருந்தார். இந்தியத்தின் மீதும் காந்தியாரின் மீதும் மாறாத பற்றுடையவராக இருந்தார். ஆனால், காங்கிரசுக்குள் பார்ப்பன ஆதிக்கம் மிகுதியாகிக் கொண்டே வருவதை அவரால் உணர முடிந்தது. ‘‘காங்கிரசில் இருக்கும் போதே, பெரியாரும், அவரையொத்த கருத்துடைய பார்ப்பனரல்லாதார் சிலருமாய்ச் சேர்ந்து சென்னை ‘தலைமைச் சங்கம்’ (Madras Presidency Association) என்ற ஒன்றைத் தொடங்கினர். அந்தச் சங்கம் தான், நாயுடு, நாயக்கர், முதலியார் என்று சாதியின் பெயரால் அறிமுகமான வரதராஜீலு நாயுடு, இராமசாமி நாயக்கர், திரு.வி.கலியாண சுந்தர முதலியார் என்னும் மூன்று தலைவர்களைத் தமிழ் நாட்டிற்கு அறிமுகம் செய்தது. சாதிகளே பெயர்களாக நிற்பது அக்கால மரபு (இக்காலத்திலும் மூப்பனார், வாண்டையார் என்பது போல)’’[43] என்பர்.

பின்பு காங்கிரசை விட்டு வெளியில் வந்து சுயமரியாதை (1925) இயக்கத்தை நிறுவினார். பிறகு நீதிக்கட்சியை வழி நடத்துபவராகவும் நீதிக் கட்சியின் தலைவராகவும் ஆனார். பிறகு நிதிக்கட்சியைத் திராவிடர் கழகமாக மாற்றினார்.

இப்படிப் பல்வேறு கட்சிகள், இயக்கங்களில் இருந்தபோதும், ‘‘பார்ப்பன எதிர்ப்புத் திராவிட தேசியமே அவரது வேலைத் திட்டமாக இருந்தது. அந்தத் திராவிட தேசியமும் மெல்ல மெல்ல உருமாறி, தமிழ்த்தேசியமாக ஆனது’’[44]. தமிழகம், கருநாடகம், ஆந்திரம், கேரளம் உள்ளிட்ட நிலப்பகுதிகளை இணைத்த திராவிட நாடே பெரியார் முன்வைத்த தேசமாக இருந்தது.

‘‘தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம் முதலிய மொழிகளைத் தாய்மொழியாகப் பேசிவந்த மக்களையே மிகுதியாகக் கொண்ட நாடுகள் இன்று திராவிடம் என்று சொல்லப்படுவது யாவரும் அறிந்ததேயாகும். அந்தத் திராவிடம் என்பது பெரிதும் சென்னை மாகாணமாகவே இருக்கிறதுடன் மற்றும் சிறிது சென்னை மாகாணத்தைத் தொட்ட சுற்றுப்புற நாடாகவே இருக்கிறது’’[45] என்பார்.

திராவிட நாடு என்பது சென்னை மாகாணமும் அதனைச் சுற்றியுள்ள பகுதிகளுமே என்று பெரியார் கூறுகிறார். அதாவது ‘‘திராவிட நாடு பிரிவினை என்று நாம் என்ன சொல்லுகிறோம் என்றால், சென்னை மாகாணம்தான் இன்று திராவிட நாட்டு விஸ்தீரண அளவு விஸ்தீரணம் கூடுவதும், குறைவதும் நம் நாட்டின் சவுகரியத்தையும், இவ்விடத்தையும் பொறுத்தது’’[46] என்கிறார்.

‘‘திராவிடர்களுடைய கலை நாகரிகம், பொருளாதாரம் ஆகியவைகள் முன்னேற்றம் அடைவதற்கு, பாதுகாப்பதற்கு, திராவிடர்களின் அகமாகிய சென்னை மாகாணம், இந்திய மந்திரியின் நேர்ப்பார்வையின் கீழ் ஒரு தனி நாடாகப் பிரிக்கப்பட வேண்டுமென இம்மாநாடு தீர்மாணிக்கிறது’’[47] என்கிறார்.

சென்னை மாகாணத்தவர்களின் கலை, இலக்கியம், பொருளாதாரம் மேம்பட வேண்டும் என்பது தமிழர்களின் கலை, இலக்கியம், பொருளாதாரம் மேம்பட வேண்டும் என்பது தமிழர்களின் கலை இலக்கிய பொருளாதார மேம்பாட்டையே குறிக்கின்றது. இது தமிழ்த் தேசியத்தை முன்னிறுத்திப் பேசி இருந்தாலும் திராவிடன் என்ற சொல்லின் தேவையும் உள்ளது. 12.10.1955 அன்று பெரியார் வெளியிட்ட அறிக்கையில், ஆந்திரா, கன்னடம், மலையாளம் இவை பிரிவதனால் எந்தச் சிக்கலும் இல்லை என்கிறார். காரணம் இவர்களுக்கு சுயமாரியாதையோ, பகுத்தறிவு உணர்ச்சியோ இல்லை. சூத்திரன் என்பது பற்றி, இழிவோ, வெட்கமோ கிடையாது. மத, மூட நம்பிக்கையில் ஊறிவிட்டவர்கள். ஆதலால் நான் இந்தப் பிரிவினையை வரவேற்கிறேன் என்கிறார்.

அவர் கூறுவதாவது ‘‘ஆந்திரா பிரிந்ததிலிருந்தே, நாட்டுப் பிரிவினையில் எனக்குக் கவலை இல்லாமல் போய்விட்டது. பிறகு, கன்னடமும், மலையாளமும் பிரிவதில் இரண்டு, மூன்று காரணங்களால், சீக்கிரம் பிரிந்தால் தேவலாம் என்கின்ற எண்ணம் தோன்றிவிட்டது. என்ன காரணமென்றால்,

1. கன்னடியனுக்கும், மலையாளிக்கும் இனப்பற்றோ, இன சுயமரியாதையோ, பகுத்தறிவு உணர்ச்சியோ இல்லை என்பதாகும். எப்படியெனில் அவர்களுக்கு வருணாசிரம வெறுப்பு கிடையாது. சூத்திரன் என்பது பற்றி, இழிவோ, வெட்கமோ பெரும்பாலோர்க்குக் கிடையாது. மத, மூட நம்பிக்கையில் ஊறிவிட்டவர்கள்.
2. அவர்கள் இருவரும், மத்திய ஆட்சி என்னும் வடவர் ஆட்சிக்குத் தங்கள் நாடு அடிமையாக இருப்பது பற்றியும் அவர்களுக்குச் சிறிதும் கவலை இல்லை.

இதை நான் ஆந்திரா பிரிந்தது முதல் சொல்லிக் கொண்டே வந்திருக்கிறேன். ஆதலால், இவர்கள் சீக்கிரம் ஒழியட்டும் என்றே கருதி வந்தேன். அந்தப்படி நல்ல சம்பவமாகப் பிரிய நேர்ந்து விட்டார்கள். ஆதலால், நான் இந்தப் பிரிவினையை வரவேற்கிறேன்.

இந்தப் பிரிவினை நடப்பதில், சேர்க்கைச் சம்பந்தமாக ஏதாவது சிறு குறைபாடு இருந்தாலும், அதை மேற்கண்ட பெரும் நலத்தை முன்னிட்டு, கூடுமானவரை, ஒத்துப் போகலாம் என்றே எனக்குத் தோன்றிவிட்டது. மற்றும் இந்தப் பிரிவினை முடிந்து, தமிழ்நாடு தனி நாடாக ஆகிவிட்டால், நமது சமய, சமுதாய தேசிய சுதந்திர முயற்சிக்கும், அவை சம்பந்தமான கிளர்ச்சிக்கும், புரட்சிக்கும் நமது நாட்டில் எதிர்ப்பு இருக்காதென்றும், இருந்தாலும் அதற்குப் பலமும், ஆதரவும் இருக்காதென்றும் கருதுகிறேன்.

அவர்கள் மூவரும் ஒழிந்த பிறகு அவர்களையும் சேர்த்துக் குறிப்பிடத்தக்க ஒரு சொல் நமக்குத்தேவை இல்லை என்றாலும் திராவிடன் என்ற சொல்லை விட்டு விட்டு தமிழன் என்று சொல்லியாவது தமிழ் இனத்தைப் பிரிக்கலாம் என்றால், அது வெற்றிகரமாக முடிவதற்கு இல்லாமல், பார்ப்பான் (ஆரியன்) வந்து நானும் தமிழன்தான் என்று கூறிக்கொண்டு உள்ளே புகுந்து விடுகிறான்''[48] என்கிறார். இங்கு திராவிடர் என்னும் சொல் தேவை என்பதை வலியுறுத்துகிறார் பெரியார்.

''பார்ப்பனரைப் புறந்தள்ளும் பொழுது திராவிடன் இன உணர்வு பெற்றுள்ள பெரியார், மலையாளிகளையும் சேர்த்துப் புறந்தள்ளும் பொழுது அவரது இன உணர்ச்சி குன்றிவிடுவதைக் காண்கிறோம்''[49] என்பர். ''மொழி வழி மாநிலங்கள் பிரிக்கப்படுதலுக்கு முன்னர் பெரியாரின் திராவிடர் இன வரையறையில் பார்ப்பனரல்லாதார் என்ற ஒரே நிலைபாடு மட்டுமே இருந்தது. ஆனால் மொழிவழி மாநிலங்கள் பிரிக்கபட்டபின் பெரியார் ஏனைய தேசிய இனத்தினரையும் புறந்தள்ளும் தன்மையைக் காண்கிறோம். எனினும் திராவிடர் என்ற பெயரைப் பெரியார் கைவிட்டு விடவில்லை என்பதே இங்கு குறிப்பிடத்தகுந்ததாகும். கேரளம், ஆந்திரம், கருநாடகம் ஆகியவை பிரிந்தபின் தமிழ்நாடுதான் திராவிடநாடு ஆகும் என்கிறார் பெரியார்''[50]

'திராவிட முன்னேற்றக் கழகம்' என்பதில் உள்ள 'திராவிட' என்னும் சொல் 'திராவிடம்' என்ற அரசியல் புவியியல் கண்ணோட்டம் கொண்டதாக உள்ளது. ''இன

உணர்வுக் கண்ணோட்டத்தைப் (Racial outlook) பற்றி அண்ணாதுரை பல இடங்களில் குறிப்பிட்டிருப்பினும் அதைவிட அரசியல் புவியியல் கண்ணோட்டத்துக்கே அதிக அழுத்தம் கொடுத்திருந்தார்''[51]

தி.மு.க.வின் தொடக்க விழாக் கூடடத்தில் அண்ணாதுரை பேசும்போது ''இந்த மண்ணுக்கு நன்றியுள்ளவர்களாக நடந்து கொள்ளும் எந்த இனத்தவரும் இன்னலின்றி இன்ப வாழ்வு வாழப் பணியாற்றுவதே நம் கட்சியின் இலட்சியமாக இருக்கவேண்டும். திராவிடம் முழுமைக்கும் நன்மைகள் உண்டாக நாம் பாடுபட வேண்டியிருப்பதால் திராவிடர் முன்னேற்றக் கழகம் என்று கட்சிக்குப் பெயர் இருப்பதே எல்லாவகையிலும் பொருந்தும்''[52] என்கிறார்.

''திராவிடத்தில் உள்ள அனைத்து இன மக்களும் வாழ்வதற்கான உத்தரவாதம் தரப்படுகிறது. இங்கு திராவிடம் என்று குறிப்பிடப்படுவது அன்றைய சென்னை மாநிலத்தையே ஆகும். மொழிவழி மாநிலம் பிரிக்கப்பட்ட 1956 ஆம் ஆண்டுக்குப் பின்னர் தோன்றிய பல்வேறு அரசியல் யதார்த்த சூழல்களைத் தி.மு.க. கணக்கில் எடுத்துக் கொண்டது. அது தமிழ்த்தேசிய இனத்தில் உள்ள அனைத்து இனமக்களின் பிரதிநிதியாகத் தன்னைப் படிப்படியாக உருமாற்றிக் கொள்ள முனைந்தது''[53] என்பதாகும்.

தி.மு.க.வின் நிறுவனக் கூட்டத்தில் அண்ணாதுரை சொல்லியுள்ளதைப் போல ''தி.மு.க. திராவிடர் கழகத்துடன் ஒத்த கருத்துக் கொண்ட ஒட்டுமாஞ் செடி''[54] என்பது பொருந்துவதாக இல்லை. காரணம் ''திராவிடர் கழகத்திடமிருந்து வேறுபடக் கூடிய அம்சங்களாக அனைத்து இனப் பிரதிநிதித்துவ முயற்சியையும் படிப்படியான இந்திய மயமாதலையும் குறிப்பிட முடியும்.''[55] இந்த தொடர்ச்சியின் நீட்சியே அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகம் ஆகும். ''இதன் பெயரிலேயே அனைத்து இந்திய என்ற முன்னொட்டு இருக்கிறது. தமிழ் பேசும் பகுதிகளில் உள்ள அனைத்து இனப்பிரதிநிதித்துவம் என்ற நிலைப்பாட்டின் வளர்ச்சியாக இதன் தலைமையிலே பார்ப்பனர் திடீர் விளைவுகளல்ல. அண்ணாதுரை வகுத்தளித்த சித்தாந்தங்களில் காணப்படும் அம்சங்களின் தொடர்ச்சி ஆகும். திராவிடர், திராவிட என்று சொல்லிக் கொள்வதிலே நீதிக்கட்சி முதல் அ.இ.அ.தி.மு.க வரையிலான திராவிட இயக்கங்களின் தமிழகத் தலைமையினர் விரும்பி இருப்பினும், இவற்றுக்கு முறையே பார்ப்பனரல்லாத தமிழர் என்றும் தமிழகம் என்றும் பொருள் கொள்ளப்பட்டிருந்தன. இது ஒருவிதத்தில்

திராவிடமாயை என மார்க்சிய அறிஞர் குணாளன் ஓரிடத்தில் குறிப்பிட்டிருப்பது சரியே''[56] எனக் கோ.கேசவன் குறிப்பிடுகின்றார். எனவே திராவிடர் என்ற சொல் பார்ப்பனரல்லாத தமிழர் என்ற பொருளில் அழுத்தம் கொடுப்பதைப் போல, திராவிட என்ற சொல் திராவிடப் பகுதியில் உள்ள 'அனைத்து இனங்கள்' என்ற பொருளில் அழுத்தம் கொடுக்கப்பட்டுள்ளது.

திராவிட என்ற சொல் இன்று தெலுங்கு, கன்னடர், தமிழர், மலையாளிகள் ஆகியோருக்கான பொதுப்பெயர் என்ற நிலைமை போய், தமிழின் புராதன, 'வடமொழிப் பண்பாட்டின் எதிர் நிலை' அடையாளம் சுட்டும் ஒரு சொற்குறியீடாக இருப்பதைக் காணமுடிகிறது.

**2.8.கருத்துநிலை – விளக்கம்**

கருத்துநிலை என்பது பற்றி கார்த்திகேசு சிவத்தம்பி தரும் விளக்கமானது மனிதப் பிரக்ஞை என்பது ஒரு கருத்துநிலையினைக் கொண்டது (பிரக்ஞை எனும் பொழுதே ஒரு 'நோக்கு முறைமை' அதனுள் உள்ளது.) மனிதர்கள், தங்களைச் சூழ்ந்துள்ளனவற்றைப் 'புலப்பதிவு' (Perceive) செய்து கொள்வதற்கு, தங்கள் நம்பிக்கைகள், சிந்தனை முறைகள், உணர்வுகள் அகியவற்றைத் துணைக்கொள்கின்றனர். அதாவது தாம் 'நிஜம்' என நம்புபவையின் அடியாகவே தமது கருத்தை' உருவாக்குகின்றனர். இந்த உணர்வு அவர்கள் வாழுகின்ற சமூகத்தில், அவர்கள் வசிக்கின்ற இடத்தின் அடியாக வரும், அந்த இடம் அவர்கள் அந்தப் பொருளாதர உற்பத்தி முறைமையனுள் எத்தகைய இடத்தைப் பிடித்துள்ளனர் என்பதைப் பொறுத்தது. அவருக்கும் சமூகத்துக்குள்ள 'உறவு' இந்தப் பிரக்ஞையைத் தீர்மானிக்கும். எனவே கருத்துநிலை என்பது ஒருவர், தமது சமூக நிலை காரணமாக உருவாக்கிக் கொள்ளும் கருத்து நிலைப்பாடு ஆகும்.''[57] என்கிறார்.

ஒரு சமூக உருவாக்கத்தில் சமூகத்தை மாற்றுவதற்கு பல்வேறு வர்க்கங்களையும் சமூகக் குழுமங்களையும் சமதர்ம நோக்கோடு அதை மாற்றுதவற்கு மேற்கொள்ளும் சிந்தனைப்படிமங்கள், சித்தரிப்பு முறைகள் ஆகியவற்றை கருத்து நிலையாகக் கொள்ளலாம்.

மேலும் கார்த்திகேசு சிவத்தம்பி ''ஒரு குறிப்பிட்ட வகை அதிகாரத்தையும் மேலாண்மையையும் பேணுவதற்கான நடைமுறைநிலை, எண்ணக்கருக்கள் அவற்றுக்கான

மொழிகள் சம்பந்தப்பட்டதாகும். அல்லது, குறிப்பிட்ட ஒரு சமூக உருவாக்கத்துக்குள் மக்களிற் பெருந்தொகையினரை, அவர்கள் தம் கீழ் நிலையை மன இசைவுடன் ஏற்றுக்கொள்வதற்கும் ஏற்று அதனுள் வாழ்வதற்கும் வேண்டிய எண்ணக்கருக்குள் முதலியன பற்றியதாகும். அது மாத்திரமல்லாது கருத்து நிலை என்பது, நடப்பு நிலையிலுள்ள முறைமைக்கெதிராக வரலாற்று முக்கியத்துவமுள்ள செயற்பாடுகளில் ஈடுபட மக்கள், உலகம் பற்றிய புதிய எண்ணக்கருக்கள் தோன்றுகின்ற நடைமுறைகள் பற்றியதுமாகும்''[58] என்று விளக்கம் தருகின்றார்.

### 2.9.திராவிடக் கருத்து நிலை

பிராமணர்களுக்கும், பிராமணல்லாதவர்களுக்கும் ஏற்பட்ட உரிமைப்போராட்டத்தின் விளைவு தென்னிந்திய நல உரிமைச் சங்கத்தின் தோற்றமாகும். ஆங்கில ஆட்சியில் கல்வி, வேலை வாய்ப்பு உள்ளிட்ட அனைத்தையும் பெற நீதிக்கட்சி ஒரு தொடக்கப் புள்ளியாக இருந்தது. அன்றைய சூழலில் பிராமணர்களின் செல்வாக்கால் அழுத்தப்பட்டுக்கிடந்த சைவம், தனித்தமிழ் உள்ளிட்ட பல்வேறு போக்குகளை எழுச்சிபெறச் செய்தது. பிராமணியத்தின் சமூக – பண்பாட்டுப் பிடிப்பினை எதிர்த்துத் தோற்றம் பெற்று, சமத்துவம் - சமதர்மம் உள்ளிட்ட பொருளாதாரத் தன்மைகளையும் மையப்படுத்தியதாக அமைந்திருந்த பெரியாரின் சுயமரியாதை இயக்கமும் அப்போது பிராமணீய எதிர்ப்புச் சக்திகளை ஈர்த்துக்கொண்டிருந்தது.

இந்த நிலையில், நீதிக்கட்சி ஆட்சியில் இடஒதுக்கீடு, கடன் நிவாரணச் சட்டம், அறநிலையப் பாதுகாப்பு சட்டம், தேவதாசி ஒழிப்புச் சட்டம் அல்லாத வேறெந்தச் சமூக – பண்பாட்டு மாற்றத்துக்கான நடவடிக்கை மேற்கொள்ளப்படவில்லை. நிலவுடைமை மற்றும் வணிக நலன்களையே பேணிவந்த நீதிக்கட்சி செல்வாக்கிழந்து தனது இருப்பையே உறுதி செய்துகொள்ள இயலாத நிலையில் பெரியாரின் சுயமரியாதை இயக்கத்தோடு இணைய வேண்டியதாயிற்று.

''நிலவுடைமை – வணிகர் - படித்தவர் நலன்களை மட்டுமே அடித்தளமாகக் கொண்டிருந்த நீதிக் கட்சி, பிராமணரல்லாத அடித்தட்டு மக்களின் எழுச்சியை அப்போது உறுதிப்படுத்தியிருந்த சுயமரியாதை இயக்கமெனும் தீயில் விழுந்துவிட்டது. இந்தத் தீயில் உருக்கியெடுக்கப்பட்டதுதான் திராவிட இயக்கக் கருத்துநிலை. இது, அரசியல் - சமூக – பொருளாதார – பண்பாட்டுச் செயல்திட்டத்துக்கான ஒரு நிலைப்பாடு''[59] என்பர்.

திராவிடக் கருத்து நிலை என்பது "தமிழ்நாட்டில் வாழும் பிராமணரல்லாத சாதிக் குழுமங்களைச் சேர்ந்தவர்கள், தங்களின் சமூக நிலைமையையும் தங்கள் சமூக அசைவியக்கத்தையும் வரையறை செய்த 'பிராமணக் கருத்து நிலை' தம்மீது திணித்ததென அவர்கள் கண்ட, கொண்ட மேலாண்மைக்கெதிராக நடத்திய போராட்டங்களினூடே மேற்கிளம்பியதும், அந்தப் போராட்டங்களை நியாயப்படுத்துவதற்குப் பயன்படுத்தப்பட்டதுமான சிந்தனை நிலைப்பாடே, திராவிடக் கருத்து நிலையாகும். அரசியல் ரீதியாகவும் சமூக ரீதியாகவும் 'தமிழ்ப் பிரக்ஞை' ஏற்படுவதற்கு இது தளமாக அமைந்து வந்துள்ளது. அது, மதம், சமூக நடத்தைமுறை பற்றிய ஒரு குறிப்பிட்ட கண்ணோட்டத்தினை எடுத்துக்காட்டுவதாகவும் அமைந்துள்ளது. (அந்தக் கண்ணோட்டத்தின் பிரதான எண்ணக்கருக்கள் 'நாத்திகம், பகுத்தறிவு வாதம், சுயமரியாதை' என்பனவாகும்) இது 'ஆரியத்தைப்' பிராமணியமாக நோக்குவதுடன், 'திராவிடம்' என்பது 'பிராமணீயம்' என்று கொள்ளப்படுவதன் எதிர்நிலையாகக் கொள்ளப்படுவதாகும்"[60].

திராவிடர் திராவிடக் கருத்து நிலை என்ற இந்தப் பதப்பிரயோகங்கள், தமிழ்நாட்டுச் சமூகப் பார்வையில் ஈ.வெ.ராமசாமிப் பெரியாரால் நடத்தப்பெற்ற சுயமரியாதை இயக்கத்தைக் கூறுவனவாவே உள்ளன. ஆனால் இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் சென்னையை மையமாகக் கொண்டியங்கிய, பிராமணரல்லாத உயர்சாதிகள் என்று கருதப்படும் நீதிக்கட்சி என்று அழைக்கப்பட்ட தென்னிந்திய நல உரிமைச் சங்கமானது அதிகாரப் பகிர்வு, உத்தியோக வாய்ப்புகள், படித்தவர்களுக்கு உரிய அளவு உத்தியோகங்கள் கொடுக்கப்பட வேண்டும் என்பதையே நோக்கமாகக் கொண்டுள்ளது.

"பிராமணர்களல்லாத, படித்தவர்களுக்கு உரிய அளவு உத்தியோகங்கள் கொடுக்கப்பட வேண்டும் என்பதே இவர்களின் பிரதான வாதமாகும். இவர்கள் பிராமணர்களைச் சமய ரீதியாக எதிர்க்கவில்லை. மதச்சடங்குகளில் பிராமணருக்குள்ள முதன்மையை அவர்கள் ஏற்றுக்கொண்டனர்"[61] என்பர்.

நீதிக்கட்சியின் சமூகக் கோரிக்கைகளை ஆதரித்த தனித் தமிழ் இயக்கம். பிராமணர்களின் மத – பண்பாட்டு மேலாண்மையை நிராகரித்துச் சைவ வேளாள முதன்மையை வற்புறுத்தியது "பிராமணரின் மொழி – பண்பாட்டு மேலாண்மைக்கெதிராகத் தனித் தமிழ் இயக்கத்தை ஆரம்பித்தது"[62]

“திராவிடக் கருத்துநிலையின் ஒரு முக்கிய எடுகோளான ஆரிய மேன்மை நிராகரிப்பினைத் தனித் தமிழியக்கம் மிக வன்மையாக முன் வைத்தது. சைவ வேளாளர் நிலை தமிழர் நாகரிகத்தின் ஆணிவேர் என்று எடுத்துக்கூறப்பட்டது”[63] பிராமண எதிர்ப்புக்கு ஒரு பண்பாட்டுப் பரிமாணத்தை வழங்கிற்று.

இக்காலக்கட்டத்தில் தோன்றிய பெரியாரால் உருவாக்கிய சுயமரியாதை இயக்கம் (1925) திராவிட இயக்கத்துக்குப் புதிய பரிமாணத்தைக் கொடுத்தது. “சுயமரியாதை இயக்கம், பிராமணியத்தைச் சமூக நடவடிக்கை மட்டத்தில் எதிர்க்கும் சமூக சீர்திருத்த நடவடிக்கைகளை மேற்கொண்டது. இதன் அடிப்படையாக நாத்திகம், பகுத்தறிவுவாதம் என்பன அமைந்தன. இது மதத்தை முற்றிலும் நிராகரித்தது. இதன் காரணமாக சைவ – வேளாளர் பண்பாட்டு மேலாண்மை வாதம் பேசிய மறைமலையடிகளுக்கும் பெரியார் ஈ.வெ.ராவுக்குமிடையில் வேறுபாடுகள் தோன்றத் தொடங்கின.”[64]

“சுயமரியாதை இயக்கத்தின் மேலோங்குகையுடன், தனித் தமிழ்வாதம் முன் வைத்த சில கருத்துநிலை எடுக்கோள்கள் (பிராமணர்களில்லாத சைவ மதப்பயில்வு, மொழித் தூய்மை பேசுதல்) நேரடியாகவும் மறைமுகமாகவும் நிராகரிக்கப்பட்டன. தமிழைச் சமயச் சார்பற்ற போக்குடையதாக்க வேண்டுமென்ற போக்கு மேலெழும்பத் தொடங்கிற்று”[65].

சுயமரியாதைவாதம், சைவ வேளாளவாதம் ஆகியவற்றுக்கு இடையே உருவான கருத்துநிலை மோதல்களைத் தொடர்ந்து, திராவிட இயக்கம் கருத்துநிலை வரலாற்றின் அடுத்த கட்ட நிலைப்பெயர்வாக அமைந்தது. 1944 இல் பெரியாரின் தலைமையின் கீழ் தோற்றுவிக்கப்பெற்ற திராவிடர் கழகமாகும். இது நீதிக் கட்சி, சுயமரியாதை இயக்கத்தின் மேலாண்மையின் கீழ் வருவதை குறிக்கிறது. ஆனால் நீதிக் கட்சியையும் சுயமரியாதை இயக்கத்தையும் ஒன்றாக இணைத்து பார்க்க முடியாது. “தன்மான இயக்கத்தில் பார்ப்பனர் உறுப்பினராக இல்லை. நீதிக்கட்சில் இருந்தனர். இது மட்டுமின்றி நீதிக்கட்சியும் தன்மான இயக்கமும் பார்ப்பன நிலவுடைமையாளர்களை நிலவுடைமைப் பொருளியல் எதிர்ப்புக் கண்ணோட்டத்தில் எதிர்க்கவில்லை என்பது உண்மையெனினும் நீதிக்கட்சி பார்ப்பனிய நிலவுடைமைக் கலாச்சாரத்தை எதிரியாகக் காணவில்லை, நீதிக்கட்சித் தலைவர்களில் பலர் அத்தகைய பார்ப்பனியக் கலாச்சாரத்தில் பாரம்பாரியமாக ஊறித் திளைத்திருந்தனர். ஆனால் தன்மான இயக்கம் இதற்கு நேர்

மாறானது. பார்ப்பனியக் கலாச்சாரத்தைத் தமிழக மக்களின் முதல் எதிரியாகக் கண்டறிந்தது. இந்த வாதத்தில் இரண்டு அமைப்புகளையும் சமப்படுத்தக்கூடாது''[66] என்பர்.

## 2.10.பெரியாரின் பண்பாட்டு நடவடிக்கை

பெரியார் புராணங்களை எதிர்த்துத் தமிழ்ப் பண்பாட்டு வரலாறு தொடர்பான நடவடிக்கைகளை மேற்கொண்டார். இந்து சமயம் நால்வருண முறையை வலியுறுத்துகிறது. 'வருணாசிரம தர்மம்' என்றும் அதைக் கடைப்பிடிப்பதே அறம் என்றும் கூறுகிறது. வெளியிலிருந்து வந்த ஆரியர்கள் திராவிடர்களைச் சூத்திரர் என்று நாலாம் வருணத்தவராக வைத்து ஆதிக்கம் செலுத்துகிறார்கள். இதனால் பிராமணர்கள் பிறப்பில் உயர்ந்தவர்கள் என்று ஏற்றுக்கொள்வதன் மூலம் பிராமணர் அல்லாதவர்கள் தங்களைச் சூத்திரர்கள் என்று ஏற்றுக்கொள்கிறார்கள். இவ்வாறு ஏற்றுக்கொள்வதால் எவ்வளவு உயர்ந்தவர்களாக இருந்தாலும், கற்றவர்களாக இருந்தாலும் பிராமணர் அல்லாதவர்கள் பிராமணர்களுக்குச் சமமாக ஆக முடியாது அவர்களோடு சேர்ந்து உண்ண முடியாது. ஆலயத்தில் நுழைய முடியாது. இந்தக் கருத்தை முன்வைத்து இந்த இழி நிலையைப் போக்குவதற்காகப் பெரியார் பகுத்தறிவுப் பிரசாரத்தை மேற்கொள்கிறார். பிரசாரத்தின் மூலம் பிராமண எதிர்ப்பு, கடவுள் மறுப்பு போன்ற கருத்துருவத்தை முன்வைக்கின்றார். பிராமணர்களின் மேலாதிக்கத்தை ஏற்றுக்கொள்ள வைத்தவை அவர்கள் ஆக்கிவைத்த புராணங்களே என்பதைக் கண்ட அவர் புராணங்களை எதிர்த்துக் குரல் கொடுக்கிறார்.

''இந்திய மக்களின் சமத்துவத்துக்கும் சகோதரத்துவத்துக்கும் முழுக்க முழுக்க எதிர்ப்பாக உள்ள வருணாசிரம தர்மக் கோட்பாட்டின் பிறப்பிடமாகவும் மூல பலமாகவும் பாதுகாப்புக் கோட்டையாகவும் விளங்குவது மனுதர்ம சாத்திரமே என்பதைப் பெரியார் தெளிவாகக் கண்டறிந்தார்''[67].

பெரியார் சாதியின் கொடுமையைப் பற்றி கூறும்போது ''சாதியின் கொடுமையால் நாற்றமெடுத்த மலத்தைவிட மனிதன் கேவலப்படுத்தப்படுகிறான். இது உண்மை, வாய்ப் பேச்சுக்காக நான் சொல்லவே இல்லை. எப்படி என்றால் மல உபாதைக்குச் சென்றவன் அந்தப் பாகத்தை மட்டும் ஒரு சொம்பு தண்ணீரைக் கொண்டு சுத்தம் செய்கிறான். மலத்தைக் காலில் மிதித்துவிட்டால் அந்தக் காலை மட்டும் தண்ணீரை விட்டுக் கழுவி விட்டால் அந்தக் குற்றம் போய் விடுவதாகக் கருதப்படுகிறது. ஒரு மனிதனை மற்றொரு மனிதன் தொட்டுவிட்டால் அவனைத் தொட்டதால் ஏற்பட்ட தோஷம், தன்னுடைய உடலை

உச்சி முதல் உள்ளங்கால் வரை குளிர, நனையக் குளித்தாலொழியப் போவதில்லை என்கிறார்கள். ஆகவே மலத்தை விட மனிதன் எவ்வளவு கேவலமாக மதிக்கப் படுகிறான் பாருங்கள். மனிதனை மனிதன் தொடுவதால் ஏற்படும் கெடுதலென்ன? தோஷமென்ன? குற்றமென்ன? எதுவுமில்லை. ஆனால், பிறகு ஏன் தோஷம் கூறப்படுகிறது? ஒருவரை ஒருவர் ஏமாற்றி வாழ்வதற்காகவே கூறப்படுகிறது. இதைவிட வேறு இரகசியமில்லை''[68] என்கிறார்.

மேற்குறித்த சாதியம் தொடர்பான பெரியார் சிந்தனைகள் அமைந்திருந்தாலும் ''சாதியைப் பற்றிப் பேசுவதன் நீட்சியாக சமயத்தை முழுதாக மறுத்தார். அதன் அடிப்படையாக இருக்கும் கடவுள் என்பதைக் கேள்விக்கு ஆளாக்கினார். அதன் சடங்குகளைத் தோலுரித்தார். அதனை நடைமுறைப்படுத்தும் ஆதிக்க சாதியினரான பார்ப்பனர்கள் போன்றவர்களைப் பட்டவர்த்தனமாக அம்பலப்படுத்தினார். இதன் நீட்சியாகப் புராண மறுப்பு, மூடநம்பிக்கை ஒழிப்பு, இராமாயணமறுப்பு, இராமன் சிலை உடைப்பு என்ற பல்வேறு சமூக நடவடிக்கைகளுக்குத் தம்மை ஆட்படுத்தினார். இத்தன்மையின் விளைவாக வகுப்புரிமைப் போராட்டத்தை வாழ்நாள் முழுவதும் முன்னெடுத்தார்''[69]. இக்கூற்றின் மூலம் பெரியாரின் பண்பாட்டு நடவடிக்கைகளின் ஆழத்தைப் புரிந்துகொள்ள முடிகிறது.

பெரியார் தமிழ்ப் பண்பாட்டின் திராவிட இயக்கத்தின் பங்களிப்பாகச் ''சமயக் குறியீடுகளை அழித்தார். சமயச் சடங்குகளைக் கடுமையாக அம்பலப்படுத்தினார். சமயச் சொல்லாடல்களை மறுத்தார். சமயம் தொடர்பான மொழி, சைகை ஆகிய அனைத்து நுண் அரசியல் சார்ந்த அக அரசியல் தன்மைகளையும் புறம் கண்டார்''[70]. இது திராவிட சமூக மாற்றத்திற்கான தேவை என்றே புரிந்து கொள்ளமுடிகின்றது.

பெண்களின் நிலைபற்றி பெரியார் கூறும்போது ''இந்தியாவில் இந்துப் பெண்கள், இந்துமத சம்பிரதாயப்படி பாவஜென்மங்களாகக் கருதப்படுவர். அதாவது, சென்ற ஜென்மத்தில் அவர்கள் செய்த பாவ காரியங்களால், இந்த ஜென்மத்தில் பெண்களாய்ப் பிறக்கிறார்கள் என்பது ஒரு சாஸ்திர விதி. 'பெண்கள் எந்த நிலையிலும் சுதந்திரத்திற்கு அருகதையற்றவர்கள்' என்பதே மத சம்பிரதாயம். பெண்களுக்குக் கல்வி கற்பிப்பதும் மத சாஸ்திர விரோதமான காரியமாகும். பெண் ஆணுக்கு ஒரு சமையல்காரி. ஓர் ஆணின் வீட்டிற்கு ஒரு வேலைக்காரி. ஓர் ஆணின் குடும்பப் பெருக்குக்கு ஒரு பிள்ளை விளைவிக்கும் பண்ணை.

இது என்ன நியாயம்? மனித சமுதாயம் தவிர மற்றப்படி மிருகம், பட்சி ஐந்து முதலியவைகளில் வேறு எந்த ஜீவனாவது, ஆண்களுக்காகவே இருக்கிறோம் நாம் என்ற கருத்துடன் நடத்தையுடன் இருக்கிறதா?"[71] என்கிறார்.

மேற்கண்ட கூற்றில் பெண்ணியம் தொடர்பான கோட்பாடுகள் பலவற்றின் அடிப்படைகளை விவாதித்துள்ளார்.

"பெண் உடல் தொடர்பான அரசியல் என்பதும் பெண் சமயத்தின் பார்வையில் எவ்வளவு கேவலமாக நடத்தப்படுகிறாள் என்பது குறித்தும் அன்றாட நடைமுறையில் வாழ்க்கையின் பெண்ணின் நிலைகள் குறித்தும் பேசிய பெரியார், அடிமைப் பண்பாட்டைப் பாதுகாக்கும் குறியீட்டு வடிவமாகக் பெண் கருதப்பட்டதைப் புலப்படுத்தினார். இத்தன்மையும் தமிழ்ப் பண்பாட்டு வரலாற்றில் எவரும் முன்னெடுக்காத செயல். மனிதனிடத்தில் உள்ள அனைத்து மூட நம்பிக்கைகளின் மூலங்களைச் சாடினார் பெரியார். அதற்கான அவரது நடைமுறைச் செயல்பாடுகள் விரிவானவை"[72].

மேற்குறித்த கூற்றலிருந்து பெரியாரின் பண்பாட்டு அணுகுமுறைகளை அறிய முடிகின்றது. பெண்ணுரிமை, தீண்டாமை, சாதி வேறுபாடுகளைக் களைதல், சமய மறுப்பு என்பன போன்றவற்றை இதற்கு முன்னரே தமிழகத்தில் பலர் வலியுறுத்தி உள்ளனர். ஆனால் இவற்றைப் பிரச்சார இயக்கத்துக்கு உரிய அம்சங்களாக மாற்றிக் காண்பித்தவர் பெரியார் என்று கொள்ளலாம்.

"1850, 1900, 1930, 1950களில் 'தமிழ்ப் பண்பாடு' என்று கருதப்பட்டனவற்றுக்கும், பின்னர் வரும் காலகட்டங்களிலே 'தமிழ்ப் பண்பாடு' என்று கருதப்பட்டனவற்றுக்கும், பார்வைப் பரப்பு வேறுபாடு உண்டு"[73] என்பர்.

திராவிட இயக்கத்தின் கருத்துநிலை காரணமாக, தமிழ்ப் பண்பாடு என்று சொல்லக்கூடியதை எல்லாம் சமயச் சார்பற்றதாக ஆக்கியது. இன்றைக்கு சைவத் தமிழ், வைஷணவத் தமிழ், கிறிஸ்தவத் தமிழ், இஸ்லாமியத் தமிழ் இவை யாவற்றையும் தமிழின் பொதுப்பாரியத்தினுள்ளே கொண்டு வரும் போக்கு இன்று வலுவுடையதாகயிருப்பினும், இவை யாவற்றுக்கும் அப்பாலான, சமயச் சார்பற்ற ஒரு 'தமிழ்ப் பண்பாட்டு' இருக்கை உருவாக்கத்தில் திராவிடக் கருத்து நிலை முக்கிய பங்கு வகிக்கின்றது.

“ ‘தமிழ்ப் பண்பாடு’ எனும் பொழுது மதப் பாரம்பரியங்களுக்கு அழுத்தம் கொடுக்காது, பிற மொழிச் செல்வாக்குகள் குறைந்தவை, அற்றவை என்று கருதப்படும் இலக்கியங்களை முதன்மைப்படுத்தும் ஒரு செல்நெறியும் தோன்றிற்று. இதன் காரணமாகச் சங்க இலக்கியங்கள், திருக்குறள், சிலப்பதிகாரம் ஆகியன தமிழ்ப் பண்பாட்டின் கருவூலங்களாக எடுத்துரைக்கப்பட்டன”[74]. இக்கருத்துநிலை பக்தி இலக்கியம், நடராசர் சிலை போன்றவற்றை முதன்மைப்படுத்தவில்லை என்பது குறிப்பிடத் தக்கது.

திராவிடக் கருத்துநிலையின் தொழிற்பாடு காரணமாக, தொடர்பியல் தேவைகளுக்காகத் தமிழின் மொழிப்பயன்பாட்டில் பெருத்த மாற்றம் ஏற்பட்டது. “பெரியார், அண்ணாதுரை கருத்தாடல்களில் இந்த மொழிப் பிரயோகம் மாற்றங்களைப் பெற்றது. பெரியாரின் பயன்பாட்டில் பேச்சு நிலை வழக்கு (spoken dialect) முதன்மைப்பட அண்ணாதுரையின் பயன்பாட்டில் (பின்னர் கருணாநிதியிலும்) தமிழின் விதிமுறைப் பிரயோகத்திற் (formal use) பல மாற்றங்கள் ஏற்பட்டன. ஒரு குறிப்பிட்ட மொழி நடை (அடுக்குத் தமிழ்) அரசியல் சமூகத் தொடர்பாடலைப் பெரிதும் வலுப்படுத்துவதாக இருந்தது. மேலும், திராவிட இயக்கத்தினர் பத்திரிக்கைகளையும் தமது தொடர்பாடற் சாதனமாகக் கொள்ளத் தொடங்கியிருந்தனர். இவர்களது வாசக வட்டத்தின் தன்மை, பார்வைப் பரப்புக் காரணமாகத் தமிழின் பத்திரிகை எழுத்துத் துறையில் ஒரு புதிய ‘மரபு’ (idom) தோன்றிற்று எனலாம். திராவிட இயக்கத்தின் செல்வாக்குச் சினிமாத் துறையையும் பாதித்தது. அந்தப் பாதிப்புக் காரணமாக, இந்தப் புதிய ‘நடை’ மிக்க பரவலினைப் பெற்றது.”[75] திராவிடக் கருத்துநிலை பல்வேறு ஊடகச் செயற்பாடுகளிலும் தாக்கங்களை ஏற்படுத்தியமை புலனாகிறது.

“தமிழ்ப் பண்பாட்டுத் துறையில் திராவிட இயக்கத்தின் தொழிற்பாடுகளை மிக உன்னிப்பாக ஆராயும்பொழுது, தமிழ்ப் பண்பாடு இவர்களால் அரசியல் மயப்படுத்தப்பட்ட ஓர் எண்ணக் கருவாகிற்று என்றும் துணிந்து கூறலாம்.”[76]

இந்த அரசியல்மயப்பாட்டின் விளைவாகத், தமிழ்ப் பண்பாட்டின் குறியீடுகளிலும் வேறுபாடுகள் ஏற்பட்டன. “தைப்பொங்கல், தமிழர் திருநாள் ஆகிற்று. திருக்குறள், ‘உலகத்துக்கு அறிவு வழங்கிய தமிழ் மகன் திருவள்ளுவனாரின் நூல்’ (சக்திப் பதிப்பக மலிவுப்பதிப்பு முன் அட்டையில்) ஆயிற்று. திருமணங்கள் பாரம்பரிய வடமொழி வரும் சடங்குகளின்றி நடைபெறத் தொடங்கின (சீர்திருத்தக் கலியாணம்). தமிழ்ச் சினிமாவிற்

சில குடும்பநிலைப் பண்புகள், தமிழ்ப் பண்புகளாகப் போற்றப்பட்டன. தமிழனின் மானம், தமிழச்சியின் மானம், தமிழச்சியின் கற்பு என்பன உருவுடைப் பொருள்கள் (reification) ஆகின. அரசியல் தொடர்பாடலில் இப்பிரயோகங்கள் வலிமை மிக்க கூற்றுக்களாகின. தமிழ்த் தேசியப் பிரக்ஞை உருவாக்கத்தில் இந்தக் குறியீடுகள் மிக முக்கிய இடம்பெறத் தொடங்கின.”[77]

திராவிட இயக்கம் கருத்துநிலை தமிழ் மக்களிடையே ஏற்படுத்திய தாக்கங்களில் முக்கியமானது மதம் பற்றிய நோக்கம் ஆகும். “இவ்வியக்கம் கருத்துநிலையின் உடனுறை நோக்கமான பிராமணிய எதிர்ப்புக் காரணமாக, திராவிட இயக்கம் அதன் பல்வேறு வளர்ச்சிக்கட்டங்களிலும் ‘வைதிக’ (வேத வழி வருகின்ற) இந்து மதச் சடங்குகளை எதிர்த்தது. சைவம் ஆகமங்களை ஏற்றுக்கொண்டது. ஆனால் பெரியாரின் சுயமரியாதை இயக்கம், இந்து மதத்தை அதன் சகல நிலைகளிலும் நிராகரித்தது. இவர்கள் தங்கள் உந்துதற் கோட்பாடுகள் எனக் கொண்டிருந்த ‘பகுத்தறிவுவாதம்’, ‘நாத்திகவாதம்’ என்பனவும் இவர்களை அந்த நிலைக்குத் தள்ளின. இந்தக் கண்ணோட்டத்தில் இந்து மதம் என்பது சமூகக் கட்டுப்பாட்டுக்காகத் தோற்றுவிக்கப்பட்ட ஒரு ‘ஆரிய’ பிராமணியச் சூழ்ச்சி என்றே நோக்கப்பட்டது. கிறிஸ்தவம், இஸ்லாம் பற்றி இப்பார்வை முன்வைக்கப்படவில்லை”[78] என்பது குறிப்பிடத்தக்கது.

திராவிடக் கட்சிகள் மாநில ஆட்சியை ஏற்றுக்கொண்ட பிறகு கோயில்களையும், மதச்சார் நிறுவனங்களையும் நிர்வகிக்க வேண்டிய தேவை ஏற்பட்டது. இந்துமத மீட்டெடுப்பு நடவடிக்கைகளில் பிராமணரல்லாத குன்றக்குடி அடிகளார் முன்னின்று நடத்திய சமூக – மத – பண்பாட்டு நடவடிக்கைகள், தமிழ் நிலைப்பட்ட நடவடிக்கைகள் போன்றவை முக்கியமானவை. இவருக்கு கௌரவ இலக்கிய முனைவர் (DLitt) பட்டம் தமிழ்ப் பல்கலைக் கழகத்தினால் வழங்கப்பட்டது என்பது குறிப்பிடத்தக்கது.

“அனைத்திந்திய ஒருமைப்பாடு, பிராமண உத்தியோக மேலாண்மை,சமஸ்கிருத நெறிப்படுகை ஆகியனவற்றை எதிர்த்த திராவிட இயக்கம், மாநில ஆட்சியை ஏற்றுக்கொண்டதும் இந்த மூன்று கட்டுக்கோப்புக்களுள்ளும் நின்று இயங்க வேண்டிய தேவை ஏற்பட்டது. இதனால், இந்தக் கருத்துநிலை வழிவரும் செயற்பாடுகள் நடைமுறைப்படுத்தப்படுவதில் சிக்கல்கள் ஏற்பட்டன. தேர்தல் அரசியலில்

இறங்கியபொழுது ஏற்பட்ட நிலைப்பெயர்வுகளுடன் இதுவும் சேர, இந்தக் கருத்து நிலையின் வலிமை பெரிதும் பாதிக்கப்பட்டதெனலாம்.''[79]

## 2.11.திராவிட இயக்கத்தின் நிலைப்பெயர்வும் கருத்து நிலையும்

''திராவிடம்' என்ற இத்தொடர் இந்தியச் சுதந்திர காலத்துக்கு முன்னரிருந்து கையளிக்கப்பட்ட ஒரு சிந்தனை மரபின் பெறும்பேறாக அமைகின்றது. சுதந்திர காலம் முதல் இத்தொடர் வன்மையான அரசியல் கட்சிநிலைப் பதமாகவும் தொழிற்படுகிறது.''[80] 1949 முதல் இன்று வரையுள்ள சென்னை தமிழ்நாட்டு மாநில ஆட்சி 'திராவிட' என்ற அடையைக் கொண்ட கட்சிகளால் நடத்தப்படுவதையும், அக்கட்சிக்குள்ளே பிளவுகள் ஏற்படும்பொழுதுங்கூட 'திராவிட' என்ற அடை தொடர்ந்து பேணப்படுவதையும் (தி.மு.க, அ.தி.மு.க, ம.தி.மு.க முதலியன) நோக்கும்பொழுதும் இப்பதம் ஒரு அரசியற் குறியீடு ஆகியுள்ளது என்பது புலனாகின்றது. ''அரசியற் பலத்தை நாடாத (pressure groups) ஒன்றாக விளங்கும் திராவிடர் கழகமும் (பெரியாரின் உத்தியோக பூர்வவாரிசாகத் தன்னைச் சுட்டிக் கொள்வது) அந்தப் பிரயோகத்தையே பயன்படுத்துவது நோக்கப்பட வேண்டிய ஒன்றாகும்.''[81]

திராவிட இயக்கம் தென்னிந்திய, தமிழ் நாட்டு வரலாற்றில் பெறும் இடத்தினை நோக்கும்பொழுது இந்த இயக்கத்தினது தோற்றம் வளர்ச்சியும், அந்த வரலாற்றினூடே தெரியக் கிடக்கும் இதன் நிலைப் பெயர்வுகளுமாகும், ''இந்த நிலைப்பெயர்வுகள் இக்கருத்துநிலையின் தன்மையிலும், அது ஆதரவாளர்களாலும் எதிரிகளாலும் புலப்பதிவு செய்யப்பட்ட முறைமையிலும் பல கருத்து நெகிழ்ச்சிகளை அழுத்த வேறுபாடுகளை ஏற்படுத்தின?''[82] என்பர்.

இதன் தோற்றம் 19 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியிலே தொடங்குகின்றது. இக்காலக்கட்டத்தில் ''ஆங்கில அட்சியமைப்பின் குடியியல் எடுக்கோள்கள் இந்திய அதிகாரப் படிமுறைச் சமூகத்தின் சில எடுகோள்களை (பிறப்பால் உயர்வு தாழ்வு) நிராகரித்ததெனினும், அதன் உள்ளூர் நிர்வாகம் அமைந்த முறைமையில் அந்த அதிகாரப்படிமுறை அரசு சேவையிலுள்ள பிராமண மேலாண்மை மூலமாய் புதிதாக நிலைநிறுத்தப்படுவது கண்டு ஆங்கில ஆட்சி வழங்கிய சில சமத்துவ நடவடிக்கைகளினாலே மேலே நோக்கிப் புடை பெயர்ந்து கொண்டிருந்த குழுமங்களைச் சேர்ந்தவர்கள், தங்கள் சமூகக் குறைபாடுகளை முன்வைக்கத் தொடங்குகின்றனர். இது

ஆரம்பத்தில் அடிநிலைச் சமூகங்களின் சுய பிரக்ஞைப் போக்குக்களிலே காணப்படுகிறது”[83] என்பர்.

ஆனால், இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில், சென்னையை மையமாகக் கொண்டியங்கிய பிராமணரல்லாத, உயர் சாதிகள் என்று கருதப்படும் குழுமங்களைச் சேர்ந்தவர்கள் (தமிழர்கள், தெலுங்கர்கள், மலையாளிகள்) சிலர் “1916 இல் ‘பிராமணரல்லாதார் விஞ்ஞாபனத்தை (The non – Brahmin manifesto) முன் வைக்கின்றனர். இக்குழுமம் தன்னைத் தென்னிந்தியத் தாராண்மைவாதக் கூட்டுக்குழு the south Indian liberal Federation என்று கூறிக்கொண்டது அதுதான் பின்னர், அதன் ஆங்கிலப் பத்திரிக்கையின் பெயர் காரணமாக ஜஸ்டிஸ் கட்சி (Justice party) எனப்பட்டது.”[84]

பிராமணரல்லாத படித்தவர்களுக்கு உரிய அளவு உத்தியோகங்கள், அதிகாரப் பகிர்வு கொடுக்கப்படவேண்டும் என்பதே இவர்கள் கோரிக்கையாக இருந்துள்ளது. இவர்கள் பிராமணர்களைச் சமய ரீதியாக எதிர்க்கவில்லை. மதச்சடங்குகளில் பிராமணருக்குள்ள முதன்மையை ஏற்றுக்கொண்டு இருந்துள்ளனர். இக்காலக்கட்டத்தில் தோன்றிய சுய மரியாதை இயக்கம் (1925), பிராமணியத்தைச் சமூக நடவடிக்கை மட்டத்தில் எதிர்க்கும் சமூக சீர்திருத்த நடவடிக்கைகளை மேற்கொண்டது. இதன் அடிப்படையாக நாத்திகம், பகுத்தறிவு வாதம் என்பன அமைந்தன. இது மதத்தை முற்றிலும் நிராகரித்தது.

அடுத்த நிலைப்பெயர்வு 1944 இல் பெரியாரின் தலைமையின் கீழ் உருவான திராவிடர் கழகமாகும். “இது பிராமணரல்லாதார் அரசியலில் சில தீவிர நிலைப்பாடுகளை அவரால் உண்டாக்க முடிந்தது. நாத்திகம், பெண் விடுதலை, சுயமரியாதை, பொதுவுடைமை போன்ற கூறுகளை அவர் பிராமணரல்லாதார் அரசியலில் ஏற்படுத்தினார். சாதிக்கட்டமைப்பு பற்றிய சொல்லாடல்களைப் பெரியார் பார்ப்பனியத்தோடு மட்டுமின்றி இந்து மதத்தோடும் இறுக்கமாக இணைத்துக் காட்டினார்”[85].

திராவிடர் இயக்கத்தில் அடுத்து ஏற்படும் நிலைப்பெயர்வு திராவிட முன்னேற்றக் கழகத்தின் தோற்றமாகும். (1949) “இக்கட்டத்தில்தான் இது தமிழ்த் தேசியப் பிரக்ஞையை முற்று முழுதாகக் கொண்டு மேற்கிளம்புகின்றது என்பது தெரிகின்றது. இக்கட்டத்தில் சில முக்கியத் தள மாற்றப் போக்குகள் காணப்படுகின்றன.

(அ) தேர்தல் அரசியலில் பங்கு கொள்வது என்ற தீர்மானம்(1956)

(ஆ) நாத்திக நிலையிலிருந்து விடுபடுகை (ஒன்றே குலம் ஒருவனே தேவன்)

(இ) திராவிட நாட்டுக் கோரிக்கை கைவிடப்படல் (1963)

இவை யாவற்றுக்கும் மேலாகப் பெரியாருடன் ஏற்பட்ட பிளவு மிக முக்கியமானதாகும். இந்தப் பிளவு திராவிடக் கருத்துநிலை முனைப்பில் முக்கியமான ஒரு பலவீனத்தையே தோற்றுவித்தது எனலாம்.''[86]

" 'திராவிட', 'சுயமரியாதை'க் கருத்துநிலையானது பகுத்தறிவு வாதம், நாத்திகத்தைத் தொகுநிலை அர்த்தமாகக் கொள்ளும் தன்மை இருந்தது. ஆனால் அண்ணாத்துரையோ, திமுக தோற்றத்துடன் திருமூலர் திருமந்திரத்திலிருந்து எடுக்கப்படும் ஒரு வரியான 'ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்' என்பதை ஒரு கோஷமாக்கினார். இது மதத்தை ஏற்பதாயிற்று. குறிப்பாகக் கிறிஸ்தவர்கள், முஸ்லிம்களிடையே திராவிடக் கருத்து நிலை பற்றிய பகுத்தறிவு நோக்கு அச்சத்தை நீக்கிற்று.

இந்தக் கோஷம் திமுகவின் மதநோக்கிற் சில முரண்பாடுகளை ஏற்படுத்திற்று. இந்த உண்மையை அறுபதுகளின் பிற்கூற்றிலும் அதன் பின்னரும் ஏற்படும் 'மத உணர்வு' (religionity) மீட்பிற் காணலாம். காஞ்சி காமகோடி பீடத்தை முதன்மைப்படுத்தி அறுபதுகளில் நடந்த மத-சடங்காசார மீட்டெடுப்பு இயக்கம், படிப்படியாகப் பிராமணரல்லாத மட்டங்களுக்குச் செல்ல, அந்நிலைகளில் முருக, மாரியம்மன் வணக்கங்கள் மிக முக்கியமாகின. திராவிடக் கருத்துநிலையைப் பரப்பப் பயன்படுத்தப்பட்ட அதே சினிமா ஊடகம் இதற்கும் பயன்படுத்தப்பட்டது. மேலும் எண்பதுகளில், குறிப்பாக நகர்ப்புறத்து ஏழைகள் மத்தியில் சபரிமலை வழிபாடு பிரபலம் பெற்றது. இப்பொழுது திராவிட முன்னேற்றக் கழக அங்கத்தினர்களிடையே காணப்படும் மதவழிபாட்டு நடைமுறைகள் அவர்களின் தலைமையினரிடையே விமர்சிக்கப்பட்டுள்ளது.''[87]

இந்தப் போக்கினால் இவரது நாத்திக உள்ளடக்கம் படிப்படியாகக் குறைந்து 'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' என்ற திருமூலரின் ஒரே கடவுள் கோட்பாட்டை ஒத்துக்கொள்ளும் ஆத்திராக அண்ணாதுரை நீர்த்துப் போனதை வரலாற்றில் காணமுடிகிறது. இத்தகைய சமரசங்கள் அண்ணாதுரையின் அரசியல் சித்தாத்தோடு தொடர்புடையவை. இந்த நிலைப்பெயர்வு நடைபெறும் காலம் இந்தியா சுதந்திரமடைந்த காலகட்டமாகும். ''சுதந்திரப் போராட்ட காலத்தில், இந்தியத் தேசிய காங்கிரஸ் தமிழ் நாட்டில் நிலவிய பாரம்பரிய சமூக வேறுபாடுகளுக்கும் சமூக ஒடுக்குமுறைகளுக்கும்

அதிகக் கவனம் செலுத்தாது, அப்பொழுதே இலைமறை காயாகவிருந்த சமூக வேறுபாட்டு நோக்குகளுக்கு முக்கியத்துவம் கொடுக்காதிருந்த வேளையில், காந்தியத்தின் அடிநிலைச் சுவறல்களையும் புறங்கண்டு, திராவிட இயக்கம், சமூக – பண்பாட்டு மனக் குறைபாடுகள் கொண்ட சமூகத்தினர்களின் சமூக வெளிப்பாடாக மேற்கிளம்பியது. அவ்வெளிப்பாடு முற்றிலும் அரசியல் மயப்படுத்தப்பட்டது. திமுகவின் தோற்றத்துடனேயே இது தமிழகத்தின் அரசியல் செல்நெறியில் ஒரு புதிய மாற்றத்தையும் புதிய தலைமைப் பாணிகளையும் புதிய அரசியல் ஆட்சேர்ப்பு – ஒழுங்கமைப்பு முறைமைகளையும் (news forms of recruitment and political mobilisation) ஏற்படுத்திற்று. திமுக அரசியலில் ஒரு புதிய சொற்களஞ்சியத்தைக் கொண்டுவந்தது''[88] விடுதலைப்பெற்ற இந்தியாவில் அரசியல் அதிகாரத்திற்கான போட்டியில் திராவிட இயக்கத்தார் ஈடுபட வேண்டும் என்பது முன்னேற்றக் கழகத்தின் முக்கிய நிலைப்பாடு.

''1947க்குப் பின் இந்தியாவின் பொருளாதாரத்தில் வட இந்திய முதலாளிகள் ஆதிக்கம் பெருத்ததையொட்டி, அவர்களின் இந்திய அளவிலான குடியேற்றம் பெருகியது. தமிழகத்தில் குறிப்பாக அதன் பெருநகரங்களில் வட இந்திய முதலாளிகள் அதிக அளவில் குடியேறினர். இந்நிலையில் திராவிட முன்னேற்றக் கழகம், வடவர் எதிர்ப்புப் போராட்டங்களை முன்வைத்தது. 1949இல் பெரியாரிடமிருந்து விலகியபின், குறிப்பாகத் தேர்தல் பாதையைத் தேர்தெடுக்கும் சூழல் உருவானபின் தி.மு.க., பார்ப்பனர் எதிர்ப்புப் போராட்டங்களில் முனைப்பாக இல்லை. எல்லா இனத்தவரும் இன்புற்று வாழ்வதே அதன் இலட்சியமான பின் பார்ப்பனர் நலன்களைத் தி.மு.க., புறக்கணிக்க இயலாது. ஆனால் வடவர் எதிர்ப்புப் போராட்டங்களைத் தி.மு.க., முன் வைத்தது. பெரியாரின் போராட்டங்களை வரிசைப்படுத்திக் கண்டால் வடவர் எதிர்ப்புப் போராட்டங்களைவிடப் பார்ப்பனர் எதிர்ப்புப் போராட்டங்கள் எண்ணிக்கையில் அதிகமாக அமைந்தன''[89] எனலாம்.

அரசியலதிகாரத்தினைப் பெற்ற நிலையில் தலைமை வேறுபாடுகள் முக்கியமடையத் தொடங்கியது. திடமான அரசியல் பொருளாதரச் செயல் நிகழ்ச்சி நோக்கு ஒன்றினை வகுத்துக்கொள்ள முடியாது போனமையால், தலைமை, சனவிருப்பு முறைமையிற் செல்வதற்கான சூழ்நிலை ஏற்பட்டது. இந்த மாற்றத்தினை 1972 இல் ஏற்பட்ட நிலைப்பெயர்விலே காண முடிகிறது.

''எம்.ஜி.ராமச்சந்திரன் தலைமையில் தோன்றிய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகம், திராவிட இயக்கத்தின் அடிப்படைக் கருத்துநிலை எடுக்கோள்களில் சில தளப்

பெயர்வுகளை ஏற்படுத்துவதனை அவதானிக்கலாம். முதலாவது (அரசியல் உத்தித் தேவைகள் காரணமாகச் செய்யப்பட்டதெனினும்) அது தன்னை அனைத்திந்திய என்ற ஒரு பெரிய வட்டத்தினுள் திராவிட இயக்கத்தைக் கொண்டு வந்தமையாகும். மாநில சுயாட்சி பற்றி ஏற்கனவே திமுக எடுத்திருந்த, நிலைபாட்டிலிருந்து இது வேறுபடத் தொடங்குகிறதென்றே கொள்ள வேண்டும். அத்துடன் திராவிடக் கருத்துநிலையான நாத்திக நிலைப்பாட்டிலும் பெறு வேறுபாடு ஏற்பட்டது.''[90]

அ.இ.அ.தி.மு.கவின் தோற்றம் வளர்ச்சியுடன் திராவிட இயக்கம் மூன்று பெரும் பிரிவுகளாகப் பிளவுபட்டு நிற்கத் தொடங்கியது. பெரியார் (1879 -1973) தலைமை தாங்கி அவர் பின் மணியம்மை, வீரமணியின் தலைமைக்குச் சென்ற திராவிடர் கழகம், கருணாநிதி தலைமையில் இயங்கிய திராவிட முன்னேற்றக் கழகம், எம்.ஜி.ஆர் தலைமையில் இயங்கிய அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகமெனத் திராவிட இயக்கம் முக்கியமான மூன்று பிரிவுகளாகக் காணப்பட்டது. ''இந்த பிளவு நிலை காரணமாக, திராவிடக் கருத்து நிலையின் ஒருமைபாட்டிற் பலத்த உடைவு ஏற்பட்டது என்பதைக் கவனத்திற் கொள்ளுதல் அவசியமாகும்''[91]

''எம்.ஜி.ஆரின் அரசியல் மேலாண்மை, திராவிட இயக்கப் போக்கில் பல மாற்றங்களை ஏற்படுத்திற்று, அரசியல் மயப்படுத்தப்பட்ட திராவிட இயக்க மட்டத்தில், 'திராவிடக் கருத்து நிலையின் மைய அம்சங்கள் பல (நாத்திகம், தமிழ் மேண்மைவாதம் ஆகியன) கைவிடப்பபெற்றன. வகுப்புவாரிப் பதவி ஒதுக்கீட்டில் கூடிய விகிதாசார ஒதுக்கலும் பாடசாலைக் குழந்தைகளுக்கான சத்துணவுத்திட்டமும் முக்கிய சமூகத் தாக்கங்களை ஏற்படுத்தினவெனினும், திராவிடக் கருத்து நிலையின் சமூக மத நோக்குத் தனித்துவம் சிதையத் தொடங்கிற்று''[92]

''அண்ணாதுரை, எம.ஜி.ஆர் ஆகியோருக்கு இடையில் உள்ள தொடர்ச்சியான நிலைப்பாடுகள் திராவிடம், திராவிடர் ஆகியவற்றின் தனித்தன்மைகளை நீர்த்துப் போகச் செய்துள்ளன. மேலும் திராவிடக் கட்சிகளில் பார்ப்பனரைச் சேர்க்க மறுப்பு என்பதில் இருந்து உறுதி குலைந்து பார்ப்பனரைச் சேர்த்தல் என்பது தொடங்கி (இதில் 1944 வரை பெரியாரும் ஊசலாட்டத்தோடு இருந்தார்) இன்றைக்கு ஒரு கட்சி பார்ப்பனரைத் தலைமையாக - அதுவும் நிரந்தரத் தலைமையாக ஏற்றுக்கொண்டது வரை கண்டால், திராவிடம் அதன் எதிர்மறையாகவிட்டது. இருப்பினும் திராவிடச் சொல், அரசியல் பயன்பாட்டிலேயே உள்ளது.

பாராளுமன்ற வாத நடைமுறையிலும் தேர்தல் அரசியலிலும் மக்களிடத்தில் நீண்ட காலமாகப் புழக்கத்தில் பயன்படுத்திய எந்தவொரு அடையாளத்தையும் (சொல்லாக்கம், கட்சியின் பெயர், சின்னம், கொடி) இழந்துவிட எந்தவொரு கட்சியும் தயாராக இல்லை. இன்றைக்கும் திராவிடம் என்ற சொல்லை எல்லாக் கட்சிகளுமே பயன்படுத்திக்கொண்டு வருகின்றன. பாராளுமன்றவாத நடைமுறையில் மக்களிடத்தில் பழகிய ஒன்றைத் தூக்கி எறிவது சுலபமன்று.''[93]

திராவிட இயக்கத்தின் மிக அண்மையில் ஏற்பட்ட 'பெயர்வு' மறுமலர்ச்சி திராவிட முன்னேற்றக் கழகத்தின் தோற்றமாகும் (1993). ''திராவிட முன்னேற்றக் கழகத்தின் தமிழ்த் தேசிய நிலைபாடுகளின் போதாமையே இதன் தோற்றத்துக்கான காரணம் என்று கருத்துநிலைபடக் கூறப்பட்டது.''[94]

திராவிட இயக்க கருத்துநிலையில் ஏற்பட்ட இந்த நிலைப்பெயர்வுகளை நோக்கும்பொழுது திராவிடக் கருத்து நிலையில் ஒருமைப்பாட்டுக்கு ஊறுவிளைவிக்கப்பட்டுள்ளது என்பது நன்கு தெரிகின்றது. ''காய்தல் உவந்தலற்று நோக்கும் பொழுது இந்தப் நிலைப்பெயர்வுகள், அரசியல் அதிகாரம், மதம், பண்பாடு சம்பந்தமாகத் திராவிடக் கருத்து நிலையின் தோற்றகால நிலைப்பாட்டில் பல மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன என்பது புலனாகின்றது''[95]

## 2.12.பெரியாரின் இலக்கியக் கொள்கையும் சங்க இலக்கிய வாசிப்பும்

''இலக்கியங்களைப் படிப்பது அறிவும், அனுபவமும் பெற்று முன்னேறுவதற்கே எனும் நற் கொள்கை சாகடிக்கப்பட்டு வீடு பேறடைய உதவுவதே இலக்கியங்களின் நோக்கம் என்பது தமிழகத்தில் திணிக்கப்பட்டும், ஏற்கப்பட்டும், நடைமுறைக்கு வந்து விட்டது ''கற்பக் கழிமட ம.்.கும்'' என்று தொடங்கிய கல்வி முட்டறுத்த நல்லோன் முதனூற் பொருளுணர்ந்து கட்டறுத்த வீடு பெறும்'' என்று முடிந்தது. ''அறம் பொரு ளின்பம் வீடடைதல் நூற்பயனே என நன்னூல் பொதுப் பாயிரத்தில் உள்ள பத்தாம் நூற்பா அதைச் சட்டமாக்கிவிட்டது.''[96] என்று மா.நன்னன் குறிப்பிடுகின்றார்.

மேலும், அவர் '' 'அறம், பொருள், இன்பம், வீடு அடைதல் நூற்பயனே' என்னும் பவணந்தி, முனிவரின் இலக்கிய நோக்கையே நம் தமிழ் இலக்கியத்தில் காண்கிறோம். இல்லாத இருக்க முடியாத வீடு பேறுதான் வாழ்வின் இலட்சியம் என்று கருதி, அதனை

அடைவதற்கு அறமும், பொருளும், இன்பமும் வேண்டுமென்று கொண்டு, அதற்கு வேண்டியவற்றைத் தருவதே தம் கடமை என்று கருதி, அந்த இலக்கை நோக்கித் தம் இலக்கியப் போக்கினை மாற்றிக் கொண்டனர் புலவர்கள்''[97] என்று குறிப்பிடுகின்றார். இவ்வகையில் அகப்பட்டுத் தாழ்ந்த தமிழிலக்கியம் பற்றிய பெரியாரின் கருத்துக்கள் பலவாறாக அமைகின்றன.

''இலக்கியம் என்பது தமிழ்ச் சொல்லா, இலக்கியம் என்னும் வட சொல்லிலிருந்து வந்ததா என்னும் சொல்லாராய்ச்சியில் தொடங்கித் தமிழனைத் தாழ்த்தி இழிவுபடுத்திச் சீர்குலைத்த இலக்கியங்களைக் கொளுத்துவது தவிர நமக்கு வேறு வழியில்லை என்று முடிவு கட்டியது வரையுள்ள பெரியாரின் இலக்கியக் கொள்கை மிக விரிவானதாகும்''[98] என்பர்

## 2.13.பெரியாரின் இலக்கிய வரையறை

இலக்கியம் என்பதற்கு பெரியார் வரையறை தருகிறார். ''இலக்கியம் என்று சொல்வதைப் பற்றி நாம் அதற்கு ஒரு வரையறை ஏற்படுத்திக் கொள்ள வேண்டும். இலக்கியம் என்றால் யாரோ நான்கு பேர் பாடின கவி இருக்கிறது. ரொம்ப பெரிய காலத்துக்கு முன்னே அற்புதமான கருத்துகளைப் புகுத்தியிருக்கிறார்கள் என்பது மாத்திரம் போதாது. இலக்கியம் என்றால் நமக்கு என்ன அதனாலே பலன்? நாம் அதைப் பின்பற்றி நடக்க முடிகிறதா? அல்லது நம்மை அது பின்பற்றும்படியாகவாவது கட்டாயம்படுத்தும்படியான சக்தி இருக்கிறதா? அத்தோடு மாத்திரமல்லாமல் அது இன்றைக்கு மக்களுக்குப் பயன்படுகிறதா? இவைகளை நாம் நன்றாகக் கவனிக்கவேண்டும்''[99] என்கிறார்.

தொல்காப்பியத்தைப் பற்றியும், சங்க இலக்கியங்களைப் பற்றியும் அவர் அதிகமாகப் பேசவில்லை. தொல்காப்பியமும், சங்க இலக்கியமும் மக்கள் வாழ்வில் குறுக்கிட்டுப் பெரிய விளைவெதையும் ஏற்படுத்தவில்லை. அவற்றால் மக்களுக்குப் பெருங்கேடு எதுவும் ஏற்பட்டுவிடவில்லை. சாதி, ஆரியம் போன்றவற்றுக்கு அங்கும் ஆதாரமும் ஆக்கமும் காணப்படுகின்றன என்பது தவிர, அவை திராவிட மக்களின் வாழ்வைச் சீரழிக்க மிகுதியாகப் பயன்படுத்தப்படவில்லை என்ற அடிப்படையில் பார்க்கும்போது பெரியாருக்கு அவற்றிடம் நாட்டம் செல்லவில்லை. தமிழரின் விழுமிய

வாழ்வு சிதைவதற்கும், நிலை குலைவிற்கும் பேருதவிபுரிந்த பிற இலக்கியங்களிடையே மட்டும் பெரியார் நாட்டம் செலுத்தவேண்டிய இன்றியமையாமை ஏற்பட்டது.

பெரியாரின் அடிப்படை நோக்கத்தைப் பற்றி குறிப்பிடும் மா.நன்னன் ''பெரியார் மன்பதையன்பர். அ∴தாவது, அவருக்கு மக்களின் நலம், வாழ்வு, வளர்ச்சி, முன்னேற்றம் என்பன தவிர வேறு எதிலும் பற்று இல்லை. நாட்டுப் பற்றோ, மொழிப் பற்றோ, புகழ்ப் பற்றோ, வேறு எந்தப் பற்றுமோ கூட அவருக்கு இல்லை. குடும்பம், சுற்றம், செல்வம் போன்ற எதிலும் அவருக்கு பிணைப்போ தொடர்போ, அவற்றால் தம் கொள்கையில் தடுமாற்றம் அடைய வேண்டிய தேவையோ தமக்கு அறவே ஏற்பட வழியோ வாய்ப்போ இல்லாதபடித் தம் வாழ்வை அமைத்துக் கொண்டவரவர். மக்கள் நல்வாழ்வு ஒன்றையே அடிப்படை நோக்கமாகக் கொண்டு அவர் எதையும் பேசினார், எழுதினார், செயல்பட்டார் என்பதை நாம் மறந்துவிடலாகாது''[100] என்கிறார். இக்கூற்றில் பெரியார் எதிலும் பற்று இல்லாதவராகவும், சமுதாய முன்னேற்றம் ஒன்றையே குறிக்கோளாகவும் கொண்டு இயங்கினார் என்பதை தெளிவாக்குகின்றார்.

மேலும், ''அதே நோக்குடன்தான் பெரியார் இலக்கியங்களையும் ஆராய்ந்து கருத்து வெளியிட்டுள்ளார். இங்கு இலக்கியம் என்று குறிப்பிடுவது, இலக்கியம் இலக்கணம் ஆகிய அனைத்தையுமே என்பதும் தெரிந்திருக்க வேண்டியதாகும். தொல்காப்பியம் பற்றி இரண்டோரிடங்களில் மட்டுமே குறிப்பிட்டு ஓரிரு கருத்துக்களை மட்டுமே ஆராய்ந்திருக்கிறார். சங்க இலக்கியங்களைப் பற்றியும் அவர் மிகுதியாகக் கருத்துத் தெரிவித்ததாகச் சொல்ல முடியாது''[101] என்று குறிப்பிடுகின்றார்.

''இலக்கிய ஆராய்ச்சியில் ஈடுபட்ட பெரியார் அதன் வரலாற்றை ஆராய விரும்பித் தமிழ் நாட்டின் வரலாற்றில் கருத்தைச் செலுத்தியிருக்கிறார். அப்போதுதான் தமிழ் நாட்டுக்குத் தெளிவானதும் உண்மையானதுமான வரலாறே இல்லை என்பதையும் வரலாற்றை எழுதியவர்கள் பார்ப்பனராகவே இருந்துவிட்டதால் அது மறைக்கப்பட்டும், திணிக்கப்பட்டும் போயிற்று என்பதையும் அறிய நேர்ந்தது. நம் உண்மையான வரலாறு நமக்கு கிடைத்திருக்குமானால் நமக்கு இவ்வளவு மோசம் ஏற்பட்டு இருக்காது என்பதையும் அவரால் எளிதாகத் தெரிந்து கொள்ள முடிந்திருக்கிறது. (வி:17-11-65, 45)''[102]

எந்த இலக்கியமாக இருந்தாலும் அதன் ஆசிரியர் எவ்வளவு பெரிய இலக்கியக்கர்த்தாவாக இருந்தாலும் அவருடைய சிந்தனை எவ்வளவுதான் காலம்

கடந்ததாக, எல்லை கடந்ததாக இருந்தாலும் அவர் காலத்தில் சிந்தனையை விட்டு முற்றுமாக விடுபட்டுச் சிந்திக்க இயலாது எதிர்காலத்தில் வரக்கூடிய மாற்றங்களை முழுவதுமாக அவரால் எதிர்பார்க்க இயலாது என்பதை பெரியார் விளக்கமாக எடுத்துரைக்கிறார்.

''நம்முடைய இலக்கியக் காலங்களிலே வளர்ச்சி பெறுவதற்கே இடமில்லை. இடமிருக்க முடியாது எவ்வளவு பெரிய இலக்கியக்கர்த்தாவாக இருந்தாலும், அந்தக்காலத்தில் இருந்த மனுவுனாலே அந்த அளவுக்குத்தான் அந்த இலக்கியத்தை உண்டாக்கிட முடியும். அந்தக்காலத்திய மனிதன் எவ்வளவுதான் கெட்டிக்காரனாக இருந்தாலும் அந்தக்கால அறிவு வளர்ச்சிக்கு, அந்தக் காலத்தில் இருக்கின்ற நிலைமைக்கு ஏற்படுகிற நிலைக்குத் தகுந்தபடிதான் புத்தி ஏற்படுமே தவிர, புதிய நிலைமை உண்டாக்குகிற புத்தி ஏற்பட வாய்ப்பு இல்லை. அந்த முறையிலேயே நாம் இலக்கியங்களைப் பற்றிப் பேச வேண்டுமானால் என்னைப் பொறுத்தவரையிலும் மனித சமுதாயத்துக்கு ஏற்ற இலக்கியம், மனித சமுதாய வளர்ச்சிக்கு ஏற்ற இலக்கியம் இன்றைய தினம் ஒன்று கூட இல்லை. ஆம் ஒன்று கூட இல்லை. எதை எடுத்தாலும் அந்தக் காட்டுமிராண்டிக் காலத்துக்கு, பழைமைக்கருத்துக்கு பழைய மக்களுடைய எண்ணத்துக்கு, நடைமுறை ஆசாபாசங்களுக்கு, அதற்குத்தகுந்த இலக்கியங்களைத் தான் காணமுடியுமே தவிர, இன்றைய மனிதன், இன்றைய வளர்ச்சி, இன்றைய காட்சி, இன்றைய கல்வி, இன்றைய ஆசாபாசம், இதற்கேற்ற இலக்கியம் இருக்க முடியாது''[103] என்ற கூற்றின் மூலம் தெளிவாக்குகிறார்.

அந்தக் கண்ணோட்டத்தோடுதான் பெரியார் இலக்கியத்தை அணுகுகிறார். இலக்கியத்தை அணுகும் போது பகுத்தறிவும், வேண்டியதை எடுத்துக்கொண்டு வேண்டாததை புறந்தள்ளும் மனத்துணிச்சலும் அவரிடம் இருப்பதைக் காணமுடிகிறது ''இலக்கியம் புனிதமானது அதை ஆராய்வது பாவம், குறை சொல்வது அடாத செயல், அதில் இருப்பது என்னவானாலும் மறுப்புச் சொல்லாமல் அப்படியே ஏற்றுக்கொள்ளவேண்டும்'' என்பன போன்ற கருத்துக்கள் பெரியாருக்கு எக்காலத்திலும் ஏற்புடையன அல்ல என்பது தெரிகிறது. அந்தக் காலத்து புலவர்கள் புலமைத் திறத்தோடும் நுண்மான் நுழைபுலத்தோடும் இலக்கியம் படைத்திருந்தாலும் பல நூற்றாண்டுகளுக்குப் பின் ஏற்படும் சமுதாய மாற்றங்களை அவர்கள் எதிர்பார்த்திருக்கமுடியாது போன்ற கருத்துக்கள் முன்வைப்பதைப் பார்க்கமுடிகிறது.

எனவே பண்டைய இலக்கியங்களை அப்படியே ஏற்றுக்கொள்ள வேண்டிய தேவை இல்லை. எல்லாத் துறைகளிலும் மாற்றம் தேவை, வளர்ச்சி தேவை என்று சொல்லிக்கொள்ளும் நாம் இலக்கியத்தில் மாற்றம் தேவை என்பதை ஏன் ஏற்க மறுக்கிறோம் என்ற கருத்தை முன்வைக்கின்றார்.

“அந்தக் காலத்திலே இருந்தவர்கள் எவ்வளவுதான் கெட்டிக்காரர்களாக இருந்தாலும், பையன்களுக்கு பி.ஏ., படிப்பைச் சொல்லிக்கொடுக்க முடியுமா அவர்களாலே? பெரிய புலவனாக, பெரிய வாத்தியாராக இருந்திருப்பான். ஆனால் அவர்களாலே அவர்களிடமிருந்து சரக்கு என்னவோ அன்றைக்கு – அதைத்தான் அவர்களாலே சொல்லிக் கொடுத்து இருக்க முடியுமேதவிர, இன்றைக்கிருக்கும் சரக்கு அன்றைக்கு அவர்களுக்கு எப்படித் தெரியும்? அதேமாதிரிதான் இலக்கியம், இலக்கிய கர்தாக்கள், புலவர்களும், புலவர் என்றால் புலமைக்காகப் படித்தவன். அந்தக் காலத்துப் புலவர்கள் பெரும்பாலும், வயிற்றுப் பிழைப்புக்காகப் படித்திருப்பார்களே தவிர, புலமைக்குப் படித்தவர்கள் என்பது ரொம்ப அருமை. அந்தக்கால புலமை அதற்குத்தான் - சோற்றுச் செலவுக்குத்தான் பயன்பட்டது”[104] என்று கூறுகின்றார்.

மேலும், “நாம் வளர்ச்சியடைய வேண்டுமானால், நாம் சிலவற்றை அழித்து, புதுப்பித்துத் துணிச்சலோடு காரியங்கள் செய்ய வேண்டும். அவைகள் எல்லாம் சீக்கிரம் மாறுதல் அடையும்படியாகச் செய்ய வேண்டும். அந்த மாதிரி உலகில் மனித சமுதாய வளர்ச்சியைப் பார்த்தோமானால் உலக சமுதாயத்திற்கும் நம்முடைய சமுதாயத்திற்கும் தேவையான ஒரு துறை இலக்கிய மன்றம் - இலக்கியச் சார்பு என்று இருக்கிறது. இலக்கியத்தை உண்டாக்கியவன் இருந்தகாலம் அறிவு வளர்ச்சியற்றகாலம். அந்தக் காலத்திலே உண்டான இலக்கியம். அதுதான் பெருமையாக இருக்கும். அந்தக் காலம் விஞ்ஞானம் வளர்ச்சிபெறாத காலம். அக்காலநிலைக்கு அந்த இலக்கியம் செலாவாணியான காலம். அது போதுமானதாகவும் இருக்கும்”[105] என்ற கருத்தை முன்வைக்கின்றார்.

கடவுள் மதம், மதச்சம்பந்தமான கதைகள், புராணங்கள் அதற்காக ஏற்படுத்தின சாஸ்திரங்கள் போன்ற கருத்துக்களை முன்வைத்தே இலக்கியங்கள் படைக்கப்பட்டுள்ளன. போன்ற கருத்துக்களை பெரியார் முன்வைப்பதை பார்க்கமுடிகிறது.

“எது இலக்கியம் நமக்கு? இராமாயணம், இல்லாவிட்டால் பாரதம், இல்லாவிட்டால் பெரிய புராணம், இல்லாவிட்டால் கந்த புராணம் இந்த மாதிரி விஷயங்கள் இருக்கிற இந்து மதக்கருத்துக்களை – கடவுள் கருத்துக்களை மூட நம்பிக்கைகளைத் தொகுத்து செய்யக் கூடியதுதான் இலக்கியமாக இருக்கிறது. இந்தக் கருத்துக்களை நீக்கி ஒரு இலக்கியம் இருக்கிறதா என்றால், இல்லவே இல்லை. நம்மைப் பொறுத்தவரையிலும் தான் சொல்லுகிறேன் நாம் எத்தனை இலக்கியத்தைக் கண்டாலும், தமிழ் இலக்கியங்கள் என்கிற பேராலே, எதை எடுத்துக்கொண்டாலும் இன்றைய தினம் புலவர்களுக்கு வேறு சரக்கு இல்லை. பகுத்தறிவு உணர்ச்சியிருந்தால் அதைவைத்து படைக்க முடியும், முன்னேற முடியும். அதிலே பகுத்தறிவுக்கு இடமே இல்லை. அன்றைக்கிருக்கின்ற அறிவைக் கொண்டு அவனுடைய திறமையைக் காட்ட வேண்டுமானால், அந்த கடவுள் மதம் - மதசம்பந்தமான கதைகள், புராணங்கள் - அதற்காக ஏற்படுத்தின சாஸ்திரங்கள என்றுகூட வைத்துக்கொள்ளலாம். அவைகளைப் புகுத்திதான் இலக்கியங்களைப் பூர்த்தி பண்ணியாக வேண்டும். அந்த சாதனங்களிலிருந்து நமது சமுதாயத்துக்கு வேண்டிய முன்னேற்றக் கருத்துக்களை எதைக்கண்டு பிடிக்கமுடியும்? அந்த இலக்கியங்கள் - மோட்சத்துக்குப் போகத்தான் வழி இருக்கிறது என்று சொல்லுவான். அடைய வேண்டிய இடத்துக்குப் போக வழி இருக்கிறது. மோட்சமடையலாம் என்று சொல்லலாம் அது என்ன? அது மனித வாழ்க்கைக்குப் பிந்தியல்லவா அந்தக் காரியம் எல்லாம்? மனிதன் வாழ்கிறபோது மோட்சத்தைப் பற்றி நினைத்துக் கொண்டிருந்தால் அது தான் மனிதவாழ்வா? ஆகவே அந்தக் கருத்தைப் பலப்படுத்தி அதன்மூலமாகப் புகுத்திவிடுகிறார்கள். நமக்கு எங்கே இலக்கியம் இருக்கிறது அறிவு வளர்ச்சிக்கு? இல்லை, வாதாடியே சொல்லுகிறேன். ரொம்ப கஷ்டப்பட்டுச் சொன்னால், குறளை முன்வைக்கலாம். அதிலேயும் மூடநம்பிக்கையிலிருந்து தோன்றிய கருத்தே தவிர, பகுத்தறிவிலே இருந்து (குறள்) தோன்றியது என்று சொல்ல ரொம்பவும் கஷ்டப்பட வேண்டும்”[106] என்கிறார்.

பெரியார் தமிழையும், தமிழ் இலக்கியத்தையும் பற்றி கருத்து கூறும்போது, தமிழ் என்றால் கடவுள், மதம், சைவம், வைணவம் இவைகளோடுதான் இணைக்கப்பட்டுள்ளன. தமிழுக்கும் அறிவுக்கும் தொடர்பு இருக்கின்றதா என்ற கருத்தை முன்வைக்கிறார்.

எந்தத் தமிழ் இலக்கியத்தை எடுத்துக்கொண்டாலும் அதில் கடவுள், மதம், கடவுளது நடத்தை, மத சம்பந்தமான கொள்கைகள் இவைகளோடு தொடர்பு படுத்தப்பட்ட

இலக்கியங்கள்தான் இருக்கின்றன. இவைகள் இல்லாமல் தமிழில் இலக்கியங்கள் இல்லை என்பதை சுட்டிக் காட்டுகின்றார்.

மேல்நாட்டு இலக்கியங்களோடு நம்நாட்டு இலக்கியங்களை ஒப்பிட்டு பார்க்கிறார். நம்நாட்டு இலக்கியங்களில் மதம் தலை விரித்தாடுகிறது. ஆத்திகம் ஆதிக்கம் செலுத்துகிறது. ஆரியம் அதை அடிமை கொண்டதாக இருக்கிறது. இன்றைக்கு இருக்கும் தொல்காப்பியம் இலக்கியமாக இருந்தாலும், அது புலவர் கையிலும், பட்டதாரி கையில் இருந்ததே தவிர ஏழைகள் கையில் இல்லை. இருப்பினும் அதிலும் ஆரியம் புகுத்தப்பட்டிருக்கிறது. விளம்பரமாகியிருக்கும் இராமாயணம், பாரதம், பெரியபுராணம், தேவாரம், திருவாசகம், இவைப்போன்ற பெரும்பான்மையான நூல்கள் மற்றவை அவற்றை அனுசரித்துச் செய்யப்பட்டவை. ஆரியர் வருகைக்கு முன்பு தமிழர் பண்பு எப்படி இருந்தது இன்றைக்கு எப்படி இருக்க வேண்டும் என்பதைக் காட்ட நம்மிடம் இலக்கியம் இல்லை. அறிவோடு ஆராய்ந்து பார்த்தால் நமக்கு இலக்கியம் இருந்ததா என்பது பற்றிகூட நினைக்க நியாயமில்லை. ஆரியர்களுக்கு மட்டுமே ஆக்கும் சுதந்திரமும், அழிக்கும் சுதந்திரமும் இருக்கின்றது. நமக்கென இருந்தவை எல்லாம் அழிக்கப்பட்டுவிட்டன போன்ற கருத்துக்களை முன்வைக்கின்றார்.

நம் மக்களுக்கு கல்வி அறிவு இல்லை சிறிது படித்திருந்தாலும், அவர்கள் பக்தர்களாக இருக்கிறார்கள், அப்பக்தர்கள் ஆரியத்தைப் பரப்பும் அடிகளார்களாக ஆகிவிடுகிறார்கள். இலக்கியம் என்று சொன்னாலே பக்தி நூல்கள்: புலவர்கள் என்றாலே பக்தர்கள் என்ற நிலை இங்கே இருக்கும்பொது இப்புலவர்களால் எப்படி இலக்கியம் வளர முடியும், போன்ற கருத்துகளை முன்வைக்கிறார். இலக்கியம் என்பது சமூகத்தோடு தொடர்புடையது. சமுதாயம் வளர வேண்டுமானால் பகுத்தறிவு உணர்ச்சியும் சமுதாய சிந்தனைகளும் வேண்டும். வாழ்வியல் நோக்கில், சமுதாய முன்னேற்ற நோக்கில் பார்த்தால் சமுதாய வளர்ச்சிக்கேற்ற இலக்கியம் நாம் வளர்க்கவில்லை என்ற உண்மை அவருடைய பேச்சில் வெளிப்படுகிறது.

“அறிவோடு ஆராய்ந்து பார்த்தால் நமக்கு இலக்கியம் இருந்ததா என்பது பற்றிக்கூட நினைக்க நியாயமில்லை”[107] “அறிவை ஒழுக்கத்தை வளர்க்கும் இலக்கியமே தேவை. ஆகவே இனிமேல்தான் நமக்கான இலக்கியம் தோன்ற வேண்டும். அதில் இந்து மதம், ஆத்திகம், ஆரியம் ஆகிய மூன்றும் இருக்க கூடாது. அறிவு, ஒழுக்கம், விஞ்ஞானம், ஆராய்ச்சி என்றால் அவை நம் நாட்டில் நாத்திகம், மதவெறுப்பு என்றாக்கப்பட்டுவிட்டது.

அதனாலேயே நம் நாட்டில் நல்ல பயன்படும் இலக்கியம் இல்லை என்பதோடு தோன்றவும் இல்லை''[108] என்கிறார். மனிதனின் அறிவு வளர்ச்சிக்கும் தேவை என்பதை கருத்தில் கொண்டே இம்மாதிரியான கருத்துக்களை பெரியார் முன்வைக்கின்றார்.

''நம் மக்கள் முன்னேற வேண்டுமானால் அவர்களிடம் நிரம்பியிருக்கும் மடமை, மானமற்ற தன்மை இழிநிலை, இவைகளைப் போக்க வேண்டும். ஆகவே இலக்கியம் அதன் மறுமலர்ச்சி போன்றவற்றைச் சிந்திக்கும்போது மேற்குறிப்பிடப்பட்ட எண்ணத்தையே அடிப்படையாகக் கொள்ளவேண்டும் (வி.20-04-65 3,4)''[109]

ஒரு மொழியின் தேவை முக்கியத்துவமெல்லாம் அது பயன்படுகிற தன்மையைப் பொறுத்ததேயாகும். அது எவ்வளவு பெரிய ''இலக்கிய காவியங்களையும்'' தெய்வீகத் தன்மையையும்'' தன்னிடத்தே கொண்டது என்று சொல்லிக்கொள்ளப் படுவது ஆனாலும் அது மக்களது அன்றாட வாழ்க்கையில், அவர்களது அறிவை வளப்படுத்தும் தன்மையில் எந்த வகையில் உபயோகப்படும்படி இருக்கிறது என்பதையே அளவு கோலாகக் கொண்டு அளக்க வேண்டும். உதாரணமாக இன்று இங்கிலீஷ் மொழி சிறந்தமொழி என்று பல்லோராலும் ஒப்புக்கொள்ளப்படுகிறதென்றால் அது ''புராதன மொழி என்பதோ'' அல்லது ''தெய்வாம்சம் உள்ள மொழி என்பதோ'' அதற்குக் காரணம் அல்ல, அதனுடைய உலக உபயோகமும் அது உலக மக்களது அறிவை வாழ்வை வளப்படுத்த உதவிய, உதவுகிற தன்மையை பொறுத்ததேயாகும்''[110] மொழியின் முக்கியத்துவத்தைக் கூறும்போது அம்மொழியில் உள்ள இலக்கியங்களை அடிப்படையாக வைத்துக் கூறாமல், அம்மொழியின் பயன்பாட்டையும், தன்மையையும் வைத்தே கூறுகிறார் என்பது தெளிவாகிறது.

''சங்க இலக்கியங்களுக்கு பின் வந்த இலக்கியங்களில் தமிழர் நாகரிகம், கலை, பண்பாடு போன்றவற்றைக் காண்பதே அரிதாயிற்று. அவை தமிழ் எழுத்துக்களால் எழுதப்பட்டுள்ளன. தமிழ்ப் பாக்களால் உருவாக்கப்பட்டுள்ளன என்பவை தவிரத் தமிழரக்குரியவை என்று சொல்வதற்கு என்ன இருக்கிறது? திருக்குறள் இதிலிருந்து விலக்குப் பெறலாம். அதுவும் சங்க இலக்கியமே என்று ஏற்றுக்கொண்டுவிட்டால் இடைக்கால இலக்கியம் எதுவும் ஆரியச்சார்பு, ஆரிய மதச்சார்பு அற்றதாக இல்லையே (வி.30-12-70,3,4) (வி.5-4-71,3,2.)''[111] என்கிறார்.

சங்க இலக்கியங்களுக்கு பின்தோன்றிய இலக்கியங்களில் வைதீக தன்மை, ஆரியச்சார்பு இருப்பதைப் பெரியார் தெளிவாகவே விளக்குகிறார். இதிலிருந்து ஆரியக் கோட்பாட்டை மேல்நிலைப்படுத்தும் இலக்கியங்கள்தான் இருக்கின்றன என்று அவர் கூறுவதை அறிய முடிகின்றது.

“தொல்காப்பியம் சுட்டிச் செல்லும் கந்தழி போன்ற கருத்துகள் அதன் ஆதாரம், தோற்றம், வளர்ச்சி, விரிவு போன்றவை எங்கே என்னாயின? ஏன் அவை இருந்த இடத்தில் ஆரிய அழுக்கு மூட்டைகளல்லவா புழுத்து நெளிகின்றன. தொல்காப்பியர், மக்கள் என்று மதிக்கத் தக்க இயல்புடையவர்களை மட்டுமே உயர்திணை என்று கூறியிருப்பவும் அவருக்குப் பின் பல நூற்றாண்டுகள் கழிந்து இலக்கணம் எழுதிய பவணந்தி முனிவர் மக்கள், தேவர், நரகர் ஆகிய மதப்பிரிவினரும் உயர்திணை என்று கூறும் நிலை ஏன் ஏற்பட்டது? எப்படி ஏற்பட்டது? ஆரியரைப் பின் பற்றி அதே போக்கில் சமணரும் தமிழ் இலக்கியப் போக்கை மாற்றி விட்டனர் என்பதுதான் இதனால் நாம் அறியும் உண்மை”[112] என்பர்.

இவ்வாறு ‘இலக்கியம்’ பற்றிய கருத்தியலுக்குள் மதம் பற்றிய அரசியலைப் பல்வேறு பார்வைகளில் பெரியார் வெளிக்கொண்டுவர முயன்றுள்ளார்.

இப்போது இருக்கின்ற நூல்களிலே பழையதாகிய தொல்காப்பியத்தில் ஆரியக் கருத்துகளும் தத்துவங்களும் காணப்படுகின்றன. “தமிழின் தொன்மை போலவே அதன் இழிவின் அல்லது களங்கத்தின் தொன்மையும் நீண்டு நீண்டு சென்றுள்ளதைக் காண முடிகிறது. இடைச்செருகல் என்று ஆராய்ச்சியாளர் சிலர் நிறுவியுள்ளனர். எனினும் தொல்காப்பியத்தில் மேலோர், கீழோர் அவரவர்க்குரிய காரணங்கள், வரையறைகள் போன்ற சாதிவகுப்பு முறை காணப்படுகிறதே”[113] என்று மா.நன்னன் குறிப்பிடுகின்றார். இதே கருத்தை பெரியாரும் வலியுறுத்துகின்றார். அதிலும் நாலு சாதி, அந்த நாலு சாதியில் நம்மைத்தான் கீழ்ச் சாதியாகக் குறிப்பிட்டிருக்கிறது, “மேலோர் மூவர்க்கும் புணர்த்த கரணம் கீழோர்க்கும் என்ற பாடலைப் பார்த்தாலே போதுமே!”[114] என்கிறார்.

இதுபோன்ற பெரியாரின் கருத்துக்கள் இலக்கியத்திற்கும் தனிமனிதனுக்கும் உள்ள உறவைவிட இலக்கியத்திற்கும், சமூகத்திற்கும் உள்ள உறவின் அடிப்படையில் தம் கருத்துக்களை வெளிப்படுத்தியுள்ளார் என்பதைப் புலப்படுத்துகிறது. இலக்கியம் அறியாத படித்த பாமரர்களுக்குத் தம்முடைய பகுத்தறிவின் மூலமாக முற்போக்குச்

சிந்தனைகளைக் கொண்டு சேர்த்தல் என்ற அடிப்படையில் பெரியாரின் கருத்துக் கொண்டுள்ளார்.

மொழியையும், இலக்கியத்தையும் ஓரேமாதிரியாக பார்க்கும் போக்கு பெரியாருடைய பேச்சில் இடம்பெறுகிறது. பெரியார் மொழிகுறித்து கூறும்போது ‘‘மொழி என்பது ஒரு மனிதனுக்கு அவ்வளவு முக்கியமான சாதனம் அல்ல. அது இயற்கை ஆனதும் அல்ல. அதற்கு ஒரு கட்டாயமும் தேவையில்லை. மொழி, மனிதனுக்குக் கருத்துக்களைப் பறிமாறிக் கொள்ளும் அளவுக்கு – விஷயங்களைப் புரிந்துகொள்ள வாய்ப்பளிக்கும் அளவிற்குத் தேவையானதேயொழிய பற்றுக் கொள்ளுவதற்கு அவசியமானதல்ல’’[115] என்று குறிப்பிடுகிறார்.

‘‘மொழியானது சமுதாயத்திலுள்ள சூழ்நிலைக்கு ஏற்றதேயொழிய பொது வாழ்விற்கு, உணர்ச்சிக்கு ஏற்றதல்ல. இந்தக் கருத்துக்களைக் கொண்டுதான் நாம் நமக்கு எந்த மொழி வேண்டும் என்பது பற்றிச் சிந்திக்க வேண்டியவர்களாய் இருக்கிறோம்’’[116] என்கிறார்.

பெரியார் திருச்சியில் அவருடைய சிலை திறப்பு விழாவின்போது தமிழைக் காட்டுமிராண்டி மொழி என்று கூறி இருக்கின்றார். ‘‘தமிழைக் காட்டுமிராண்டி மொழி எனப் பெரியார் சொன்னது ஏதோ ஒரு கோபத்தில், வேகத்தில், பேசுகிற பேச்சில் சொல்லப்பட்ட கருத்து அல்ல. கடைசி வரை அதனை அவர் வலியுறுத்தி வந்தார்’’[117]

வாழ்வியல் நோக்கில் சமுதாய முன்னேற்ற நோக்கில் பார்த்தால் சமுதாய வளர்ச்சிக்கேற்ப மொழியை நாம் வளர்க்கவில்லை என்ற கருத்து பெரியாரிடம் வெளிப்படுகிறது.

கல்வித்துறையில் மொழிப் பாடங்கள் இடம்பெறுகின்றன. இது மொழியைப் பிழையறவும், செம்மையாகவும் கற்கத் துணை செய்வதுடன், மற்ற பாடங்களின் அறிவை வலுப்படுத்தவும் காரணமாக இருக்கின்றது. இவை இரண்டுமன்றி வேறொரு காரணமும் சொல்லப்படுகின்றது. மனிதனை மனிதனாக்குவது. அதாவது, மனிதன் விலங்காக வாழ்ந்து தீர வேண்டிய வாய்ப்புகள் மிகுந்திருக்கும் உலகில் அவன் செல்லும் காட்டுப்பாதையைத் தடுத்து நன்னெறியிற் செலுத்தும் வழிகாட்டியாகவும், ஆசானாகவும், உற்றுழியுதவும் ஊன்று கோலாகவும், உணர்வு, பகுத்தறிவு, ஊக்கம், அஞ்சாமை போன்றவற்றை

முறையாக அளித்து அவன் மனிதனாக வாழ உதவுவதும் மொழிப்பாடத்தின் நோக்கமாகும். இவை போன்ற கருத்துக்கள் அவர் பேச்சில் வெளிப்படுகின்றன.

‘‘தமிழ் எந்த அளவுக்கு வாழ்வுக்கு உதவுகிறது, தமிழ் எந்த அளவுக்கு நம்மை வாழவைக்கிறது, இவை பற்றி நாம் கடுமையாகச் சிந்திக்க வேண்டியிருக்கிறது. அந்தச் சிந்தனையோடு மேலும் எண்ணிப்பார்க்கும் பொழுது தந்தை பெரியார் அவர்கள் அன்று சொன்னது என்ன? தமிழ் இன்றைய புத்துலகத் தேவைக்கேற்ப வளரவில்லை – சமுதாய வளர்ச்சிக்கு ஏற்ற அளவுக்கு வளரவில்லை என்பதுதானே இதைச் சுட்டத்தான் காட்டுமிராண்டி மொழி என்று தமக்கே உரிய மொழிநடையில் அவர் பேசியிருக்கிறார். பழங்குடிகளின் மொழிகளிலிருந்து, நம்முடைய மொழி எந்த அளவுக்கு வேறுபட்டிருக்கிறது? நம்மிடம் இலக்கிய இலக்கணங்கள் இருக்கின்றன என்ற ஒரு வகையில்தான் நம்மொழி வேறுபட்டிருக்கிறதே தவிர மற்ற வகையில் இந்த மொழி உயர்ந்து வேறுபாடு நிற்கவில்லையே என்று அவர் கேட்கிறார்.’’[118]

பள்ளிகள், கல்லூரிகள், பல்கலைக்கழகங்கள் போன்றவற்றில் கற்பிக்கப்படும் மொழி, இலக்கியப்பாடங்கள் யாவும் மதத் தொடர்புடையனவாகவே இருந்திருக்கின்றன. இவற்றில் மதம், கடவுள் தொடர்பற்ற இலக்கியங்கள் இல்லை, என்ற நிலையில் அவற்றில் தமிழ்ச்சுவை தவிர அறிவு, பகுத்தறிவு, வாழ்க்கை அறிவு, வளர்ச்சி அறிவு போன்றவற்றைப் பெறுவதென்பது இல்லாமல் இருந்திருக்கின்றது. ஒன்றிரண்டு இருந்திருந்தாலும் அவற்றைக் கேட்பது, மற்றவருக்குக் கூறுவது, சுவைப்பது என்பதோடு அது முடிந்துவிடுகிறது. நடைமுறைப்படுத்தி வாழ்வில் முன்னேறுவது என்பதற்குரிய நோக்கமோ திட்டமோ கல்வித் துறையில் இல்லாமல்போயிற்று எனலாம்.

‘‘இலக்கியங்கள் சிறந்த அறிவுரைகளைக் கொண்டனவாக இருந்தால் மட்டும்போதாது. வாழ்க்கையில் பின்பற்றி நடக்கக் கூடியனவாகவும் இருக்க வெண்டும். இல்லாவிட்டால் அந்தக் கொள்கைகளால் ஏதும் பயன் விளையாது. கொள்கை என்றால் அதனை விரும்புகிறவர்கள் கடை பிடிக்கக் கூடியதாக இருக்க வேண்டும் என்று பெரியார் வலியுறுத்துவார்.’’[119]

‘‘பகுத்தறிவாளர்கள் என்றால் பகுத்தறிவை ஆளுபவர்கள் என்பது பொருள். ஆளுதல் என்பது இங்குப் பயன்படுத்துதல் என்னும் பொருளுடையது. ஆளுதல் என்றால் கையாளுதல், பயன்படுத்துதல் என்னும் பொருளில் வழக்காறு பெற்றுள்ளது.’’[120]

‘‘பகுத்தறிவைப் பயன்படுத்தகிறவன் பகுத்தறிவாளன் ஆகவே பகுத்தறிவுக் கொள்கை என்பது பயன்பாட்டுக் கொத்ததாக இருக்க வேண்டும் என்று பெரியார் கருதுகிறார். எனவே இருக்க வேண்டும் என்று அவர் விரும்புகிறார்.’’[121]

புராணங்கள் பிற பக்தி சமயக் கருத்துகளடங்கிய இலக்கியங்கள் ஆகியவற்றை விலக்கி அறிவு, திறமை, துணிவு ஆகியவற்றைத் தரக்கூடியனவும் வாழ்க்கையில் முற்றிலும் பயன்படக் கூடியனவும் தவிர, பழமையும், பிற்போக்குத் தன்மையும், மடமையும், குருட்டு நம்பிக்கையும் தரும் இலக்கியங்களை வேண்டாம் என்கிறார்.

‘‘மக்களுடைய வாழ்க்கைக்குப் பயன்படக் கூடியதும் அறிவையும் திறமையையும் தைரியத்தையும் உண்டாக்கக்கூடியதும் (கு.14-8-1932) ஆன இலக்கியம் வேண்டும் என்று சொல்லுகிறார். அறிவு திறமை ஆகிய எல்லாம் சரிதான், ‘தைரியம்’ என்னும் சொல்லை அவர் பயன்படுத்துவதை நாம் ஆழ்ந்து சிந்திக்க வேண்டியிருக்கிறது. துணிச்சலை ஊட்டக்கூடிய இலக்கியங்கள் தேவை என்று அவர் கருதுகிறார். இதற்கு ஒரு நல்ல எளிய எடுத்துக்காட்டு புரட்சிக்கவிஞர் பாரதிதாசன், அவ்வையார் ஆத்தி சூடியையும், பாரதியாருடைய புதிய ஆத்தி சூடியையும் ஒப்பிட்டுச் சொல்லி இருக்கின்ற பகுதியாகும்.

‘முனைமகத்து நில்லேல்’’ முதியவள் சொல் இது. ‘முனையிலே முகத்து நில்’ இது பெருங்கவிஞன் பாரதியின் சொல் என்று அவர் விளக்கந் தருகிறார். போர் நடைபெறும் களத்திற்குப் போகவேண்டும் என்பது ஔவை மூதாட்டியின் அறிவுரை. போர்க்களத்திற்குப் போனால் தயக்கமின்றி, துணிந்து முன்னால் நில் என்று பாரதி வலியுறுத்துகிறார். ‘நையப்புடை’ ‘கோல் கைக்கொண்டு வாழ்’ என்பன போன்ற இலக்கியங்களைத் தான் பெரியார் விரும்புகிறார் வரவேற்கிறார்’’[122]. என்பர்.

மதம், கடவுள் சம்மந்தமற்ற இலக்கியம், யாவருக்கும் பொதுவான இயற்கை ஞானத்தையும் பற்றிய (மதம், கடவுள், செயற்கை ஞானம்) இலக்கியம் யாரும் மறுக்க முடியாத விஞ்ஞானத்தைப் பற்றிய இலக்கியம் ஆகியவைகள் மூலம் தான் ஒருமொழியும் அதன் இலக்கியங்களும் மேன்மையடைய முடியும் என்பது மாத்திரமல்லாமல் அதைக்கையாளும் மக்களும் ஞானமுடையவர்கள் ஆவார்கள் (கு.26-1-36,61) என்ற அவருடைய பகுத்தறிவுச்சிந்தனை ஏற்புடையதாகவே உள்ளது.

## 2.14.தமிழ்ப் புலவர்கள்

திராவிட தமிழ்ச் சமுதாயத்தை மானமும் அறிவுமுள்ள சுயமரியாதை சமுதாயமாகத் திருத்தி அமைக்க முற்பட்ட பெரியார் தமிழரின் சீர் குலைவுக்குக் காரணமான ஆரியக் கொள்கை, கருத்து ஆகியவற்றைக் கண்டறிந்து அதனை வலியுறுத்தும் இலக்கியங்களையும் அவற்றிற்கு காரணமான புலவர்களையும் கேள்விக்கு உள்ளாக்கி இருக்கிறார்.

‘‘வடமொழி படிக்காதவர் தமிழில் எவ்வளவு மேலான புலமை பெற்றிருந்தாலும் அவரைத் தமிழ்ப் புலமை உலகம் மதித்ததில்லை. ஒரு கருத்தை மறுக்க முயலும் போது வேறு சான்று போன்றவற்றைக் காட்டாமல் ‘‘இது தமிழ்மொழி அறிவு ஒன்று மட்டுமே உடையவர் கூறியது; ஆகவே இதனை ஏற்க முடியாது’’ என்று பேசிய தமிழ்ப் புலவர்களும் இருந்தார்கள். வட மொழியிலிருந்து எடுத்து எழுதுகிறேன் என்று தொடங்கினால்தான் எந்த நூலும் மதிக்கப்பட்டது. எவ்வளவுக் கெவ்வளவு வடமொழிச் சொற்களும் வடமொழிமரபு கருத்து போன்றவைகளும் கலக்கப்படுகின்றனவோ அந்த அளவுக்கே தமிழ் நூல்கள் மதிக்கப்பட்டன. எந்த அளவு விழுமியதாயினும் ஒரு நூலில் எவ்வளவுக்கெவ்வளவு வட மரபு, கருத்து, சொற்கள் ஆகியவை கலக்கவில்லையோ அந்த அளவுக்கு அந்த நூல் புறக்கணித்து ஒதுக்கப்பட்டது’’[123] என்பர்.

தொல்காப்பியர், திருவள்ளுவர் ஆகியோரைத் ‘‘திரணதூமாக்கினி, சிறீவல்லபர் என்று ஆரியர்களாக்கியும் அவர்தம் நூல்களின் கருத்துகளை ஆரியச் சார்புடையனவாக்கியும் எழுதிய தமிழ் அறிஞர் எனப்பட்டோரும் இந்நாட்டில் நலமுடனும் புகழுடனும் வாழ்ந்திருந்தனர். ‘‘அய்ந்தெழுத்தா லொருபாடை என்று அறையவும் நாணுவர் அறிவுடையோரே’’ என்று, கூறித் தமிழ் மொழி ஒரு மொழியே அன்று என்று தமிழ் இலக்கணம் செய்த தமிழ்ப் புலவனும் இந்த மண்ணில் வாழ்ந்திருக்கிறான். அவன் நூல் இன்றும் தமிழ் நூலகங்களிலும், தமிழ் இலக்கிய வரலாற்றிலும் இடம் பெற்றுள்ளது. இந்தப் பின் புலத்தைத் தெரிந்து கொண்டே தந்தை பெரியார் தமிழ்ப் புலவர்கள் பற்றிச் செய்த மதிப்பீட்டைத் தெரிந்து கொள்ள முயல வேண்டும்’’[124]

நம் நாட்டை நாசமாக்கியது பார்ப்பான் மட்டுமல்ல, நமது புலவர்களும் ஆவார்கள். பார்ப்பான் புராணங்களையெல்லாம் வட மொழியில் செய்திருந்தான். அதையும் நாம் படிக்கக் கூடாது, கேட்கக் கூடாது என்று வைத்திருந்தான். அதை நம் புலவர்கள் தமிழில்

ஆக்கியதால் தான் அது சந்து பொந்து எல்லாம் பரவி மக்களையெல்லாம் மடையர்களாக்கி விட்டது (வி.21-2-68:3,5) என்ற கருத்தை பெரியார் முன் வைக்கிறார்.

மூட நம்பிக்கைகள், ஆபாசங்கள் நிறைந்த வடமொழிக்கதைகளைத்தான் புலவர்கள் இலக்கியமாகப் படைத்திருக்கிறார்கள். இதற்குத் தமிழ் மொழியை ஒரு கருவியாகப் பயன்படுத்தி இருக்கிறார்கள் என்பது பெரியாரின் கூற்றிலிருந்து தெளிவாகிறது.

“இன்று தமிழ்ப் புலவர்கள், தமிழபிமானிகள் கூடித் தமிழின வளர்ச்சி பற்றிப் பேசுகிறார்கள் என்றால் தமிழினால் மக்களுக்கு ஏற்பட்ட பயன்பற்றியோ ஏற்படப்போகும் - ஏற்பட வேண்டிய பயன் பற்றியோ பேசுவதற்கு வக்கில்லாமல் ‘தமிழின் பெருமையைப் பேசித் தமிழ் இலக்கியம் என்பதிலுள்ள கற்பனை, கவிநயம், கருப்பொருள், நுண்பொருள், பொதி பொருள், இலக்கண அமைப்பு, இலக்கியத் தன்மை, அமைப்பு, சொல் நயம், பொருள் நயம், புலவனின் தெய்வீகத் தன்மை இலக்கியத்தின் மேம்பாடு என்பதாகப் பெருமைகளை அடுக்கிக்கொண்டே போவதெல்லாமல் வேறு பயன் இருக்கிறதென்று எடுத்துச் சொல்ல எப்படிப்பட்ட புலவருக்கும் சரக்கே இல்லாமல் போய்விட்டது”[125] என்று கடுமையாகச் சாடுவார். இங்கே பெரியாருடைய தமிழ் மேம்பாட்டுக் கொள்கை உறுதியாகச் செயல்படுவதைக் காணமுடிகிறது எனலாம்.

“பார்ப்பனருக்கு இன்று வடமொழி எப்படித் தங்கள் இன நலத்திற்கு மாத்திரம் பயன்படுகிறதோ, அதேபோல்தான் தமிழ், தமிழ்ப் புலவர்களுக்குத் தங்கள் நலத்துக்கு மாத்திரமே பயன்பட்டு வருகிறது”[126]. சமகாலத் தமிழகத்தின் தாழ்ந்த நிலைக்கு காரணம் கற்பிக்கின்ற நிலையைத்தான் பெரியாரின் எழுத்துக்கள் உணர்த்துகின்றன.

“மத சம்பந்தமற்ற ஒருவனுக்குத் தமிழில் இலக்கியம் காண்பது மிக மிக அரிதாகவே இருக்கிறது. தமிழ் இலக்கணம் கூட மதத்தோடு பொருத்தப்பட்டே இருக்கிறது. கம்பராமாயணம், பாரதம், பாகவதம், பெரியபுராணம், தேவாரம், திருவாய்மொழி போன்ற மதத்தத்துவங்களும், ஆரிய மதத்தத்துவம் என்னும் ஒரு தனிப்பட்ட வகுப்பின் உயர்வைப் போதித்துத் தமிழ் மக்களை மானமற்றவர்களாக்கும் ஆபாசக் களஞ்சியங்களும் அல்லாமல் வேறு இலக்கியங்கள் காணப்படுகின்றனவா? இன்றைய தமிழ்ப்புலவர்களுக்கு உலக ஞானத்தைவிடப் புராண அறிவுதானே அதிகமாயிருக்கின்றது?”[127] என்கிறார். தமிழ் மொழியின் ஆற்றலை புலவர்கள் சமூக வளர்ச்சிக்குப் பயன்படுத்தாமல் சமய

வளர்ச்சிக்குத்தான் பயன்படுத்தி இருக்கிறார்கள் என்பது பெரியாரின் கருத்தாக அமைகிறது.

**2.15.பிற இலக்கியம் குறித்துப் பெரியாரின் வாசிப்பு**

**2.15.1.திருக்குறள்**

தனி மனித வாழ்விலும் சமூக வாழ்விலும் சமயம் இன்றியமையாத இடத்தை வகிக்கிறது. எனவே சமயத்தின் தாக்கம் இலக்கியத்திலும் இடம் பெறுகிறது. இவ்வாறான இலக்கியங்கள் பகுத்தறிவுக்கு வழிவகுப்பதாகக் கூறி ஒதுக்கிய பெரியார் ஆரியத்திற்கும், பிராமணியத்திற்கும் எதிராகத் திருக்குறளை முன்னிறுத்துவதைப் பார்க்க முடிகிறது.

“திருக்குறள் ஆரிய தர்மத்தை - மனுதர்மத்தை - அடியோடு கண்டிப்பதற்காகவே ஏற்பட்ட நூல் என்பதையும் நீங்கள் உணர வேண்டும் அதுவும் மக்களுக்கு வெறும் தர்மங்களை மட்டும் உபதேசிக்க என்பதற்காகவே எழுதப்பட்ட ஒரு நூல் என்று என்னால் கொள்ள முடியவில்லை. மக்கள் நல்வாழ்க்கைக்குக் கேடாக வந்து சேர்ந்த ஆரிய அதர்மத்தை ஒழிப்பதையே நோக்கமாகக் கொண்டு ஒரு மறுப்பு நூலாகவே திருக்குறள் எழுதப்பட்டதாகத்தான் என்னால் கருத முடிகிறது. திருக்குறள் ஆரியக் கொள்கைகளை மறுக்க, அவைகளை புறச்செய்ய அக்கொள்கைளிலிருந்து மக்களைத் திருப்ப எழுதப்பட்ட நூல் என்று தான் நான் கருதுகிறேன்”[128] என்கிறார்.

வேதத்தில் 180 சாதிகள் கூறப்பட்டிருக்கின்றன. மனுஸ்மிருதியிலும் சூத்தரரினும் தாழ்ந்த சாதிகள் பல கூறப்பட்டிருக்கின்றன.

“திருக்குறளில் ஒரு இடத்தில் கூட பிராமணன் சூத்திரன் என்கிற வார்த்தைகள் இல்லை. பார்ப்பான் என்றுதான் கூறப்பட்டிருக்கிறது. வர்ணாசிரம தர்ம வாசனையே கிடையாது. இப்படி அனேக கருத்துக்கள் ஆரிய தர்மத்துக்கு மாறாகக் கூறப்பட்டிருக்கின்றன. சுருங்கக் கூறினால் புத்தர் செய்த வேலையைத்தான் திருக்குறள் செய்திருக்கிறது. புத்தர் தர்மமும் ஆரியத்திற்கு மாறான தர்மம்தான் அதனால்தான் அது இந்நாட்டு ஆரியர்களால் அழிக்கப்பட்டது. ஆரிய தர்மத்தை எதிர்த்து அழித்து ஒழிப்பதற்காகத் தான் திருக்குறள் பாடப்பட்டதென்பது, அதை ஆராய்ச்சி செய்வோர் எவருக்கும் விளங்காமற் போகாது”[129] என்று கூறுகிறார். இதன் மூலம் இருபதாம் நூற்றாண்டில் பெரியார் தமிழ்ச் சமுதாய முன்னேற்ற தேவை கருதி, ஆரியத்திற்கும்,

மனுதர்மத்திற்கும் எதிராகத் திருக்குறளை முன்னிறுத்தி இருப்பதை அறியமுடிகிறது. மேலும் திருக்குறள் ஆரிய தர்மத்தை மனுதர்மத்தை அடியோடு கண்டிப்பதற்காகவே ஏற்பட்ட நூல் என்பதையும் அவர் வலியுறுத்துகிறார்.

மக்கள் நல்வாழ்க்கைக்குக் கேடாக வந்து சேர்ந்த ஆரிய அதர்மத்தை ஒழிப்பதையே நோக்கமாகக் கொண்ட ஒரு மறுப்பு நூலாகவே அவர் பார்க்கிறார். நமக்கு வேண்டிய முழு அறிவையும் கொடுக்கக்கூடிய நூல் திருக்குறள் என்பதை அவர் வலியுறுத்துகிறார்.

‘‘திருக்குறளை மட்டுமே எடுத்துக் கொண்டு அதிலுள்ள எல்லாத் தலைப்புகளின் கீழ் வருவனவற்றை இரண்டு மூன்று பிரிவுகளாக அதாவது படித்த மாத்திரத்தில் எளிதில் பொருள் விளங்குவனவற்றைக் கீழ் வகுப்புகளுக்கும் சற்றுக் கடினமான குறள்களை நடுத்தர வகுப்பிற்கும் மிகுந்த புதை பொருள் கொண்டு, கூட்டிப் பொருள் காண வேண்டியவற்றை மேல் வகுப்புக்கும் வைத்தால் பள்ளிகளில் மதப்படிப்போ ஒழுக்கப் படிப்போ தனியாக வைக்கவேண்டிய அவசியமே இராது’’[130] என்று கூறுகிறார்.

இதன் மூலம் திருக்குறள் சமயச்சார்பற்ற நூல் என்பதும் மனிதச் சமுதாயத்திற்கு நல்வழிகாட்டி நன்னெறியூட்டி நற்பண்புகளையும், ஒழுக்கங்களையும் கற்பிக்கும் வகையில் எழுதப்பட்ட நூல் திருக்குறள் என்ற முடிவுக்கு அவர் வருவதை அறிய முடிகின்றது.

‘‘திருக்குறளில் ஒரு அரசன், ஒரு விவசாயி, ஒரு வியாபாரி, ஒரு துறவி, ஒரு பொதுநலத்தொண்டர், ஒரு மந்திரி, ஒரு காதலன், ஒருகாதலி, ஒரு தலைவன், ஒரு தலைவி சகலருக்கும் அறிவுரை வழங்கப்பட்டிருக்கிறது. அவற்றில் ஒன்று கூட மூட நம்பிக்கை புகுத்தப்பட்டிருக்கவில்லை’’[131] இன்றைய எல்லாச் சமூக சிக்கலுக்கும் தீர்வாகத் திருக்குறள் இருக்கிறது என்பதை அவருடைய கூற்று தெளிவாக்குகிறது.

‘‘கடவுள் வாழ்த்து என்று, குறளில் உள்ள ஒரு பிரிவுக்குத் தலைப்புக் கொடுக்கப்பட்டிருக்கிறதே என்றால், வள்ளுவர் தமது குறளில் எங்கேயாவது கடவுள் என்று குறிப்பிட்டிருக்கிறாரா? ஆனால் சில நற்பண்பு கொண்ட மகனை வழிபடுக என்று கூறியிருக்கிறார். வழிபாடு என்றால் பின்பற்றி நட என்பதுதானே இவ்வித நற்பண்பை மக்கள் சமுதாயத்திலிருந்து அடியோடு ஒழிக்கும்வகையில், இன்றையக் கடவுள், மதம் என்பன இருந்துவருவதாலேயே திராவிட இயக்கத்தவர்களாகிய நாங்கள் கற்பனைக்

கடவுள் ஒழிய வேண்டும், மதம் ஒழிய வேண்டும், ஜாதி ஒழிய வேண்டும் என்றுக் கூறி அதற்கானவற்றை எங்களால் இயன்ற அளவு பிரசாரம் செய்து வருகிறோம்''[132] என்கிறார்.

இதன் மூலம் திருக்குறளில் உள்ள கருத்துக்களைத் திராவிடம் கொள்கைகளுக்கும், திட்டங்களுக்கும் அவற்றிற்கான நெறிகளுக்கும் ஆதாரமாக மேற்கோளாக திருக்குறளை முன்னிறுத்துவதை காணமுடிகின்றது.

''என்னுடைய எல்லாக் கொள்கைகளுக்கும் திட்டங்களுக்கும் அவற்றிற்கான நெறிகளுக்கும் குறளையே ஆதாரமாக - அடிப்படையாகக் கொள்பவன் அல்ல. ஆனால் எனக்குக் குறள் ஒரு மேற்கோளாக (அத்தாரிட்டியாக) விளங்குகிறது. மேலும் எங்களுடைய கொள்கை, கருத்து ஆகியவைகளுக்குக் குறளில் ஆதரவு இருக்கிறது''[133] என்ற கூற்றிலிருந்து இது தெளிவாகிறது.

திராவிடர்களுக்கான நூலாக திருக்குறளை மட்டுமே முன்வைக்கிறார் பெரியார். மற்ற நூல்களை ஒதுக்கிவிடுவதைப் பாரக்க முடிகிறது. ''திராவிடர்களுக்கு நீதிநூல், ஒன்றே ஒன்றுதான் உண்டு. அது திருக்குறளைத் தவிர வேறில்லை என்பதாக உறுதி கொண்டு, ஆரிய மத புராண இதிகாச நூல்களாகிய ராமாயணம் - கீதை – பாரதம் - புராணம் ஆகிய வைணவ, சைவ மதநூல்கள் ஆகியவைகளை அறவே ஒழித்துவிட வேண்டும். அவற்றை நாம் மதித்தல் கூடாது என்கிற உறுதிப்பாடு, நாட்டு மக்களுக்கு உண்டாக வேண்டும்''[134].

பெரியார் திராவிட இயக்கத்துக்கான கொள்கைக்கும், கோட்பாடுகளுக்கும் திருக்குறளை முன்னிறுத்துவதற்கான காரணம் என்ன என்று பார்க்கும்போது, திருக்குறள் வடமொழிநூலை மூலமாகக் கொண்டு தமிழில் இயற்றப்படாமல் தமிழிலேயே வெளிவந்துள்ளது. இது பக்தி, கடவுள், மதம் போன்றவைகளை சொல்லக்கூடிய நூலாக இல்லாமல், உண்மையான ஒழுக்கத்தைப் போதிப்பதாக இருக்கிறது.

குறள், ஆரியத்தையும் ஆரியப் பண்பு முதலியவற்றைக் கண்டிக்கும் கண்டன நூலாக இருக்கிறது. அதாவது, ஆரியத்துக்கும் ஆரியப் பண்புக்கும் அடிப்படை மூட நம்பிக்கை. பிறகு, அதன் மீது ஆரியர்களின் சுயநலத்துக்காகக் கற்பனை செய்துக் கொண்ட மதம், கடவுள், ஜாதிகள், மேல் உலகம், நரகம், மோட்சம், தலைவிதி, முன் ஜன்மம், பின் ஜன்மம், இவைகளைப் பிரசாரம் செய்ய அவர்களால் உண்டாக்கப்பட்ட கடவுள்கள் - வேத சாஸ்திர புராண - இதிகாசங்கள் முதலியனவைகளும் இவைகளை

ஆதாரமாய்க் கொண்ட நாள்கள், பண்டிகைகள் உற்சவங்கள், பழக்க வழக்கங்கள் போன்றவைகள் ஆகும்.

மக்கள் பிறவியில் யாவரும் சமம். மக்களுக்காக யார் எத்தொழிலைச் செய்தாலும் அதிலும் யாவரும் சமமேயாவர் என்கிறது. இவை போன்ற கருத்துக்கள் ஆரியத்துக்கு எதிராகத் திருக்குறளில் காணப்படுவதால் திராவிட இயக்கம் திருக்குறளை ஏற்றுக்கொண்டது என்று கொள்ள முடியும்.

பெரியார் அனைத்துக் குறளையும் ஏற்றுக்கொள்ளவில்லை. ‘‘நான் குறளின் மேம்பாட்டைப் போற்றுவதின் மூலம், குறள் முழுவதையும் ஒப்புக்கொண்டவன் என்றோ குறளின் படி நடக்கிறவன் என்றோ யாரும் கருதிவிடாதீர்கள். எனக்கு எங்களுக்குப் பொருந்தாத குறளுமிருக்கலாம். ஆனால் எனக்கு எங்களுக்கு வேண்டியவைகள் மீதம் அதில் இருக்கின்றன. அதுபோலவே ஒழுக்கவாதிகளுக்கும், பகுத்தறிவாதிகளுக்கும் வேண்டியவைகள் எல்லாம் அதில் இருக்கின்றன எடுத்துக் கொள்ளுங்கள்’’[135] என்று தெளிவுப்பட விளக்கியுள்ளார்.

இலக்கியங்கள் ஒழுக்கத்தைப் போதிக்க வேண்டும், அறிவை வளர்க்கவேண்டும் என்பது பெரியாரின் கருத்தாக உள்ளது. சாதியையோ, மதத்தையோ வெளிப்படுத்தும் இலக்கியங்களை ஆரியம் என்று கூறுவதைப் பார்க்க முடிகிறது. தமிழ் மரபு என்பதை புராண மரபு, மத மரபு என்று கூறுவதை கண்டிக்கிறார். தமிழ் மரபு என்பதை சமத்துவம், சமநீதி, பார்ப்பன மறுப்பு போன்ற கூறுகளை அவர் ஏற்றுக்கொள்கிறார் என்றே சொல்லலாம்.

## தொகுப்புரை

- தமிழ், திராவிடம் என்னும் இரு சொற்களும் ஒரு பொருட் பன்மொழியாகவும் எதிரிணைச் சொற்களாகவும் கொள்ளும் வழமை உண்டு. கி.பி. ஏழாம் நூற்றாண்டிலிருந்து திராவிட என்னும் சொற்பதம் இந்திய இலக்கியங்களில் வரலாற்றுக் குறிப்புகளில் இடம்பெறுகிறது.
- திராவிடம் என்னும் வடமொழிச் சொல்லே தமிழாகத் திரிந்தது என்போர் உளர். தமிழ் என்னும் சொல்லிலிருந்தே திராவிடம் என்னும் சொல் பிறந்தது என்று கருதும் அறிஞர்களும் உள்ளனர். திராவிடம் என்றாலும் தமிழ் என்றாலும் ஒரே பொருள்தான் என்று தந்தை பெரியார் உள்ளிட்டோர் கருதினர்.
- திராவிடம் என்பது தமிழுக்கான மாற்றுச் சொல்லாகவும், தமிழக, ஆந்திர, கருநாடகம், கேரளப் பகுதிகளை உள்ளடக்கிய தென்னாட்டைக் குறிப்பதாகவும், பார்ப்பனிய மேலாண்மைக்கு எதிரான சொல்லாகவும் முன்னிறுத்தப்படுகிறது.
- திராவிடம் என்ற சொல், கால்டுவெல்லின் திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம் குறித்த நூல் 1856 இல் வெளியிடப்பட்ட பிறகே பரவலாக அறியப்பட்டது.
- ஆதி திராவிட ஜன சபை, திராவிட மகாஜன சபை என்று அயோத்திதாசப் பண்டிதரும், ரெட்டமலை சீனிவாசனும் தொடங்கிய அமைப்புகள் திராவிட என்னும் சொல்லைத் தனது தலைப்புகளில் கொண்டிருந்தன. ஆதிக்க வகுப்பினருக்கு எதிராக ஒடுக்கப்பட்ட மக்களின் உரிமைக் குரலாகத் திராவிடன் என்ற சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது. பிறகு, பார்ப்பனரல்லாத அனைத்துச் சாதியினருக்குமான பொதுப் பெயராக வரலாற்றில் இடம் பிடித்தது.
- தமிழர் என்ற சொற்பிரயோகத்துக்குள் எல்லாச் சமூகக் குழுமங்களையும் கொண்டு வர முடியாதபோது, திராவிடர் என்ற சொல் அனைவரையும் கொண்டு வருவதால் இப்பதம் அவசியப்பட்டது என்று கார்த்திகேசு சிவத்தம்பி போன்றோர் கருதுகின்றனர்.
- திராவிட என்பது திராவிடர் என்ற இன மக்களைக் குறிப்பதாகவும் திராவிட என்ற நில எல்லைப் பகுதியைக் குறிப்பதாகவும் அமைகிறது.
- 1916 இல் தென்னிந்திய நலவுரிமைச் சங்கம் தோற்றுவிக்கப்பட்டபோது, சங்கத்தின் சார்பில் தொடங்கிய ஆங்கிலம், தமிழ், தெலுங்கு ஆகிய மூன்று மொழிகளிலும்

உருவாக்கப்பட்ட நாளிதழ்களில் தமிழ் நாளிதழுக்கு மட்டும் திராவிடன் என்ற பெயர் வைக்கப்பட்டது.

- தமிழ்நாட்டில் தோன்றிய திராவிட உணர்வு, பிற பகுதிகளில் ஏற்படவில்லை என்று ஆய்வாளர்கள் கருதுகின்றனர். கன்னடர்களோ, தெலுங்கர்களோ, மலையாளிகளோ தங்களைத் திராவிடர்கள் என்று கருதவில்லை என்று கருத்துரைக்கின்றனர்.
- இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் திராவிடத் தேசியம் முழுமையான வடிவத்தை எய்தியது. எனினும் சுயமரியாதை இயக்கம் தோன்றிய பின்பே அது ஒரு திட்டவட்டமான வடிவமைப்பைப் பெற்றது.
- பிராமணர்களுக்கும் பிராமணரல்லாதோருக்கும் ஏற்பட்ட உரிமைப் போராட்டத்தின் விளைவே தென்னிந்திய நலவுரிமைச் சங்கமாகும். அன்றைய சூழலில் பிராமணர்களால் அழுத்தப்பட்டுக் கிடந்த சைவம், தனித்தமிழ் உள்ளிட்ட பல்வேறு போக்குகளை எழுச்சி பெறச் செய்தது திராவிடக் கருத்துநிலை.
- தமிழ்நாட்டில் வாழும் சாதிக் குழுமங்களைச் சேர்ந்தவர்கள், தங்களின் சமூக நிலைமையையும் தங்கள் சமூக அசைவியக்கத்தையும் வரையறை செய்த பிராமணக் கருத்துநிலை தம்மீது திணித்ததென அவர்கள் கண்ட, கொண்ட மேலாண்மைக்கெதிராக நடத்திய போராட்டங்களினூடே மேற்கிளம்பினதும், அந்தப் போராட்டங்களை நியாயப்படுத்துவதற்குப் பயன்படுத்தப்பட்டதுமான சிந்தனை நிலைப்பாடே, திராவிடக் கருத்துநிலை ஆகும்.
- இந்து சமயம் முன்வைத்த வருணாசிரம தர்மத்தை எதிர்த்தலும் சூத்திரர்கள் இழிவுபடுத்தப்படாமையுமே திராவிட இயக்கத்தின் முதன்மையான பணியாக அமைந்தது. சாதியைப் பேசுவதன் நீட்சியாகச் சமயத்தை முற்றிலுமாக தந்தை பெரியார் எதிர்த்தார். சமயக் குறியீடுகளை அழித்தார். சமயச் சடங்குகளைக் கடுமையாக அம்பலப்படுத்தினார். சமயச் சொல்லாடல்களை மறுத்தார்.
- இந்து சமயம் பெண்களுக்கு வழங்கியிருந்த இரண்டாமிடத்தை பெரியார் மிகக் கடுமையாக எதிர்த்தார். ஆண் பெண் சமத்துவத்துக்கான பல்வேறு நடவடிக்கைகளைத் திராவிட இயக்கம் முன்னெடுத்தது.
- திராவிட இயக்கத்தின் பண்பாட்டு அரசியல் செயல்பாடுகளில் திராவிட முன்னேற்றக் கழகம் தோன்றியது. தந்தை பெரியாரின் செயல்பாடுகளில் கருத்து மாறுபட்ட சி.என். அண்ணாதுரை அதன் நிறுவனரானார்.

- திராவிட முன்னேற்றக்கழகமும் பின்னாளில் பல்வேறு இயக்கங்களாகப் பிரிந்து பிரிந்து சென்றது. எந்தப் பிரிவிலும் அது திராவிட என்னும் சொல்லை ஒட்டியே பிறந்தது என்பது கருத்தில் கொள்ளத் தக்கது.
- பெரியாரின் இலக்கியம் குறித்த பார்வை முற்று முழுவதுமாகப் பயன்பாட்டு நோக்கில் அமைவது ஆகும். இலக்கியத்தின் அழகியல் மதிப்புக்கு முதன்மை கொடுப்பதை அவர் மறுத்தார். பயன்மதிப்பையே அவர் வலியுறுத்தினார்.
- தமிழ்நாட்டில் பண்பாட்டு அரசியலில் ஈடுபடும் அக்கறையின் காரணமாகவே அவர் இலக்கிய ஆய்வுகளிலும் ஈடுபட்டார்.
- இராமாயணம், மகாபாரதத்துக்கு எதிராகப் பெரியார் சங்க இலக்கியத்தை முன்வைத்தார். சங்க இலக்கியங்கள் குறித்து அவர் மிகுதியும் எழுதவில்லை, பேசவில்லை எனினும் சங்க இலக்கியத்தை வலியுறுத்திப் பேசியுள்ளார்.
- மேலை நாட்டு இலக்கியங்களோடு தமிழ்நாட்டு இலக்கியங்களை ஒப்பிட்டுக் காட்டும் பெரியார், மதத்தின் பிடியில் தமிழ் இலக்கியங்கள் சிக்கியிருப்பதாக எடுத்துக்காட்டுகிறார். ஆகவே எல்லா இலக்கியங்களையும் புலவர்களையும் கடுமையாகச் சாடுகிறார்.
- சங்க இலக்கியங்களுக்குப் பின் வந்த இலக்கியங்களில் தமிழர் நாகரிகம், கலை, பண்பாடு போன்றவற்றைக் காண்பதே அரிதாயிற்று என்கிறார் பெரியார்.
- பார்ப்பனருக்கு வடமொழி எப்படித் தங்களின் இன நலத்துக்குப் பயன்படுகிறதோ, அப்படித்தான் தமிழ், தமிழ்ப்புலவர்களுக்குத் தங்கள் நலத்துக்கு மட்டுமே பயன்படுகிறது என்று பெரியார் கடுமையாகச் சாடினார்.
- சங்க இலக்கியங்கள், திருக்குறள் உள்ளிட்டவற்றைத் தமிழருக்கான அடையாள இலக்கியமாகப் பெரியார் முன்மொழிந்துள்ளார். அவை தவிரப் பிற இலக்கியங்களைக் கடுமையாகச் சாடியுள்ளார். அவற்றில் பலவற்றைத் தீயிலிட்டுக் கொளுத்தவுமான பண்பாட்டு நடவடிக்கைகளில் ஈடுபட்டுள்ளார்.
- சங்க இலக்கியங்களைக் குறித்துப் பெரியார் மிகுதியும் ஆராயவில்லையெனினும் அதன் மீதான தன்னுடைய ஈடுபாட்டைப் புலப்படுத்தியுள்ளார். பிற்காலத்தில் அவருடைய வழித் தோன்றல்களாக அண்ணாதுரை போன்றோர் சங்க இலக்கியத்தில் ஆழ்ந்து ஈடுபட, தந்தை பெரியாரே உத்வேகமாக இருந்துள்ளார் எனலாம். தமிழ் ஆய்வாளர்கள் பலர் சங்க இலக்கிய ஆய்வுகளில் ஈடுபட உத்வேகமளித்துள்ளார்.

## சான்றெண் விளக்கம்

1. சுப.வீரபாண்டியன், பெரியாரின் இடது சாரித் தமிழ் தேசியம், ப.39
2. மேலது., பக்.39,40
3. மேலது., ப.40
4. மேலது., ப.40
5. டாக்டர் கால்டுவெல், திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம் (மொ.பெ) புலவர் க.கோவிந்தன், க.ரத்னம், பக்.8,9
6. சே.இராசேந்திரன், தமிழ்க் கவிதையில் திராவிட இயக்கத்தின் தாக்கம், ப.1
7. டாக்டர் கால்டுவெல், மு.நூ, ப.4
8. சே.இராசேந்திரன், மு.நூ.ப.1
9. மேற்கோள்: மேலது.,ப.2
10. மேலது., ப.3
11. பெரியார் ஈ.வெ.ரா, தமிழர் தமிழ்நாடு தமிழர் பண்பாடு, ப.7
12. மேலது., ப.26
13. சுப.வீரபாண்டியன், மு.நூ. ப.43
14. மேலது., ப.39,
15. மேற்கோள்: மேலது., ப.43
16. சுப.வீரபாண்டியன், மு.நூ. ப.43
17. வே.ஆனைமுத்து (தொ.ஆ) பெரியார் ஈ.வெ.ரா சிந்தனைகள் தொகுதி 1, ப.543
18. சுப.வீரபாண்டியன், மு.நூ. ப.45
19. கார்த்திகேசு சிவத்தம்பி, திராவிட இயக்கக் கருத்துநிலையின் இன்றைய பொருத்தப்பாடு – ஒரு வரலாற்று நோக்கு பக்.13, 14
20. மேலது., ப.14
21. அ.மார்க்ஸ், கோ.கேசவன், குணா:பாசிசத்தின் தமிழ் வடிவம், பக்.11,12
22. மேலது., ப.5
23. கோவி.லெனின், திராவிட இயக்கம் நோக்கம்- தாக்கம்- தேக்கம், ப.26
24. மேலது., ப.26
25. பொன் மாறன், திராவிட இயக்கங்களின் வரலாற்றுப் பின்னணி, ப.22
26. மேலது., ப.22
27. மேலது., ப.23

28. மேலது., ப.23
29. கோ.கேசவன், திராவிட இயக்கமும் மொழிக் கொள்கையும், ப.6
30. மேலது., ப.6
31. மேலது., ப.7
32. மேலது., ப.7
33. சுப.வீரபாண்டியன், மு.நூ. ப.48
34. மேலது., ப.51
35. மேலது., ப.51
36. மேலது., ப.52
37. மேலது., ப.52
38. மேலது., பக்.52,53
39. மேலது., ப.53
40. மேலது., ப.54
41. மேலது., ப.54
42. மேலது., ப.55
43. மேலது., ப.56
44. மேலது., ப.57
45. மேலது., ப.57
46. வே.ஆணைமுத்து (தொ.ஆ), பெரியார் ஈ.வெ.ரா.சிந்தனைகள், ப.655
47. மேலது., ப.704
48. மேற்கோள்: சுப.வீரபாண்டியன், மு.நூ.ப.58
49. மேற்கோள்: மேலது., பக்.59,60
50. கோ.கேசவன், மு.நூ, ப.9
51. மேலது., ப.9
52. மேலது., ப.10
53. மேற்கோள்: மேலது, பக்.10,11
54. கோ.கேசவன், மு.நூ, ப.11
55. மேலது., ப.12
56. மேலது., ப.12
57. மேலது., ப.12
58. கார்த்திகேசு சிவத்தம்பி, இலக்கியமும் கருத்து நிலையும், ப.1,2

59. கார்த்திகேசு சிவத்தம்பி, திராவிட இயக்கக் கருத்துநிலையின் இன்றைய பொருத்தப்பாடு – ஓர் வரலாற்று நோக்கு, ப.10
60. மேலது., பதிப்புரை மே.து.ராசுகுமார்
61. மேலது., ப.13
62. மேலது., ப.17
63. மேலது., ப.17
64. மேலது., ப.17
65. மேலது., ப.18
66. மேலது., ப.18
67. அ.மார்க்ஸ், கோ.கேசவன், மு.நூ, ப.26
68. டாக்டர்.பொற்கோ, தந்தை பெரியார், ப.29
69. மேற்கோள்: வீ.அரசு, தமிழியல் கருத்துநிலைத் தேடல், பக்.37, 38
70. வீ.அரசு, மேலது., ப.39
71. மேலது., ப.39
72. மேற்கோள்: மேலது., ப.39
73. வீ.அரசு, தமிழியல் கருத்துநிலைத் தேடல், ப.40
74. கார்த்திகேசு சிவத்தம்பி, மு.நூ, ப.28
75. மேலது., ப.28
76. மேலது., ப.29
77. மேலது., ப.29
78. மேலது., ப.30
79. மேலது., ப.30
80. மேலது., பக்.34,35
81. கார்த்திகேசு சிவத்தம்பி, திராவிட இயக்கக் கருத்துநிலையின் இன்றைய பொருத்தப்பாடு, ப.15
82. மேலது., ப.15
83. மேலது., ப.16
84. மேலது., ப.16
85. மேலது., ப.17
86. ந.முத்துமோகன், தமிழ் அடையாள அரசியலின் இயங்கியல், ப.120

87. கார்த்திகேசு சிவத்தம்பி, திராவிட கருத்துநிலையின் இன்றைய பொருத்தப்பாடு, பக்.18,19
88. மேலது., ப.31
89. மேலது., ப.19
90. ஆ.மார்க்ஸ், கோ.கேசவன், குணா: பாசிசத்தின் தமிழ் வடிவம், ப.37
91. கார்த்திகேசு சிவத்தம்பி, மு.நூ, ப.20
92. மேலது., ப.20
93. மேலது, ப.21
94. அ.மார்க்ஸ், கோ.கேசவன், மு.நூ, பக்.24,25
95. கார்த்திகேசு சிவத்தம்பி, மு.நூ, ப.21
96. மேலது., ப.21
97. ம.நன்னன், பெரியாரியல் 3. இலக்கியம், ம.நன்னன் முகவுரை
98. மேலது.,ப.9.
99. மேலது., ப.50
100.தந்தை பெரியார், இலக்கியம் வளர்ச்சிக்கு உதவவேண்டாமா?, பக்.23,24
101.ம.நன்னன்,மு.நூ, ப.1,2
102.மேலது., ப.2
103.மேலது., ப.7
103.தந்தை பெரியார், மு.நூ, ப.3
104.மேலது., ப.4
105.மா.நன்னன், மு.நூ,ப.10
106.தந்தை பெரியார், மு.நூ,பக்.6,7
107.மா. நன்னன், மு.நூ, ப.11
108.மேலது., ப.12
109.மேலது., பக்.14,15

110.மா.நன்னன், மு,நூ,ப.16

111.மேலது., ப.17

112.மேலது., ப.17

113.மேலது., ப.18

114.மேலது, ப.22

115.மேலது., ப.23

116.தந்தை பெரியார், மொழித்தொல்லை, பக்.6,7

117.மேலது., ப.7

118.அ.மார்க்ஸ், பெரியார்?, ப.10

119.டாக்டர்.பொற்கோ, தமிழ் உணர்ச்சி தமிழ் வளர்ச்சி தமிழ் ஆட்சி, ப.58

120.மா.நன்னன், மு.நூ, ப.30

121.மேலது., ப.31

122.மேலது.,ப.32

123.மேலது., பக்.33,34

124.மேலது.,ப.44

125.மேலது.,ப.45

126.மேலது.,ப.46

127.மேலது.,47

128.பெரியார், மொழியாராய்ச்சி, ப.18

129.தந்தை பெரியார், திருக்குறளும் பெரியாரும், ப.9

130.மேலது., பக்.10,11

## 3. இரண்டாம் கட்டத் திராவிட இயக்கமும் சங்க இலக்கிய வாசிப்பும்

3.1. பெரியார் - சி.என்.அண்ணாதுரை இடையே கருத்து முரண்பாடு

3.1.1. இன்ப நாள்

3.1.2. துக்க நாள்

3.1.3. வாரிசு அரசியல்

3.1.4. திராவிட முன்னேற்றக் கழகம் தோற்றம்

3.2. இரண்டாம் கட்டத் திராவிட இயக்கம்

3.2.1. சி.என்.அண்ணாதுரையின் அரசியல் குறிக்கோள்

3.3. தமிழக வரலாற்றில் தமிழ்மொழி குறித்த சிந்தனை

3.4. பெரியாரின் மொழிச் சிந்தனை

3.5. மொழிச்சிந்தனையில் பெரியாருக்கும் அண்ணாவுக்குமான முரண்பாடு

3.6. சி.என்.அண்ணாதுரையின் இலக்கிய அணுகுமுறை

3.7. சி.என்.அண்ணாதுரையின் இலக்கியக் கோட்போடு

3.8. சி.என்.அண்ணாதுரையின் சங்க இலக்கிய வாசிப்பு

3.8.1. பண்டைத் தமிழரின் சிறப்பு

3.8.2. சங்க இலக்கியம் வெகுசன மக்களின் இலக்கியம்

3.8.3. மதச்சார்பற்ற இலக்கியம்

3.8.4. ஆரிய திராவிடக் கலப்பு

3.8.5. சங்க காலம் வளமான பொற்காலம்

3.8.6. ஆரியர் உயர்வும் தமிழர் தாழ்வும்

3.8.7. சமகால மக்களுக்கு வளமான பண்டைய தமிழகம்

3.8.8. மறக்குடிப் பெண்கள்

3.8.9. பல்வேறு வகையான போர்க்கருவிகள்

3.9. சி.என்.அண்ணாதுரையின் சங்க இலக்கிய காட்சிகள்

3.10. சி.என்.அண்ணாதுரை போற்றிய இலக்கியங்கள்

3.10.1. சங்க இலக்கியம்

3.10.2. சிலப்பதிகாரம்

3.10.3. திருக்குறள்

3.10.4. கலிங்கத்துப்பரணி

3.11. மு.கருணாநிதியின் இலக்கிய வாசிப்பு

## இயல் - 3

## இரண்டாம் கட்டத் திராவிட இயக்கமும் சங்க இலக்கிய வாசிப்பும்

பார்ப்பன ஆதிக்க எதிர்ப்பு, சூத்திர, பஞ்சம மக்களின் வாழ்வுரிமை, சிறுபான்மையினரின் நலன், பொதுவுடமை சமுதாயம், திராவிட நாடு ஆகியவற்றை முன்னிறுத்தி வளர்ந்த திராவிட இயக்கம், இந்தியா சுதந்திரம் அடைந்ததைத் தொடர்ந்து அதனை விமர்சனத்துக்குள்ளாகியது. இதனால் ஏற்பட்ட கருத்து முரண்பாடு பெரியார் - மணியம்மை திருமணம் போன்ற நிகழ்வுகளும் திராவிட இயக்கத்துள் பிளவை ஏற்படுத்தியது. இக்காலகட்டத்திலேயே இரண்டாம் கட்டத் திராவிட இயக்கம் உருவாகியது எனலாம்.

### 3.1.பெரியார் - சி.என். அண்ணாதுரை இடையே கருத்து முரண்பாடு

#### 3.1.1.இன்ப நாள்

இந்தியாவுக்குச் சுதந்திரம் வழங்குவதற்காக பிரிட்டி' அரசாங்கத்தால் 1939-இல் அனுப்பப்பட்ட கிரிப்ஸ் தலைமையிலான தூதுக்குழுவைச் சந்தித்து, திராவிடநாடு கோரிக்கையைப் பெரியார் வலியுறுத்தினார். அதை அக்குழு ஏற்கவில்லை. பாகிஸ்தான் தனிநாடாகப் பிரிக்கப்பட்டு, 1947 ஆகஸ்ட் 15-ல் இந்தியாவுக்கு சுதந்திரம் அளிக்கப்பட்டபோது, அதனைத் துக்க நாளாக அறிவித்தவர் பெரியார். இந்தியாவில், குறிப்பாக சென்னை மாகாணத்தில் உள்ள ஒடுக்கப்பட்ட மக்களின் உண்மையான விடுதலை இது அல்ல என்பதை அவர் அழுத்தமாக வலியுறுத்தினார். அந்தச் சமயத்தில், சி.என்.அண்ணாதுரை தன்னுடைய திராவிடநாடு பத்திரிகையில் சுதந்திர நாளை 'இன்ப நாள்' என்று எழுதினார். இது இருவருக்கிடையிலான கருத்து வேற்றுமைகளை வெளிப்படையாக்கியது.

#### 3.1.2.துக்க நாள்

பெரியார், ஆங்கிலேயர்கள் இந்தியாவிற்கு சுதந்திரம் வழங்கிய தினத்தை துக்க நாள் என்றதற்குச் சில காரணங்களைக் கூறினார். "ஆங்கிலேயர்கள் இந்தியாவை விட்டு வெளியேறவில்லை, இந்தியர்களில் எல்லா கட்சி மக்களிடையேயும் அதிகாரத்தை ஒப்படைக்காமல், எல்லோருடைய குறைகளையும் கேளாமல், எல்லா கட்சியாரையும் சமரசபடுத்தாமல், தங்களுக்குப் பல வழிகளிலேயும், வியாபாரத்திற்கும் பிரிட்டன்

நலத்திற்கும் சில இரகசிய ஒப்பந்தங்களை செய்து கொண்டு காங்கிரசுகாரர்களிடம் மாத்திரம், அதாவது பார்ப்பன ஆதிக்கமும் வடநாட்டார் சுரண்டல் வசதியும் கொண்டு, ஒரு சுயநல தந்திர சூழ்ச்சி கொண்ட கூட்டத்தாரிடம் அதிகாரத்தை மாற்றிவிட்டு அவர்களுக்குப் பாதுகாப்பு தரும் நிபந்தனையோடு அதிகாரத்தை மாற்றி இருக்கிறார்கள்"[1] என்று குற்றஞ் சாட்டினார்.

பெரியாரைப் பொறுத்தவரை ஆங்கிலேயன் - ஆரியன் இருவருமே திராவிட இனத்துக்கு எதிரிகள்தான் என்பதால் இருவரிடமிருந்தும் விடுதலை பெறும் நாளே உண்மையான விடுதலை நாள் என்று உறுதிபடக் கருத்துக் கொண்டுள்ளார். சி.என்.அண்ணாதுரையோ, இரண்டு எதிரிகளில் ஓர் எதிரி குறைந்திருக்கிறார் என்ற கண்ணோட்டத்தில் இந்திய சுதந்திரத்தை வரவேற்றுள்ளார்.

### 3.1.3.வாரிசு அரசியல்

இந்தக் கருத்துவேறுபாடு வளர்ந்து வந்த நிலையில், "அண்ணா மற்றும் அவரது ஆதரவாளர்கள் மீதான பெரியாரின் நம்பிக்கை குறைந்தது. சரியாகச் சொல்வதென்றால், இயக்கத்தின் எதிர்காலம் குறித்துத் தன்னுடன் இருப்பவர்கள் யாரையும் பெரியாரால் நம்பமுடியவில்லை, இயக்கமும் அதன் சொத்துக்களும் பாதுகாப்பாக இருக்க வேண்டுமென்றால் தனக்கு சட்டப்பூர்வமான வாரிசு தேவை என்கிற சட்டச்சிக்கலை பெரியார் அறிந்திருந்தார். அவருடையவாழ்க்கைத் துணையான நாகம்மையார் 1933-ம் ஆண்டிலேயே இறந்துவிட்டார். நேரடி வாரிசுகளும் இல்லை. எனவே 1949-ல் அவர், மணியம்மையாரைத் திருமணம் செய்துகொண்டார். இது சட்டபூர்வமான ஓர் ஏற்பாடு என்பதே பெரியார் அளித்த விளக்கம்"[2] ஆகும்.

### 3.1.4.திராவிட முன்னேற்றக் கழகத் தோற்றம்

பெரியாருடன் ஏற்பட்ட கருத்து முரண்பாட்டை 'திராவிட முன்னேற்ற கழக' துவக்க விழாவில் விளக்கமளித்துப் பேசிய சி.என்.அண்ணாதுரை "தலைவர் தவறினார் கொள்கையினின்றும், பகுத்தறிவுப் பாதையினின்றும். தவறு என்று மனதார நம்பினேன் - கூடாது என்று கருதினேன். கருதியது குற்றமா? கருத்தைத் தெரிவித்தேன் காரணத்தோடு, வேதனையை வெளிப்படுத்தினேன், வெளிப்படுத்தியது குற்றமாகுமா? கொள்கையைக் கூறுவது குற்றமா? கூறுங்கள் தோழர்களே! நான் மட்டுமல்ல, என்போன்ற தோழர்கள் பல தாய்மார்கள், பல கழகங்கள், பாட்டாளி மக்கள், தொழிலாளர் தோழர்கள், பட்டி தொட்டி

எங்கும் உள்ளோர் கூறினர். “கூடாது இந்த ஏற்பாடு, திருமணம் என்னும் பேச்சை விட்டுவிடுங்கள்” என்று. பெரியார் திருமணம் என்ற செய்தி கேட்டதும் அழுதவன் நான். ஆயாசங் கொண்டவன் நான். அதுமட்டுமல்ல, - நான் ஒதுங்கி விடுகிறேன் என்ற எண்ணத்தை – நான் கொண்ட கருத்தைத் தெரிவித்தவன். பேதம்,பிளவு, மனத்தாங்கல், மோதல்கூடாது, நல்லதன்று என்று கருதும் போக்கும், மனப்பண்பும் படைத்தவன் நான். எனவே, என்வரையில் பெருந்தன்மையாகக் கட்சிப் பணியிலிருந்து விலகுவது நல்லது என்று முடிவு கட்டியிருந்தேன்.

என்போன்ற பல தோழர்கள் பெரியாரை, பெரியார் போக்கை, அவர் திருமண ஏற்பாட்டை ஏற்கவில்லை என்பதை மட்டுமல்ல கண்டித்தனர், கதறினர், வேண்டாம் என்றனர் வேதனை உள்ளத்தோடு. நான் மனதாரத் தீமை என்று கருதிய ஒன்றை நல்லதல்லவென்று தெரிந்த ஒன்றை, பகுத்தறிவுக்குப் புறம்பானது என்று பாமரரும் ஒப்பும் ஒன்றைத் தெரிவித்தது குற்றமா? “பெரியார் சமாதானம் சொல்லிவிட்டார் என் சொந்த வி‘யம், எதிர்ப்போர் சுயநலமிகள் - சதிக் கூட்டத்தினர்” என்று. மனப்புண் ஆறவில்லை. மக்கள், அப்படிப்பட்ட தலைவர் அவர்களுடன் சேர்ந்து பணியாற்றமாட்டோம் என்று கூறினர். செவிசாய்க்கவில்லை தலைவர். விலகுவார் என்று பார்த்தனர். விலகவும் இல்லை. அவரோடு சேர்ந்து பணிபுரிய முடியாத நிலையிலுள்ள மிகப் பெரும்பான்மையினர், கழக முக்கியஸ்தர்கள், கூடிப் பேசி ஒரு முடிவு செய்தனர். அந்த முடிவுதான் “திராவிட முன்னேற்றக் கழகத்” தோற்றம்”[3] என்று சி.என் அண்ணாதுரை விளக்கமளித்தார்.

மேலும், “கொள்கை பிடிக்காமலோ, கோணல் புத்தி படைத்தோ அல்ல நாங்கள் விலகியதும் வெளியேறியதும். கொள்கை வேண்டும், அதுவும் நல்ல முறையில் நடத்தப்பட வேண்டும், நாடும் மக்களும் நலம் பெறும் முறையில். பெருந்தன்மை வேண்டுமென்ற ஓரே காரணத்தினால்தான் மோதுதலைத் தவிர்த்துக் கழகத்தைக் கைப்பற்றும் பணியை விடுத்து விலகினோம். அது மட்டுமல்லாமல் தலைவரே அனைவரின் மீதும் நம்பிக்கையில்லை – நம்ப முடியாது என்று வேறு கூறியிருக்கிறார்”[4] என்கிறார். மேற்கண்ட கூற்றிலிருந்து ‘திராவிட முன்னேற்ற கழகம்’ உருவாவதற்குத் தான் ஒருவரது விருப்பு வெறுப்பு மட்டும் காரணம் இல்லை என்றும் நாடும் மக்களும் காப்பாற்றப்பட வேண்டும் என்பதற்காகக் கழகத் தொண்டர்கள் சேர்ந்து எடுத்த முடிவு என்றும், இதற்கான காரணம் பெரியார் - மணியம்மை திருமணம் என்றும் சி.என்.அண்ணாதுரை முன்வைக்கின்றார்.

ஏற்கனவே பெரியாரோடு பெரிய அளவில் கருத்து முரண்பாடோ, கொள்கை மாறுபாடோ இல்லை என்பதை மறுக்கும் சி.என். அண்ணாதுரை, “பெரியாரோடு நான் மாறுபட்ட கருத்துடையவன் என்று கூறப்படுகிறது. சிற்சில வி'யங்களிலே நான் மாறுபட்ட கருத்துக் கொண்டிருந்தாலும், நெடு நாட்களாகவே கருத்து வேறுபாடுகள் இருந்து வந்தாலும், அவைகளைப் பற்றி நான் கவலைப்படவில்லை. முடிந்த அளவு ஒத்துழைத்தே வந்திருக்கிறேன். முடியாத நேரத்தில் மிக மிகக் கண்ணியமான முறையில் ஒதுங்கியே இருந்திருக்கிறேன். பெரியார் காலம் வரை, அவர் வழிப்படியே கழகம் நடக்கும். பிறகு பார்த்துக் கொள்வோம், என்ற போக்கைக் கொண்டிருந்தவன் நான்”[5] என்கிறார். இவ்வாறு சிறு சிறு முரண்பாடுகள் கழகத்திலிருந்து வெளியேறுவதற்கு காரணமாகவே சி.என்.அண்ணாதுரை அமையவில்லை என்பதை வெளிப்படையாகவே சி.என்.அண்ணாதுரை பேசுவதைப் பார்க்கமுடிகிறது.

இவ்வாறான சூழலில் ஏற்பட்ட கருத்து முரண்பாடு, இரண்டாம் கட்டத் திராவிட இயக்கம் சி.என். அண்ணாதுரை தலைமையில் உருவாகக் காரணமாக அமைந்தது.

**3.2.இரண்டாம் கட்டத் திராவிட இயக்கம்**

1949-ஆம் ஆண்டு செப்டம்பர் 17-ஆம் நாள் சி.என்.அண்ணாதுரை தலைமையில் கூடிய கழக நிர்வாகக் கமிட்டி ‘திராவிட முன்னேற்றக் கழகம்’ என்ற புதிய அமைப்பை உருவாக்கியது. அதனை தொடர்ந்து செப்டம்பர் 18-ந் தேதி திராவிட முன்னேற்றக் கழகப் பொதுக்கூட்டத்தில் சி.என்.அண்ணாதுரை பின்வருமாறு விளக்கமளித்தார்.

“திராவிட முன்னேற்றக் கழகம் தோன்றிவிட்டது. திராவிடர் கழகத்திற்குப் போட்டியாக அல்ல. அதே கொள்கைப் பாதையில்தான் திராவிடக் கழகத்தின் அடிப்படைக் கொள்கைகளின் மீதேதான், திராவிட முன்னேற்றக் கழகம் அமைக்கப்பட்டுள்ளது. அடிப்படைக் கொள்கைகளில், கருத்துக்களில், மாறுதல், மோதுதல் எதுவும் கிடையாது. சமுதாயத் துறையிலே சீர்திருத்தம், பொருளாதாரத்துறையிலே சீர்திருத்தம், சமதர்மக் குறிக்கோள், அரசியலில் வடநாட்டு ஏகாதிபத்தினின்று விடுதலை - ஆகிய கொள்கைகள்தான் திராவிட முன்னேற்றக் கழகத்தின் கோட்பாடுகளாகும்”[6] என்ற கருத்துருவை முன்வைத்தார்.

இனம், மொழி, தமிழக நலன் காப்பதில் திராவிடர் கழகமும், திராவிட முன்னேற்றக் கழகமும் ஒரே கொள்கையில் பயனிக்கும் இரட்டைக் குழல் துப்பாக்கிகள் என்று சி.என்.அண்ணாதுரை விளக்கமளித்தார்.

திராவிடர் கழகம் என்பதில் உள்ள 'திராவிடர்' என்னும் சொல் திராவிடர்களாகிய மக்களைக் குறிக்கும் சொல்லாகிறது. சி.என். அண்ணாதுரை உருவாக்கிய 'திராவிட முன்னேற்றக் கழகம்' என்பதில் உள்ள 'திராவிட' என்னும் சொல் நிலத்தைக் குறிக்கும் சொல்லாகிறது. திராவிடர் என்று கூறும்போது ஆரியராகிய பிராமணர்கள் எதிர் நிலையில் நிறுத்தப்படுகிறார்கள். திராவிட என்ற நிலத்தைக் குறிக்கும்போது, இந்த மண்ணில் வாழ்கின்ற அனைத்துத் தரப்பு மக்களும் உட்படுகிறார்கள். திராவிட முன்னேற்றக் கழகம் ஒரு ஜனநாயக இயக்கமாக, அரசியல் களத்திற்குக் கொண்டு செல்லும் காலம்வரும்போது, அனைத்துத் தரப்பு மக்களின் ஆதரவும் வாக்குகளும் வேண்டும் என்ற அடிப்படையில் சி.என்.அண்ணாதுரை இந்தப் பெயரைத் தெரிவு செய்தார் என்றுக் கொள்ளலாம்.

1944 முதல் 1949 வரை இராண்டாம் உலகப் போரின் முடிவுக்குப் பிறகு திராவிடர் கழக வளர்ச்சியில் பெரிதும் அக்கறை காட்டியவர் சி.என். அண்ணாதுரை. அன்றைய கால கட்டத்தில் திராவிடர் கழகத்தையே அரசியல் இயக்கமாக மாற்றித் தேர்தலில் ஈடுபடுத்த வேண்டும் என்று சி.என்.அண்ணாதுரை விரும்பினார். அவரின் "முற்போக்குச் சிந்தனைகள், அய்ரோப்பிய அரசியலில் நிகழ்ந்த மாற்றங்கள் - சனநாயகத்தின வளர்ச்சி ஆகிய இவையெல்லாம் 'புதிய அரசியல் ஆளுமையில் நமது இயக்கமும் பங்கு கொள்ள வேண்டும்' என்ற உணர்வை அண்ணாவுக்கு ஏற்படுத்திற்று, அந்த உணர்வுக்கு ஏற்ப அமைப்பு - கட்சி இருக்க வேண்டும் என்று அவர் விரும்பினார். இந்த முரண்பாடுதான் தந்தை பெரியாரையும், அண்ணாவையும் பிரித்தன. இந்நிகழ்ச்சிப் போக்கில் பெரியார் – மணியம்மை 'திருமணம்'– என்பது இறுதியான ஒரு பெருங்கருவி மட்டுமே"[7] என்பர்.

"திராவிட இயக்கத்தின் இரண்டாம் தலைமுறையினரே திராவிட முன்னேற்றக் கழகத்தின் தலைவர்கள் ஆனார்கள். விடுதலை பெற்ற இந்தியாவில் அரசியல் அதிகாரத்திற்கான போட்டியில் திராவிட இயக்கத்தார் ஈடுபடவேண்டும் என்பது முன்னேற்றக் கழகத்தின் ஒரு முக்கிய நிலைப்பாடு. அரசியல் அதிகாரத்தில் பங்கேற்க வேண்டும் என்ற நிலைப்பாட்டைத் தவறென்று கொள்ள முடியாது. ஆனால் எந்த வர்க்கத்தின் பிரதிநிதிகளாக அவர்கள் அதிகாரத்தில் பங்கேற்க விரும்பினர் என்பதே

பிரச்சனை. தமிழ் அடையாளத்தின் பெயரால் அவர்கள் அரசியல் அதிகாரத்தை நாடினர். ஆனால் அரசியல் அதிகாரத்திற்கான போட்டியில் சாதி, வர்க்கம் போன்ற பிரச்சனைகளைத் தவிர்த்தல் இயலாது. சாதியும் வர்க்கமுமாக நிலை பெற்றிருக்கும் தமிழ்ச் சமூகத்தில், இனம் என்ற ஒன்றை வர்க்க, சாதி எல்லைகளுக்கு வெளியில் வைத்துப் பார்க்க முன்னேற்றக் கழகம் விழைந்தது. தமிழின் அரசியலையும் தமிழ்ச் சமூகத்தின் சாதி, வர்க்க முரண்பாடுகளையும் ஒன்றிணைத்திருந்தால் முன்னேற்றக் கழகம் முற்போக்கு அரசியலில் முன்னோடிச் சக்தியாக ஆக முடிந்திருக்கும். மாறாக அடையாள அரசியலினுள் தொழில்படத் துவங்கிய முதலாளியச் சக்திகள் பற்றிய தன்னுணர்வே முன்னேற்றக் கழக அரசியலில் இடம்பெறவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. அவற்றுடன் விருப்புடன் இயைந்து செல்வதே முன்னேற்றக் கழக அரசியலாயிற்று”[8] என்று கூறுவர்.

### 3.2.1.சி.என்.அண்ணாதுரையின் அரசியல் குறிக்கோள்

சி.என்.அண்ணாதுரையின் அரசியல் குறிக்கோள், “கால்டுவெல் பாதிரியாரின் திராவிட ஒப்பிலக்கணம், சங்ககால இலக்கியங்களின் கண்டுப்பிடிப்புகள், ஹரப்பா – மொஹெஞ்சதாரோ அகழ்வாராய்ச்சியின்போது கிடைத்த ஆராய்ச்சியின் முடிவுகள், அய்ரோப்பியரின் கண்டுபிடிப்புகள் மற்றும் சனநாயகச் சிந்தனைகள் ஆகிய இவற்றோடு இந்தியச் சமூக அமைப்பைப் பற்றிய பெரியாரின் மதிப்பீடுகளையும் இணைத்தே அமைந்தது ஆகும்.”[9] என்பர்.

1949 இல் தொடங்கப்பட்ட ‘திராவிட முன்னேற்றக் கழகம்’ 1956 வரை தேர்தலில் நிற்கவில்லை. எனினும் திராவிட முன்னேற்றக் கழகம் தொடங்கப்படுதலுக்கு முன்னரே சி.என். அண்ணாதுரையிடம் தேர்தலில் பங்கெடுக்கும் விருப்பம் இருந்ததை காணமுடியும். “பெரியாரின் சுயமரியாதை இயக்கமும் பெரியாரின் தலைமையை முழுவதுமாக ஏற்ற (1939க்குப்பின்) நீதிக்கட்சியும் திராவிடர் கழகமும் (1944) தேர்தல் பங்கேற்பை விரும்பவில்லை. பெரியார் தொடங்கிய தென்னிந்திய சமதருமக்கட்சி (1933) தேர்தல் பங்கெடுப்பை விரும்பியிருப்பினும். அது யதார்த்தமாகவில்லை. ஆனால் பெரியார் எல்லாத்தேர்தல்களிலும் பிரச்சாரம் செய்து அரசாங்கப் பொறுப்பேற்பவர்களை ஆதரித்துள்ளார். காங்கிரசிலிருந்து வெளியேறியபின் இதுவே அவரது அரசியல் தந்திரப் போக்காக இருந்தது. சட்டபூர்வமான சீர்திருத்தங்களின் மூலம் மட்டுமே சமூக நன்மையைக் கொண்டுவர முடியும் என்பதில் அழுத்தமான நம்பிக்கை கொண்டிருந்த பெரியாரிடமிருந்து அண்ணாதுரையின் சித்தாந்தம் அடிப்படையில் மாறிடவில்லை.

இருவருமே பாராளுமன்றவாதத்தை ஒப்புக் கொண்டவர்களெனினும் பெரியார் வெளியிலிருந்த கொண்டு அரசாங்கத்தைப் பயன்படுத்தவும் அண்ணாதுரை உள்ளிருந்து கொண்டு அரசாங்கத்தைப் பயன்படுத்தவும் எண்ணினர். இத்தகைய வேறுபட்ட செயல் முறைகள் இருவரின் கருத்துகளையும் பாதித்துள்ளன."[10] இந்த முரண்பாடு மொழி பற்றிய இருவரது கண்ணோட்டத்திலும் வெளிப்படுகின்றன.

**3.3.தமிழக வரலாற்றில் தமிழ்மொழி குறித்த சிந்தனை**

திராவிட இயக்கத்தின் மொழிகுறித்த சிந்தனைப் போக்கை, தமிழக வரலாற்றில் தமிழ் மொழி பெற்றுள்ள இடத்தோடு இணைத்து பார்க்கவேண்டும். மொழியைத் தேசிய இனத்தின் அடையாளமாகவும், எதிர்ப்புக் கருவியாகவும் பயன்படுத்தியுள்ள சிந்தனைப் போக்கை தமிழக வரலாற்றில் காணமுடிகிறது. "தமிழ் தேசிய இனத்துக்கு உணர்ச்சி ஊட்டக் கூடிய ஓரம்சமாக மொழி இருக்கிறது என்பதே இங்கு முக்கியமானது ஆகும். இங்கு மொழி என்பது ஒரு கருவி என்ற நிலையுடன் அது தேசிய இனத்தின் அடையாளமாகவும் கருதப்பட்டுள்ளது."[11]

தமிழ் இலக்கியங்களில் தமிழ் என்பது ஒரு மொழியைக் குறிக்கும் சொல்லாக மட்டுமின்றி பல பொருள்களைக் குறிக்கும் ஒரு சொல்லாகவும் பயன்பட்டு வந்துள்ளது. தமிழர் என்ற பொருளில் பயன்படுத்தப்பட்டுள்ளது. "(புறநானூறு 19, பதிற்றுப்பத்து 1-63, 16-2 பரிபாடல் திரட்டு 7) தமிழ் நாடு என்ற பொருளில் கையாளப்பட்டது (பதிற்றுப்பத்து 25 அகநானூறு 227 புறநானூறு 51, 168, 198) வீரம் என்ற பொருளில் கையாளப்பட்டது"[12] "ஆரிய அரசனுக்கு தமிழ் அறிவுறுத்துவதற்குப் பாடிய பாடல் என குறிஞ்சிப்பாட்டின் அடிக்குறிப்பு குறிப்பிடுகிறது. இங்கு 'தமிழ் என்பதற்கு காதல் என்று பொருளாகும் தமிழ் தழீஇய சாயலவர்' என சீவக சிந்தாமணி (பாடல் எண் 2026) கூறும் பொழுது, இனிமை என்பதைத் தழுவி நிற்கிறது. தமிழ் என்பதற்கு பக்திப்பாடல்களில் பக்தி என்று பொருளுண்டு"[13] என்பர்.

தமிழ் என்ற சொல் தமிழர், தமிழ், நாடு, காதல், வீரம், பக்தி, ஆகிய பலவகைப்பட்ட பொருள்களில் பயன்பட்டு வந்துள்ளதைப் பார்க்க முடிகிறது. எந்தத்துறையைப் பாடுகின்றனரோ அந்தத் துறையாகவே தமிழ் காட்சியளித்துள்ளது.

"நீண்டகாலமாக தமிழர் சமூகத்தின் கலாச்சாரப் பெட்டகமாகவே தமிழ் மொழியும் இலக்கியமும் விளங்கின. இந்த விதத்தில் தமிழர் சமூக மனவியலில் மொழிக்கு உரிய

பங்கு குறிப்பிடத்தக்கது. இதனாலேயே தமிழ் என்பதற்கே நூற்றுக்கணக்கான அடைமொழிகளைக் கொடுத்துத் தமிழர்கள் கொஞ்சி மகிழ்கின்றனர். இதனாலேயே தமிழின் பெயரைச் சொல்லி தமிழர்களை எளிதில் மகிழ்ச்சியடையச் செய்யலாம், துயரமடையவும் செய்யலாம். அதாவது உணர்ச்சி தூண்டலுக்குரிய அற்புதமான தூண்டுகோலாக தமிழ் அமைந்துள்ளது சிந்திக்கத்தக்கது"[14]

இதற்கான காரணத்தைத் தமிழ்ச் சமூக வரலாற்றில் கண்டடையலாம். தமிழ் சமூகத்தை பல்வேறு அரசுகள் ஆட்சி செய்துள்ளன. அவர்களுடைய ஆட்சிக் காலங்களைப் பார்க்கும்போது, சங்க காலம், களப்பிரர் காலம், பல்லவர் காலம், பிற்காலப் பாண்டியர், சோழர் காலம், நாயக்கர் காலம், மராட்டியர் காலம், முசுலீம் காலம், ஆங்கிலேயர் காலம், என்று பல ஆட்சிக் காலங்களைக் காண்கிறோம். இந்த ஆட்சிகளில் மூவேந்தர் (சங்க காலம்) மற்றும் பிற்காலப் பாண்டியர், சோழர் ஆகியோரின் ஆட்சிகளைத் தவிர, ஏனைய ஆட்சிகள் தமிழ்த் தேசிய இனத்துக்கு அன்றைய காலத்தில் அந்நியராட்சிகளாக இருந்துள்ளன. இதனைப் பார்க்கும்போது தமிழ்த் தேசிய இனம், அந்நியராட்சிக்குள் உட்பட்டிருந்த காலமே அதிகமாக உள்ளது. இக்காலங்களில் அந்நிய மொழிகளே அரசதிகார மொழிகளாக இருந்துள்ளன.

களப்பிரர் - பாலிமொழி

பல்லவர் - பிராகிருதம், வடமொழி

சோழர் - தமிழ் (வடமொழிக்குச்செல்வாக்கும் இருந்துள்ளது)

நாயக்கர்கள் - தெலுங்கு, வடமொழி

முகமதியர், ஆங்கிலேயர் - பாரசீகம், உருது, ஆங்கிலம்

"அந்நியராட்சி, அந்நிய மொழிகளாட்சி ஆகியவற்றின் கீழ் தமிழர்கள் நூற்றுக்கணக்கான ஆண்டுகள் உழன்று தவித்துக் கொண்டிருந்தனர். இதனால் தம் தேசிய இனத்தின் அரசியல், பொருளாதார அடையாளத்தை இழந்தனர். இதன் விளைவாக, தம் கலாச்சாரத்தில் - குறிப்பாக இலக்கியத்திலும் சில காலங்கள் சமயத்திலும் - தம் அடையாளத்தைக் கண்டறிந்து பேணிக் காத்துக் கொள்ள முயன்றிருக்கின்றனர். அந்நியராட்சியையும் அந்நிய மொழிகளையும் தூக்கியெறியக் கூடிய புறநிலைச் சாத்தியப்பாடு இல்லாததால், தமிழர்கள் கலாச்சாரத்துறையில் தம் சுய

அடையாளத்தைத் தேட வேண்டியவர்களாயினர். பல்லவர்களின் சமண, பௌத்த காலத்தில் சைவ, வைணவ எழுச்சியும் விசய நகர ஆட்சிக் காலத்தில் தனித்தமிழ்க் கடவுளான முருகன் சிறப்புத் தெய்வமாக உயர்ந்ததையும் வலுவான பார்ப்பனச் செல்வாக்குச் சூழலில் வீரசைவமும் கபாலிக சைவமும் பின்பற்றப்பட்டதையும் இசுலாமியர்கள் காலத்தில் பெருநிலவுடைமைப் பகுதிகளில் சைவ மடங்கள் தோன்றியதையும் கருணையில்லா ஆங்கிலேயர் ஆட்சியில் கருணை மன நிலையில் பரவத் தொடங்கிய கிறித்துவச் சூழலுக்கு எதிருணர்வாக இராமலிங்க அடிகளாரின் சமரச சன்மார்க்க நெறிமுறை தோன்றியதையும் இந்தகைய கலாச்சார சுய அடையாளம் தேடும் முயச்சிகளாகக் கண்டறிய முடியும்”[15]

இந்தக் காலக் கட்டங்களில் வடமொழியின் ஆதிக்கம் “பல்லவர் காலம் தொடங்கி சோழர் காலம் ஊடாக நாயக்கர் காலம் வரையில் வடமொழிக்குத் தமிழகத்தில் கொடுக்கப்பட்ட ஆளும் வர்க்க மதிப்பு குறிப்பிடத்தக்கது.”[16] ஆரியர் – தமிழர் வேறுபாடு என்பது சிலப்பதிகாரம் காலம் தொடங்கி இன்றைய காலம் வரையில் தொடர்ந்து கொண்டுதான் இருக்கின்றன. பல்லவர் காலத்தில் உருவான பக்தி இயக்கம் சமண, பௌத்த மதங்களுக்கு எதிராகத் தமிழை ஓர் எதிர்ப்புக் கருவியாகப் (சைவம், வைணவம்) பயன்படுத்தியுள்ளன என்பது குறிப்பிடத்தக்கது.

வடமொழி ஆதிக்கம் தமிழிற்குள் புகுந்தமைக்குச் சமயமே காரணம் என்பர். ஆனாலும் அந்தச் சமயமே பெருமளவில் வடமொழியை எதிர்த்து நின்றது என்பதையும் நாம் வரலாற்றில் காண முடிகிறது. “தமிழ்மொழியைத் தங்கள் சமயத்திற்கு நெருக்கமாக்கிக் கொண்டது சைவம். தமிழின் தோற்றத்திலிருந்து அது உரிமை கொண்டாடியது வைணவம் இதற்குப் புறநிலையில் நின்றுவிடவில்லை.”[17] “சமண – பௌத்தர்களை எதிர்ப்பதற்குத் தமிழ் மொழியை ஒரு கருவியாகப் பயன்படுத்திக் கொண்டுள்ளமையைக் காண்கிறோம்”[18] என்பர்.

தமிழ் உணர்வை ஊட்டி, அதன் மூலம் சமய உணர்வை ஊட்டும் முயற்சியில் அப்பர், சம்பந்தர், சுந்தரர் ஆகியோர் ஈடுபட்டனர். இதனால் “தமிழ் நிலம், தமிழ் நகரம், தமிழ் ஆறு என்பனவற்றின் தொடர்ச்சியாக, தமிழ்ச் சமயம் என்னும் கோட்பாடு உருவாயிற்று. அக்கோட்பாட்டிற்கேற்ப, தமிழையும், சமயத்தையும் பிரிக்க இயலாதவாறு பின்னிப் பிணைக்கத் தொடங்கினர்”[19]. இவர்கள் இசைத்தமிழால் பக்தியைப் பரப்பத் தொடங்கினர்.

தமிழ்ப் பற்றின் காரணமாகச், சோழர் காலத்தில் பெரும் காப்பியங்கள் தோன்றின. "வடமொழியைவிடத் தமிழே மேன்மையானது என்ற சிந்தனைப் போக்கின் இலக்கிய உச்சமே தமிழ் விடுதூது ஆகும். அதில் வடமொழி, தமிழுக்கு ஏவல் செய்வதாகவே வருணிக்கப்பட்டுள்ளது (கண்ணிகள் 42-45). தமிழ் விடு தூது தமிழை அரியாசனத்திலேயே அமர்த்திப் பெருமைப் பட்டுக் கொண்டது."[20] இவ்விடத்தில் இணைத்துச் சிந்திக்கத்தக்க செய்தி, "தமிழை உச்சியில் முத்தமிட்டு நமது முன்னோர்கள் உளமகிழ்வு கொண்ட காலங்களில் எல்லாம் அவர்கள் வேற்று மொழியினராலும் மொழிகளாலும் அடிமையாக்கப்பட்டிருந்தனர் என்பதாகும்"[21].

விஜயநகரப் பேரரசு, நாயக்க, மராட்டிய அரசுகள் அனைத்துமே வேற்று மொழியினரின் அரசுகளாகவே இருந்தன. இவ்வரசுகளின் காலத்தில்தான் கன்னடர், தெலுங்கர், மராத்தியப் பார்ப்பனர் முதலான அயல் மொழியினர் தமிழ் நாட்டில் குடியேறினர். பழம் பண்பாடுகள் பல சிதைந்து போயின. புதிய பண்பாடுகள் பல உள் நுழைந்தன. பல்வேறு விதமான கலப்புப் பண்பாடுகளுக்குத் தமிழகம் இடமாயிற்று.

"திருமலை நாயக்கர் ஆட்சிக் காலத்தில், புராண, வைதிக அடிப்படையில் பல பார்ப்பனச் சடங்குகள் தமிழ் நாட்டில் இடம் பிடித்துக் கொண்டன. அறுபது சுழற்சி ஆண்டுகளைக் கொண்ட புதிய ஆண்டு முறையும், சித்தரையில் தமிழ் வருடப் பிறப்பு என்னும் புதிய பழக்கமும் தோன்றின. சைவ, மாலிய ஒற்றுமையை ஏற்படுத்துவதற்காக, கள்ளழகர் கதைகள் அக்காலத்தில்தான் உருவாக்கப்பட்டன."[22]

சங்க காலத்தில் மிக அருகிக் காணப்பட்ட வடமொழி, பல்லவர் காலத்தில் தனக்கென்று ஓர் இடத்தைப் பிடித்துக் கொண்டது. "சென்னையின் ஒரு பகுதியிலும் புதுவையில் உள்ள பாகூரிலும், காஞ்சிபுரத்திலும் அப்போது வடமொழிப் பள்ளிகள் தொடங்கப்பட்டன."[23] கல்வெட்டுகள் செப்பேடுகள் ஆகியனவற்றில், தமிழும், வடமொழியும் கலந்த 'மணிப்பிரவாள நடை' இடம்பெறத் தொடங்கியது.

தமிழ் மொழியைப் போற்றிய சைவக் குரவர்கள் அதற்கு இணையாக வடமொழியையும் போற்றினர்.

"வடமொழியும் தென்தமிழும் மறைகள் நான்கும் ஆனவன் காண்" (அப்பர் தேவாரம்) என்றும் "தமிழ்ச் சொலும் வடசொலும் தாணிழல் சேர" (சம்பந்தர் தேவாரம்)

என்றும் இன்னும் பலவாறாகவும் தமிழையும், வட மொழியையும் இணை வைத்துப் போற்றினர்."[24] இம்மரபு சோழர், பாண்டியர் ஆட்சியிலும் தொடர்ந்தது.

"விஜயநகரப் பேரரசினர் இசுலாமியரிடமிருந்து மதுரையைக் கைப்பற்றிய போதிலும், செஞ்சி, வேலூர், ஆர்க்காடு முதலான பகுதிகளில், தில்லி சுல்தான்களின் முகவர்களாக நவாப்புகளே ஆண்டு வந்தனர். ஆப்கானித்தானியிலிருந்து வந்து, பாமினி என்னும் நகரத்தைத் தலைநகராகக் கொண்டு பாமினி சுல்த்தான்கள் என்னும் வகையினரும் சில பகுதிகளை ஆண்டனர்"[25]. இதனால் வடமொழி, தெலுங்கு மராத்தி இதனோடு அரபு, பாரசீகம் ஆகிய மொழிகளும் ஆதிக்கம் செலுத்தின. இதன் விளைவாகத் தமிழின் மேன்மை குறைந்தது. தமிழ் வீட்டு மொழியாய், பாமரர்களின் மொழியாயச் சுருங்கிப்போனது.

எனினும், "கோவை, பிள்ளைத் தமிழ், கலம்பகம், தமிழ் விடு தூது முதலான தமிழுணர்வு கொண்ட சிற்றிலக்கிய நூல்கள் சிலவும், குறவஞ்சி, பள்ளு முதலான ஒடுக்கப்பட்ட மக்களின் இலக்கியங்களும் இக்காலத்தில் தோன்றின."[26]

"18 ஆம் நூற்றாண்டின் நடுவில், ஏறத்தாழ 'இந்தியா' என்னும் ஒரு துணைக் கண்டம் உருவாக்கப்பட்டு, பிரித்தானியர்களின் ஆட்சி ஏற்பட்டது. அவர்கள் ஏறத்தாழ இரண்டு நூற்றாண்டுகள் நம்மை அடிமைபடுத்தி ஆண்டனர் என்பது உண்மையேயெனினும், அவர்களின் ஆட்சியில்தான். தேசம், தேசியம் சனநாயகம், விடுதலை முதலான கருத்தாக்கங்கள் உருப்பெற்று வளரத் தொடங்கின."[27]

இவ்வாறான சூழலில் 1838 இல் தன் சமயத்தை பரப்புவதற்காக தமிழ் நாட்டிற்கு வந்த கால்டுவெல், மதத்தைப் பரப்பும் பணிக்கு மாறாக, மொழி ஆய்வுப் பணியில் ஈடுபடத் தொடங்கினார். அதன் பயனாக 1856 ஆம் ஆண்டு "திராவிட அல்லது தென்னிந்திய மொழிக் குடும்பங்களின் ஒப்பிலக்கணம்" என்னும் நூலை வெளியிட்டார்.

இவ்வாய்வு நூல் தமிழ் உள்ளிட்ட இந்திய மொழிகள் அனைத்தும் சமற்சிருதத்திலிருந்து தோன்றியவை என்னும் கருத்துலக மாயையை மாற்றி தமிழ், எந்த வகையிலும் சமற்கிருதத்தோடு தொடர்புடையதன்று என்றும் திராவிட மொழிகள் எனப்படும் தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம், துளு முதலான 22 மொழிகள் அனைத்தும் ஒரே குடும்பத்தைச் சார்ந்தவை என்றும் அவர் தன் நூலில் விளக்கினார்.

தமிழ்மொழி குறித்து மேல்நிலைக் கருத்துகள் இலக்கியத்தில் இருந்தாலும் கால்டுவெல் எழுதிய திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம் இத்தகைய கருத்தியலுக்கு ஒரு புதிய வெளிச்சத்தை கொடுத்தது எனலாம்.

"பாரம்பரிய தமிழ்ப்பற்றுச் சிந்தனைக்கு ஆட்பட்டும் கால்டுவெல் கருத்தின் செல்வாக்குக்கு உட்பட்டும் சிந்தித்தவர்களுள் குறிப்பிடத்தக்கவர் பேராசிரியர் சுந்தரம் பிள்ளை ஆவார். இவர் எழுதிய மனோன்மணீயம் நாடகத்தில் வரும் தமிழ்த்தாய் வாழ்த்து இதற்கு முன் உள்ள கருத்தியலின் தொடர்ச்சியாகவும் வளர்ச்சியாகவும் உள்ளது. உலகம் என்ற பெண்ணின் நெற்றியாக தெக்கணமும் அதில் இட்ட பொட்டாக திராவிடமும் உள்ளன. பொட்டின் நறுமணத்தைப் போல தமிழ் மணக்கிறது என்கிறார். தெலுங்கு கன்னடம், மலையாளம் துளு ஆகிய மொழிகளை ஈன்ற மூலமொழியான தமிழ் ஆரியத்தைப் போல உலக வழக்கில் இறந்து விடாமல் இன்றளவும் இளமையோடு இருக்கிறது என்கிறார். இதில் திராவிட நல்திருநாடு, திராவிட மொழிகள் ஆகியவை பற்றிய குறிப்புகள் கூறப்படினும் எத்திசையும் புகழ் மணக்கும் தமிழுக்கும் ஆரியம்போல மறைந்து விடாத தமிழின் இளமைக்கும் முதன்மை அழுத்தம் கொடுக்கப்பட்டுள்ளமை கவனிக்கத்தக்கதாகும்"[28]

"ஆரியம், தமிழ் இவற்றோடு மட்டுமே தம் சிந்தனையை வைத்துக்கொண்டிருந்த தமிழ் உணர்வுச் சிந்தனையாளர் வரிசையில் இருந்து கொண்டே, உலகம், இந்தியா, திராவிட நாடு, தமிழ் என்ற கருத்தாக்கங்களை முன்வைக்கும் விதத்தில் வேறுபாடுகளை ஏற்றுக்கொண்ட நிலையை இதில் (1891) காண்கிறோம். இந்தியா என்பது ஓர் அரசியல் யாதார்த்தமாக வன்முறையில் திணிக்கப்பட்டுக் கொண்டிருந்த காலத்தில் அதன் பின் 1860 - கள் முதற்கொண்டு சட்ட ரீதியாகத் திணிக்கப்பட்ட காலத்தில் பேராசிரியர் அதைப் புறக்கணிக்காமல் - அதே நேரத்தில் அதனுள் திராவிடத்தையும் தமிழையும் உயர்த்திப் பிடிக்கும் போக்கில் வெளிப்படுத்திய இந்தச்சிந்தனை, பின்னாளைய திராவிட இயக்கங்களுக்குரிய அடிப்படையாக விளங்கியது"[29] என்பர்.

மேற்குறித்த சிந்தனையின் அடிப்படையில் திராவிட இயக்கத்தின் மொழிகுறித்த சிந்தனையை புரிந்துக்கொள்ள முடியும்.

### 3.4.பெரியாரின் மொழிச்சிந்தனை

பெரியார் மொழிபற்றிய தம்முடைய கருத்தை வெளிப்படையாகவே கூறினார். அவரின் மொழிக் குறித்த சிந்தனையை அவரது "படைப்புகளில் காணப்படும் கருத்துக்களைத் தொகுத்துக் கண்டால் பல இடங்களில் தொடர்ச்சியின்மையைக் (inconsistency) காணமுடிகிறது. எனினும் இந்த அம்சத்தில் பெரியார் தம் கருத்துக்களை வெளிப்படையாக – எவ்வித ஒளிவு மறைவுமின்றி முன்வைக்கிறார். மொழிபற்றிய அவரது கண்ணோட்டத்தில் அறிவியல் தன்மை (scientific) உள்ளது."[30] என்பர்.

தாய் மொழியின் மீது பற்றுக் கொள்ள வேண்டிய அவசியம் குறித்து "1924 இல் காங்கிரசில் தலைவராக இருக்கும் பொழுது காங்கிரசு மாநாட்டுத் தலைமையுரையில் (1929 திருவண்ணாமலை வரை) பெரியார் குறிப்பிட்டுள்ளார். இத்தகைய பற்றுக் கொள்ள வேண்டிய அவசியமில்லை என இன்னோரிடத்தில் (ஈ.வெ.ரா.சிந்தனைகள், தொகுப்பு,II.ப.986) குறிப்பிட்டதோடு அத்தகைய பற்றுக் கொள்ளுதலை தாய்ப்பால் பைத்தியம் என்றும் வருணிக்கிறார். (மேற்படி தொகுப்பு, ப.990). இது தொடர்ச்சியின்மையை மட்டுமின்றி எவ்வித ஒளிவு மறைவுமின்றி கருத்துகளைச் சொல்லும் பெரியார் முறையியலையும் நமக்கு அறிமுகப்படுத்துகிறது."[31]

தமிழ் மொழியைக் குறித்த பெரியாரின் கருத்துக்கள் கவனத்தில் கொள்ளத்தக்கது ஆகும். "தமிழேக் காப்பற்றப்படவேண்டும் என்ற கூப்பாடு எந்த அடிப்படையில் கிளப்பப்படுகிறது? 'நமது முன்னோர்களால் ஏற்பாடு செய்யப்பட்ட பண்பாடுகளை – கலாச்சரங்களைப் பாதுகாக்க வேண்டும்' என்பதற்காகவே அல்லாமல் வேறு எதற்காக?"[32] என்பார். "தமிழ் வடமொழியைவிட, இந்தி மொழியைவிடச் சிறந்தது என்பதிலும், பயன்படத்தக்கது என்பதிலும் எனக்கு அய்யமில்லை என்றாலும். நாம் இன்றைய நிலைமையைவிட வேகமாக முன்னேற வேண்டுமானால் - ஆங்கிலந்தான் சிறந்த சாதனம் என்றும் ஆங்கிலமே அரசியல் மொழியாகவும், போதனா மொழியாகவும் இருந்தாக வேண்டுமென்றும், ஆங்கில எழுத்துக்களே தமிழ் நெடுங்கணக்கு எழுத்துக்களாவது அவசியம் என்றும், ஆங்கிலமே நம் பேச்சு மொழியாவது நலம் பயக்கும் என்றும் தெரிவித்துக்கொள்கிறேன்"[33] என்கிறார். இவ்வாறு தமிழ்ச் சமூக முன்னேற்றத்திற்கு ஆங்கிலமே தேவை என்பதை வலியுறுத்துகிறார்.

மேலும், “தமிழ் காட்டுமிராண்டிக் காலத்து மொழி, நாகரிகக் காலத்திற்கு, பகுத்தறிவுக் காலத்திற்கு, ‘யாதும் ஊரே யாவரும் கேளிர்’ என்ற காலத்திற்கு, ‘யாயும் ஞாயும் யாராகியரோ’ என்ற காலத்திற்குத் தமிழ் பயன்படுமா? வேஷத் தமிழரை அல்ல, உண்மைத் தமிழரைக் கேட்கிறேன்”[34] என்கிறார். தமிழுக்காக இந்தியை எதிர்த்து கிளர்ச்சி செய்தமைக்கான காரணங்களை விவரிக்கும்போது, “உலகம் போகிற போக்கில் நாம் இந்த தமிழ் மொழி இதில் உள்ள இன்றைய தமிழ் இலக்கியங்கள் ஆகியவைகளைக் கட்டிக்கொண்டு அழுகிறோம் என்றால், வேறு ஒன்று வேற்று மொழி (இந்தியோ வடமொழியோ) வந்து நம் உயிரை வாங்குமே, அறிவை நாசப்படுத்தி அடிமையாக்குமே என்பதற்காகத்தானே ஒழிய வேறில்லை”[35] என்பார். “தமிழுக்கு ஆபத்துவரக்கூடாது என்று நினைக்கிறேன் என்றால் இதைவிட மோசமான ஒன்று நம்மீது வந்து உட்கார்ந்து விடக்கூடாதே என்ற கவலையினால் தானே தவிர, தமிழே மிகவும் உயர்ந்த மொழி, எல்லா வல்லமையும் பொருந்திய மொழி என்று நினைத்து அல்ல”[36] என்று தமிழைப் போற்றுவதற்கான காரணத்தையும் தெரிவிக்கின்றார்.

“மொழி – ஒரு தேசிய இனத்தின் உயிர், ஒரு தேசத்தின் முகவரி, கழிந்துபோன காலத்தைப் பிடித்துச் சேமித்து வைக்கும் அதிசயக் களஞ்சியம், ஒரு சமூகத்தின் கருத்துக் கருவூலம், சகமனிதர்களிடையே செயல்படும் தகவல் தொடர்பு நரம்பு மண்டலம், மனிதப் படி மலர்ச்சியில் ஒரு பாய்ச்சல், உயிரினங்களில் மனிதர்களுக்கு மட்டுமே வாய்த்த அமுத சுரபி”[37] என்றெல்லாம் கூறப்படும் நிலையில், பெரியார் மொழி குறித்து கீழ் வருமாறு கூறியிருப்பது கவனிக்கத்தக்கது.

“மொழியானது அந்தந்த நாட்டுச் சீதோஷணத்திற்கு ஏற்பவும் அவரவர்களுக்கு வேண்டிய வாழ்க்கை, பழக்க வழக்கப்பண்பு, குறிப்புகளுக்கேற்பவும் அமைந்துள்ளது”[38] என்கிறார் பெரியார். இதில் மொழியின் தோற்றத்தையும் சிறப்பையும் யாதார்த்தமாக காணும் அறிவியல் பார்வை இருப்பதாக கோ.கேசவன் கருதுகிறார்.

அறிவியல் கண்ணோட்டம் இருப்பதாகக் கருதினாலும் “பெரியார் குறிப்பிடும் சீதோஷணம் என்பது மொழியின் உருவாக்கத்தில் பெரும்பங்கு வகிப்பதில்லை. பெரும்பங்கு வகிக்கிறது என்பதை நவீன மொழியியலும் ஒப்புக்கொள்வதில்லை. ஒரு குறிப்பிட்ட மொழியின் ஒசையின் வன்மை மென்மைக்கு நிலப்பரப்பின் வெப்ப நிலை என்ற அடிப்படையில் மட்டுமே அமைதிகாண முடிந்ததில்லை. எனவே பெரியாரின் இக்கருத்து

ஒருவிதமான கற்பிதமே. அதிலும் சீதோஷணம் என்று பேசுமிடங்களில் அவருடைய மனச்சாய்வு தெளிவாக வெளிப்படுவதைப் பார்க்கமுடியும், வடமொழி அல்லது இந்தி மொழி தமிழ்நாட்டின் சீதோஷணத்திற்கு ஒத்துவராத மொழி என்றும் தமிழ் மொழியைத் தான் வலியுறுத்தக் காரணம் அது தமிழ் நாட்டின் சீதோஷணத்திற்கு உகந்தது என்றும் பல இடங்களில் பேசும் பெரியார், ஆங்கில மொழியை வலியிறுத்தும்போதெல்லாம் இந்த சீதோஷணம் என்னும் கருத்தை விவாதிக்க கூட எடுத்துக்கொள்வதில்லை என்பது வெளிப்படை. அதாவது வடமொழி அல்லது இந்தி மொழிக்கு அவர் முன் வைக்கும் சீதோஷண வரையறையை ஆங்கில மொழிக்கு முன் வைப்பதில்லை என்பது குறிப்பிடத்தக்கது”[39] என்கிறார் கி.பார்த்திபராஜா.

“ஒருவனுடைய கருத்தை மற்றொருவனுக்குத் தெரிவிக்க, மொழி முக்கிய சாதனமாக இருந்து வருகிறது. எந்த ஒரு மொழியின் சிறப்பும் பெரும்பாலும் அம்மொழியின் மூலம் அறியக்கிடக்கும் கருத்துக்களைப் பொறுத்துதான் இருக்கும்”[40] என்று கூறும் பெரியார், “ஒருமொழியில் இல்லாத கருத்தை வேறொரு மொழியிலிருந்து ஏற்க வேண்டிய பொழுது, புதிய வார்த்தை கருத்தைத் தெளிவாக விளக்கம் செய்வதாகவும் சுலபமாக உச்சரிக்கக் கூடியதாகவும் இருக்க வேண்டும் என்கிறார். மொழித் தூய்மையைவிட கருத்துத்தெரிவையும் சுலபமான உச்சரிப்பையும் பெரியார் விரும்பியுள்ளார். இதனால் ‘ஆங்கில வார்த்தைகளை அப்படியே ஏற்றுக் கொள்ளலாம்’ என்பதும் பெரியாரின் கருத்து. இந்தவிதத்தில் மொழியின் உள்ளடக்கத்துக்கு அது சொல்லும் பொருளுக்கு முதன்மை தந்துள்ளார். ஆங்கிலக் கலப்பையும் வடமொழிக் கலப்பையும் இதன் வழி அணுகுவதால் ஆங்கிலக் கலப்பின வழி தமிழ் நவீனத்துவம் பெறமுடியும் என்றும் வடமொழிக் கலப்பின் வழி தமிழ் பிற்போக்கான, சமயத்தகுதியே பெறமுடியும் என்றும் பெரியார் கருதுகின்றார்”[41] என்பர்.

மொழிபற்றிய பெரியாரின் கருத்துக்கள், அடிப்படையில் சமூக வளர்ச்சிக் கண்ணோட்டம் கொண்டதாக இருந்தாலும் ஆங்கிலக் கலப்பின வழி, தமிழ் நவீனத்துவம் பெறமுடியும் என்று அவர் கூறி இருப்பதை ஏற்க முடியாது ஏனென்றால் “ஆங்கிலமும் பகுத்தறிவு மொழியல்ல. அதிலும் மூடநம்பிக்கைகள் ஏராளமுண்டு. ஆங்கில மொழியில் இருந்த மூடநம்பிக்கைகளை எதிர்த்தே, இங்கர்சால், பெட்ரண்ட் ரஸ்ஸல் போன்ற அறிஞர்கள் கருத்துப் பிரச்சாரம் செய்தனர். இன்றைக்கும் தமிழ் நாட்டில் வந்து, ஆத்ம சரீரசுகமளிக்கும் ஆவி எழுப்புதல் கூட்டங்களை நடத்தும் அயலார் ஆங்கில

நாட்டிலிருந்தும் வேறு சில மேலை நாடுகளிலிருந்துமே வருகின்றனர்”[42] என்பது குறிப்பிடத்தக்கது.

வடமொழிக்கெதிரான ஆங்கில ஆதரவு என்ற நோக்கில் உட்புகும் பெரியார், தமிழ் - வடமொழி – ஆங்கிலம் என்ற பெரியாரின் சிந்தனையில் வடமொழி எதிர்ப்பே முதன்மையாக வழி நடத்தியிருப்பதைக் காணமுடிகிறது. “பெரியாரின் தமிழ் ஆதரவு, எதிர்ப்பு மற்றும் வடமொழி எதிர்ப்பு ஆகிய அவருடைய மொழிச் சிந்தனையை வழிநடத்துவது, அவரது பார்ப்பனிய எதிர்ப்பேயாகும், பெரியாரின் மொழி பற்றிய சிந்தனைகளில் சமஸ்கிருதம், ஹிந்தி, தமிழ், ஆங்கிலம் ஆகிய மொழிகள் மையமாக உள்ளன. இவை பற்றிய பெரியாரின் கருத்துக்களில் முன்னுக்குப் பின் முரணானவை சில காணப்படினும் பிராமணிய அல்லது பார்ப்பனிய எதிர்ப்பு அவற்றின் உட்சரடாக இழையோடுவதைக் காணலாம்”[43] என்பர்.

இந்தி என்பதைப் பார்ப்பன ஆதிக்கத்தோடும், ஆரிய நாகரிகத்தோடும், சமயக் கொள்கையோடும் இணைத்துப் பார்க்கிறார். ‘தாய் மொழியைத் தவிர வேறுமொழி தெரிய வேண்டுமெனில் அது ஆங்கில மொழியே’ என்பதைப் பெரியார் வலியுறுத்துகின்றார்.

“பெரியாரின் மொழிச் சிந்தனைகளில் பல முரண்பாடுகளும் சிக்கல்களும் இருப்பதனை அவதானிக்க முடிகிறது. மொழி குறித்தும் அவற்றின் தோற்றம் நிலைபேறு குறித்ததும் பல்வேறு விடயங்களில் அறிவியல் பூர்வமான கண்ணோட்டத்தினைப் பெரியார் பெற்றிருந்தார். அவர் அறிவியல் பூர்வமானது என்று கருதும் சீர்தோஷண மாறுபாடு ஆகியவற்றைக்கூட, வடமொழி பற்றில் பேசுமிடங்களில் வற்புறுத்துகிறாரேயன்றி ஆங்கிலமொழி குறித்துப் பேசுமிடங்களில் வாதத்திற்குக் கூடக் குறிப்பிடுவதில்லை. மொழியின் வரலாற்று வகிபாகத்தை அதன் பண்பாட்டுப் பெறுமதியினை பெரியார் குறைத்தே மதிப்பிட்டார் எனலாம். ஒரு தேசிய இனம் அதன் மொழியால் அடையாளப்படுத்தப்படுகிறது என்பதனைப் பெரியார் கருத்தில் கொள்ளவில்லை. அதிலும் மொழியைத் தாயாக அடையாளப்படுத்தும் தமிழ்த்தேசிய மரபில் தமிழ் மொழி வசிக்கும் இடத்தினை பெரியார் சரியாக மதிப்பிடவில்லை. தமிழுணர்வைப் பயன்படுத்துவதில்கூட பெரியாருக்குச் சில தெரிவுகள் இருந்தன. முதலாம் மொழிப்போராட்டத்தின்போது, மொழியைச் சொல்லி, மொழி உணர்வைத் தூண்டி மக்களை ஒருங்கிணைத்த பெரியார் பிந்தைய காலத்தில் மொழிப்பற்றைக்கூடத் தாய்ப்பால் பைத்தியம் என்று பகடி செய்தார். வடமொழி அல்லது இந்தி எதிர்ப்பின் அவசரத்தில் அவர் ஆங்கிலத்தையே முற்றிலும்

சார்ந்து நின்றார். தமிழ் மொழியைக் கடுமையாகச் சாடிய பெரியார்தான் வீரமாமுனிவருக்குப் பிறகு மிக முக்கியமான எழுத்துச் சீர்திருத்தங்களை முன்மொழிந்து அதனை இயக்கமாக்கி, மக்கள் மனத்தில் பதித்த வெற்றிகரமான சிந்தனையாளருமாகிறார்"[44] என்கிறார் கி.பார்த்திபராஜா.

சமூக வளர்ச்சிக்கு மூலமாக இருக்கக்கூடியது மொழி. அம்மொழியில் சமூகத்தை பின்னடைவை ஏற்படுத்தக்கூடிய பிராமணியம், வர்ணாசிரமம், சமயம் போன்ற பகுத்தறிவுக்கு ஒவ்வாத கருத்துக்களைக் கலப்பிக்கக் கூடாது என்பதும் அறிவு வளர்ச்சிக்கு வேண்டிய சிந்தனை வேண்டும் என்பதுமே பெரியாருடைய மொழிச்சிந்தனையின் மையமாக உள்ளது.

### 3.5.மொழிச்சிந்தனையில் பெரியாருக்கும் அண்ணாவுக்குமான முரண்பாடு

மொழிப்பற்றிய சிந்தனையில் பெரியாரின் நிலைப்பாட்டுக்கு சி.என்.அண்ணாதுரை வேறுப்பட்டு இருப்பதை காணமுடிகிறது. "பெரியாரின் கருத்துகளில் இருப்பதைப் போன்று அண்ணாதுரையின் கருத்துகளில் மொழியின் தோற்றத்தைப்பற்றியும் தன்மைகளைப் பற்றியும் ஒருங்கிணைந்த பார்வையோ அறிவியல் கண்ணோட்டமோ இல்லை"[45] என்பர்.

"அண்ணாதுரையைப் பொறுத்தவரை, தமிழ் மொழி எண்ணத்தை வெளியிடும் கருவியாக மட்டும் இல்லை, 'தமிழர்க்குத் தமிழ் மொழி, அவர் விரும்பும் ஓர் தனிச்சிறப்புள்ள வாழ்க்கை முறைக்கு வழிகாட்டி நிற்கிறது. எண்ணத்தை வெளியிடும் வெறும் கருவியாக மட்டும் இல்லை' என எழுதியுள்ளார்."[46]

மொழிக் கலப்பு குறித்து பெரியரின் அணுகு முறையிலிருந்தும் அண்ணாதுரை வேறுபட்டுள்ளார். "மொழிக் கலப்பை அதன் கருத்தை வைத்து பெரியார் மதிப்பிட்டார். இத்தகைய கருத்து ரீதியான பார்வை இன்றி மொழிக் கலப்பை 'இனிமை பெறுவதற்கான' அடிப்படையில் அண்ணாதுரை அணுகியுள்ளார். இது ஒரு கருத்தைச் சொல்லுகின்ற வடிவத்துக்கு முதன்மை கொடுக்கும் நோக்கிலிருந்து வருதலாகும்"[47] என்று கூறுவர்.

"மொழியில் பெரியார் கருத்துக்கு முதன்மை கொடுத்தார். ஆனால் அண்ணாதுரை வடிவத்துக்கு முன்னுரிமை கொடுத்தார். இதுவே அண்ணாதுரையை ஒரு ஜனரஞ்சகத் தலைவராக ஆக்கியது"[48] என்றும் கருதுவர்.

“பெரியாரைவிட நிரம்பக் கூட்டத்தை அண்ணாதுரையால் திரட்டி ஜனரஞ்சக தலைவராக (populist leader) ஆக முடிந்ததெனினும், இந்தப் போக்கினால் இவரது நாத்திக உள்ளடக்கம் படிப்படியாகக் குறைந்து ‘ஒன்றே குலம் ஒருவனே தேவன்’ என்ற திருமூலரின் ஒரே கடவுள் கோட்பாட்டை ஒப்புக்கொள்ளும் ஆத்திகராக அண்ணாதுரை நீர்த்துப் போனதை வரலாற்றில் காண்கிறோம். இத்தகைய சமரசங்கள் அண்ணாதுரையின் அரசியல் சித்தாந்தத்தோடு தொடர்புடையவை. ‘அண்ணாதுரையின் கருத்துகள் உணர்ச்சியின் அடிப்படையில் அமைந்தன. தொன்மைக்குள்ளும் இளமைக்குள்ளும் தமிழை அடக்கி உயிராக நேசிக்கும் கலாச்சாரத்தோடு தொடர்புடையவை. இது நம் தமிழிலக்கியத்தில் வெளிப்பட்ட கலாச்சார மனநிலை. இதற்குகந்த விதத்தில் அண்ணாதுரையின் கருத்துகள் அமைந்தன. இதனாலேயே ‘சராசரித்’ தமிழனுடன், ‘சாதாரணத்’ தமிழனுடன் அண்ணாதுரை நெருங்க முடிந்தது. இத்தகைய கண்ணோட்டங்களின் வழியே இவர்கள் தம் மொழிக் கொள்கையை உருவாக்கிக் கொள்ளவும் காங்கிரசுக்காரர்களின் மொழிக் கொள்கையோடு எதிர் வினைபுரியவும் முடிந்தது”[49]

திராவிடர் இயக்கத்தின் வரலாற்றை பார்க்கும்போது பல கட்சிகளாக பிளவுபடுதலும், தனிநபர்கள் சேர்தலுமாக இருக்கின்றன. “இந்திய அரசியல் சட்டம் அமுலுக்கு வந்த அதே ஆண்டில் திராவிடர் கழகத்திலிருந்து திராவிட முன்னேற்றக் கழகம் பிரிந்தது. இரண்டும் ஒத்த கொள்கைகள் உடையவை என்றும் இரட்டைக் குழல் துப்பாக்கி என்றும் தி.மு.க.வின் நிறுவனர் சி.என்.அண்ணாதுரை குறிப்பிட்டாலும் கொள்கைகளிலும் நடைமுறைகளிலும் சிற்சில வேறுபாடுகள் கொண்டிருந்தன. இவை மொழிக் கொள்கையிலும் எதிரொலித்தன.”[50] என்பர்

1937-1940 வரை நடைபெற்ற மொழிப் போராட்டத்தில் திராவிட இயக்கத்தின் நிலைப்பாடு “ஆங்கிலத்துக்கு அடுத்தப்படியாக, இந்தி கட்டாயமாக இருக்கக் கூடாது என்பது தானே தவிர தாய்மொழி கட்டாயமாக இருக்க வேண்டும் என்பதல்ல”[51]. கட்டாய இந்தியை மட்டுமல்ல, இந்தி விருப்பப் பாடமாக வருவதையும் ஒழிக்க வேண்டும் என்பதும் இந்தப்போராட்டத்தின் கோரிக்கையாகவும் இருந்துள்ளது.

**3.6.சி.என். அண்ணாதுரையின் இலக்கிய அணுகுமுறை**

1935, அதனை தொடர்ந்து நடைப்பெற்ற இந்தி எதிர்ப்பு போராட்டங்கள் இந்தித் திணிப்பை நிறுத்தியதோடு, தமிழ்மொழி – இலக்கியம் சார்ந்த சொல்லாடல்களைத் தீவிரப்படுத்தின. மரபார்ந்த தமிழ் அறிஞர்கள்,ஆசிரியர்கள், மாணவர்கள் என்ற அணிசேர்க்கை திராவிட அரசியலுக்குக் கிடைத்தது. இக்காலத்தில்தான் அண்ணாவின் தலைமையிலான இளம்தலைமுறை தமிழ் அடையாள அரசியலின் இலக்கிய வழிப் பண்பாட்டு அரசியலை முனைப்பாக்கியது.

“அண்ணா முதலான அணியினர் எழுத்தாளர்களாகவும் மேடைப்பேச்சாளர்களாகவும் திரைப்படம் போன்ற நவீன ஊடகவியலாளராகவும் இருந்தனர். ஒரு புதிய தொழில் நுட்பத்தைக் கைப்பற்றுவது போல், வெகுசனப் பரப்புரை சாதனங்களை அவர்கள் கைப்பற்றினர். தேர்வு செய்யப்பட்ட பண்டைத்தமிழ் இலக்கியத் தகவுகளை ஜனரஞ்சக வடிவில் வெகுமக்களிடையில் அவர்கள் பரப்பினர். ஆரியர், திராவிடர், பார்ப்பனர், அல்லாதவர் வேறுபாடுகளை, மோதல்களை நாடகப்பாங்கான மக்கள் உணர்வாக அவர்களால் மாற்ற முடிந்தது. பண்டைத் தமிழ்ச் சமூகம் குறித்த ஒரு பிரம்மாண்டத்தை அவர்களால் உருவாக்கிக் காட்டமுடிந்தது”[52]

சி.என்.அண்ணாதுரை முதலியோரின் இலக்கியவழி அணுகுமுறையானது “அவர்தம் விருப்பு, வெறுப்புகட்கு அப்பாற்பட்டு, மதம் இருந்த இடத்தில் மொழியையும் இலக்கியத்தையும் அமரவைத்தது. மதம் எவ்வகையான மேட்டுக்குடித் தகவுகளைச் சார்ந்திருக்குமோ அவ்வகையான தகவுகளின் அரசியலை இலக்கியச் சொல்லாடல்கள் மூலம் நிகழ்த்த முடிந்தது. அதாவது, பிராமணரல்லாத மேட்டுக் குடித் தகவுகளை மொழி, இலக்கியம் மூலம் நிலை நிறுத்த முடிந்தது. இந்த அரசியலுக்குத் திராவிட இயக்கத்தின் இரண்டாம் தலைமுறையினர் தலைமை தாங்கினர். தனித்தமிழ், செவ்வியல், செம்மொழி, வீரம், மானம், மூவேந்தர் மரபு, சோழர்காலத்தமிழின் பொற்காலம்”[53] போன்றவை தமிழர் அடையாள அரசியலின் மையப்புள்ளிகளாகின.

சி.என்.அண்ணாதுரை தலைமையிலான திராவிட இயக்கம் “தமது அடையாளங்களை செவ்விலக்கியங்களின் மூலமாகக் கட்டமைக்க முனைந்தது. இச்செயல்பாட்டிற்குப் புறநானூறு பெரிதும் உதவியது என்று கூற முடியும். ‘புறநானூற்றுத்

தமிழன்' என்று புதிய தொடரே உருப்பெற்றது. காதல், வீரம் என்பதில் வீரத்தின் அடையாளத்தை வெளிப்படுத்தும் பிரதியாகப் புறநானூறு புரிந்துகொள்ளப்பட்டது"[54] என்பர்.

வீரம் தொடர்பான பல்வேறு வகையான செயல்பாடுகளைப் புறநானூறுப் பாடல்களிலுள்ள செய்திகளின் மூலம் திராவிட இயக்கச் சார்பாளர்கள் வெளிப்படுத்தினர். காதலைக் கூறுவதற்குப் பல நூல்கள் இருந்த சூழலில், வீரத்தைக் கூறும் முதன்மை நூலாகப் புறநானூறு புரிந்துகொள்ளப்பட்டது. "திராவிட இயக்கத்தின் மேடைப் பேச்சாளர்கள் புறநானூறு குறித்த விரிவான செய்திகளைப் பொதுமேடைகளில் பேசினார்கள். சங்க இலக்கியம் வெகுமக்களும் அறியும் இலக்கியப் பிரதியாகப் புறநானூற்றின் மூலம்தான் சாத்தியமாயிற்று எனலாம். தமிழர் வரலாறு, பண்பாடு, தமிழர்களின் பல்வேறு வகையான சிந்தனை மரபுகள் ஆகிய பிற குறித்த பல்வேறு தகவல்களைப் புறநானூற்றிலிருந்து பலரும் காட்டத் தொடங்கினர்"[55].

சங்க இலக்கியத்தை வெகு ஜன இலக்கியமாக பாமர மக்களிடத்துக் கொண்டு சேர்த்த செயலைத் திராவிட இயக்கம் செய்தது. திராவிடநாடு கோரிக்கை, மதச்சார்பற்ற தன்மை, தமிழரின் வரலாறு, பண்பாடு போன்றவற்றைப் பரப்புரை செய்ய சங்க இலக்கியத்தை அது பயன்படுத்திக் கொண்டது. தங்களின் அரசியல் தேவையை நிறைவேற்ற சங்க காலத்தின் வளமார்ந்த சமூகத்தைப் படம்பிடித்துக் காட்டி, அவற்றோடு சமகாலத் தமிழகத்தின் வறுமைநிலையை ஒப்பிட்டது. இப்படித் திராவிட இயக்கத்தின் வளர்ச்சிக்குச் சங்க இலக்கியத்தைப் பயன்படுத்திய போக்கை சி.என்.அண்ணாதுரையின் எழுத்துக்கள் வெளிப்படுத்துகின்றன.

### 3.7.சி.என்.அண்ணாதுரையின் இலக்கியக்கோட்பாடு

இலக்கியத்தின் இலக்கணமாக சில கருத்துக்களை அண்ணாதுரை முன்வைக்கின்றார்.

1. "நாட்டில் உள்ள ஏடுகள் நாட்டில் உள்ளதை -நடப்பதை-மக்கள் வாழ்க்கைமுறைகளை வகுத்துக்காட்டும் கண்ணாடியாகக் காட்சி அளிக்க வேண்டும்.
2. நாட்டு மக்களை மேன்மையுறச் செய்யும் தூண்டா விளக்காய்த் துலங்கல் வேண்டும். நாட்டிற்கும் ஏட்டிற்கும் தொடர்பிருக்க வேண்டும். நாட்டோரை நடுநிலை

பிறழா நல்ல நீதிபதிகளாக்க உறுதுணை செய்யும் ஊன்றுகோலாக இருக்க வேண்டும்.

3. நாட்டு நலனுக்குக் கேடு விளைக்காமல் இலக்கியங்கள் விளங்க வேண்டும்.
4. இன உணர்வை ஊட்டக்கூடியனவாகத் துலங்கல் வேண்டும்.
5. இனத்தை வாழ வைக்கின்றனவாக – அறிவுக்குப் பொருந்தியனவாக – ஆராய்சிக்கு நிற்கக் கூடியனவாக – மடமையை நீக்கி அறிவு கொளுத்துவனவாக இலக்கியங்கள் திகழ்தல் வேண்டும்.
6. இன எழுச்சி ஊட்டவும், மடமை ஒழியவும் தோன்றும் இலக்கியங்கள் ஏட்டில் ஒன்றும், எண்ணத்தில் ஒன்றும், அன்றாட வாழ்க்கையில் பிறிதொன்றுமாக அல்லாமல் அமைதல் வேண்டும்.
7. மக்கள் சிந்தனையைத் தூண்டுகின்ற வகையில் இலக்கியங்கள் இலங்கல் வேண்டும்.
8. மக்களின் அறிவைத் தெளிவுபடுத்துவதாய், ஆண்மைக்கு உரமிடுவதாய், ஒழுக்கத்துக்கு வலிமை தரத்தக்கதாய் இலக்கியங்கள் பொலிதல் வேண்டும்.
9. இலக்கியங்கள் சமுதாயத்திற்குப் பயன் நல்கும் வகையில் உருவாக்கப்பெறல் வேண்டும்.
10. சுவையும் பயனும் இலக்கியங்களில் கலந்தமைந்து இருத்தல் வேண்டும்.
11. எளிமையையும் விழைவையும் கொண்டவையாக அமைதல் வேண்டும்.
12. மதச் சார்பற்றவையாக - இனவெறியற்றவையாகத் துலங்கல் வேண்டும்.
13. வைதீகத்தையும் மூடநம்பிக்கையும் வளர்ப்பதாக இருக்கக் கூடாது”[56] போன்ற

கருத்துக்களைத் தனது இலக்கியக் கோட்பாடுகளாக முன்வைக்கின்றார். இக்கோட்பாடுகளோடு இணைத்து சங்க இலக்கியத்தை பார்க்கும் போக்கு சி.என்.அண்ணாதுரையின் எழுத்துக்களில் வெளிப்படுகின்றன.

### 3.8.சி.என். அண்ணாதுரையின் சங்க இலக்கிய வாசிப்பு

#### 3.8.1.பண்டைத் தமிழரின் சிறப்பு

திராவிட இன அடிப்படையில் சங்க இலக்கியத்தை ஆராய்ந்த சி.என்.அண்ணாதுரை தமிழின் தொன்மை, தனித்தன்மை, பெருமை என்ற அடிப்படையில் தனது கருத்துக்களை முன்வைத்தார். “ஈராயிரம் ஆண்டுகட்கு முன்பே பூம்புகாரும், கொற்கை, தொண்டி, முசிரி, எனும் பல்வேறு துறை முகங்கள் கொண்டதாய் விளங்கியது. எந்த நாடோ, எந்த

நாட்டிலோ முரசு மூன்று, தமிழ் மூன்று வகை என்றும் தானை நால்வகை, போர் முறை பல்வேறு வகை, கருவிகள் பலப்பல என்றும் வகுத்து வைக்கப்பட்டிருந்தனவோ, எந்த நாட்டிலே நிலமே ஐவகையாக இயல்பும் எழிலும் பயனும் கருத்தில் கொண்டு வகுக்கப்பட்டு இருந்ததோ, எந்த நாட்டு முத்தும் பவழமும் பிறநாட்டுப் பேரரசர்கள் தமது காதலைப் பெற்ற கட்டழகியர்க்குக் காணிக்கையாக்கிக் களித்தனரோ, எந்த நாட்டுப் புலவர்கள் புவியாளுவோரையும் துச்சமென்றெண்ணி அறநெறிக்கு மக்களை அழைத்துச் சென்றனரோ, எந்த நாட்டிலே முகிலின் முழக்கமும் முழவின் ஒலியும், மின்னல் ஒளியும் கன்னல் சுவையும், ஆடலழகியரின் கடையிடையும் ஆற்றலரசர்களின் கட்டாரியும் கொல்லவும் வெல்லவும் பயன் பட்டனவோ, எங்கு,

நற்றிணை நல்ல குறுந்தொகை
ஐங்குறு நூறு, ஒத்த பதிற்றுப்பத்து
ஒங்கு பரிபாடல்
கற்றறிந்தார் ஏத்தும் கலியோடு
அகம் புறம் என்று
இத்திறத்த எட்டுத் தொகை

என்றபடி, பேரிலக்கியங்கள், கற்றோர் ஈட்டிய கருவூலமாக உளதோ, அந்த நாடு, எட்டுத் திக்கும் ஒரு காலத்தில் புகழ்க் கொடி பட்டொளி வீசிப் பறந்திட்டதாம்"[57] என்கிறார் அவர்.

பழந்தமிழகத்தின் வரலாற்றையும், தமிழர்களின் வீரத்தையும், அவர்களின் போர்முறைகளையும், வாழ்வியலையும், செல்வச்செழிப்பையும், சங்க இலக்கியச் சிறப்பையும் தனக்கே உரிய தனித்தன்மையுடன் தமிழரின் இன உணர்வை வளர்க்கும் விதமாகக் கூறுவதைக் காண முடிகிறது.

### 3.8.2.சங்க இலக்கியம் வெகுசன மக்களின் இலக்கியம்

சங்க இலக்கியத்தை வெகுசன இலக்கியமாக மாற்றாத நாவலர்களையும், புலவர்களையும் சாடுவதைக் காண முடிகிறது. "நாவலர்களும், பாவலர்களும் சங்க இலக்கியங்களைச் சுற்றி நாலு பக்கமும் வேலிகள் அமைத்து, இங்கு எட்டாத அளவுக்கு எட்டடி உயரத்தில் தடுப்புச் சுவரை எழுப்பி வைத்துக்கொண்டு "உள்ளே ஆடுது காளி, வேடிக்கைப் பார்க்க வாடி" என்பது போலத் 'தொல்காப்பியத்தைப் பாரீர். ஆதன் தொன்மையைக் காணீர்' என்றால் அதனிடம் யார் அணுகுவார்? சங்க இலக்கியங்களை

வீட்டை விட்டு வெளியேற்றி, நாட்டிலே நடமாட விட வேண்டும். நடன சுந்தரிகளாகச் சிறு சிறு பிரதிகள் மூலம், தொல்காப்பியக் கருத்துகளைத் தொகுத்து வெளியிட்டால்தான் தொல்காப்பியம் சிறு சிறு குழந்தைகளாக ஒவ்வொருவருடைய மடியிலேயும், மனத்திலேயும் தவழும். ஒவ்வோர் இல்லமும் இலக்கியப் பூங்காவாகக் காட்சியளிக்கும். இன்றைய புலவர்கள், உண்மையிலேயே இனிமையையும், எளிமையையும் சங்க இலக்கியத்துடன் சேர்த்து மக்களுக்கு ஊட்டியிருப்பார்களானால், சங்க காலப் புலவர்களைப் போற்ற வேண்டும் என்ற எண்ணம் அவர்களுக்கு இருக்குமானால் அவர்கள் ஒவ்வோர் இல்லத்தையும் இலக்கியப் பூங்காவாக்கும் உழவர்களாக இருந்திருக்க வேண்டும். ஆனால், அப்படியில்லை என்பதை நினைக்கும்பொழுதுதான் அவர்கள் இவ்வளவு நாள்களாக நாட்டுக்குச் செய்தது தொண்டு அல்ல, துரோகம் என்று எண்ண வேண்டியிருக்கிறது”[58] என்று கடுமையாகச் சாடுகிறார்.

இதுபோன்ற சி.என்.அண்ணாதுரையின் பேச்சுக்கள் சங்க இலக்கியம் பற்றிய நூல்கள் பெருமளவு வெளிவரக் காரணமாக இருந்தது. அதுமட்டுமில்லாமல் அதைத்தொடர்ந்து, சங்க இலக்கியம் தொடர்பான ஆய்வுகள், எளிய உரைகள். கட்டுரைகள் போன்றவை வெளிவரத் தொடங்கின.

### 3.8.3.மதச்சார்பற்ற இலக்கியம் (சங்க இலக்கியம்)

“தேசியம், சனநாயகம், மதச்சார்பற்ற தன்மை ஆகியவற்றைக் குறிக்கோள்களாகக் கொண்ட திராவிட இயக்கம் மதச்சார்பற்ற இலக்கியத்தைத் தேடியது. அதற்குச் சரியாகக் கிடைத்த சங்க இலக்கியத்தை விதந்து விதந்து பேசியது. சங்க இலக்கியத்தின் வாயிலாகத் தமிழர் வரலாற்றைக் கட்டும் வேலையைச் செய்தது”[59] என்பர்.

தமிழ் இலக்கியத்தில் ஆரியம் ஆதிக்கம் செலுத்துவதை விரும்பாத சி.என்.அண்ணாதுரை, இதனை,“தமிழருக்குத் தமிழ்நெறி, தமிழ்முறை, ஒழுக்கம், வீரம், கற்பு, காதல் எனும் பண்புகளைத்தரக் கூடிய கலையாக இருத்தல் வேண்டுமேயொழிய, வேறோர் இனத்தைப் புகழ்வதும் அதற்கு ஆதிக்கமளித்துத் தமிழ் மக்கள் மனதிலே தன்னம்பிக்கையற்றுப் போகும்படியும், தமது இனத்தைப்பற்றியே தாழ்வாகக் கருதிக்கொள்ளும் படியான நிலைமை உண்டாக்கும் கதை, காவியம், இலக்கியமென்பவைகளைக் கொளுத்தவேண்டுமென்று நாங்கள் கூறுகிறோம். கலை, இலக்கியம், கற்பனை நூல், ஆகியவற்றின் மீதெல்லாம் எங்களுக்கு விரோதம் இல்லை.

தொல்காப்பியத்தைத் தொட்டோமில்லை, நற்றிணையை, நல்ல குறுந்தொகையைக் கற்றறிந்தோர் ஏற்றுங் கலியை, அகத்தைப் புறத்தை அழிக்கப் புறப்பட்டோமில்லை. ஆரியத்தைப் அழகுறப் புகுத்திப் தமிழரை அழிக்கும் நூற்களையே கண்டிக்கின்றோம்”[60] என்பார்.

இவ்வாறு கூறுதன் மூலம் ஆரிய சட்டத்தையும், கலையையும் எதிர்க்கும் விதமாக கம்ப இராமாயணத்தை முன்வைத்து பேசியிருப்பதைப் புரிந்துக்கொள்ள முடிகிறது. இவற்றிற்கு மாற்றாகச் சங்க இலக்கியத்தை முன் வைப்பதைப் பார்க்க முடிகிறது.

### 3.8.4.ஆரிய திராவிட கலப்பு

“தமிழர், தனி இனத்தவர் பன்னெடுங்காலம் பண்புடன் வாழ்ந்து, பாரோர் புகழ வாழ்ந்து, காலச் செல்வங்களைக் கண்டவர். இந்தியா எனும் உபகண்டத்திலே பல இனங்கள் தத்தம் கலைகளுடன் உள்ளன. தமிழ் இனத்துக்குத் தனிக்கலை ஒன்று உண்டு. வெவ்வேறாகவும், தனித்தனியாகவும், தனிப்பண்புகளுடன் விளங்கி வந்த ஆரிய திராவிடக் கலைகள் கலக்க நேரிட்டது, ஓர் பெரும் கேடாக முடிந்தது. அத்தகைய கலப்பு நூற்களே கம்ப இராமாயணமும், பெரிய புராணமும். தமிழனுக்குத் தனிக்கலை உண்டென்றேன். சங்க நூற்கள் அக்கலைச் செல்வத்தைக் காட்டுகின்றன. தனியான கலையுடன் தனியான வாழ்வும், தனியரசும் பெற்று வாழ்ந்த தமிழர், பின்னர் தாழ்ச்சியுற்றுத் தன்மானம் இழந்து தன்னரசு இழந்ததற்குக் காரணம். கம்ப இராமாயணம், பெரிய புராணம் போன்ற ஆரியக் கற்பனைகளை உள்ளடங்கிய கலப்புக்கலையைத் தம் தலைமேற் கொண்டதனால்தான் என்று நாங்கள் உறுதியாக நம்புகிறோம்”[61] என்பார். இக் கூற்றின் மூலம் தமிழர்களுடைய பண்பாட்டையும், மரபையும், கலைகளையும் சங்க இலக்கியம் மூலமாகக் கட்டமைப்பதை அறிய முடிகிறது. மேலும் தமிழகத்தின் செல்வச் செழிப்பையும், வீரத்தையும் படம் பிடித்துக் காட்டுகிறார் அண்ணாதுரை.

### 3.8.5.சங்க காலம் வளமான பொற்காலம்

“யவன நாட்டுக் கலங்கள் தமிழ் நாட்டுக் கடற்கரையை முத்தமிட்டன. தமிழ்நாட்டு முத்துக்களை இத்தாலி நாட்டு எழிலரசிகள் தங்களைக் கொடுத்து வாங்கினார்கள். தமிழ் நாட்டு மன்னன் ஒருவன் ஈழநாடு சென்று வெற்றி பெற்றான். இமயத்தில் சேர, சோழ, பாண்டியர்களது இலச்சினைகள் பொறிக்கப்பட்டது. தமிழர்களை எதிர்ப்பவர்கள் கிடையாது. எட்டுத் திக்கும் வெற்றி முரசு கொட்டினார்கள். போரும் காதலும் அவர்கள்

போற்றிய பொருள்கள் என்றெல்லாம் பண்டைத் தமிழ்நாட்டின் நிலையைப் பற்றி எடுத்துக் கூறினால்தான், பாமர மக்களும் நாம் ஆசைப்படுவதுபோல் மீண்டும் தமிழ்நாட்டில் செல்வம் தழைக்க வேண்டும், நல்லெண்ணங்கள் நிலைக்க வேண்டும் என்ற நினைப்பைப் பெற முடியும்."[62] இவ்வாறு பாமர மக்களை முன்வைத்து வளமார்ந்த தமிழகத்தைக் காட்டுவதென்பது சமகால தமிழகம் ஆரியத்துக்கு எதிராக எழுச்சியுற வேண்டும் நோக்குடையது ஆகும்.

### 3.8.6.ஆரியர் உயர்வும் தமிழர் தாழ்வும்

தமிழருக்கான இலக்கியமாக சங்க இலக்கியத்தை முன்வைக்கும் அதேவேளையில் அதற்கு எதிராகக் கம்பராமாயணத்தையும், பெரியபுராணத்தையும் முன்வைத்தது திராவிட இயக்கம். ஆரிய மார்க்கத்தையும். கலையையும் கொண்டுள்ள இந்நூல்கள் அதைக்கற்று மக்கள் வாழ்க்கையிலே அமைத்துக்கொள்ளும் கொள்கைகளால் ஆரியர் உயரவும் தமிழர் தாழவும், ஆரியர் ஆதிக்கம் செலுத்தவும் தமிழர் அடிமையாகவுமான விளைவுகள் நேரிட்டன. இதனால், தனி உரிமைக்கோ, தன் மானத்துக்கோ, தன்னரசுக்கோ போரிட முடியாத நிலை பெற்றனர். இதனால், ஆரியநெறி கூறும் கம்ப இராமாயணம் பெரிய புராணம் பொசுக்கப்படவேண்டும். ஆனால் சங்க இலக்கியம் 'தங்களின் தனிக் கலையை விளக்கும் நூல்' என்பதனாலேயே தமிழருக்கான இலக்கியமாக அடையாளப்படுத்துவதை பார்க்க முடிகிறது.

"இராமாயணம் வைணவருக்கு மேலான நூல், பெரிய புராணம் சிவனடியார்களின் பக்தியை விளக்கிடும் நூல். சைவம் வைணவம் எனும் இருமார்க்கங்களையும் பின்பற்றும் தமிழ் மக்கள், முறையே பெரிய புராணம், கம்ப இராமாயணமாகிய இரு நூற்களையும் தமது மார்க்க நூல்களாகக் கொள்கின்றனர். வைணவம், சைவம் எனும் இரண்டும் இந்து மார்க்கத்தின் கிளைகள். தமிழர் இந்துக்களல்லர் தமிழருக்குத் தனி நெறி உண்டு, என்றாலும் இவ்விரு மார்கங்களையும் தழுவிக்கொண்டு தமிழர் தம்மை இந்துக்கள் என்று கருதி வருகின்றனர். நெறியை விட்டு ஆரிய நெறியாகிய இந்துமார்க்கத்தைக் கொண்டு தம்மை இந்துக்கள் என்று கருதிக் கொள்வதால் தமிழர் தாங்கள் தனி இனம் என்பதை மறந்து, இந்துக்களில் ஒர் பகுதி என்று எண்ணித் தன்மானத்தையும் தண்ணரசையும் இழந்தனர். இதற்குக் கம்ப இராமாயணமும் பெரிய புராணமும் பயன்படுகின்றன. எனவே, அவைகளைக் கொளுத்திக் காட்டித் தமிழரே, இவை இந்துக்களுக்கு மார்க்க நூற்கள், தமிழருக்கல்ல,"தமிழருக்குத் தனி நெறியும் கலையும் உண்டு" என்று இன எழுச்சியை

உண்டாக்கித் தமிழருக்குத் தனியரசு கிடைக்கச் செய்ய வேண்டுமென்பது எமது திட்டம்”[63] என்கிறார். இங்கு தமிழர்கள் இந்துக்கள் இல்லை என்பதையும், பெரிய புராணமும், கம்ப இராமாயணமும் ஆரிய மார்க்கத்தை பரப்ப உதவும் இந்து மதத்தின் கிளை நூல்கள் என்பதையும் சுட்டிக்காட்டுகின்றார். தமிழருக்கான தனி நூலாக சங்க இலக்கியத்தை முன்வைக்கின்றார்.

சங்க இலக்கியம் அடித்தட்டு மக்களிடம் சென்று சேரவேண்டுமென்றால் கம்ப இராமாயணமும், பெரிய புராணமும் ஒழிக்கப்படவேண்டும் என்ற கருத்தை சி.என்.அண்ணாதுரை முன்வைக்கின்றார். “கலப்புக் கலையும் ஆரியப் பொய்க் கற்பனைகளும் புகாமுன்பே, தமிழன், தனியான கலையை முதல், இடை, கடைச் சங்க காலங்களிலே வளர்த்தான் என்பது யாவருமறிந்ததே. தொல்காப்பியம் போன்ற தமிழ் நூற்களை, சிலப்பதிகாரம் போன்ற இனிமை பயக்கும் கலைகளை… அவைகள் எல்லாம் பாமர மக்களுக்குத் தெரிய முடியாதபடியும், அவைகளைப் படித்துப் பாமரர் பயன்பெற முடியாத படியும் செய்யும் ஆரியக் கலைகளான கம்ப இராமாயணம், பெரிய புராணம் ஆகியவை ஒழிந்தால், தமிழன் தமிழ்க் கலை பயிலவும் போற்றவும் முற்படுவான்”[64] என்கிறார்.

இதேபோல, சங்க காலம் பொற்காலமென்பதைச், “சங்க காலத்திலுள்ள தமிழ் நாட்டின் நினைப்புக்கு இந்நாள் தமிழ்நாட்டின் நினைப்பு எவ்வளவோ தாழ்ந்திருக்கிறது எனது வாதத்திற்குத் துணையாக அகநானூறு, புறநானூறு, குறுந்தொகை, பட்டினப்பாலை, தொல்காப்பியம் ஆகியவைகளைக் சாட்சிக்கழைக்கிறேன். இக்காலத்தில் உலவும் நாசத்தை விளைவிக்கும் நம்பிக்கைகளை அக்காலத்தில் காண முடியாது, தமிழர் எண்ணம் பிறருக்க அடிமையாகதிருந்த காலத்தில் எப்படிக் காணமுடியும்? அகநாநூறு புறநானூறுகளில் எந்தத் தமிழ்நாட்டு மன்னனாவது போருக்குக் கிளம்பும்பொழுது, படை கிளம்பும் முன் யாகம் செய்தான் என்றோ, பரமசிவத்திடம் பாசுபதம் பெற்றான் என்றோ எங்கேயாவது பாடலுண்டா? அல்லது படை கிளம்பி எதிர்களுடன் போரிடும் பொழுதாவது வருணாஸ்திரம், வாயு வாஸ்திரம், மோகனாஸ்திரம், அக்கினியாஸ்திரம் ஆகிய அஸ்திரங்களில் எந்த அஸ்திரமாவது எதிரியை வீழ்த்தியபோது உதவியதாக எங்காவது பாடல் இருப்பதாகச் சொல்ல முடியுமா? பின் எப்படி போர் நடந்திருக்கும்? தமிழ் மன்னர்கள் எப்படி வெற்றி பெற்றிருப்பர்? போர் என்றதும் வீரர்கள் கூடியிருப்பர், பட்டாளம் அணிவகுக்கப்பட்டிருக்கும், போர் முரசு கொட்டியிருப்பர், வஞ்சிகள் கூடியிருப்பர்,

பாணங்கள் தொடுத்திருப்பர், தூதுவர் சென்றிருப்பர், கொடி இறக்கப் பட்டிருக்கும், அகழிகளை வெட்டியிருப்பார்கள், வாய்க்கால்களை தாண்டியிருப்பார்கள், ஆறுகளை நீந்தியிருப்பார்கள், ஆரண்யங்களைக் கடந்திருப்பார்கள், அவர்கள் தோள் வீங்கியிருக்கும், கண்கள் சிவந்திருக்கும், வேல் எறிந்திருப்பர், அது எதிரியின் விலாவில் பாய்ந்திருக்கும், வெற்றி கிடைத்திருக்கும், பரணி பாடியிருப்பர்"[65] என்று கூறுவதன் மூலம் ஆரிய நாகரிகக் கலப்பற்ற காலமாகவே சங்க காலத்தைப் பார்க்கிறார். தமிழன் தனது கலாசாரம், பழக்க வழக்கம். பண்பு, நாகரிகம் போன்றவைகளில் உயர்ந்து இருந்தான்: ஆனால் இன்றைக்கு ஆரியரின் வருகையினால் தாழ்வுற்றார் என்கிறார். இப்போக்குத் திராவிட இயக்கச் சிந்தனைக்கு வலுவூட்டுவதாக அமைகிறது.

மக்கள் மனதில் படிந்திருக்கும் மூட நம்பிக்கைகளை களைந்து, தமிழ்ப் பண்பாட்டிற்கு ஏற்பக் கருத்துக்களைக் குடியேற்ற வேண்டும். இந்தச் சிந்தனையை பாமர மக்களிடம் கொண்டு சேர்க்க வேண்டும் என்பதனை, "அகநானூறு, புறநானூறு இவைகளைப்பற்றி மக்களில் பலர் அறியமாட்டார்கள். அவற்றைப்பற்றிய சிறந்த கருத்துக்களையெல்லாம் தொகுத்து மக்களுக்கு நூல் வடிவாகத் தரவேண்டும். நல்ல நூல்கள் பரவினால் வெளி உலகம் தெரியாதிருக்கும். மக்கள் புதிய அறிவைப் பெற்று விழித்துக் கொள்வார்கள்."[66] என்கிறார். இது போன்ற திராவிட இயக்கத்தினரின் பேச்சுக்கள், சங்க இலக்கியம் பற்றிய நூல்கள் பெருமளவுக்கு வெளிவரக் காரணமாக இருந்திருக்கின்றன.

### 3.8.7.சமகால மக்களுக்கு வளமான பண்டைய தமிழகம்

தமிழர் பெருமை பேசும் விதமாக "அவன் பிறந்த நாட்டில் காவிரி வெள்ளம் கரைபுரண்டு ஒடுகிறது. அவன் வாழ்ந்த நாட்டில் வைகை இருக்கிறது. வளம் பலவும் உண்டு. அவனுடைய மூதாதையரில் ஒருவனுக்குப் பெயர் சோழன் மற்றவனுக்குப் பெயர் சேரன் இன்னொருவனுக்குப் பெயர் பாண்டியன். இவர்கள் கட்டிய கோட்டைகளின் இடிந்த காட்சிகளை இன்றும் நாம் பார்க்கின்றோம்"[67] இது போன்ற மூவேந்தர்களைப் பற்றிய பேச்சுக்கள் தமிழர்களை எழுச்சி பெறச் செய்துள்ளன.

இவ்வாறு, தமிழ் மொழியின் ஆற்றல், தமிழர்களின் தொன்மை குறித்துப் பல கருத்துக்களைச் சி.என்.அண்ணாதுரை முன்வைத்தது தி.மு.கழகம் தேர்தலில் ஈடுபடுவதற்கு உறுதுணையாக அமைந்தது. "தி.மு.கழகம் தேர்தலில் ஈடுபடுவது தமிழ்

நாட்டிற்குப் புதிய அந்தஸ்தைத் தேடித் தருவதற்காகத்தான். குட்டக் குட்டக் குனிபவர்கள் தமிழர்கள் என்றிருக்கும் பழியைத் துடைத்து, மறக்குடிப் பிறந்த மாவீரர்கள் தமிழர்கள் என்ற பெருமையை நிலைநாட்டிக்கொள்ளத் தமிழர்களுக்கு அரியதோர் வாய்ப்பு"[68] என்ற கூற்றிலிருந்து உணரலாம்.

சமகால மக்களுக்கு வளமான பழைய தமிழகம் குறித்த கனவுகளை உருவாக்குவதற்கு சங்க இலக்கியம் குறித்த கருத்தைத் துருவித் துருவி நிலை நாட்ட வேண்டிய தேவை திராவிட இயக்கத்தினருக்கு இருந்திருக்கின்றது. "இங்கிருந்தெல்லாம் பாய்மரக் கப்பல்களில் நம்முடைய காடுகளிலே கிடைக்கக்கூடிய அகிலையும் சந்தனத்தையும் நம்முடைய சாலையிலும் சோலையிலும் புள்ளிக் கலாபத்தை விரித்து ஆடிக் கொண்டிருந்த மயிலையும், இவைகளையெல்லாம் ஏற்றி எடுத்துக்கொண்டு ரோம் நாட்டுக்குச் சென்றார்கள் எனது வரலாறு இருப்பது பொய்யென்றா கருதுகிறீர்கள்"[69] என்கிறார் சி.என்.அண்ணாதுரை.

மேலும், அவர் "காரியும் - ஓரியும் ஆண்ட இடத்தின் பெருமை எங்கே? புகழ் எங்கே? செல்வம் எங்கே? சிறப்பெங்கே?"[70] என்கிறார். இப்படித் தமிழரின் தொன்மைச் சிறப்பையும், பொருள் வளத்தையும் வியந்து எழுதிய எழுத்துக்கள் தான், சங்க காலத்தைப் பொற்காலமாக்கத் தமிழர் மனத்திலே பதித்தது என்று கூறலாம்.

தமிழ் மரபை உலகம் தெரிந்து கொள்ள வேண்டும் என்பதற்காக 'தமிழ் நாடு' என்ற பெயர் மாற்றம் தேவை என்பதை "சேர – சோழ – பாண்டியரையும் - சிலப்பதிகாரம் - குறளையும் - சீவகசிந்தாமணியையும் - அகநானூறு – புறநானூறும் மற்றவையும் தெரிந்து கொள்ள வேண்டும். ஈராயிரம் ஆண்டுகள் எழிலோடு இருந்த தமிழ் மரபை உலகு தெரிந்து கொள்ள வேண்டும் என்பதற்காக இந்தத் தீர்மானம். அவற்றோடு சேர, சோழ, பாண்டியரையும் தமிழ் மரபையும் மறந்துவிடக் கூடாது என்பதற்காகத்தான் இந்தத் தீர்மானம்"[71] என்கிறார்.

தமிழரின் உயரிய மரபைப் பற்றி பேசும் சி.என்.அண்ணாதுரை,"தனக்கென வாழாப் பிறர்க்குரியாளர் என வாழ்ந்திட்ட மாண்புடைப் பெருமக்கள் மரபு நம்முடையது! ஈராயிரம் ஆண்டுகட்கும் முன்னரே இந்த உயர்பண்பு நம்மகத்தே – தமிழகத்தே ஊடுருவிப் பாய்ந்திருந்ததை இன்றும் உணரலாம், இதனையே பழம்பெரும் சங்கநூலான புறநானூற்றில் காணலாம்.

“உண்டால் அம்ம இவ்வுலகம்

தமக்கென முயலா நோன்றாள்

…. …. …. …. …. …. ….

பிறர்க்கென முயலுநர் உண்மை யானே”

வளமும் வண்மையும் பழமையும் பண்பு படைத்திட்ட முன்னோர் வழிவந்தோர் நாம். காணக்கிடைக்காத கருத்துக் கருவூலங்களைப் படைந்தவர் நம்மவர்! இத்தகு மேதகு பாரம்பரியச் சொத்து நம்மிடம் மிகவும் உண்டு”[72]. இப்படித் தமிழரின் தொன்மைச் சிறப்பையும், பொருள் வளத்தையும் வியந்து கூறுகிறார்.

தமிழரின் மொழி, இனப்பெருமிதம் குறித்த கருத்துக்களின் வளர்ச்சிக்கும் ஐரோப்பிய அறிஞர்களே காரணமாக அமைந்தனர் எனலாம், திராவிட மொழிகள் குறித்த மேலை நாட்டினரின் ஆய்வுகள் குறிப்பிடத்தக்க எழுச்சியினைத் தமிழ் அறிஞர்களிடம் தோற்றவித்தது. பெர்சிவல், வின்சுலோ, கால்டுவெல், போப் முதலிய அறிஞர்களே இத்திராவிட மொழி குறித்த உணர்வுந்துதலுக்கு உரமூட்டினர். தமிழ் அறிஞர்களும், எழுத்தாளர்களும் தமிழ்மொழி குறித்த தொல்பழம் பெருமைகளைக் கண்டறியவும், கண்டறிந்தவற்றை விளக்கவும் இவ்வறிஞர்களின் கருத்துக்கள் பெருமளவுக்குத் தூண்டுதலாய் அமைந்தன. இதனை, “நற்பேரிலக்கியங்கள்! அரும் பெரும் நுண்கலைகள்! சிந்தையைக் குளிர்வித்திடும் சிற்ப நுட்பங்கள், கட்டிக்கலைகள்! மானிட உலகினுக்கே வழிகாட்டிடும் வாழ்வொழுக்க விதிகள் - நெறிகள் நியதிகள் மலர்ந்து மலிந்த நாடு, நமது நாடு! இன்று இவையெல்லாம் காலவெள்ளத்தால் சிதறுண்டு கிடக்கின்றன! வேறுசில, காலப் பெருஞ் சுழலில் தத்தளித்த படி உள்ளன! போதிய கவனிப்பும், கண்காணிப்பும் அற்ற காரணத்தால் தூசுதும்பு படிந்து அழுக்குத் தழும்பேறித் தடித்துக் கிடக்கும் கருத்துக்களும் உள்ளன. எனவேதான் நமது பண்டைய வாழ்வுப் பெருமைகளையும், பண்பாட்டு மரபுகளையும், அரசு முறைகளையும் பற்றி நமக்குத் தெரியக் காணோம்! நம்மைப் பற்றிய வரலாற்று விபரங்களை வெளிநாட்டுச் சரித்திராசிரியர்களிடம் கற்றுக் கேட்டிடும் அவல நிலையில் உள்ளோம்! இதிலிருந்து நாம் மீள வேண்டாமா! எப்போது!”[73] என்கிறார். இங்கு பண்டைத் தமிழர் உன்னதமான உயர்ந்த வாழ்க்கையிலே இருந்தனர், அந்நியரால் அவர்களுடைய உன்னத வாழ்க்கை நாசமாக்கப்பட்டது. ஒற்றுமையும் நாகரிகமும் நிறைந்த தமிழர் சமுதாயம் வேற்றாரால் உருக்குலைந்தது. தமிழர்களின் பண்டைப்பண்புகள் மறைந்தன என்ற கருத்தை முன்வைக்கின்றார்.

சங்க இலக்கியத்தில் காணப்படும் கருத்துக்களும், கொள்கைகளும் தான் இன்றைக்கு நவநாகரிகக் கருத்துக்களாகவும் - புத்தறிவுக் கொள்கையாக இருக்கின்றன என்பதை "நவநாகரிகக் கருத்து – புத்தறிவுக் கொள்கையென்றெல்லாம் இன்று உலகோர் முன்னர் அறிமுகப்படுத்தப்பட்டிடும் கருத்துக்கள் பலவும் பெரிதும் நமது பண்டைய இலக்கியங்களில், மிகத் தொன்மையான காலந்தொட்டே இருப்பன - இருந்து வருவன என்பதனைப் பாரறியப் பறைசாற்றிடுங்கள்"[74] என்பர்.

"சங்க இலக்கியம் உலகப் பொது உணர்வுகளை, பொது உண்மைகளைப் பாடுவதாக 'தீதும் நன்றும் பிறர்தர வாரா' என்கிறது உண்மையான ஒற்றுமை உணர்வினை 'யாதும் ஊரே, யாவரும் கேளீர்' என்ற பொன்மொழியில் வடித்து ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே தந்த தமிழரின் பெருந்தன்மையை எண்ணி – எண்ணி நெஞ்சம் விம்முகிறது. யாதும் ஊரே, யாவரும் கேளீர் என்று பாடிய புலவர் தீதும் நன்றும் பிறர் தர வாரா – என்றும் அடுத்த அடியில் பாடியிருக்கிறார்"[75] இங்கு தமிழ் மக்கள் தொன்மைச் சிறப்புடைய நாகரிகத்தை உடையவர்கள் என்ற கருத்து முன்வைக்கப்படுவதைக் காணமுடிகிறது.

### 3.8.8.மறக்குடிப் பெண்கள்

அக்காலத்துத் தாய்மார்கள் சிறந்த மறக்குடிப்பெண்கள் என்பதை "காட்டுப்புறத்தில் தினை பொறுக்கச் சென்ற கிராமத்துத் தமிழ் சீமாட்டியொருத்தி மீது புலி பாய்ந்து வந்தபோது நம்மால் முடியுமா? என்று அவள் நினைக்கவில்லை கையில் கிடைத்த முறத்தால் அதை அடித்து விரடினாள்."[76] இவ்வாறு, தமிழகம், முன்னாளில் அறிவாற்றல் மிக்க வீரத்தாய்மார்களை உடையதாகி, அருமையும் பெருமையுங் கொண்ட செயல்களுக்குரிய நிலைக்களமாயிருந்தது என்று கருத்துரைக்கிறார்.

மேலும், பண்டைத் தமிழரின் வீரத்தைப் பற்றிக் கூறும்போது, "ஒரே மகன் - தன் குலக் கல் நாட்ட வந்த குலவிளக்கு – அவனைப் பெற்றெடுத்த தாயோ நரை மூதாட்டி! களத்துக்குச் சென்ற தன் காளையைக் காணத் துடித்து வருகிறாள் - உயிருடன் தப்பினானா, வீடு வந்து சேர்வானா என்ற ஆசையோடு அல்ல! புயலெனப் பாய்ந்தானா, புலியெனக் கிழித்தானா, புகழ் மரணம் அடைந்தானா அல்லது புல்லனாகிப் போனானோ! புறமுதுகிட்டானோ என்று கண்டு தெளிந்துக்கொள்ளும் நோக்குடன்! தேடிப் பார்க்கிறாள்! திண்தோள் வீரர்கள் சாய்ந்து கிடக்கும் அச்சமர்க்களத்தில் திகைக்கிறாள் - தன்

மகனைக் காணாது அப்போது, ஒருவர் காட்டுகிறார் அவளது மகன் காற்றெனச் சுழன்று பகை வரைக் கொன்று பாசறையில் உயிர் துறந்தான், மார்பிலே ஈட்டி தாங்கி – என்பதாக வீரஞ் செறிந்த இக்கவிதை ஒவியம் - தீந்தமிழின் புறநானூறு செப்பும் ஒரு சிறு துணுக்கு”[77] இவ்வாறு தமிழரின் வீரம், தமிழரின் தொன்மை போன்ற கருத்துக்கள் முன்வைக்கப்படுகின்றன.

மேலும், “வீரம் மட்டுமல்ல, விவேகமும் காதலும் தவழ்ந்து விளையாடியது, இத்தண்டமிழ்ச் சோலையில், களிறு எறிந்து, தன் காதலியைக் கைபிடிக்கும் காளைகள், மடலேறி மணவினை நடாத்திய மாவீரர்கள் வாழ்ந்தனர்! வாழ்வில் இன்பமும் வீரமும், குதித்துக் கூத்தாடியது! குறிஞ்சியும் மருதமும், முல்லையும், நெய்தலும் காதற்கிளிகளின் கவிதைத் தமிழ்ப் பேச்சால் களிப்படைந்து கிடந்தன – என்று அழகுபடக் கூறும் அகமும், அவர்தம் வீரஞ்சாற்று புறமும், இன்பத் தொகையெனும் எட்டுத் தொகையும், பாலின் சுவையெனும் பத்துப்பாட்டும்”[78] என்று பலவாறு விதந்து பேசுகிறார். சங்க காலத்தை பொற்காலமாகவும் சங்கத்தமிழர் வாழ்க்கையை உன்னதமான வாழ்க்கையாகவும் பார்க்கும் போக்கு இவரிடத்தில் இருப்பதை பார்க்க முடிகிறது.

பண்டைய தமிழ் மக்கள் ஆராய்ச்சி திறன் மிக்கவர்களாக இருந்தார்கள் என்று நிறுவ முயலுகிறார் அண்ணாதுரை. “இன்றுள்ள பல நாடுகள், பெயரற்ற இடங்களாக இருந்த நாட்களில்! இன்றுள்ள பல நாட்டு மக்கள், காட்டில் திரிந்த காலத்தில்! எத்துணை ஆராய்ச்சித் திறன் இருந்திருக்க வேண்டும், அந்த நாட்களில், இயல்புகண்டு இடங்களைப் பிரிந்து, பெயரிட்டுக் காட்ட”[79] என்று கூறி விளக்கிச் செல்கின்றார்.

தமிழகம், தனி அரசோச்சிய காலத்தில் வீரம் குன்றாமல் அறம் போற்றப்பட்டது. இயற்கையுடன் உழைப்பும் கலந்து, வளம் கொழித்திருந்தது என்ற கருத்தைக் கூறும் விதமாக “நெஞ்சு உரமும் நேர்மைத் திறனும், கடமை உணர்ச்சியும் கொண்ட அதிகாரிகள், பண்டங்களைப் பரிசீலனை செய்து ‘உல்கு’ (சுங்கம்) வாங்கி, புலிக்கொடி முத்திரையிட்டு, ஒரு புறம் வைத்தனர் - இதை வைகல் தொறும் செய்தனர் – நாளெல்லாம் செய்தனர். இத்தகைய வளமிருந்ததால், சதங்கை, பரியகம், நூபுரம், பாடகம், காற்சரி இவைகளைக் காலில் அணிந்து பொன்வளை, சித்திரவளை, மணிவளை, சங்கு வளை, பவழ வளை, இவைதமைக் கையில் பூண்டு, கழுத்திலே வீரச் சங்கிலி, சவடி, சரப்பளி, முத்தாரம் போட்டுக்கொண்டு, வலம்புரி, பூரப்பாளை போன்ற

அணிகலன்களைத் தலையிலே அணிந்துகொண்டு, பொன்னார் இழையும் துகிலும் பூண்டு பெண்கள், ஆடியும் பாடியும் மகிழ்வர்"[80] என்கிறார் இதன் மூலம் 'சங்க காலம்' செல்வ வளம் மிகுந்திருந்த காலமாகக் காட்ட அண்ணாதுரை முயலுவது புலனாகிறது.

### 3.8.9.பல்வேறு வகையான போர்க்கருவிகள்

பழந்தமிழர் போர்த்திறனைப் பற்றிக் கூறும் சி.என்.அண்ணாதுரை, பல்வேறு வகையான போர்க்கருவிகளை வரிசைப்படுத்துகிறார். "தமிழர்கள், அந்த நாட்களிலேயே நால்வகைப் படைகளைக் கொண்டிருந்தது மட்டும் அல்ல, கடலரண், காட்டரண், மலையரண், மதிலரண் எனும் பாதுகாப்புகளையும் பெற்றிருந்தனர். போர் முறைகளிலேயும் புதுக்கருத்துகள் கொண்டதனால், அற்றை நாளில் தமிழர் பெற்ற வெற்றிகள், இன்றும் எண்ணி வியக்கத்தக்கனவாக உள்ளன. நெடுந்தொலைவு படையுடன் சென்று போரிட்டு வெற்றி பெற்ற வீரக்கதைகள் பலப் பல. போரிலே வெற்ற காண வீரம், அடிப்படை என்பது மறுக்கொணாத உண்மை என்றாலும், போர்க்கருவிகளின் தன்மையும் மிகவும் முக்கியமானது என்பதை ஆய்தறிந்து உணர்ந்திருந்ததால், பிறநாட்டாரிடம் இல்லாத பல்வேறு வகையான போர்க்கருவிகளைக் கொண்டிருந்தனர்.

வளைவிற்பொறி, தள்ளி வெட்டி, கருவிரலூகம், களிற்றுப்பொறி, கல்லுமிழ் கவண், விழுங்குப் பாம்பு, கல்லிடு கூடை, கழுகுப் பொறி, இடங்கணி, புலிப் பொறி, தூண்டில், குடப்பாம்பு, ஆண்டலையடுப்பு, சகடப்பொறி, கவை, தகர்ப்பொறி, கழு, அரிநூற்பொரி, புதை, குருவித்தலை, ஐயவித்துலாம், பிண்டிபாலம், கைப்பெயர் ஊசி, தோமரம், எரிகிரல், நாராசம், பன்றி சுழல்படை, பனை, சிறுசவளம், எழு, பெருஞ்சவளம், மழு, தாமணி, சீப்பு, முசுண்டி, கணையம் முசலம்"[81]

இத்தனை விதமான புதுமுறைப் போர்க்கருவிகள் மட்டும் இல்லாமல் இத்துடன், "தமிழரிடம், தனியாக வீரர் தமதாற்றலை விளக்கப் போர்வாளும் கேடயமும் ஈட்டியும் உண்டு. தமிழரை எதிர்த்த மாற்றார்களிடமும் பிற நாட்டவரிடமும் வேல், வில், அம்பு, சிறுவாள், கொடுவாள், அரிவாள், ஈர்வாள், உடைவாள், கைவாள், கோடரி, ஈட்டி, குறுந்தடி என்பன"[82] என போர்கருவிகளைப் பட்டியலிடுகிறார். இதன் மூலம் பழந்தமிழர் தனித்த வீரச் சிறப்புக் கொண்டிருந்தனர் என்று நிறுவ முயலுகிறார் அண்ணாதுரை.

நாடும் மொழியும் உலகில் உருவாகாதபோது மிகப் பெரிய இலக்கியத்திற்கு உரிமை படைத்தவர்கள் தமிழர்கள் என்பதை, "புறநானூற்றைப் பார்த்துக்

கொண்டிருந்தேன். படித்தேன் என்று கூற மனமில்லை. படிக்க வேண்டும் நிரம்ப என்ற ஆர்வம் உண்டு – அவர்களைப் பாடலில் கண்டேன், வியந்தேன். எத்துணைப் பழங்காலத்திலே புறநானூறு எழுந்தது. அக்காலத்திலே, உலகிலே பல நாடுகள் உருவம் கூடப் பெறவில்லை. நாடான பலவற்றிலே மொழிவளம் இல்லை, மொழிவளம் இருந்த இடங்களிலும் இலக்கியம் எழவில்லை. இங்கொன்றும் அங்கொன்றுமாக இலக்கியம் எழுந்த இடங்களிலும், இத்துணைப் புலவர்கள் இருந்ததில்லை, அதிலும் பெண்பாற் புலவர் இங்கு இருந்தது போல, அளவிலாயினும் சரி, தரத்திலாயினும் சரி, மற்ற இடங்களிலே இருந்ததாக எனக்குக் கூறினாரில்லை”[83] என்பர். சி. அண்ணாதுரையின் கூற்று பன்னாட்டு இலக்கிய அறிவைக காட்டுவதோடு, பழங்காலத் தமிழகத்தின் செறிவான புலமைச் செயல்பாட்டை விதந்தோறுதலையும் அறியத் தருகிறது.

### 3.9.சி.என்.அண்ணாதுரையின் சங்க இலக்கிய காட்சிகள்

சங்க இலக்கியங்களில் காணப்படும் இயற்கை வளங்களைக் காட்சிப்படுத்துகிறார். காவிரிப்பூம்பட்டினத்தின் இயற்கை வளத்தைக் கூறும் சி.என்.அண்ணாதுரை, “மாரி பொய்ப்பினும் தான் பொய்யாத பொன்னி ஒடுகிறது. கழனிகளில், விளைச்சல் அமோகமாக! கழனிகளில் கருப்பை அடும் ஆலைக் கொட்டில்கள் உள்ளன, ஆதலால் அந்த நெருப்பினால் ஆம்பல் பூக்கள் கருகி விடுகின்றன. நெற்கதிர்களைத் தின்று தெவிட்டிப் போன நிலையில் எருமைக் கன்றுகள் துயிலுகின்றன! கதிர்களை, அவை தின்று தீர்த்ததால் குறை வந்துள்ளதோ என்றால், அதுதான் இல்லை! நேற்கூடுகளின் நிழலிலேதான், எருமை கன்றுகள் துயில் கொள்ளுகின்றன! தெங்கு, வாழை, கமுகு, மஞ்சள், மா, பலா, இஞ்சி இவை, எங்கும்! நெல்லை உலர்த்தி இருக்கிறார்கள் வீட்டு வாசலில். கோழிகள் தின்ன வருகின்றன. அந்தக் கோழிகளை, மகளிர் பொற்குழைகளைக் கழற்றி எறிந்து விரட்டுகிறார்களாம். இந்த வளம் உள்ளது சோழ நாடு“[84] என்கிறார். இவ்வாறு பண்டைத் தமிழகத்தை வளம் நிறைந்த செல்வம் செழித்த காலமாக பார்க்கப்படுவது இங்கு நோக்கத் தக்கது.

மேலும், பெருங்குன்றூர் பெருங்கௌசிகனார் எழுதிய மலைபடுகடாம் எனும் நூலில் மலைவளத்தை வளம் நிறைந்த பகுதியாக “மழை, வேண்டிய போது பொழிந்து வளமளிக்கிறது. எல்லாம் செழித்து வளருகின்றன! விண்ணகத்து நட்சத்திரங்கள் உதிர்ந்து கீழே சிதறிக்கிடப்பதுபோல, கொல்லைகளிலே, மூசுண்டைக் கொடியின் பூக்கள் உள்ளன. எள்ளு, எத்துணை வளமாக இருக்கிறது என்கிறார். புலவர் ஒரு கைப்பிடியில் ஏழே

காய்கள்தான் அடங்குமாம்! தொட்டதும் நெய் மணம். திணைக் கதிர்களைக் காண்கிறார் – கண்டதும், யானைக் கன்றுகள், விளையாடும்போது, துதிக்கைகளை ஒன்றோடொற்றிணைந்து கொண்டு நிற்பது நினைவிற்கு வருகிறது அவ்விதம் உள்ளதாம், தினைக்கதிர்கள். அவரைப் பூக்கள் சிதறி இருப்பது, தயிர்க்கட்டிகள் வீழ்ந்து கிடப்பதுபோல் இருக்கிறதாம்! மிக வளர்ந்துள்ள கரும்புகள், காற்றினாலே ஒரு பக்கமாகச் சாய்ந்து அசைகின்றன. வேற்படைச் சேனைகள் ஓடுவதுபோலத் தெரிகிறது புலவருக்கு”[85]. இவ்வாறு பத்துப்பாட்டின் சிறப்பினை அதில் இடம் பெற்றுள்ள இயற்கை வளத்தினை குறித்து பேசுவதை காணமுடிகிறது. அவ்வாறு காட்சிகளை வருணிக்கும் முறையிலேயே, சங்க இலக்கியச் சிறப்பை மனதில் காட்சியாக விவரிக்கும் தன்மையைக் காணலாம்.

நெடுநல்வாடையின் சிறப்பைப் பற்றி பேசும் சி.என்.அண்ணாதுரை, “வறிய நிலத்திலே, உள்ளது நெருஞ்சி, சிறிய இலைகள் கொண்டது, கண்ணுக்கினிய பூக்கள் கொண்டது. பூ உதிர்ந்ததும், காய் காய்க்கும், அது முள்ளாகிக் காலில் குத்தும். நெரிஞ்சியோ, புதுமலர் தருகிறது. கண்ணுக்கு இனிமை கிடைக்கிறது. அதே நெரிஞ்சியே முள்ளும் உதிர்க்கிறது. காலில் தைக்கிறது. இதனை எடுத்துக் காட்டி, என் காதலர் எனக்கு இனியது செய்தும் மகிழ்விக்கிறார். அவரே பிறகு இன்னலை விளைவிக்கிறார் எனைப் பிரியும் போது நெரிஞ்சிப்போல! என்று பிரிவுத்துயரை விளக்கிடத் தமிழணங்குத்தான் தெரிகிறது!

நோம் என் நெஞ்சே
நோம் என் நெஞ்சே
புன்புலத்து அமன்ற
சிறி சிலை நெரிஞ்சி
கட்குஇன், புதுமலர்,
முள்பயந்து ஆங்கு
இனிய செய்த நம் காதலர்
இன்னா செய்தல், நோம் என் நெஞ்சே

கண்ணுக்கு இனிமை தரும் புதுமலர் கிடைப்பதும் நெரிஞ்சியில்! முள் பாய்ந்து குத்துவதும் நெருஞ்சியால்! என்று இயற்கை உவமையைக் காட்டி தன் உள்ளத்து நிலையை விளக்கிடும் தமிழணங்கு காண்கிறோம். இத்துணை அளவுக்குப் பிரிவாற்றாமை ஏற்படுகிறது, என்பது அறிந்துத்தான் களம் சென்றனர் – உரிமை காத்திட, மரபு

வாழ்ந்திட!”[86] என்று கூறுகின்றார். இங்கு வெறும் காதலை மட்டும் சொல்லவில்லை அவர் தமிழரின் போர் முறையையும், தமிழர் தம் மனப் போக்குத் தன்மையையும் தெரிவிக்கின்றார். பண்டைத் தமிழர் காதலில் இத்துணை ஈடுபாடும், அதன் மாண்பினிலே சிறந்த பற்றும் கொண்டோரெனினும், நாடு காத்திடப் போர் வந்ததெனின், நள்ளிரவிலும்,தூக்கம் வாராமல் பாசறையில் பணியாற்றினர் பண்டைத் தமிழர் என்பதை தெளிவுப்படுத்துகின்றார்.

மேலும், “தமிழகம் தனி அரசோச்சிய நாட்களிலே, வீரம் குன்றாமல், அறமும் அடுபோரிற் காட்டவேண்டிய ஆற்றலும் குறைவற இருந்ததால், கொற்றம் தழைத்தது, இயற்கையுடன் உழைப்பும் கலந்து, வளம் கொழித்திருந்தது! வாரி வாரி வழங்கிடவும், வண்ணம் பல கண்டிடவும், வாணிபத்தில் சிறந்திடவும், இலக்கியச் செல்வத்தை ஈன்றெடுத்து வளர்த்திடவும் முடிந்தது”[87] என்கிறார்.

பண்டைத் தமிழ்ச் சமூகம் வளம் நிறைந்து, வாழ்க்கைத் தரம் நிறைந்தது, ஆட்சி முறையில் அன்பும் அறமும் தழைத்து வீடெல்லாம் மகிழ்ச்சிக்கூடங்களாகி இருந்தன என்பதை “இங்கு, யானைகொண்டு போரடித்தனர், முத்துக்கொண்டு கழலாடினர், சந்தனம் கொண்டு நெல் குத்தினர், தந்தம்கொண்டு ‘இருக்கை’ அமைத்தனர், கரும்புகொண்டு கூரை வேய்ந்தனர், அறிவுகொண்டு ஆண்டு வந்தனர், ஆற்றல் காட்டி வெற்றி கண்டனர், புலவரைப் போற்றிப் பெருமைபெற்றனர். அத்தகைய நாடு, இன்று பழுதுபட்ட சித்திரமோ, பழங்கதையோ என்று நினைத்திடத்தக்க கோலம்கொண்டுள்ளது, மக்களிற் பெரும் பகுதியினர் ஓலமிட்டு உழல்கின்றனர், ஆட்சியாளர், ‘ஏனென்றால், சிறைவாசம், இம்மென்றால் வனவாசம்’ என்பார்களே, அந்நிலைக்கு வேகமாகத் தாவிக் குதிக்கின்றனர். இந்நிலை மாற, நமக்கெனத் தமிழ்ப் பண்புடன் கூடியதோர் அரசுவேண்டும் என்கிறோம்.”[88] என்கிறார்.

மேலும், “தமிழகத்தின் தனிச் சிறப்பை, தரணி மெச்ச நம்மவர் தனி அரசு நாடாத்திய வரலாற்றினை, நாம் எடுத்துக் கூறி வருகிறோம், மக்களிடையே. அதன் பயனாக ஏற்பட்டு வரும் மகத்தான எழுச்சி கண்டு,மனமகிழ்கிறோம். ஏனோவெனில், நாட்டுபற்று ஊற்றெடுத்தோட வேண்டுமாயின், நாடு நன்னிலையில் இருந்த வரலாறு மக்கட்குத் தெரிந்திருக்கவேண்டும். இல்லையேல், விழிப்பும் இல்லை, எழுச்சியும் ஏற்படாது, விடுதலை உணர்ச்சி இல்லை, வீறிட்டெழுவார் இரார்.”[89] என்று குறிப்பிடுகிறார்.

இவ்வாறு கூறுவதன் மூலம் தமிழ் மக்களின் உணர்வெழுச்சிக்கும், உரிமைகளை பெறுவதற்கும், அதனை நிலை நிறுத்துவதற்கும் பண்டையத் தமிழ் சமூகத்தின் வரலாறு தேவை என்பதை முன்னிறுத்துகிறார். அதனை சங்க இலக்கியத்தின் மூலம் கடந்த கால நிகழ்வுகளை நிகழ்கால தேவைக்கு ஏற்றவாறு கூறியிருப்பதைப் பார்க்கமுடிகிறது.

சங்ககாலத்துப் புலவர்கள் சமூகக் கருத்துக்களை நுட்பமாக எடுத்தாளக்கூடியவர்கள் என்பதை, குறுந்தொகையில் காணப்படும் ஓர் உவமையைக் கொண்டு விளக்குகிறார். “ஒரு தோழன் காதலிலே ஈடுபடுகிறான். உவமையில் நேர்த்தியைப் பாருங்கள்! கட்டுகடங்காத காளை, இருந்தாலும் கட்டுப்படுகிறான் இரு கண்களுக்கு. மனதில் ஏதோ நினைக்கிறான். அதை எதிரேயுள்ள கட்டழகியிடம் சொல்ல முடியவில்லை. எதைப்போல என்றால் காலை நேரம், காட்டிலே ஓர் பாறையிலே வெண்ணெய் இருக்கிறது, கையில் ஊமையன் இதற்குக் காவல், காலைக் கதிரவன், காலையில் எழுந்து தனது இளங் கதிர்களைப் பாய்ச்சுகிறான். வெண்ணெய் உருகுகிறது. வெண்ணெய் உருகுவதைப் பார்க்கிறான். பார்த்ததும் ஐயோ! வெண்ணெய் உருகுகிறதே என்று கூவலாம். ஆனால், வாயில்லை. நேரே ஓடிப்போய் எல்லாம் உருகுவதற்குள் எடுக்கலாம், ஆனால் கையில்லை. கதிரவன் இந்தக் கையில் ஊமையனின் கதியற்ற நிலையை அறியான். அவன் அவனது வேலையைச் செய்கிறான். அவன் பிரபஞ்சத்திற்கும் சொந்தம். காவலாளிக்கு கையில்லை, வாய் ஊமையே தவிர கண்மாத்திரமிருக்கிறது இந்தக் கோரக் காட்சியைக் காண. அதைப்போலவே கண்மாத்திரம் இருக்கிறது கட்டழகியைக் காண. ஆனால் சுயமரியாதை இல்லாததாலோ, சுதந்திர உணர்ச்சி இல்லாததாலோ,கையில்லை (கையில் துணிவில்லை), அவளது கரத்தைப் பிடிக்க. அந்த வடிவழகியைக் கண்டு ஏதோ பேசவேண்டுமென்று நினைக்கின்றான். ஆனால், சமுதாயக் கட்டுப்பாடுகள் அவனது வாயை மூடிவிட்டன. எவ்வளவு அருமையாக ஒருவன் ஒருத்தியைச் சமுதாயக் கட்டுப்பாடுகளால் தொட முடியாமல் க‘டப்படுகிறான் என்பதை ஒரு சிறு அடியில் விளக்குகிறார். “கையில் லூமன் வெண்ணெய் உருகாது பாதுகாத்தாற் போன்று” என்று”[90] என்கிறார். இதனை திராவிட இயக்க சிந்தனையோடு விளக்கியிருக்கிறார் என்பது குறிப்பிடத்தக்கது.

இவ்வாறு சங்க இலக்கியத்தைக் காட்சிப்படுத்தும் சி.என்.அண்ணாதுரை, இச்சிறப்பை எல்லாம் தமிழகம் பெறவேண்டுமென்றால், “அனைவரும் சீரும் சிறப்பும் பெருக்கெடுக்கத்தக்க செல்வராய்த் திகழ, தமிழகம் புதிய பொலிவு பெறவேண்டும்,

அதற்கான முயற்சியிலே ஒரு கட்டம் இந்தப் பொதுத் தேர்தல், இதிலே ஈடுபட்டுள்ள தி.மு.க. வெற்றிபெறவேண்டும்”[91] என்ற வேண்டுக்கோளை வைக்கிறார்.

இவ்வாறு பண்டை தமிழ்ச் சமூகத்தின் காதல், வீரம், கவிதை வளம், கொடை, அறம், போர், ஊர்ச் சிறப்பு, ஊராள்வோன் சிறப்பு போன்றவை இவை தொடர்பான பல்வேறு வகையான செயல்பாடுகளை சங்க இலக்கியப் பாடல்களிலுள்ள செய்திகளின் மூலம் சி.என்.அண்ணாதுரை வெளிப்படுத்தியுள்ளார்.

இம்மாதிரியான செயல்பாடுகள் தமிழ் இனம், தமிழ் மொழி, தமிழர் பண்பாடு என்ற கருத்தாக்கங்களில் புதிய ஒளியைக் கொண்டு வந்தன. சங்க இலக்கியப் பிரதிகள் குறித்த வாசிப்பு என்பது, இனம் - மொழி – நாடு என்ற அடையாளங்களை கண்டெடுத்துப் பேசும் வாய்ப்பினை உருவாக்கியது.

சி.என்.அண்ணாதுரை உருவாக்கிய கருத்து நிலைகள் தமிழர் அடையாளத்தை முன்னிறுத்தின. இந்நிலை இந்தி எதிர்ப்பு போராட்டைத்தை தீவிரப்படுத்தவும், அரசியல் அதிகாரத்தை பெறுவதற்கும் இன்னும் பிற செயல்பாடுகளுக்கு அடிப்படையாக அமைந்தது எனலாம்.

“அவர் ‘தம்பிக்கு’ எழுதிய கடிதங்களில் மேடைப்பேச்சுக்களில் ஆற்றிய இலக்கியப் பணிகூட சமுதாய எழுச்சிக்கும் அவர் நடாத்திய விடுதலை இயக்கத்திற்கும் தன் தம்பியர் படையை தயார் செய்ததற்குத்தான் பயன்படுத்தியிருக்கிறார்”[92] என்கிறார் டாக்டர் சி.என்.ஏ.பரிமளம்.

தமிழரின் இன உணர்வு, மூடநம்பிக்கை முறியடிப்பு, சாதிய மறுப்பு, உயர்வு தாழ்வு அகற்றல் போன்ற கோட்பாடுகளை வலியுறுத்தவும் சங்க இலக்கியத்தைப் பயன்படுத்திய போக்கைச் சி.என்.அண்ணாதுரையின் எழுத்துக்கள் வெளிப்படுத்துகின்றன.

### 3.10.சி.என்.அண்ணாதுரை போற்றிய இலக்கியங்கள்

#### 3.10.1.சங்க இலக்கியம்

இலக்கியத் தொடர்களையும், வரிகளையும் மேற்கோள் காட்டும் அண்ணாதுரை, அரிய சிந்தனையின் இருப்பிடமாகத் துலங்குவன சங்க இலக்கியங்கள் எனப் போற்றியுள்ளார். சங்க இலக்கியங்கள் நுட்பம் வாய்ந்தவை, அனுபவித்து மகிழத்தக்கவை,

இன்பங்கள் நிறைந்தவை, கருத்துகளின் பெட்டகங்கள், சுருங்கச் சொல்லி விளங்கவைப்பவை என்று போற்றியுள்ளார்.

### 3.10.2.சிலப்பதிகாரம்

தியாகத்திற்கும், கற்பு மாண்புக்கும் வீரத்திற்கும் காட்டாகத் துலங்குவது சிலம்பு எனச் சிலம்பின் மேன்மையைச் சுட்டுகிறார். சிலப்பதிகாரம் பாடிய இளங்கோவடிகள் தம் பாயிரத்தில் சிலம்பு பாடியதன் நோக்கத்தைச் சுட்டியுள்ளமையை, “பழந்தமிழர் நூலான சிலப்பதிகாரத்தை இயற்றிய இளங்கோவடிகள் தமது பாயிரத்தில் தாம் காதை பாடுவது எதற்கு என்பதைக் கூறும்போது உலகு புகழ்ந்தேத்தும், நீதி தவறிய அரசு கெடும். அவனவனின் செயலின் விளைவு அவனவனைத் தாக்கும் என்ற கருத்துகளைக் கூறவே நான் இப்பாட்டுடைச் செய்யுளை இயற்றினேன் என்று எழுதினார் தெளிவாக”[93] என்று பாராட்டுகின்றார்.

### 3.10.3.திருக்குறள்

“மானுடப் பண்பியல்புகளுக்கோர் உறைவிடமாய் - வாழ்கை வழி, நெறிமுறைகளுக்கான வழிகாட்டியாய் அமைந்துள்ளது நமது திருக்குறள். காலக் கூற்றினுக்கேற்ற இலக்கியம் இதுவன்றி உலகினில் வேறேது? என்றும் நாம் கேட்டிடலாம், எவரைப் பார்த்தும். உலகெங்கனும் பறை சாற்றிடலாம், அஞ்சிடத் தேவையில்லை”[94] என்று புகழ்கின்றார்.

தமிழருக்காக மட்டுமல்லாமல் உலகம் முழுமைக்காகவும் தேவையான அனைத்து நெறிகளையும் தந்திருப்பது திருக்குறள். உலகத்தின் பொதுச்சொத்து என்றெண்ணத் தக்க முறையில் கருத்தைப் பரப்பத்தக்க நிலையில் திருக்குறளை அமைத்துள்ளார் வள்ளுவர் என்று போற்றுகின்றார். “இப்போது சோவியத்து நாட்டிலே உள்ளவர்கள் திருக்குறளைப் பயில்கிறார்கள். இங்கிலாந்து நாட்டில் உள்ளவர்கள் பயில்கிறார்கள். இரண்டு நாட்களுக்கு முன்னர் நான் புதுச்சேரிக்குச் சென்றிருந்த பொழுது, பிரெஞ்சு மொழியில் மொழி பெயர்க்கப்பட்ட திருக்குறள் புத்தகத்தை என்னிடம் தந்தார்கள். அதன் நல்லறிவுக் கருத்துக்கள் நாட்டு மக்கள் அனைவராலும் போற்றப்படுகின்றன.”[95] என்கிறார்.

வள்ளுவன் படைத்த பாங்கினை, “திருவள்ளுவரைப் போல, தமிழர்களிலே நிறையப் புலவர்கள் இருந்திருக்கிறார்கள். இளங்கோவின் ‘சிலப்பதிகாரம்’ நாடு அறியாது அல்ல,

சிலப்பதிகாரத்தில் வரும் ‘கானல்வரிக்’ கவிதை, உலகம் மறந்துவிடக் கூடியதும் அல்ல. இருந்தாலும் - இரண்டு வரிகளுக்குள் வாழ்வுக்குத் தேவையான கருத்துகளை எப்படி வாழ வேண்டும் என்ற முறையை வகுத்துக் கொடுத்த பெரியார் வள்ளுவர் தான்!”[96] என்று போற்றுகின்றார்.

**3.10.4.கலிங்கத்துப்பரணி**

இலக்கியம் என்பது சூழ்ச்சிக்கோ, சூதுக்கோ வாயிலாக அமையாமல், அறிவுக்கும் ஆற்றலுக்கும் உடன்பட்டதாய் அமையுமானால் அத்தகைய ஏடுகள் போற்றப்பட வேண்டும் என்ற கண்ணோட்டத்தை உடைய சி.என். அண்ணாதுரை கலிங்கத்துப்பரணியை போற்றுகின்றார்.

“கலிங்கத்துப்பரணியிலே தமிழனின் வீரம் நன்கு எடுத்துரைக்கப்படுகிறது. கடினமாகப் பிரதேசத்தைக் கைப்பற்ற வேழத்தை அனுப்பிக் கைப்பற்றியதாகக் கலிங்கத்துப்பரணி கூறுகிறது, வேதங்களையோ வேதியர்களையோ அனுப்பியதாகக் கூறவில்லை. கலிங்கத்துப்பரணியும், சிலப்பதிகாரமும் திராவிடருடைய வீரத்தைச் சித்தரிப்பன”[97] என்று குறிப்பிடுகின்றார்.

**3.11.மு.கருணாநிதியின் சங்க இலக்கிய வாசிப்பு**

சி.என்.அண்ணாதுரை மேடைகளில் சங்க இலக்கியத்தைப் பயன்படுத்தி நிகழ்த்தும் சொற்பொழிவுகள் உருவாக்கிய கருத்தாடல்களுக்கு வளம் சேர்ப்பதாக மு.கருணாநிதியின் செயல்பாடுகள் அமைந்தன.

தமிழின் தொன்மைச் சிறப்பைப் பற்றிக் கூறும் மு.கருணாநிதி “எத்துணைச் செழுமையைத் தமிழ் முன்பே பெற்றிருந்தால் மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு இலக்கணத்தை உருவாக்கியிருக்கக் கூடும் என்பதை நினைத்துப் பார்த்திட வேண்டும். அதற்கும் சில பல நூற்றாண்டுகளுக்கு முன்பு பிறந்து, தவழ்ந்து, வளர்ந்த மொழி என்பதால் தானே அதன் வாயிலாகத் தமிழரின் சால்பை உணர முடிகிறது! அறிவிற் சிறந்த கல்வியாளர்கள், புலவர் பெருமக்கள் சங்க காலத்துத் தமிழரசர்களால் போற்றப்பட்டது மட்டுமல்ல, அவர் தம் பொன்மொழி கேட்டுச் செங்கோலோச்சினர் என இலக்கியங்கள் இசைந்திருகின்றன.”[98] என்று பண்டைய தமிழினத்தின் பெருமையை விதந்து கூறுகின்றார்.

சங்க காலத் தமிழர்கள் கல்வியறிவில் சிறந்து விளங்கினர் என்பதை “புலி, தன் குட்டியைப் பாதுகாப்பது போல மக்களைப் பாதுகாத்த மன்னனின் பெருமை குறித்துப் புறநானூறு “புலி புறங் காக்கும் குருனை போல மெலிவில் செங்கோல் நீறறங் காப்ப” என்று ஒலிப்பதையும் கேட்கிறோம். அதே வேளையில் அந்த மாமன்னர்களுள் ஒருவனான பாண்டியன் நெடுஞ்செழியன் கல்வி அறிவின் மேன்மை குறித்துத் தன் நாட்டு மக்களுக்கு எழுதிக் காட்டிய புறநானூற்றுப் பாடலும் அக்காலத் தமிழ்ச் சமுதாயமும், கல்வியின்பால் கொண்டிருந்த காதலை வெளிப்படுத்துகின்றது.”[99] என்கிறார்.

சங்க கால மன்னரின் பெருமையைப் பேசும் விதமாக “நால்வகைப் படை கொண்ட மாவீரனாயினும் அவன் தோற்றம், அறத்தையே அடிப்படையாகக் கொண்டதாம். தன் உற்றார் உறவினர் என்பதற்காக அவர்களைப் பேணலும், சுற்றமல்லாதார் என்பதனால் பேண மறுத்தலும் கூடாதென்பதை அந்நாள் தமிழ் வேந்தன் உணர்ந்து நடந்தானாம்.

நான்குடன் மாண்ட தாயினும் மாண்ட
அறநெறி முதற்றே அரசின் கொற்றம்
அதனால் நமரெனக் கோல்கோ டாது
பிறரெனக் குணங்கொல் லாது

இந்தப் புறநானூற்று வரிகள் மீட்டிக் காட்டும் தமிழரின் பண்புக் கீதத்தை நாளெல்லாம் கேட்டு மகிழலாமே”[100] என்று வேந்தரின் பெருமையைப் பேசுகிறார்.

மேலும், தமிழ் மன்னர்களைப் பற்றிக் கூறும்போது “அந்தக் காலத்திலே தங்களுக்கெனத் தனிக் கப்பற்படைகள் வைத்துக் கொண்டிருந்த அரசர்களாகத் தென்னாட்டு அரசர்கள் தமிழ் நாட்டு அரசர்கள் விளங்கினார்கள். அதை எண்ணுகிற நேரத்தில், எவ்வளவு பெருமைக்குரிய வரலாற்றுக்குச் சொந்தக்காரர்கள் நாம் என்பதை எண்ணியெண்ணி இறும்பூது எய்தலாம்.

சரித்திரக் குறிப்புகள் சிலவற்றைப் பார்த்தால் நம்முடைய தமிழ்நாட்டுப் பொருள்கள் ரோமாபுரி போன்ற இடங்களில், கிரேக்கம் போன்ற இடங்களில் எந்த அளவிற்குப் புகழ் பெற்று எந்த அளவிற்கு அவைகள் பாதுகாக்கப்பட்டுப் போற்றப்பட்டு வாங்கிச் செல்லப்பட்டன என்ற உண்மைகளை எல்லாம் அறிந்து கொள்ளலாம்”[101]. இப்படித் தமிழரின் தொன்மைச் சிறப்பையும், பொருள் வளத்தையும் சிறப்பித்துக் கூறுகிறார்.

மேலும், “தமிழ்நாட்டு முத்துக்கும் - மயிலுக்கும் - மிளகுக்கும் - யானைத் தந்தத்துக்கும், அரிசிக்கும் இன்னும் பிற பொருள்களுக்கும் வெளிநாட்டுக்காரர்கள் இரு

கரம் நீட்டிக் காத்துக் கொண்டிருந்த காலம்."[102] இவ்வாறு சங்க காலத்தை பொற்காலமாகக் காட்டுகிறார். "சங்க இலக்கியம் நம்முடைய பழம் பெரும் நாகரிகத்தை – வரலாற்றை எடுத்தியம்புகின்ற இலக்கியமாகும்"[103] என்கிறார்.

சங்கப் புலவர்களைப் பற்றிக் கூறும்போது "காதலையும், களக் காட்சிகளையும், காட்டுவளம் மலைவளம் போன்ற கவின் மிகு இயற்கை வனப்புகளையும், செழிப்புநிறை தமிழ் எடுத்துப்பாடியிருக்கிறார்கள் செந்தமிழ்ப் புலவர் பெருமக்கள், அதுதான் தமிழ் இலக்கியத்தின் தனிச்சிறப்பு"[104] என்பர்.

குறுந்தொகையில் வரும் பாடலொன்றை விளக்குவதாக, "அவள் சொல்லுகிறாள், தலைவனிடம்

"திண்டேர் நள்ளி கானத் தன்டர்
பல்லாப் பயந்த நெய்யிற் றொண்டி
முழுதுடன் விளைந்த வெண்ணல் வெஞ்சோ
றெழுகலத் தேந்தினுஞ் சிறிதென் றோழி
பெருந்தோ ணெகிழ்த்த செல்லற்கு
விருந்துவரக் கரைந்த காக்கையது பலியே"

தலைவனே! திண்ணிய தேரினை உடைய நள்ளி என்னும் வள்ளல் தன்மை வாய்ந்த மன்னனுடைய முல்லை நிலத்திலே வாழுகிற பல பசுக்களின் வாயிலாகக் கிடைக்கிற நெய் முழுவதையும், தொண்டி என்னும் பேருரில் விளைந்த வெள்ளிய நெல்லரிசி அனைத்தையும் உலையிலிட்டு ஆக்கிய சோறுடன் கலந்து, ஏழு உண் கலங்களில் வைத்து நாள்தோறும் வழங்கினாலும் அந்தக் காக்கைக்கு அது குறைவானதேயாகும். ஏனெனில் மெல்லிய தோள்கள் இளைத்துப் போகுமளவுக்குப் பிரிவாற்றாமையால் வருந்திய தலைவிக்கு அந்தக் காக்கைதான் ஆறுதல் அளித்திருக்கிறது."[105] என்று மு.கருணாநிதி விளக்கம் தருகிறார்

மேலும் அவர் கூறுவதாவது "இந்தச் செய்யுள் வாயிலாக காதலர்களின் பிரிவாற்றாமை மட்டுமல்ல, பழந்தமிழர் காலத்துப் பழக்கவழக்கங்களும் எடுத்துக்காட்டப்படுகின்றன. அது மட்டுமல்ல,காக்கைக்குப் போடும் சோறு கூட பசு நெய் கலந்திருக்கும் அளவுக்கு – அந்தச்சோறும் வெள்ளிய உயர்ந்த அரிசி கொண்டு தயாரிக்கப்படுவது எனும் அளவுக்கு – வளம், கொஞ்சியது என்பதும் உணர்த்தப்படுகிறது"[106] என்று கூறுவதன் மூலம் சங்க இலக்கியம் தான் தமிழரின் தனிச்சிறப்பை இன்றும் நமக்கு எடுத்துக்காட்டுவதாக விளங்குகிறது என்று மதிப்பிடுகிறார்.

குறுந்தொகையின் சிறப்பை பற்றி கூறும் போது “தமிழ் இலக்கியப் பேழையில் மாமணிகளில் ஒன்றாகத் திகழும் குறுந்தொகை, இன்பப் பெருக்கம் ஒன்றே இம்மை இன்பத்தையும் வீட்டின்பத்தையும் ஒருங்கே அளிக்கும் சிறப்புடையது என்னும் கொள்கையுடையோர் பண்டைத் தமிழகத்தில் பெருமையுற்றிருந்தனர் என்பதை விளக்கிற நூல்களில் ஒன்றாகும்”[107] என்கிறார்.

மு.கருணாநிதிக்கு “தமிழின உணர்வும், தமிழ் மான உணர்வும் இவர்பால் மிகுதியாக உண்டு என்பதன் காரணமாக இவருக்கு இயல்பாகவே சங்க இலக்கியத்தில் ஆழ்ந்த பற்றுள்ளமும், தோய்ந்த புலமையம் அமைந்திருப்பது வியப்பிற்குரிய செயலன்று. இவர்தம் பேச்சிலும் எழுத்திலும் சங்க இலக்கியத் தொடர்களோ, பாட்டுகளோ, கருத்துகளோ இடம் பெறாமற்போகாது. எப்போதும் தமிழர்க்குச் சங்க இலக்கியம் தமிழுணர்வையும் தமிழ் இனவுணர்வையும் ஊட்டி நிற்பதாகத் திகழ்வதைக் காணலாம்”[108] என்கிறார் டாக்டர் சி.பாலசுப்பிரமணியன்.

மு.கருணாநிதி சங்க இலக்கியங்களான எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, இவற்றினின்று பொருட்சிறப்பமைந்த நூறு பாடல்களைத் தேர்ந்தெடுத்து பத்திரிகையில் தொடராக எழுதி நூலாக்கியுள்ள ‘சங்கத் தமிழ்’ கவிதை நடையில் உரை விளக்கம் தந்திருப்பது சிறப்பிற்குறியது. “தமிழ் மக்களுக்கென்று சில தனிப் பண்பாடுகள் உண்டு அவற்றைச் சங்க நூல்கள் சிறப்பித்துக் கூறுகின்றன. அவற்றுள் பொருட் சிறப்பமைந்த பாடல்களைத் தேர்ந்தெடுத்து நூறு தலைப்புகளில் கலைஞர் கவிதை நடையில் உரை விளக்கம் தந்திருப்பது தனிச்சிறப்புக்குரியது”[109] கலைஞரின் உரைவிளக்கம் தமிழ் உணர்வு, தமிழ் இனப்பற்று என்ற முறையில் அமைந்துள்ளது”[110] என்பார்.

சங்க இலக்கியத்தில் உள்ள பாடல்கள் சிலவற்றை தேர்ந்தெடுத்துக் கொண்டு, அவற்றின் பொருளை விளக்கும் உரையாக, வசன நடையில் எழுதாமல் கவிதை நடையில் விளக்கமாக எழுதப்பட்டுள்ளது. இவரது கவிதைகள் தெளிவாக – எளிமையாக இனிய தமிழில் அமைந்துள்ளன.

“கிறுகிறுத்துப் போன தோழி!
பரபரப்பு அடையாதே பதற்றத்தை அகற்றிவிடு!
பன்றி என்றவுடன் பதறுவதால் பயனில்லை
முழுதும் கேள் கதையை! முடிவில் என்னைத்
தொழுது நீ போற்றிடுவாய்!”[111]

"விறகுவெட்டச் சென்றவர்க்குக் காட்டில்
பொன் கிடைத்தாற் போல்
வேந்தன் கிள்ளியிடம் வந்தோர்க் கெல்லாம்
பரிசுப்பொருள் கிட்டும் என்று கூறுகின்றார்"[112]

என்பனவற்றைச் சான்றாகக் கூறலாம்.

"சங்கத் தமிழ் என்ற கலைஞரின் நூல்சங்க இலக்கியங்களில் உள்ள பாடல்களுக்குப் பாட்டாகவும் இல்லாமல் உரையாகவும் இல்லாமல், இரண்டுங் கலந்த இனிய நடையில் எழுதப் படிக்கத் தெரிந்த மக்களுக்காகவே எழுதப்பட்டது எளிமையாக்கல் என்ற கோட்பாடு பின்பற்றப்பட்டுள்ளது"[113] என்று கூறுவர்.

எட்டுத்தொகை நூல்களில் அகப்பொருட் செய்திகளைக் கூறும் நற்றிணை, குறுந்தொகை, அகநானூறு, கலித்தொகை, ஐங்குறுநூறு என்னும் ஐந்து அகப்பொருள் நூல்களிலிருந்து 56 பாடல்களும், பத்துப்பாட்டு, பதிற்றுப்பத்து என்னும் புறப்பொருள் நூல்களிலிருந்து 60 பாடல்களும் இந்நூலில் விளக்கப்பட்டுள்ளன.

தற்கால மொழியறிவின் துணை கொண்டு படிக்க இயலாமல் கடுநடையில் எழுதப்பட்ட சங்க இலக்கியப் பாடல்களைச் சாதாரண மக்களும் பொருளுணரும் வண்ணம் விளக்கமாகக் கவிதை நடையில் எழுதியிருக்கின்றார். அவ்விளக்கம் தமிழ் உணர்வு, தமிழ் இனப் பற்று என்ற முறையிலேயே அமைந்துள்ளது.

"பழம் புலவர் பெருமக்கள் தமிழர் வீரம், காதல், பண்பாடு போற்றுகின்ற வாழ்க்கை நெறிமுறைகள், பாட்டாலே தொகுத்தளித்து நம்மைப் பிற நாட்டாரும் போற்றுகின்ற செயல் புரிந்தார்"[114] என்று அவர் நூலின் தொடக்கத்தில் கூறுவதால் அறியலாம்.

தமிழ் நாகரிகத்தை, தமிழ் இனப் பெருமையை உலகிற்கு எடுத்துக் காட்டும் முறையில் அமைகின்றது அவரது உரை விளக்கம்.

சிங்கநெஞ்ச மாவீரர் இருவருக்கும்
சிலைகள் இருக்கின்ற
காளையார் கோயிலுக்குப்
பழங்காலத் தமிழகத்தில்
கானப்பேர் என்று பெயர் உண்டு
இன்றும் அது,
மானப்போர் தொடுகின்ற மறவர் பூமி"[115]

என்பது போன்ற கவிதை விளக்கங்கள் இக்கருத்தை விளக்குகின்றன.

சங்க இலக்கியத்தின், பெருமையையும் மூவேந்தரின் பெருமையையும் போற்றும் விதமாக

“செந்தமிழர் திருநாட்டுப் பெருமை சொல்லி
சேரர், சோழர், பாண்டியர்— அவரனைய
தீரர் மிகு தமிழ்க் குலத்தோர்தம்
செப்பரிய வீரம்பாடும் இலக்கியங்கள்
ஒப்பற்ற நம்மண்ணின் சொத்து – அவற்றிலோர்
ஒளியுமிழும் முத்துத்தான் பதிற்றுப்பத்து”[116]

“சேர மன்னர் திறம் போற்றும்
வீர வரலாற்றுப் பேழையிது!
தொலைவி லிருந்து நுகர்ந்தாலும்
தூய தமிழ் மணக்கும் தாழையிது”[117]

இவ்வாறு கூறுவதன் மூலம் சங்க இலக்கியத்தை தமிழர்களின் வீரத்தின் அடையாளமாகவும், வரலாற்று பேழையாகவும் காட்டுவதை காணமுடிகின்றது. மேலும் தமிழ் இலக்கிய உணர்வை தூண்டுவதாகவும், ஆர்வத்தை மிகுவிப்பதாகவும் இருக்கின்றன.

சங்கப்பாடல் கருத்துக்களை விளக்கும்போது பல இடங்களில் குறட்பாக்களை எடுத்தமைக்கின்றார்.

“மானங்காத்த மறவன்” என்னும் தலைப்பில் “குழவி இறப்பினும்” எனத் தொடங்கும் புறநானூற்றுப் பாடலை விளக்கும் போது,“மயிர் நீப்பின் வாழாத கவரிமான் போல மானம்வரின் உயிர் நீப்பர்” எனும் குறளுக்குத் தயிர்கடைந்தால் தலைகாட்டும் வெண்ணெய் போன்ற தமிழ்ச்சங்ககாலத்து வீரன் வாழ்வே உண்மைச் சான்று”[118] என

“மயிர்நீப்பின் வாழாக் கவரிமா அன்னார்
உயிர்நீப்பர் மானம் வரின்”[119]

என்ற குறளை எடுத்தாளுகின்றார்.

சேரமான் கணைக்கால் இரும்பொறையின் மான உணர்வைக் குறிக்கும் போது,

“எப்படிப்பட்டோர் இருந்தார்
மறைந்தார் என்பது – அவரவர்

எச்சத்தாற் காணப்படும்”[120]

என விளக்குகின்றார்.

மு.கருணாநிதி உரை விளக்கத்தில், மூலத்தில் இல்லாத சில கருத்துக்கள் விளக்கத்தில் தரப்பட்டுள்ளன. எடுத்துக்காட்டாக தலைவன், தலைவி உரையாடலைக் கூறலாம். தோழியின் கூற்றாக மட்டும் அமைந்தது இப்பாடல். இதில் தலைவன் - தலைவி கூற்றாக விளக்கம் தருகின்றார் அவர்.

அம்மூவனார் பாடலொன்றில் நெய்தல் காட்சி இடம்பெறுகின்றது “இரங்கல் நறுநெய்தல்” எனத் தொடங்கும் இப்பாடலில், தலைவன் பிரிவால் துயர் உற்று தலைவி வருந்திக் கிடக்கின்றாள். இதற்கு மேல் கற்பனையாக விளக்கம் தருகின்றார்.

தலைவன் அங்கு வருகிறான். அவன் தோளில் தலைவி சாய்கிறாள். எனினும், இன்னும் திருமணம் நிகழவில்லையே! என்ற ஏக்கத்தால் தலைவியின் கண்களில் நீர் துளிர்க்கிறது.

மணல்பட்டு விட்டதால் கண்ணில் கரித்து நீர் வருகிறது போலும் என்று எண்ணித் தலைவன் வாயால் ஊத முற்படுகிறான். தலைவி, அதைத் தடுத்து,

“ஊதுகின்றீர் என் கண்ணில் நன்றி நன்றி! ஆனால் நான்,

ஓதுகின்றேன் பல நாளாய் உமது காதில்!

அதைக் கேட்காமல் நீர் இருப்பதால் தான்

அருவி போல் நீர் என் விழியில் அறிக!”[121]

என்கின்றாள்.

தலைவன் அவள் உள்ளத்தை உணர்ந்து பின் வருமாறு கூறுகின்றான்,

“களவியல் விடுத்திட வேண்டும்

கற்பியல் தொடங்கிட வேண்டும் - உன்

உளமது மகிழ உடனே நம்மனம்

உவகை பொங்கிட நடந்திட வேண்டும்!

மது ஆறும் இதழ்ப் பூவே! மணியே! மானே!

இது தானே உன் ஆவல்!

வீணாக வருந்தாதே கண்ணே!

விண்ணூரும் சந்திரனின் சாட்சியாகச் சொல்வேன்!

விரைவில் உனைக் கரம்பிடித்து மணப்பேன்!

விடு துயரம்!”[122]

என்று உறுதி கூறுகின்றான்.

இவ்வாறு தலைவியிடம் தலைவன் கூறுவதாக சங்கப்பாடல்களில் இல்லை. தனது கற்பனை வளத்தால் இவ்வாறு மு.கருணாநிதி விளக்கம் தருவது இலக்கிய இன்பத்தை மிகுவிக்கின்றது எனக் கருதலாம்.

திராவிட இயக்கத்தின் சீர்திருத்தக் கொள்கைகளும், சமுதாயச் சிந்தனைகளும் இடையிடையே தட்டுப்படுகின்றன. சங்கத்தமிழில் கூறப்படும் உரை விளக்கம் சங்கப் பாடல்களைப் பொருள் விளங்கிக் கொள்ள உதவுகிறது. ஆய்வு முறையில் எப்பாடலுக்கும் விளக்கம் தரப்படவில்லை.

பண்டைத் தமிழர்கள் பெரும்போர் வீரர்களாகத் திகழ்ந்தனர் போர் புரிதலும் பகைவர் நாட்டைக் கைக் கொள்ளுதலும், அவர்தம் அரண்களை அழித்தலும், அங்குள்ள பொன், பொருள் முதலியவற்றைக் கைப்பற்றுதலும் நிகழ்ந்துள்ளன. இதனால் மக்கள் இயற்கையாகவே மறப்பண்பு உடையவராக விளங்கினர் என்பதை அறியலாம்.

மு.கருணாநிதி தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனது வீரத்தைப் பற்றிக் கூறும்போது,“இளையன் “ என்று கருதித் தன் மீது போர் தொடுத்து வந்த மன்னர்கள் எழுவரை இவன் ஆரமர் அலறத் தாக்கி வெற்றி கொண்ட செய்தியைப் பின் வருமாறு கூறுகின்றார்.

“அணிதேர்ப் புரவியும் ஆனைக ளுடனே
ஆட்பெரும் படையும் மிகக் கொண்டதால், நம்மை
இழித்தும் பழித்தும் ஏளனம் செய்தும்
இளையோன் என்றும் சிறுமொழி கூறிய
எதிரிகள் எழுவரின் இடுப்பை ஒடித்து
தலையாலங்கானப் போரில் வென்று – அவர்தம்
அலைகடற் படையை அறவே அழித்து
நிலை குலைந்த பகைவரை முரசொடு பிடித்து
மலை என நிமிர்ந்து நிற்பேன் கண்டீர்”[123]

இவ்வாறு பண்டைத் தமிழரின் வீர உணர்வு சித்தரிக்கப்படுவதை அறியலாம்.
பண்டைத் தமிழகத்தில் ஆடவர் மட்டுமேயன்றிப் பெண்டிரும் வீரத்தில் சிறந்திருந்தனர் என்பதை

“எதிரிகளின் படை எடுப்பால் - நம் குடும்பம்
தழை உதிர்த்துவிட்ட மரமாகப் போனதடா தம்பி!

கவலையில்லை

களம் சென்றார் மாண்டார்!

ஆனாலும், இந்த நிலம் உள்ள வரையில்

மானங்காத்தார் என்ற பெயர் பூண்டார்!

என் மகனே! நீயும் என் தோளில்

பலம் உள்ள வரையில் பகையைச் சாடு!

பரணிபாடு! இது உன் தாய்த்திரு நாடு!

உடனே ஒடு!

எனத் தாவி அணைத்துத் தளிர்மகன் தன்னைச்

சீவி முடித்துச் சிங்காரித்து – ரத்தக்

காவி படிந்த வாள் கொடுத்துச்

சென்று வாடா மகனே! செருமுனை நோக்கி”[124]

என்று விளக்கம் தருகின்றார். இதில் தமிழ் நாட்டின் மரபுநிலை மாறாத மாண்பையும், தனது தாய்த்திரு நாடு காப்பாற்றப்பட வேண்டும் என்ற உணர்வு இருப்பதையும் வெளிப்படுத்துவதாக அமைகிறது.

கொங்கு நாட்டின் வளத்தையும், குமணவள்ளலின் கொடைத் தன்மையையும்,

“கரும்பெடுத்துத் தமிழ் பிழிந்து – மலரில்

சுரும் பெடுத்து வருகின்ற தேன் கலந்த

அரும்பெடுத்துச் சிரிக்கின்ற மகளிர் கூட்டம்

எலும்பெடுத்துச் செல்கின்ற உணவு கூட

எம்மன்னன் குணவள்ளல் தந்த தென்று

எழுச்சி நடையோடுகின்ற கொங்கு நாடு”[125]

இவ்வாறு கூறுகின்றார். இவ்வாறு கூறுவதன் மூலம் தமிழ் மரபினர் கொடைத் தன்மையில் சிறந்து விளங்கினர் என்பதை உணர்த்துகின்றார்.

அற நெறியை விட்டு அணுவளவும் பிறழாமல் வாழ்ந்தவர்கள் தம்முடைய வழித்தோன்றல்கள் என்பதை

“மறவன் எனும் நிலை மட்டும்

மன்பதையில் புகழ் சேர்ப்பதில்லை!

மனிதனாகவும் வாழ்ந்திடல் வேண்டும் என்ற

அறநெறியை விட்டு அணுவளவும் பிறழாது – ஒருவன்
அளந்து வைக்கும் அடிகள் ஒவ்வொன்றும் தான்
வாழையடி வாழையென வருகின்ற சமுதாயத்து
வழித் தோன்றல்களின் பயணப்பாதையாகும்”[126]

இக்கூற்றின் மூலம் தெளிவுப்படுத்துகின்றார்.

புறநானூறு தமிழ் மன்னரின் ஆட்சிமுறை பற்றியும், நீதி முறைகள் பற்றியும் கூறுகிறது. அவ்வாறு கூறும் பாடல்களில் சிலவற்றை எடுத்துக்கொண்டு சங்கத்தமிழில் விளக்கம் தருகிறார் மு.கருணாநிதி.

இவ்வுலக மக்களை உயிர் வாழ வைப்பவை உணவும் நீருமேயாகும். இவ்விரண்டையும் மக்கள் பெற உதவுபவன் மன்னன். எனவே, இவ்வுலகம் மன்னனை உயிராகக் கொண்டுள்ளது என்பர் சங்கப் புலவர் மோசிசீரனார்.

“நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே
மன்னன் உயிர்த்தே மலர் தலை உலகம்” என்பது அவர் பாடல். இப்பாடலுக்கு விளக்கம் தரும் மு.கருணாநிதி,

“உலையில் இட நீர் வேண்டும்
உண்மை அது மறுக்கவில்லை
உடல் வளர உயிர் வாழ நெல்லும் நீரும்
தேவை என்பதிலும் மாற்றமில்லை
சிந்தனைக்கு ஒரு வாதம் வைக்கின்றேன்
சிறிதளவும் நடுமுள் நடுங்காமல் தீர்ப்பளிப்பீர்!
நாடாளும் அரசொன்று இருக்கும் போது – அவ்வரசு
கேடான செயல்களுக்கும்
கீழான குணங்களுக்கும் அடிமையாகி
நீரும் நெல்லும் இல்லா நிலையில்
ஊரும் உலகும் தவித்திடும் வகையில்
சீரும் சிறப்பும் இல்லாச் “செங்கோல்”
செலுத்திடும் கொடுமை படைத்திடு மானால்
உடலெங்கே? உயிரெங்கே? இவ்விரண்டு
ஒன்றை விட்டு ஒன்ற கன்று
பிணமாக மாறிவிடும்!

அதனாலே,

மன்பதை ஆளும் ஆட்சியின் மாட்சியே

மக்களுக்குக் குயிராம் அவர்கள் வாழும்

மண்ணுக்கும் உயிராம்”[127]

தற்கால அரசியலை முன்வைத்து மு.கருணாநிதி கூறியிருப்பது கவனிக்கத்தக்கது. தமிழ் மக்கள் மானத்தை உயிரினும் மேலானதாக கருதினர் என்று எடுத்துக்காட்டவரும் மு. கருணாநிதி சங்கப் பாடல்கள் பலவற்றை முன்னோடியாகக் கொள்கின்றார்.

“மானம் அழிந்தபின் வாழாமை முன் இனிதே”[128]

“மயிர் நீப்பின் வாழாக் கவரிமா அன்னார்

உயிர் நீப்பர் மானம் வரின்”[129]

“கடமா தொலைச்சிய கானுறை வேங்கை

இடம்வீழ்ந்த துண்ணா திறக்கும் - இடமறைய

வானகம் கையுறினும் வேண்டார் விழுமியோர்

மானம் அழுங்க வரின்”[130]

எனும் வரிகள் சான்றாக உள்ளன.

சங்ககாலத் தமிழ் மக்கள் மானமொன்றையே தம் உயிரெனக்கொண்டு வாழ்ந்தனர் என்பதை மு.கருணாநிரி பின்வருமாறு கூறுகின்றார்.

“மயிர் நீப்பின் வாழாத கவரி மான்போல்

மானம்வரின் உயிர் நீப்பர் எனும் குறளுக்கு

தயிர் கடைந்தால் தலைகாட்டும் வெண்ணெய் போன்று

தமிழ்ச் சங்க காலத்துவீரன் வாழ்வே உண்மைச்சான்று”[131]

சேரமான் கணைக்கால் இரும்பொறை, சோழன் செங்கணானோடு போரிட்டு சிறைப்பட்டான். சிறையில் அவனுக்கு நீர் தாகம் எடுத்தது, காவலனிடம் நீர் வேண்டினான். காவலர் நீர் தராமல் சிறிது தாமதித்துக் கொண்டு வந்தான். அத்தாமதம் தன்னை அவமதித்தாக இரும்பொறை எண்ணினான், அவனது தன்மான உணர்வு அத்தண்ணீரைக் குடிப்பதற்கு இடம் தரவில்லை, மானம் தாங்காமல் மடிந்தான். இச்செய்தியை “குழவி இறப்பினும்”[182] எனத் தொடங்கும் புறநானூற்றப் பாடல் தெரிவிக்கின்றது. இச்செய்தியை கவிதை வடிவில் எளிமைபடுத்தி மு.கருணாநிதி கூறுகிறார்.

“மான மரபே

அடலேறுகள் மலிந்திடும் தமிழர் மரபு

அந்தப்

பண்பாட்டு மரபுவழி வந்துதித்த நானோ – மனப்

பண்பட்டு பகையரசின் சிறைப்பட்டு நாய் போல

தண்ணீர்க்கும் காத்திருக்க வானேன் - இனிய

உண்ணீர் என்று பன்னீர் தந்து உபசரித்த போதும்

தகுதியன்று இனி உயிர் வாழ்தல் - அதனாலே

தமிழ்த்தாயே! என் மானம் காக்க

உன் மடிதனிலே விழுகின்றேன்

தாங்கிக் கொள்க!”[133]

இதில் மானத்தை தமிழ் இனத்தின் மரபாகவும், தமிழர்களின் உணர்வாகவும் அடையாளப்படுத்துவதைக் காணமுடிகிறது.

சிந்துவெளியில் ஹரப்பா, மொகஞ்சதாரோ போன்ற இடங்களில் தோண்டி எடுக்கப்பட்ட அகழ் பொருட்கள் ஐயாயிரம் ஆண்டுகட்கு முன்பே தமிழர் நாகரிகம் பெற்றிருந்தனர் என்பதற்கு சான்றுகளாகக் கூறப்படுகின்றன.

தமிழர் நாகரிகத்தை நெடுஞ்செழியன் கூறும்போது, “உலகில் குறிப்பிடத் தக்க நாகரிகங்கள் 23. அவற்றில் மிகச் சிறந்தவை தமிழர் நாகரிகம், ஆரியர் நாகரிகம். உரோமானியர் நாகரிகம் என ஆராய்ச்சி வல்லுநர் கூறுவர். கடல் கொண்ட குமரிக் கண்டத்தில் தோன்றிய தமிழர் நாகரிகம்தான், தென்னாட்டின் திராவிட நாகரிமாக மலர்ந்து, சிந்துவெளி நாகரிமாக மிளிர்ந்து பின்னர் ஆராபியர் நாகரிகம், எகிப்தியர் நாகரிகம் உரோமானியர் நாகரிகம் என்றெல்லாம் உருப்பெற்றுத் திகழ்ந்தது”[134] என விளக்குவர்

நாகரிகம் என்பதனை

“முந்தை யிருந்து நட்டோர் கொடுப்பின்

நஞ்சு உண்பர் நனி நாகரிகர்”[135]

என, சங்க இலக்கியப்பாடல் ஒன்று கூறுகிறது.

தமிழர் நாகரிகம் உயர்ந்ததென்பதை மு.கருணாநிதி நற்றிணைப் பாடல் 172ஐ வைத்து விளக்குகின்றார்.

“இங்கு வேறெதுவும் நடத்த வேண்டாம் அத்தான்! என்

தங்கை ஒருத்தி பார்த்துக் கொண்டிருக்கிறாள் - என்றாள்

எங்கு ஒளிந்துள்ளாள் உன் தங்கை?

என்னேடி இது வியப்பு

எப்போது அவள் பிறந்தாள்?

எனக் கேட்டான் தலைவன்

புன்னையிளம் மரமிதனை

நான் வளர்த்த தாலே

என்னோடு சேர்ந்து வளர்ந்த

இந்தப் புன்னையினை – என்

தங்கையைப் போல நினைக்குமாறு – என்

தாய் எனக்குக் கூறியுள்ளாள், அதனாலே

தட்டாதீர் என் பேச்சைத்

தழுவாதீர் இங்கென்னை!

நான் வளர்த்த இத் தங்கையின் முன்னே – எனை

நாணம் வந்து தடுப்பதாலே

வான் பொழியும் ஒளிமழையில் - இன்பத்

தேன் பொழியும் திருவிழா நாம் நடத்துதற்கு

வேறு மரநிழல் ஒன்றைத்

தேடிச் செல்லலாம் என

ஏறு போன்றான் தோளைப் பற்றி

வீணை இசைப் பேச்சுக்காரி இழுத்துச் சென்றாள்”[136]

இவ்வாறு தமிழுக்கென்று சில தனிப் பண்பாடுகள் உண்டு அவற்றை மிகத் தொன்மையான காலந்தொட்ட தமிழ் மக்கள் பெற்றிருந்தனர் என்பதை வலியுறுத்துகின்றார். சங்ககாலப் பெண் ஒருத்தியின் மன நிலையைப் பின்வருமாறு கூறுகின்றார்.

“ஆனைகளை ஏரில் பூட்டி ஆழமாய் உழுதுழுது

பானைகளில் அள்ளிவந்த வெள்ளி விதை விதைத்துப்

பொன்னையே விளைச்சலாக என் பெற்றோர் குவித்தடினும்

என்னை ஒருவற்கு நானே தந்த பின்னர்

வெள்ளி என்ன பொன் என்ன

வைரமணி மாடமென்ன கூடமென்ன

துள்ளி யோடும் அருவி நிறைத்

தோட்டமென்ன துறவென்ன

வேண்டேன் எதுவும் நான்

இந்தப் பிறந்தகத்தில்....

பிறந்த வீட்டில் செல்வப்

பெருக்கம் இருக்கலாம் - எனினும்

புகுந்த விட்டுக் கூழ்தான் -

அமுதமென விளக்கிடுக தோழி!

கணவன்என ஒருத்தி வரித்தவருடன்

வாழ்வதுதான்

கற்பு நெறி வாழ்வென்றும்....

கூறிடுக தோழி! காற்றெனவே கிளம்பிடுக தோழி”[137]

இவ்வாறு தமிழ்நாட்டுப் பெண்களின் உரிமையும் கடமையுமாக கூறுகின்றார்.

“யாதும் ஊரே, யாவரும் கேளிர்,”[138] எனத் தொடங்கும் புறநானூறு பாடலுக்கு மு.கருணாநிதி தரும் விளக்கத்தால், பகுத்தறிவுக் கருத்துக்கள் பல இவ்விளக்கத்தில் பளிச்சிடுவதைக் காணலாம்.

“எல்லா ஊரும் எமது ஊரே

எல்லா மனிதரும் எமது உறவே – என

ஒரே குலம் எனும் கொள்கைதனை – மனிதரெல்லாம்

ஒரே குலம் எனும் தத்துவத்தைப் புவியில்,

கல்தோன்றி மண் தோன்றாக் காலத்திற்கு

முன்தோன்றி மண் தோன்றாக் காலத்திற்கு

முன்தோன்றிய மூத்த குடிப்பிறந்த தமிழ்க்

கணியன் பூங்குன்றன் கவிதை நடைச்

சொல்லூன்றி நிலை நிலைநாட்டுகின்றான்”[139] என்கிறார்.

விதிப்பயனை பற்றி கூறும்போது,

“விதிப்பயனே எல்லாம் என்றுரைத்துச் சோர்ந்து

கதியற்றுக் கன்னத்தில் கைவைப்போர் தன்னைப் பார்த்து

நன்மைக்கும் தீமைக்கும் காரணங்கள்

நமது செயல்களே யன்றில் பிறரல்ல! என்று

நயம் பட உரைக்கின்றான் அந்த நற்றமிழ்ப்புலவன்”[140]

இவ்வாறு பரந்த நோக்குடன் வாழும் போக்கு சங்க காலச் சமுதாயத்தில் தழைத்திருந்தது என்பதை மு.கருணாநிதி எடுத்துக் காட்டுகின்றார்.

உரைவிளக்கத்தினிடையே மூடநம்பிக்கை முன்னேற்றத்தை அளிக்காது, காலத்திற்கேற்ப விஞ்ஞானப் புதுமைகளை உணர்ந்து முன்னேற வேண்டும் என்பதை பின்வருமாறு கூறுகின்றார்.

"ஒளிபெற்று வாழ்ந்த நாமன்றோ,
திடுமென இருட்டில் வீழ்ந்தோம்!
வெளி நாட்டு விஞ்ஞான வளமோ
விரிந்து வான்முகட்டில்
தேய்ந்து வரும் திங்களை நாம்
தெய்வம் என்கிறோம்
தினம்வந்து கடமையாற்றும்
சூரியனைத் தேவன் என்றோம்
ஓய்ந்திருக்கும் வேளையிலே
உப்பில்லாக் கற்பனையில்
சாய்ந்து சயனித்துக் கிடந்தோமன்றி – முன்னோர்
ஆய்ந்தறிந்து வகுத்திட்ட
வானநூற் புதுமைகளை – வறட்சியினால்
காய்ந்த பயிர் ஆக்கி விட்டு – மடமைக்
கதைகளிலே மாய்ந்து போனோம்"[141]

என்கிறார். மேலும்,

"பாதியிலே படை எடுத்து வந்த
பத்தாம் பசலி எண்ணத்தால்
பகுத்தறிவுக்கு வேலையின்றிப்
பாழ்பட்டுப் போனதம்மா! இந்தநாடு"[142]

இவ்வாறு கூறுவதன் மூலம் எதையும் பகுத்தறிவுடன் நோக்க வேண்டும், மூட நம்பிக்கையில் மூழ்கக் கூடாது போன்ற கருத்துக்களை வலியுறுத்துகின்றார்.

ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்னே வாக்களிக்கும் உரிமை இருந்தது என்பதை,

"ஈராயிரம் ஆண்டின் முன்னே
ஊரார் எல்லாம் ஒன்று கூடி

வழிகாட்டும் குழுக்கள் ஐந்தை

வாக்களித்துத் தேர்ந்தெடுத்தார்"[143]

இக்கூற்றின் மூலம் தெளிவாக்குகின்றார். மேலும்,

"முடியாட்சி கொடிகட்டிப் பறந்த போதும்

குடியாட்சி சிற்றூர் பேரூர்களில்

குடவோலை முறையினாலே – நன்கு

நடைபெற்று, நற்பணி ஆற்றிற்றென்று

மக்களாட்சி மாண்புதனை – புலவர்

மருதன் இளநாகனார் விரித்துரைக்கும்

அழகுதனைச் சுவைத்திடலாம்

அகத்துறைப் பாடலிலே!"[144]

சங்க காலத்தில் மக்களாட்சி நடைபெற்றது என்பதையும் கூறுகிறார். இவ்வாறு, திராவிட இயக்கத்தின் சிந்தனை வெளிப்பாடுகளாக பண்டைத் தமிழர் வரலாற்றையும், பண்பாட்டையும் சங்க இலக்கியத்தின் வழியாக மு.கருணாநிதி எடுத்து கூறுவதை பார்க்க முடிகிறது.

## தொகுப்புரை

- இந்திய விடுதலைக் காலத்தைத் தொடர்ந்து தந்தை பெரியார், சி.என்.அண்ணாதுரை இருவருக்குமிடையே பல்வேறு காரணங்களைப் பற்றிக் கருத்து வேறுபாடுகள் தோன்றின. திராவிடர் கழகம் என்ற அமைப்பிலிருந்து திராவிட முன்னேற்றக் கழகம் என்ற புதிய அமைப்புத் தோன்றியது. இக்காலகட்டத்தை இரண்டாம் கட்டத் திராவிட இயக்கம் எனலாம்.
- இந்திய விடுதலை நாளைத் துக்க நாளாக அறிவித்தார் தந்தை பெரியார். சி.என்.அண்ணாதுரை தனது திராவிட நாடு ஏட்டில் அந்த நாளை 'இன்பநாள்' என்று எழுதினார். ஆங்கிலேயர்-ஆரியர் என்ற இரண்டு எதிரிகளில் ஒருவர் குறைந்திருக்கிறார் என்ற அடிப்படையில் அதனை வரவேற்க வேண்டுமென்று கருதினார். இந்த வேறுபாடு இருவருக்குமிடையில் பிணக்கை ஏற்படுத்தியது.
- பெரியாரின் திருமண ஏற்பாடு குறித்த விவாதங்களிலும் அண்ணாதுரை முரண்பட்டிருந்தார். தன்னைப்போலவே பெரியாரின் திருமண ஏற்பாட்டில் முரண்பட்டிருந்த பிற அமைப்புத் தோழர்களோடு 'திராவிட முன்னேற்றக் கழகம்' என்ற புதிய அமைப்பினைத் தோற்றுவித்தார்.
- சி.என்.அண்ணாதுரையின் அரசியல் குறிக்கோள் என்பது கால்டுவெல்லின் ஒப்பிலக்கணம், சங்க இலக்கியக் கண்டுபிடிப்புகள், சிந்துச்சமவெளிக் கண்டுபிடிப்புகள், ஐரோப்பிய சனநாயகச் சிந்தனைகள் ஆகியவற்றை உட்கொண்டதாகும்.
- தமிழக வரலாற்றில் தமிழ்மொழி குறித்த சிந்தனை பல்வேறு மாற்றங்களை அடைந்து வந்துள்ளது. தமிழ் தேசிய இனத்துக்கு உணர்ச்சி ஊட்டக்கூடிய ஓரம்சமாக மொழி இருந்து வந்திருக்கிறது. மொழி என்பது வெறும் கருவியாக மட்டுமின்றி, தேசிய இனத்தின் அடையாளமாகவும் திகழ்ந்திருக்கிறது.
- சங்க காலத்தில் தமிழ்மொழியில் வந்து கலந்த வடமொழி, இடைக்காலத்தில் அதிகமான இடத்தைப் பெற்று ஆதிக்கம் செலுத்தத் தொடங்கியது.
- சோழர் காலத்தில் பெருங்காப்பியங்கள் தோன்றின. இக்காலகட்டத்தில் வடமொழி எதிர்ப்பும் தமிழை உயர்த்திப்பிடிக்கும் போக்கும் காணக்கிடைக்கிறது. தமிழ்விடு தூது இலக்கியத்தில் தமிழுக்கு வடமொழி ஏவல் செய்வதாகவே வருணிக்கப்படுகிறது.

- விஜயநகரப் பேரரசு, நாயக்க, மராட்டிய அரசுகள் ஆகிய வேற்றரசுகளின் காலத்தில் பிற மொழியினர் தமிழகத்தில் மிகுதியும் குடியேறினர். எனவே தமிழகம் கலப்புப் பண்பாடுகளுக்குரிய களமாயிற்று.
- பெரியாரின் மொழி பற்றிய கருத்துக்கள் வெளிப்படையானவை. அதனாலேயே அவருடைய கருத்துக்களில் ஒரு தொடர்ச்சியின்மை வெளிப்படுகிறது என்று கருதுவோரும் உள்ளனர். தமிழைக் காட்டுமிராண்டிக் காலத்து மொழி என்றும் தமிழ் இலக்கியங்கள் பயன்பாட்டுக்கு உதவாதவை என்றும் பெரியார் கடுமையாகச் சாடினார்.
- மொழி பற்றிய சிந்தனைகளிலும் பெரியாரும் அண்ணாதுரையும் இருவேறு துருவங்களில் நின்றனர். மொழியில் கருத்துக்கு முதன்மையளித்தார் பெரியார். வடிவத்துக்கு முன்னுரிமை அளித்தார் அண்ணாதுரை.
- திராவிட இன அடிப்படையில் சங்க இலக்கியத்தை ஆராய்ந்த சி.என்.அண்ணாதுரை தமிழின் தொன்மை, தனித்தன்மை, பெருமை என்ற அடிப்படையில் தனது கருத்துக்களை முன்வைத்தார். பழந்தமிழகத்தின் வரலாற்றையும் தமிழர்களின் வீரத்தையும் அவர்களின் போர் முறையையும், வாழ்வியலையும், செல்வச் செழிப்பையும், சங்க இலக்கியச் சிறப்பையும் இன உணர்வை வளர்க்கும் வகையில் வெகு மக்களிடம் கொண்டு சேர்த்தார் அண்ணாதுரை.
- சங்க இலக்கியங்களைச் சிறு சிறு பிரசுரங்களாக்கி மக்கள் மத்தியில் பரப்பிட வேண்டும் என்று அண்ணாதுரை பல இடங்களில் பேசியும் எழுதியும் வந்தார். அவரது கூற்றுக்கிணங்க, சிறு சிறு நூல்கள் வெளியிடப்பட்டன. அதனைத் தொடர்ந்து சங்க இலக்கியம் தொடர்பான ஆய்வுகள், எளிய உரைகள், கட்டுரைகள் போன்றவை வெளிவரத்தொடங்கின எனலாம்.
- கம்பராமாயணத்துக்கு மாற்றாக அண்ணாதுரை சங்க இலக்கியங்களை முன்மொழிந்தார். எனவேதான் கம்பராமாயணத்தைப் பழித்துப் பேசும் இடங்களில் நற்றிணையை, நல்ல குறுந்தொகையை, கற்றறிந்தோர் ஏத்தும் கலியை, அகத்தை, புறத்தை அழிக்க நாங்கள் புறப்படவில்லை என்று பேசினார்.
- தமிழர்களுக்குத் தனிக்கலை உண்டு என்றும் சங்க நூல்கள் அக்கலைச் செல்வத்தைக் காட்டுகின்றன என்றும் தனியான கலையுடன் தனியான வாழ்வும், தனியரசும் பெற்று வாழ்ந்த தமிழர், பின்னர் தாழ்ச்சியுற்றுத் தன்மானம் இழந்து

தன்னரசு இழந்ததற்குக் காரணம் கம்பராமாயணம், பெரிய புராணம் போன்ற நூல்களே என்று கருத்துரைத்தார் அண்ணாதுரை.

- புராண இதிகாசக் கருத்துக்களின் தாக்கமில்லாத சங்க இலக்கியங்களை உயர்த்திப் பிடிப்பதும் புராணங்களின் தன்மையைக் கேலி செய்வதும், சங்க இலக்கியத்தின் பொருண்மைகளோடு தற்கால வாழ்வை ஒப்பிட்டு, சங்க காலத்தைப் பெருமைப்படுத்தியும் அண்ணாதுரை பேசியும் எழுதியும் வந்தார்.
- பழந்தமிழகத்தின் ஆட்சிச் சிறப்பையும் மன்னர்களின் சிறப்புக்களையும் எடுத்துக்காட்டித் தற்காலத் தமிழகம் மேன்மையடைய வேண்டும் என்று எழுதியும் பேசியும் வந்தார் அண்ணாதுரை.
- சங்க இலக்கியங்களில் உள்ள இயற்கைக் காட்சிகளை அண்ணாதுரை பலவாறாக விதந்து போற்றிப் பேசுகிறார். அவை யாவும் உன்னதமான, காணுதற்கு இனிய காட்சிகள் என்பது அவர் கருத்தாகும். சங்க இலக்கியங்களிலுள்ள இனிய காட்சிகள் பலவற்றை விவரித்து எழுதியுள்ளார் அவர்.
- பண்டைத் தமிழ்ச் சமூகத்தின் காதல், வீரம், கவிதை வளம், கொடை, அறம், போர், ஊர்ச்சிறப்பு, ஊராள்வோன் சிறப்பு எனப் பலவகையான சிறப்புகளைச் சங்க இலக்கியத்திலிருந்து எடுத்துக்காட்டுகிறார் அண்ணாதுரை.
- அண்ணாதுரை முன்னெடுத்த சங்க இலக்கிய மேன்மையை மேலும் விதந்து பேசியவர் கருணாநிதியாவார். தமிழர்களின் கல்விச்சிறப்பு, சங்க கால மன்னர்களின் பெருமை மிகு வரலாறு, வாணிபச் சிறப்பு என்றெல்லாம் பாராட்டி எழுதியுள்ளார்.
- மு.கருணாநிதியின் தமிழின உணர்வும் தமிழ் மான உணர்வும் சங்க இலக்கியத்தில் ஈடுபாடு கொள்ள வைத்தது என்று சி.பாலசுப்பிரமணியன் கருத்துரைப்பார். மு.கருணாநிதியின் பேச்சிலும் எழுத்திலும் சங்க இலக்கியத் தொடர்களோ, பாட்டுகளோ, கருத்துக்களோ இடம்பெறாமற் போகாது என்பர்.
- எட்டுத்தொகை, பத்துப்பாட்டு இவற்றிலிருந்து நூறு பாடல்களைத் தேர்ந்தெடுத்துக் கவிதை நடையில் சங்கத் தமிழ் என்ற மறு ஆக்கத்தைப் படைத்திருக்கிறார் மு.கருணாநிதி. தமிழ் உணர்வு, தமிழ் இனப்பற்று ஆகியவற்றை உட்கொண்டதாக அக்கவிதை உரை அமைந்திருக்கிறது எனலாம்.
- சங்கத் தமிழ் எழுத்தோவியங்களின் வழியாகச் சங்க இலக்கியத்தைத் தமிழர்களின் வீரத்தின் அடையாளமாகவும், வரலாற்றுப் பேழையாகவும் காட்ட முயற்சிக்கிறார் மு.கருணாநிதி.

- மு.கருணாநிதியின் உரை விளக்கத்தில், மூலத்தில் இல்லாத சில கருத்துக்கள் தரப்பட்டுள்ளன. தோழியின் கூற்றாக அமைந்த பாடலில் தலைவன் தலைவியின் உரையாடல் இடம்பெறுவது முதலான மாற்றங்கள் இடம்பெற்றுள்ளன. வாசகர்களுக்குப் பாடலின் கருத்தைக் கொண்டு சேர்க்கும் முயற்சியாகவே இது அமைகின்றது எனலாம்.
- மு.கருணாநிதியின் உரை விளக்கத்தில் சங்க இலக்கியங்களில் உள்ள பகுத்தறிவுக் கருத்துக்கள் முதன்மையளித்து அழுத்தம் கொடுத்து விவரிக்கப்படுகின்றன. திராவிடக் கருத்துநிலையைத் தனது உரை விளக்கத்தில் கலந்து அளித்துள்ளார் மு.கருணாநிதி.

## சான்றெண் விளக்கம்

1. பொன்.மாறன் திராவிட இயக்கங்களின் வரலாற்றுப் பின்னணி, ப.95
2. கோவி.லெனின், ப.105
3. பேரறிஞர் அண்ணாவின் சொற்பொழிவுகள் (தொகுதி 1) ,பக்.446,447
4. மேலது, ப.447
5. மேலது, ப.450
6. மேலது., ப.447
7. க.திருநாவுக்கரசு, திராவிட இயக்க வேர்கள், ப.58
8. ந.முத்துமோகன், தமிழ் அடையாள அரசியலின் இயங்கியல், பக்.123,124
9. க.திருநாவுக்கரசு, மு.நூ, ப..58
10. கோ.கேசவன், திராவிட இயக்கமும் மொழிக்கொள்கையும், ப.42
11. மேலது, ப.21
12. மேலது, ப.21
13. மேலது, ப.22
14. மேலது, பக்.22,23
15. மேலது, பக்.24,25
16. மேலது, ப.25
17. கி.பார்த்திபராஜா, தமிழ்மொழி அரசியல், ப.15
18. சுப.வீரபாண்டியன், பெரியாரின் இடது சாரித் தமிழ்த் தேசியம், ப.16
19. மேலது, ப.16
20. கோ.கேசவன், மு.நூ, ப.27
21. மேலது, ப.27
22. சுப.வீரபாண்டியன், மு.நூ, ப.18
23. மேலது, ப.18
24. மேலது, ப.19
25. மேலது, ப.19
26. மேலது, ப.19,20
27. மேலது, ப.20
28. கோ.கேசவன், மு.நூ, பக்.27,28
29. மேலது, பக்.29,30

30. மேலது, ப.43
31. மேலது,ப.43
32. தந்தை பெரியார், மொழித்தொல்லை, ப.5
33. மேலது, பக்.10,11
34. மேலது, ப.15
35. தந்தை பெரியார்,தமிழும் தமிழ் இலக்கியங்களும், பகுத்தறிவு வெளியீடு பக்.12,13
36. மேலது, பக்.13,14
37. மேற்கோள்: கி.பார்த்திபராஜா, தமிழ்மொழி அரசியல், ப.46
38. மேற்கோள்: கோ.கேசவன், மு.நூ, ப.45
39. கி.பார்த்திபராஜா, மு.நூ, ப.146
40. மேற்கோள்: கோ.கேசவன், மு.நூ, ப.45
41. மேலது, ப.45
42. கி.பார்த்திபராஜா, மு.நூ, ப.53
43. மேற்கோள்: மேலது, பக்.151,152
44. மேலது, ப.159
45. கோ.கேசவன், மு.நூ, ப.47
46. மேலது, ப.46
47. மேலது, ப.47
48. கி.பார்த்திபராஜா, மு.நூ, ப.170
49. கோ.கேசவன், மு.நூ, ப.49
50. மேலது, ப.107
51. மேலது, ப.80
52. ந.முத்துமோகன், தமிழ் அடையாள அரசியலின் இயங்கியல், ப.123
53. மேலது, ப.123
54. நைசி கரிகாலன் (தொ.ஆ), புறநானுற்று ஆய்வுகள், வீ.அரசு அணிந்துரை, ப.5
55. மேலது, ப.5
56. ப.உதயகுமார், அண்ணாவின் கலை இலக்கிய கோட்பாடுகள், பக்.13,14
57. அண்ணாதுரை, இலக்கியச்சோலை, ப.7
58. பேரறிஞர் அண்ணாவின் சொற்பொழிவுகள் தொகுதி(1) ப.134
59. இரா.நாராயணன், சங்க இலக்கிய அரசியல், ப.110
60. பேரறிஞர் அண்ணாவின் சொற்பொழிவுகள், (தொகுதி-1) பக்.46,47

61. மேலது, ப.65
62. மேலது, பக்.231,232
63. மேலது, ப.67
64. மேலது, ப.69,70
65. மேலது, பக்.222,223
66. மேலது, ப.472
67. மேலது, ப.696
68. மேலது, ப.744
69. மேலது, (தொகுதி - 2), ப.97
70. மேலது, ப.262
71. மேலது, பக்.586,587
72. மேலது, ப.713
73. மேலது, ப.718
74. மேலது, ப.746
75. மேலது, ப.792
76. மேலது, ப.801
77. மோ.பாட்டழகன் (தொ.ஆ), நாம் எல்லாம் ஒரே குடும்பம் ப.352
78. மேலது, ப.353
79. சி.என்.அண்ணாதுரை, அண்ணாவின் கடிதங்கள் (தொகுதி இரண்டு), ப.623
80. திராவிட நாடு, பொங்கல் மலர், 1955
81. சி.என்.அண்ணாதுரை, இலக்கியச்சோலை, பக்.23,24
82. மேலது, ப.10
83. மேலது, ப.47
84. சி.என்.அண்ணாதுரை, அண்ணாவின் கடிதங்கள் (தொகுதி நான்கு), பக்.47,48
85. சி.என்.அண்ணாதுரை, இலக்கியச்சோலை, பக்.42,43
86. சி.என்.அண்ணாதுரை, தம்பிக்கு அண்ணாவின் கடிதங்கள் (தொகுதி நான்கு), பக்.47,48
87. மேலது., ப.62
88. மேலது., ப.95
89. சி.என்.அண்ணாதுரை, ஏ, தாழ்ந்த தமிழகமே, பக்.17,18
90. மேலது, ப.49

91. சி.என்.அண்ணாதுரை,இலக்கியச்சோலை, டாக்டர் சி.என்.ஏ.பரிமளம் (தோரணவாயில்), ப.3
92. சி.என்.அண்ணாதுரை, பேரறிஞர் அண்ணாவின் சொற்பொழிவுகள் (தொகுதி 1), ப.49
93. சி.என்.அண்ணாதுரை, பேரறிஞர் அண்ணாவின் சொற்பொழிவுகள் (தொகுதி 2), ப.741
94. அ.மறைமலையன் (தொ.ஆ), அண்ணா போற்றிய பெருமக்கள், ப.2
95. மேலது, ப.2
96. பா.உதயகுமார், அண்ணாவின் கலை இலக்கிய கோட்பாடுகள், ப.59
97. சி.என்.அண்ணாதுரை, பேரறிஞர் அண்ணாவின் சொற்பொழிவுகள்(தொகுதி -1), ப.56
98. இள.புகழேந்தி (தொ.ஆ), கல்வி நிலையங்களில் கலைஞர் (பாகம்.1), ப.280
99. மேலது, ப.231
100. மேலது, பக்.432,433
101. மேலது, ப.434
102. மு.கருணாநிதி, முக்கனி, தி.மு.க. இளைஞர் அணி ப.22
103. மு.கருணாநிதி, கலைஞர் கடிதம் (தொகுதி-1), ப.48
104. மேலது, ப.58
105. மேலது, ப.58
106. மேலது, ப.76
107. டாக்டர் சி.பாலசுப்பரமணியன், கலைஞரும் சங்க இலக்கியமும், அறிஞர்கள் பார்வையில் கலைஞர் மணிவிழா நூல், கலைஞர் மணிவிழா மலர்க்குழு, ப.11
108. டாக்டர் ந.வெங்கடேசன், கலைஞரின் சங்கத்தமிழில் தமிழர் பண்பாடு. முனைவர் இரத்தின சபாபதி (பாராட்டுரை), ப.7
109. மேலது, முனைவர் பழ.முத்துவீரப்பன் (மதிப்புரை), ப.11
110. மு.கருணாநிதி, சங்கத்தமிழ், ராக்.ஃபோர்ட் பள்ளிக்கே'ன்ஸ், ப.28
111. மேலது, ப.136
112. கருவூர் கண்ணல், கலைஞரின் சங்கத் தமிழில் மார்ச்சியப் பார்வை, மூன்றாம் தமிழிலக்கிய ஆய்வுக் கோவை, அனைத்திந்தியத் தமிழ் இலக்கியக் கழகம் ப.735
113. மு.கருணாநிதி, மு.நூ, ப.2
114. மேலது, ப.81
115. மேலது, ப.162

116. மேலது, ப.164
117. மேலது, ப.10
118. திருக்குறள், 969
119. மு.கருணாநிதி, மு.நூ, ப.15
120. மேலது, ப.19
121. மேலது, ப.19
122. மேலது, ப.125
123. மேலது, ப.125
124. மேலது, ப.169
125. மேலது, ப.213
126. புறநானூறு, பா.எ.186 1-2
127. மு.கருணாநிதி, சங்கத்தமிழ், ப.42
128. இனியவை நாற்பது, 13
129. திருக்குறள், 969
130. நாலடியார், 300
131. மு.கருணாநிதி, மு.நூ, ப.10
132. புறநானூறு, பா.எ.74
133. மு.கருணாநிதி, ப.14
134. நாவலர் நெடுஞ்செழியன், திராவிட நாகரிகம், ஐந்தாம் உலகத் தமிழ் மாநாட்டு விழா மலர், தமிழக அரசு வெளியீடு ப.1
135. நற்றிணை, பா.எ.335
136. மு.கருணாநிதி, மு.நூ, ப.210
137. மேலது, ப.192
138. புறநானூறு, பா.எ.192
139. மு.கருணாநிதி, மு.நூ, ப.8
140. மேலது, ப.8
141. மேலது, ப.111
142. மேலது, ப.114
143. மேலது, ப.346
144. மேலது, பக்.346,347

## 4. திராவிட இயக்க ஆய்வாளர்களின் சங்க இலக்கிய வாசிப்பு

4.1. சி.இலக்குவனார் - சங்க இலக்கிய வாசிப்பு

4.1.1. பழந்தமிழரின் பெருமை

4.1.2. சங்க இலக்கியத்தின் தொன்மை

4.1.3. தமிழ் மொழியின் தொன்மை

4.1.4. தமிழரின் பெருமை

4.1.5. தமிழ்ச்சங்கம்

4.1.6. ஊர்ப்பெயர்கள்

4.1.7. பண்டைத் தமிழரின் வாழ்க்கை முறை

4.1.8. வைதீக கலப்பால் ஏற்பட்ட பிரிவுகள்

4.1.9. பண்டைத் தமிழரின் கடவுள் நம்பிக்கை

4.2. கா.அப்பாத்துரையார் - சங்க இலக்கிய வாசிப்பு

4.2.1. பண்டைத் தமிழரின் போர் நெறி

4.2.2. திராவிட நாகரிகத்தின் பெருமை

4.2.3. பண்டைத் தமிழரின் வீரம்

4.2.4. இன்றையத் தமிழர் மரபு

4.2.5. தமிழரர்களுக்கான வரலாறு

4.2.6. தமிழகத்தின் வரலாறு

4.2.7. திராவிட நாகரிகத்தின் தொன்மை

4.2.8. பண்டைத் தமிழரின் வாணிக உறவு

4.2.9. திராவிட தேசியம்

4.3. மு.வரதராசனார் - சங்க இலக்கிய வாசிப்பு

4.3.1. பண்டைத் தமிழரின் நாகரிகச் சிறப்பு

4.3.2. பண்டைத் தமிழரின் வீரம்

4.3.3. பண்டைத் தமிழரின் மானம்

4.3.4. தமிழ்ச்சங்கம்

4.4. கா.கோவிந்தன் - சங்க இலக்கிய வாசிப்பு

4.4.1. சேர, சோழ, பாண்டிய அரசுகளின் தொன்மை

4.4.2. பண்டைய மன்னர்களின் ஆட்சி எல்லை (காஞ்சிபுரம்)

4.4.3. குமரி முதல் வேங்கடம் வரை

4.4.4. ஊர்ப் பெயர்கள்

4.4.5. ஊர்ப் பெயர்கள் சமஸ்கிருதத்தால் ஏற்பட்ட மாற்றம்

4.4.6. சங்க காலப் புலவர் (மாமூலனார்)

4.4.7. சங்க காலம்

4.5. லெ.ப.கரு.இராமநாதன் செட்டியார் - சங்க இலக்கிய வாசிப்பு

4.5.1. சங்கத் தமிழரின் பெருமை

4.5.2. பண்டைத் தமிழரின் கல்விச் சிறப்பு

4.5.3. சங்க காலப் பெண்களின் கல்விச் சிறப்பு

4.5.4. பண்டைத் தமிழரின் வாணிகச் சிறப்பு

4.5.5. பண்டைய தமிழரின் வரலாறு

4.6. ச.சோமசுந்தர பாரதியார் - சங்க இலக்கிய வாசிப்பு

4.6.1. பழந்தமிழ் நாகரிகத்தின் பெருமைகள்

4.6.2. பண்டைத் தமிழரின் திருமண முறைகள்

4.7. ந.சி.கந்தையா பிள்ளை – சங்க இலக்கிய வாசிப்பு

4.7.1. நாகரிகத்தின் முன்னோடி

4.7.2. தமிழர் x ஆரியர்

4.7.3. தமிழ் மொழியின் தனித்தன்மை

4.8. மயிலை சீனி.வேங்கடசாமி - சங்க இலக்கிய வாசிப்பு

4.8.1. கால ஆராய்ச்சி

4.8.2. ஐயர் என்னும் சொல்லின் பொருள்

4.8.3. திராவிட – ஆரியக் கலப்பு

4.8.4. தமிழரின் பண்பாடு

4.8.5. பழங்காலத் தமிழர் வாணிகம்

4.8.6. பண்டமாற்று முறை

4.8.7. நெசவுத்தொழில்

4.8.8. அணிகலன்கள்

4.8.9. மூவேந்தர்களின் சிறப்புகள்

4.9. மறைமலையடிகள்

4.10. தேவநேயப் பாவாணர்

## இயல் - 4

## திராவிட இயக்க ஆய்வாளர்களின் சங்க இலக்கிய வாசிப்பு

இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் உருவான திராவிட இயக்கம் தமது அடையாளங்களைப் பல்வேறு செயல்பாடுகளின் மூலம் கட்டமைத்தது. தேசியம், சனநாயகம், மதச்சார்பற்ற தன்மை ஆகியவற்றைக் குறிக்கோளாகக் கொண்ட திராவிட இயக்கம் தனது கொள்கைகளுக்குத் தகுந்த மதச்சார்பற்ற இலக்கியத்தைத் தேடியது. திராவிட நாடு கோரிக்கை, மதச்சார்பற்ற போக்கு முதலான திராவிட இயக்கக் கொள்கைகளைப் பிரச்சாரம் செய்ய சங்க இலக்கியத்தை அது பயன்படுத்திக் கொண்டது.

தமிழர் வரலாறு, பண்பாடு, தமிழர்களின் பல்வேறு வகையான சிந்தனை மரபுகள் ஆகிய பல்வேறு தகவல்களைச் சங்க இலக்கியத்தில் காட்டத் தொடங்கினர். திராவிட இன அடிப்படையில் தமிழ் இலக்கியத்தை ஆராய்ந்த தமிழ் அறிஞர்கள் தமிழின் தொன்மை, தனித்தன்மை, பெருமை என்ற அடிப்படையில் தங்கள் ஆய்வுகளை நிகழ்த்தினர். தமிழ் மொழியியல், இலக்கியம், வரலாறு பற்றிய செய்திகளை வெளிக்கொணரும் முயற்சியில் ஈடுபட்டனர். வீரம் உள்ளிட்ட பல்வேறுவகையான செய்திகளை சங்க இலக்கிய பாடல்களிலுள்ள செய்திகளின் மூலம் திராவிட இயக்கச் சார்பாளர்கள் வெளிப்படுத்தினர்.

தமிழரின் தொன்மைச் சிறப்பையும், பொருள் வளத்தையும் வியந்து எழுதிய எழுத்துக்கள், திராவிட இயக்கத்தினர் சங்க காலத்தைப் பொற்காலமாக்கித் தங்கள் இயக்க வளர்ச்சிக்குப் பயன்படுத்திக் கொண்டமைக்கு வழிகாட்டியாக இருந்தது எனலாம்.

திராவிட இயக்கச் சிந்தனைகளின் அடிப்படையில் ஆய்வு செய்த சி.இலக்குவனார், கா.அப்பாத்துரையார், மு.வரதராசனார், கா.கோவிந்தன் போன்றோரின் ஆய்வுகள், அன்றைய சூழலில் செய்யப்பட்ட திராவிட இயக்கங்களின் கருத்தாடல்களுக்கு வளம் சேர்ப்பனவாக அமைந்தன. திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சேர்ந்தவர்கள், மேடைகளில் சங்க இலக்கியத்தைப் பயன்படுத்தி நிகழ்த்தும் சொற்பொழிவுகள் உருவாக்கிய கருத்தாடல்களுக்கு வளம் சேர்ப்பதாக இவர்களின் சங்க இலக்கியம் குறித்த ஆய்வுகள் அமைந்துள்ளன.

### 4.1.சி.இலக்குவனார் - சங்க இலக்கிய வாசிப்பு

திராவிட இயக்கச் சிந்தனைகளின் அடிப்படையில் நூல்களை எழுதிய சி.இலக்குவனார் பழந்தமிழ் (1962) இலக்கியம் கூறும் தமிழர் வாழ்வியல் (1962) முதலான நூல்களின் மூலம் பழந்தமிழ் நாகரிகத்தின் பெருமைகளை எழுதினார்.

#### 4.1.1.பழந்தமிழரின் பெருமை

"உலகின் முதல் மாந்தர் தோன்றிய இடம் தமிழகமே என்பதும், முதல் மாந்தரால் உரையாடப்பெற்ற மொழி தமிழேயென்பதும் உண்மையோடுபட்ட செய்திகளேயாயினும் இன்னும் யாவராலும் ஒப்புக்கொள்ளப்படவில்லை. தமிழர்கள் இந்நாட்டில் தோன்றியவரே என்பதும் ஆரியர் வருகைக்கு முன்னர் இந்நாட்டில் வாழ்ந்த மக்கள் தமிழர்களே என்பதும் நிலைநாட்டப் பெற்றுவிட்டன.

மறைந்துபோன மாநகரங்களான ஆரப்பா, மோகஞ்சதரோ ஆகிய இடங்களில் வாழ்ந்தவர்கள் தமிழர்களே என்பதும் அவர்கள் உரையாடிய மொழி தமிழே என்பதும் ஐயத்துக்கு இடமின்றி உறுதிசெய்யப்பட்ட உண்மைகளாகும்"[1] இங்கு பழந்தமிழரின் பெருமைகளை பேசுவதுடன், இந்தியா முழுவதும் பேசப்பட்ட மொழி தமிழ் என்பதையும், அது ஆரியரின் வருகையினால் மாறுபாடுகளை அடைந்தது என்பதையும், பின்வரும் கூற்றில் தெளிவாக்குகின்றார்.

#### 4.1.2.ஆரியரின் தொடர்பால் தமிழ்மொழி அடைந்த மாற்றம்

"ஆரியர் வருகைக்கு முன்னர் இந்தியா முழுவதும் வழங்கிய மொழி தமிழேயாகும் என்பதை ஆரியமொழி நூல்களும், பிற வட இந்திய மொழிகளும் தெற்றென விளக்குகின்றன. தமிழின் தொடர்பால் ஆரியம் பல மாறுபாடுகளை அடைந்துள்ளது. அது தனக்கு வரி வடிவ எழுத்துக்களைப் படைத்துக்கொண்டது. ஆரியமும் தமிழும் இணைந்து கலப்புற்றதனால் உண்டான விளைவே, இவை ஒழிந்த இந்திய மொழிகளின் தோற்றமாகும். ஆரியத்தின் வருகையால்தான் தமிழ் வேற்றுரு அடைந்து வட இந்திய மொழிகளாகவும் தென்னிந்திய மொழிகளாகவும் கிளைக்கும் நிலை உண்டாகியது."[2] இங்கு ஆரியத்தின் தொடர்பால் தமிழ்மொழி வட இந்திய மொழிகளாகவும், தென்னிந்திய மொழிகளாகவும் சிதைந்தது என்ற கருத்தை முன்வைக்கின்றார்.

திராவிட இனத்தின் தொன்மை, தனித்தன்மை ஆகியன குறித்துத் திராவிட இயக்கம் முன்வைத்த கருதுகோள்களை ஆய்வு முடிவுகளாக முன்வைக்கும் தன்மையை சி.இலக்குவனாரிடம் காண முடிகிறது.

### 4.1.3.சங்க இலக்கியத்தின் தொன்மை

சங்க இலக்கிய பாடல்களுள் பல ஆரியர் வருகைக்கு முன் இயற்றப்பட்டது என்பதைப் பின்வரும் ஆய்வில் குறிப்பிடுகிறார் சி.இலக்குவனார். "பத்துப்பாட்டுள் "மலைபடுகடாம்" என்பது ஆரியர் வருகைக்கு முன்னரும் தொல்காப்பியர் காலத்திற்கு முன்னரும் இயற்றப்பட்டதாகும்."[3] "எட்டுத் தொகையினுள் 2371 பாடல்களுள் ஐந்நூறு பாடல்கள் ஆரியர் வருகைக்கு முன்னர் இயற்றப்பட்டன என்பதில் ஐயமின்று. இவற்றுள் பயின்றுள்ள பல சொற்கள் வழக்கினுள் வாழ்கின்றன"[4] என்று கூறி அதற்கான ஆதாரங்களை விளக்கி செல்கின்றார். ஆரியர் வருகைக்கு முன்னரேயே தமிழில் வளமான இலக்கிய மரபு இருந்தது என்று நிறுவும் முயற்சியே சி.இலக்குவனாரின் மேற்குறித்த ஆய்வில் வெளிப்படுகிறது.

### 4.1.4.தமிழ்மொழியின் தொன்மை

தொல்காப்பியர் காலத்தையும், தொல்காப்பியர் தமிழையும் குறிப்பிடும் சி.இலக்குவனார், "தொல்காப்பியர் காலம் ஆரியர்கள் தென்னாட்டில் குடியேறிய காலம். அக்காலம் கி.மு.ஏழாம் நூற்றாண்டு என்பர். அக்கால நிலையைத் தெளிவாக அறிவிப்பது தொல்காப்பியமே. தொல்காப்பியர் அவர்க்கு முன்பிருந்தோர் இயற்றிய நூல்களையும், அவர்காலத்து நூல்களையும், அவர்கால வழக்கினையும் நன்கு ஆராய்ந்து மொழியிலக்கணமும் இலக்கிய இலக்கணமுமாகப் பயன்படத் தம் நூலை ஆக்கித் தந்துள்ளார். அத் தொல்காப்பியத்துள் பயின்றுள்ள பல சொற்கள் இன்றும் தமிழை வளம்படுத்திக் கொண்டிருக்கின்றன."[5] இவ்வாறு தமிழின் தொன்மை சிறப்பை கூறுகிறார்.

### 4.1.5.தமிழரின் பெருமை

தமிழர்கள் ஆரியர்கள் வருவதற்கு முன்பே உயர்ந்த நாகரிகத்தையும், பண்பாட்டையும் பெற்றிருந்தனர் என்பதை "இந்தியாவில் ஆரியர் வருகைக்கு முன் வாழ்ந்த தமிழினம் பண்பாட்டிலும் நாகரிகத்திலும் ஆரியர் இனத்தைவிடத் தாழ்வுற்று இல்லை. பல்வகையாலும் உயர்ந்த நாகரிகத்தையும் பண்பாட்டையும் தமிழினம் பெற்றிருந்தது

என்பது ஆரிய நூல்களாலேயே அறியக் கூடும்”[6] என்று கூறுவதிலிருந்து இந்தியா முழுவதும் தமிழர் பண்பாடும், நாகரிகமும் பண்டைய காலத்தில் இருந்தது என்ற கருத்தை முன்வைக்கின்றார்.

மேலும், இன்றைக்கு இருக்கும் இந்திய பண்பாட்டை தமிழர் பண்பாட்டின் ஒரு பகுதியாகவே பார்க்கிறார். “ஆரிய இனமும் தமிழினமும் கலந்துவாழத் தொடங்கிய பின்னர் இருவகையினர் பண்பாட்டிலும் நாகரிகத்திலும் கலப்பு நிகழ்ந்தது, அக்கலப்பின் பயனாகப் புதிய பண்பாடும் நாகரிகமும் உருவாகத் தொடங்கியது. அதுவே இன்றுள்ள இந்தியப் பண்பாடு. இப் பண்பாட்டில் மிகுந்த அளவு தமிழருடையதென்றும் குறைந்த அளவு ஆரியருடையதென்றும் ஆராய்ச்சியாளர் கூறுவர்”[7] என்பர்.

**4.1.6.தமிழ்ச் சங்கம்**

சங்கம் பற்றிய செய்திகள் நம்புதற்குரியன எனக் கருதும் சி.இலக்குவனார் “சங்க இலக்கியங்கள் என்பனவற்றுள் பெரும்பாலானவை தொல்காப்பித்திற்குப் பிற்பட்டனவே. தமிழை வளர்க்கச் சங்கம் தோன்றியதே தொல்காப்பியத்திற்குப் பின்னர்தான் என்பதில் ஐயமின்று. மொழியைப் பேணிப் புரந்து வளர்ப்பதற்கெனப் புலவர்கள் கழகம் அமைத்த சீர்மிகு செயல் உலகிலேயே தமிழகத்தில்தான் முதன் முதல் நிகழ்ந்துள்ளது. அந்நிகழ்ச்சியும் கிருத்து பிறப்பதற்குச் சில நூற்றாண்டுகளுக்கு முன் ஏற்பட்டுள்ளது.”[8] இவ்வாறு சங்கம் பற்றிய காலக்கணக்கை வேறு விதமாகக் குறிப்பிடுகின்றார்.

**4.1.7.ஊர்ப்பெயர்கள்**

சங்க இலக்கியத்தில் காணப்படும் ஊரின் பெயர்கள் இன்றும் வழக்கில் உள்ளன என்று வாதிடும் சி.இலக்குவனார்,“தலை நகரங்களும் பிற ஊர்களும் புலவர்களால் பாடப்பெற்றுள்ளன. இலக்கியங்களில் இடம் பெற்றுள்ளன. இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்பிருந்தனவற்றுள் பல இன்றும் பழம் பெயர்களுடனேயே இருக்கின்றன. சில பெயர்கள் சிதைந்தும் சில பெயர்கள் வடமொழியாக்கப்பட்டும் உள்ளன. பெரு நகர்கள் சில சிற்றூர்களாகவும் சிற்றுர்கள் சில பெரு நகரங்களாகவும் மாறுதல் உற்றுள்ளன”[9] இப்படித் தமிழகத்தின் சிறப்பை குறிப்பிடுகிறார்.

### 4.1.8.பண்டைத் தமிழரின் வாழ்க்கை முறை

பண்டைத் தமிழரின் வாழ்க்கை முறையை கூறும்போது "மக்களிடையே இன்று பல வேற்றுமைகள் உள. இவ்வேற்றுமைகளுள் மக்களை அல்லலுக்கு ஆளாக்குவன சாதியும் மதமும் ஆகும். அன்று தமிழ் மக்களிடையே சாதி வேறுபாடுகள் தோன்றில. 'சாதி' என்னும் சொல்லே தமிழ்ச் சொல் அன்று. இதனால் 'சாதி' பற்றிய பிரிவு தமிழகத்துக்குப் புறம்பானது என்று தெளியலாகும். மக்களிடையே சமய வாழ்வு காழ்கொண்டிருந்தது. ஆனால் சமயம் காரணமாகப் போரிட்டோர் இலர். மக்கள், அவர்கள் வாழும் திணை நிலங்களுக்கேற்ப அழைக்கப்பட்டனர். முல்லை நிலங்களில் வாழ்ந்தோர் ஆயர் என்றும், குறிஞ்சி நிலங்களில் வாழ்ந்தோர் குன்றவர் என்றும், மருத நிலங்களில் வாழ்ந்தோர் உழவர் என்றும், நெய்தல் நிலங்களில் வாழ்ந்தோர் பரதவர் என்றும் கூறப்பட்டனர். சூல்நிலைக்கேற்ப மக்கள் வாழ்வு அமைதல் இயல்பாதலின் திணைகளுக்கேற்ப மக்கள் வாழ்வு முறைகளிலும் மாற்றங்கள் இருந்தன. ஆனால் அம்மாற்றங்கள் உயர்வு தாழ்வு எனும் வேறுபாட்டுணர்வைத் தோற்றுவித்து மக்களை அலைக்கழித்தில. பிறப்பாலும் தொழிலாலும் உயர்வு தாழ்வு தோன்றப்பெறாது தத்தம் ஆற்றலுக்கேற்ப உழைத்து, உண்டு, உடுத்து, உறங்கி, மகிழ்ந்து வாழ்ந்தனர்"[10] இவ்வாறு பழந்தமிழரின் வாழ்வானது சிறப்பாக இருந்தது என்பதை சுட்டிக்காட்டுகின்றார். ஆரியம் உட்புகுவதற்கு முந்தைய தமிழரின் வாழ்வு செம்மையுற்றிருந்தது என நிறுவும் தன்மை மேற்குறித்த பதிவில் பொதிந்திருப்பதைக் காணலாம்.

மேலும், பழந்தமிழரின் திணை நிலைவாழ்க்கையைக் கூறும்போது "நால்வகை நிலத்து மக்களையும் இலக்கியங்களில் தலை மக்களாகக் கொண்டு பாடுங்கால், முல்லை நிலத்துக்குரியோர்க்கு அண்ணல், தோன்றல், குறும்பொறை நாடன் என்றும், குறிஞ்சி நிலத்துக்குரியோர்க்கு வெற்பன், சிலம்பன், பொருப்பன் என்றும், மருத நிலத்துக்குரியோர்க்கு மகிழ்நன், ஊரன் என்றும், நெய்தல் நிலத்துக்குரியோர்க்கு கொண்கன், துறைவன், சேர்ப்பன், மெல்லபுலம்பன் என்றும் பெயர்கள் வழங்கியுள்ளன.

### 4.1.9.வைதீக கலப்பால் ஏற்பட்ட பிரிவுகள்

இங்குக் கூறப்பட்ட நாட்டுப்பிரிவும் மக்கட் பிரிவும் அவை பற்றிய செய்திகளும் கி.மு. பல்லாயிரம் ஆண்டுகட்கு முற்பட்ட தமிழகத்திற்குரியன. வழி வழியாக இலக்கியத்தில் கொள்ளப்பட்டு வந்தனவேயன்றி இவைதாம் அக்கால நிலைமை என்று

கருதி விடுதல் கூடாது. சங்க காலத்தில் மிகவும் வளர்ச்சியுற்ற மன்பதையே இருந்துள்ளது. தொழில் வகையாலும் சிறப்பு வகையாலும் மக்களிடையே பல பிரிவுகள் ஏற்பட்டுவிட்டன. அரசர், வணிகர், உழவர், படை வீரர், அமைச்சர், காவலர், அறுவர், மருத்துவர் என்பன தொழில்வகைப் பிரிவுகளாகும். அந்தணர், அறிவர், பார்ப்பர், ஆசிரியர், புலவர் முதலிய பிரிவினர் மக்களிடையே மதிப்பும் செல்வாக்கும் பெற்றவராவர். நிலம், குடிமுறை, கொள்கை முதலியன பற்றியும் மக்கள் அழைக்கப்பட்டனர்."[11] என்று கூறும் இவர் வைதீகமதக் கலப்பால் பிறவி அடிப்படையில் வேற்றுமைகள் உண்டாகத் தொடங்கின என்பதை,

"நாளடைவில் தொழில்களுள் உயர்ந்தன தாழ்ந்தன என்ற பிரிவுகள் உண்டாயின, தொழில்கள் அடிப்படையில் உண்டான பிரிவுகள் பிறவி அடிப்படையில் வலுப்பெறலாயின. பிறவி அடிப்படையில் வேற்றுமைகளை நிலை நாட்டிக்கொண்ட வடவர் கூட்டுறவு தமிழர்க்கு ஏற்பட்டது. அவர்கள் வகுத்துக் கொண்டிருந்த "பிராமண, சத்திரிய, வைசிய, சூத்திரர்" என்ற நால்வகைப் பிரிவுகட்கு ஏற்பத் தம்முடைய தொழில் வகையில் அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் எனும் பிரிவுகளை மட்டும், மதிக்கத் தொடங்கினர். ஆயினும் பிறவி வகையால் வடவர்போல் உயர்வு தாழ்வு கருதாது, ஒழுக்கம், புலமை முதலிய சிறப்பு வகையால் உயர்வு தாழ்வு கொண்டனர். சாதிப்பிரிவுகளும் சமயப்பிரிவுகளும் தோன்றி நிலைத்துவிட்ட போதிலும் அவை காரணமாக மக்கள் போரிட்டுக் கொண்டாரிலர். எல்லோரும் ஒருவரோடு ஒருவர் உறவாடிக்கலந்து மகிழ்ந்து வாழ்ந்தனர். "ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்," "யாதும் ஊரே, யாவரும் கேளிர்" என்ற கொள்கைகள் மக்களிடையே செல்வாக்குப் பெற்றிருந்த காலமே சங்க காலம்"[12] என திராவிட கருத்துநிலைக்கு ஏற்ப விளக்கிச்செல்கின்றார்.

### 4.1.10.பண்டைத் தமிழரின் கடவுள் நம்பிக்கை

பண்டைத் தமிழரின் கடவுள் நம்பிக்கைப் பற்றி ஆராயும் சி.இலக்குவனார் பண்டைத்தமிழரின் கடவுள் நம்பிக்கை, சிறு தெய்வ வழிபாட்டு முறை என்பதும் அது வடமொழிப் புராணங்களாலும், சமய வெறியினாலும் பெரு தெய்வ வழிப்பாட்டு முறையாக மாறியது என்று குறிப்பிடுகின்றார்.

"தொல்காப்பியர் காலத்தில் கடவுளைக் குறிஞ்சி நில மக்கள் 'சேயோன்' என்றும், முல்லை நில மக்கள் 'மாயோன்' என்றும் மருத நில மக்கள் 'வேந்தன்' என்றும், நெய்தல்

நில மக்கள் ‘வண்ணான்’ அல்லது ‘வருணன்’ என்றும் அழைத்துள்ளனர். வெற்றி பெறுவதற்குத் துணை புரியும் கடவுள் ‘கொற்றவை’ என்று கூறப்பட்டுள்ளது. ‘கொற்றம்’ என்றால் ‘வெற்றி’— கொற்றத்திற்குரியவள் கொற்றவையானாள். கடவுளைப் பெண்ணாக வழிபடும் முறை தமிழகத்திற்கே உரித்து என்பர்.

தொல்காப்பியம் தோன்றி ஆயிரத்து ஐந்நூறு ஆண்டுகட்குப் பின்னர் வந்த உரையாசிரியர்கள் வடமொழி நூல்களைக் கற்றதன் பயனால் மாயோனைத் திருமால் என்றும், வேந்தனை இந்திரன் என்றும் வண்ணனை மழைக் கடவுளாம் வருணன் என்றும் கொற்றவையைத் துர்க்கை என்றும் அறிவித்தனர். ஆனால் பழந்தமிழர்கள் கடவுள் ஒருவரே என்றும் அவருக்குப் பல்வேறு பெயர்கள் உண்டு என்றும் அறிந்திருந்தனர். காடு இடையிட்டும் மலை இடையிட்டும் கடலிடையிட்டும் பிரிக்கப்பட்டு வாழ்ந்த மக்கள் அவரவர் உணர்ச்சி நுகர்ச்சிக்கேற்ப கடவுளுக்குப் பெயரிட்டனர். பின்னர் வடமொழிப் புராணங்களும் சமய வெறியும் ஏற்பட்டு ஒவ்வொரு பெயரும் வெவ்வேறு கடவுளைக் குறித்ததாகக் கொண்டு தத்தம் கடவுள் பெயரால் போரிட்டுக் கொண்டனர். சங்க காலத்தில் இந்த அவல நிலை இல்லை. ஒரு குறிப்பிட்ட சமயம் அதற்குரிய தனி அடையாளங்களும் வழிப்பாட்டு முறைகளும் இருந்தன என்று கூறுவதற்குரிய சான்றுகள் இல”[13] என்பர்.

சி.இலக்குவனார், பண்டைத் தமிழர்களுக்கு சமய அடையாளங்களும் சமய வழிப்பாட்டு முறைகளும் இல்லை. ஆரியர்கள் வருகையினால் தமிழர்களின் வழிபாட்டு முறைகள் மாற்றம் அடைந்தன என்ற கருத்தை முன்வைக்கின்றார். இது போன்ற ஆய்வுக்கருத்துக்களால் திராவிட இயக்கம், சங்க இலக்கியங்களே தூய தமிழினத்திற்கான இலக்கியம் என்ற கருத்தை முன்னெடுத்துச் செல்ல உத்வேகம் பெற்றது எனலாம்.

**4.2.கா.அப்பாத்துரையார் - சங்க இலக்கிய வாசிப்பு**

ஆரியருக்கு எதிராகவும், தமிழினத்திற்கு ஆதரவாகவும், திராவிட இயக்கவுணர்வோடு தரவுகளின் அடிப்படையில் சங்க இலக்கியத்தை ஆராய்ந்தவர் கா.அப்பாத்துரையார்.

கு.வெ.பாலசுப்பிரமணியன், கா.அப்பாத்துரையாரைப் பற்றிக் குறிப்பிடும்போது, “பகுத்தறிவுத் தருக்கம், காட்சி கருதலளவைகளின் வாயிலாக எதனையும் துருவி

ஆராய்வதும், தன்னெல்லைக்குட்பட்ட அறிவு மூலங்களோடு அடங்கிவிடாமல், உலகில் பிறமொழி பண்பாட்டறிவுகளோடு நம்முடையவற்றை உரசிப் பார்க்கும் ஒரு போக்கைத் திராவிட சித்தாந்தம் இயற்கையிலேயே பெற்றது என்பதற்கு அக்காலத்தில் அப்பாத்துரையாரே தகுந்த எடுத்துக்காட்டாகத் திகழ்ந்தார். திராவிட சித்தாந்தத்தின் தனித்தன்மையை நிறுவுவதற்கு அகன்று விரிந்த பல்துறை பன்மொழி அறிவு வேண்டியிருந்தது"[14] என்பர்.

சி.என்.அண்ணாதுரை கூறும்போது, "அவர் தமிழின் மூலத்தையே ஆராய முனைந்தவர், தமிழ் இனத்தின் வரலாற்றைத் துருவித் துருவி ஆராய்வதன் மூலம் தமிழ் இனத்துக்கும் மற்ற இனத்துக்கும் இடையே பகைமூட்ட அல்ல, தோழமையை ஏற்படுத்த நற்பணி செய்திருக்கிறார்."[15] என்று கூறுவர்.

1936 – 38 இல் திருநெல்வேலி இந்துக் கல்லூரிப் பாடசாலையில் இந்தி ஆசிரியராகவும் பணியாற்றிய அப்பாத்துரையார் 1938 – 39 இல் பெரியார், அண்ணா ஆகியோருடன் இந்தி எதிர்ப்பு இயக்கத்தில் பங்கு கொண்டார். காங்கிரசின் மொழிக் கொள்கையும், குறிப்பாக அதனைத் தமிழ்நாட்டில் நடைமுறைப்படுத்திய வேகமும் தமிழறிஞர் பலரைத் தேசிய இயக்கத்திலிருந்து வெளியேறச் செய்தன. "1938 – 39 இல் நிகழ்ந்த இந்தி எதிர்ப்பு இயக்கத்தில் மறைமலையடிகளார், நாவலர் சோமசுந்தர பாரதியார் ஆகியோர் பங்கேற்றனர். அப்பாத்துரையாரின் உள்ளத்தில் ஆழமாக வேரூன்றிருந்த இந்திய தேசிய உணர்வு தாய்மொழிப் பற்றின் காரணமாகத் திராவிடத் தேசியமாக மாறிற்று. ஒத்துழையாமை இயக்கத்தின்போது தன் பள்ளிச் சான்றிதழையும் ஆங்கில முதுகலைச் சான்றிதழையும் எரித்துவிடுமளவு தேசியவாதியாகத் திகழ்ந்த அப்பாத்துரையார், பெரியார் தேசிய இயக்கத்திலிருந்து விலகிச் சுயமரியாதைக் கழகம் தொடங்கியபோது அதனால் ஈர்க்கப்பட்டார்."[16] என்பர்.

"திராவிடர் கழகத்தின் பொதுச் செயலாளராக அப்பாத்துரையாரை அமர்த்த வேண்டுமென்ற எண்ணம் பாவேந்தர் பாரதிதாசனுக்கு இருந்தது. தென்சென்னையில் பெரியார் வீடுவாங்கவும் அப்பகுதியில் திராவிடர் கழகத்தை வளர்க்கவும் பன்மொழிப்புலவர் துணையாக இருந்திருக்கிறார்"[17] என்று குறிப்பிடுவர்.

கடவுள் நம்பிக்கை, சைவ சமய ஈடுபாடு ஆகியன அப்பாத்துரையார்க்கு இயல்பாக இருந்தன. எனினும் அவற்றையும் அவர் திராவிட தேசியக் கண்ணோட்டத்தோடு

நோக்குபவராகவே இருந்தார். “பெரியாரைத் தமிழினப் பாதுகாவலராக, ஏற்றுக் கொண்ட அப்பாத்துரையார், பெரியார், தமிழை ஒரு பயன்பாட்டுக் கருவி என்பதைத்தாண்டி உணர்வோடு நோக்கும் நோக்கைக் கொள்ளாமையைக் கண்டு, அவரைவிட்டு விலகினார். அண்ணாவின் சகிப்புத்தன்மை, பகைமை பாராட்டாத கண்ணியம் ஆகியவை அப்பாத்துரையாரைக் கவர்ந்தன. அப்பாத்துரையார் தம் இறுதிக்காலம் வரையில் திராவிட இயக்க உணர்வு கொண்டவராகவே இருந்தார். திராவிட நாகரிகம், திராவிடப் பண்பு, திராவிடப் பாரம்பரியம், திராவிட மொழி என்பவற்றுக்கெல்லாம் மிகப் பொருத்தமான வரலாற்று நெறியிலான விளக்கங்களை அவருடைய நூல்கள் இன்றும் அளிக்கின்றன.”[18]

### 4.2.1.பண்டைத் தமிழரின் போர் நெறி

சங்கத் தமிழரின் போர் நெறிகளை ஆராயப்புகுந்த கா. அப்பாத்துரையார் ‘தென்னாட்டுப் போர்க்களங்கள்’ என்னும் நூலை எழுதினார், அந்நூலைப் பற்றி அவர் கூறும்போது, “தென்னாட்டுப் போர்க் களங்கள் என்ற இச்சிற்றேடு மூவகைக் குறிக்கோள்களுடன் எழுதப்பட்டுள்ளது. அது தமிழகத்தை மையமாகக்கொண்டு அதன் அரசியல் விரிவாகிய தென்னாட்டிலும், அதனினும் விரிந்த பண்பு விரிவாகிய தமிழுலகம், அதாவது இந்தியாவிலும் தென்கிழக்காசியாவிலும் கண்ணோட்டம் செலுத்தித் தமிழகத் தேசிய வாழ்வின் உடலும் உயிர் மையமும் காணமுயன்றுள்ளது. அந்நாடுகளில் தேசிய, இன உரிமை வரலாறுகளில் வருங்கால வரலாற்றாசிரியர் மிகுதியும் கவனம் செலுத்தும்படி அது அவர்களைத் தூண்ட முனைந்துள்ளது. இரண்டாவதாக, போர்கள், வெளிநாட்டுத் தொடர்புகள் ஆகியவை தென்னகத்தைப் பற்றிய அளவில் வெறும் நிகழ்ச்சிகளல்ல. வரலாற்றின் எலும்புருவம் மட்டுமல்ல, அவையே தமிழர் தேசிய வாழ்வின் பல திரும்பு கட்டங்கள், பண்பு மாறுபாட்டுக் கணுக்கள் ஆகும். மூன்றாவதாக, போரும் தேசிய வாழ்வும் கூட நாட்டின் எலும்புக் கூடும் உடலும் மட்டுமே.அவற்றின் உயிர் அதன்தேசியப் பண்பும், அப்பண்பு அக உலகுடன் கொண்டுள்ள தொடர்புமேயாகும். தமிழக வரலாற்றின் உயிர் காண்போர் அவ்வரலாறு உண்மையில் உலகவரலாற்றின் ஓர் உட்கூறே என்பதை நெடுநாள் காணாதிருக்க முடியாது”[19] என்பது அவர் கூற்று. ‘தென்னாட்டுப் போர்க்களங்கள்’ போர்களங்களின் பட்டியலன்று, போர்க்காரணங்கள், போர்களின் பின்புலங்கள், போர்ச் செயல்கள், போரின் விளைவுகள், போர்களின் வழியாகப் புலப்படும் அரசியல் நெறிகள் ஆகியவற்றையெல்லாம் குறிப்பிடும் நூல் என்று அவர் குறிப்பிடுவதை பார்க்கமுடிகிறது.

“நில எல்லையில் தமிழர் பண்டைப் பெருவெற்றிகள் இமயத்தை அடக்கின. தமிழ் மூவேந்தரும் வில், கயல், புலி ஆகிய முத்தமிழ்க் கொடிகளையும் இமயமலையுச்சியில் பொறித்தார்கள். நில உலகத்தின் கூரை எனப்படும் இமயம் தமழர்தம் கொடிமரமாகவே அன்று நிலவிற்று. அத்துடன் இமயத்தையடுத்து வடநாடாகிய கங்கை நாட்டையும் இடை நாடுகளாகிய வங்கத்தையும், கலிங்கத்தையும் வென்று அவர்கள் போர்ப்பரணி பாடினார்கள்.”[20] இப்படித் தமிழரின் இன உணர்வை வளர்க்கும் விதமாக சங்கத் தமிழரின் வீரத்தின் சிறப்பை எடுத்துரைக்கிறார்.

### 4.2.2.திராவிட நாகரிகத்தின் பெருமை

ஆரியருக்கு எதிராக கருத்துருவாக்கத்தை உருவாக்கிய கா.அப்பாத்துரை, “ஆரியர் இமயம் கடந்து வருவதற்கு ஆயிரக்கணக்கான ஆண்டுகட்கு முன்பே தமிழினத்தவர் எழுதும் கலையும் நாகரிகமும் உடையவராய், சிந்துகங்கை வெளியெங்கும் பரவி நாடு நகரங்களும், கோட்டை கொத்தளங்களும் நிறுவி வாழ்ந்தனர். கி.மு. 3000 ஆண்டளவிலேயே அவர்கள் வணிகர் சிந்து வெளியிலும் ஏலம், சுமேர் ஆகிய இறந்துபட்ட நாகரிக வெளிகளிலும் வாணிகம் செய்தும் குடியேறியும் நாகரிகம் பரப்பியுமிருந்தனர். ஏலம், சுமேர் மக்களும் எகிப்தியரும் தமிழரின் பண்டைக் கிளையினங்களாகச் சென்று குடியேறியவர்கள் என்று பல அறிஞர்கள் கருதுகின்றனர். திருதந்தை ஹிராஸ் தமிழினத்தவரில் ஒரு சாதாரண திரையர் அல்லது திராவிடர் நடுநிலக்கடலெங்கும் பரந்து, ஸ்பெயின், பிரான்சு, இங்கிலாந்து முதலிய நாடுகளிலும், நடு அமெரிக்காவிலும் கூட வாழ்ந்து பண்டைப் பெரு நாகரிகங்கள் வளர்த்திருந்தனர் என்று கருதுகிறார்.”[21] இவ்வாறு உலகநாகரிகத்தின் மூல முதல் வடிவமாகத் திராவிட நாகரிகத்தைக் குறிப்பிடுகிறார்.

### 4.2.3.பண்டைத் தமிழரின் வீரம்

“இன்று தென்னாட்டவரிடையே தமிழர் அறிவிலும், மலையாளிகள் கலையுணர்விலும், கன்னடியர் பண்பிலும், தெலுங்கர் வீரத்திலும் மேம்பட்டுள்ளனர் என்று எவரும் எளிதில் காணலாம். பண்டைத் தமிழினம் இவ்வெல்லா மொழியினங்களையும் உட்கொண்டிருந்தது போலவே, இவ்வெல்லாத் திறங்களையும் ஒருங்குடன் கொண்டிருந்தது. ஆனால் அதில் மேம்பட்டு முனைப்பாய் இருந்த பண்பு ஒன்று உண்டென்றால், அது வீரப்பண்பே என்பதை ஆசிரியர் வையாபுரியார் இதைத் தெள்ளத் தெளியப்

புறநானூற்றிலே காண்கிறார்."[22] என்பர். இவ்வாறு எல்லாத்திறங்களையும் பெற்ற பண்டைத் தமிழர் அதில் ஓங்கி உயர்ந்த பண்பாக புறநானூற்றின் மூலம் வீரத்தைக் காண்கிறார்.

### 4.2.4.இன்றைய தமிழர் மரபு

மேலும், "புறநானூற்றுக் கால வீரம் இன்னும் தமிழரிடையே இருக்கிறது. அக்கால அறிவும் இருக்கிறது. கலையும் இருக்கிறது. ஆனால் இவற்றின் தங்கு தடையற்ற வளர்ச்சிக்குரிய விடுதலையுரிமையாட்சியும், ஒன்றுபட்ட இன எழுச்சியும், மரபொற்றுமையும் தான் நம்மிடையே இல்லை. தமிழர் வீரமரபை இன்று தமிழர் அறிவுமரபு அடக்கி ஒடுக்கி அமிழ்த்திக் கங்காணி மரபாய் இயங்குகிறது. தமிழர் கலை மரபு இன்னும் பெரிதும் அயல்மொழி, அயல் இன ஆட்சிகளுக்குப் பரிந்து முன்னின்று உழைக்கும் நிலையிலேயே உள்ளது. தமிழர் கோயிலில், சமய வாழ்வில், திருமணங்களில் இன்னும் பிறமொழி ஆட்சி நீங்கவில்லை. தமிழர் கல்வி இன்னும் பிறமொழிக் கல்வியாகவே நீடிக்கின்றது. தமிழர் அரசியல் வாழ்வு இன்னும் பழந்தமிழர் புகழவாவினை முழுதளவில் மக்களிடம் எழுப்பும் நிலை அடையாமல்தான் இருக்கிறது."[23] இவ்வாறு பண்டைச் சமூகத்தையும், சமகாலத்தையும் ஒப்பிட்டு இன்றைய தமிழர் மரபு அயல் மொழியினாலும், ஆரியர்களாலும் அடிமைப்பட்டுக் கிடப்பதை சுட்டிக்காட்டுகின்றார். இதில் பண்டைய தமிழர் மரபை தமிழ் இனத்தின் அடையாளமாகச் சுட்டிக் காட்டுகின்றார்.

### 4.2.5.தமிழருக்கான வரலாறு

உலகெங்கும் வரலாற்றுக்கான ஆதாரங்கள் தேடி ஆராயப் பெற்று, நாட்டு வரலாறு தொகுக்கப்பட்டு வருவது, சென்ற இரண்டு மூன்று நூற்றாண்டுகளிலேயே என்று கூறலாம். ஆனால், தமிழருக்கான வரலாற்றைக் குறிப்பிடும் கா. அப்பாத்துரை, "தமிழகத்திலோ தேசிய உணர்வும் தேசிய நாட்டெல்லையும், தேசிய அரசியலும் இரண்டாயிரம் மூவாயிரம் ஆண்டுகட்கு முன்பே ஏற்பட்டுவிட்டன. கலை மலர்ச்சியிலோ, உலகுக்குத் தூண்டுதல் தந்த பண்டை நாகரிகங்களுக்கு முற்பட்டே அதற்கு நீடித்த வளர்ச்சி ஏற்பட்டிருந்தது. வரலாற்றுணர்வும் வரலாற்றொளியும் அதன் இலக்கிய வாழ்வு முழுவதும் உள்ளூர நின்று ஒளி வீசுகின்றது"[24] என்கிறார். இங்கு தமிழருக்கான வரலாற்றை சங்க இலக்கியத்தின் மூலமாகக் கட்டமைப்பதை காணமுடிகிறது.

மேலும்,"தமிழினத்தார் உண்மையில் வேறெந்த இனத்துக்கும் அணிமைவரை ஏற்படாத வரலாற்றுணர்வு மட்டுமின்றி, நில இயலுணர்வும், அறிவியலுணர்வும்,

உடையவராயிருந்தனர். இதனைத் திரட்டுருவிலும், துண்டுத்துணுக்கு வடிவிலும் நமக்கு இன்று கிடைத்துள்ள இலக்கியமும் கல்வெட்டுகளுமே காட்டப் போதியன. உண்மையில் கல்வெட்டுக்கள் ஏராளமாயுள்ள பிற்காலத்தின் வகையில் நமக்குக் கிடைக்கும் வரலாற்றொளியைவிட, சங்க காலத்துக்கு அதன் துண்டுத்துணுக்கு இலக்கியத்தால் கிடைத்துள்ள ஒளியே பெரிது. ஏனெனில் கல்வெட்டுக்கள் தற்செயலாகவே நமக்கு வரலாற்றுக்கு உதவுகின்றன. அவை கிட்டத்தட்ட அத்தனையும் கோயில்களுக்கும் கோயில் குருக்கள்மார்களுக்கும் மன்னர் கொடுத்த மானியங்கள் பற்றியவைகளே. ஆனால் சங்க இலக்கியம் மன்னர்கள், ஆட்சிமுறை, போர்கள், மக்கள் கருத்துக்கள், வாழ்க்கைச் சூழல் ஆகிய எல்லாத் துறைகளிலுமே பரவியுள்ளன. அது போன்ற வாழ்க்கை இலக்கியத்தை, வரலாற்று நோக்குடைய அறிவியல் நோக்கு வாய்ந்த இலக்கியத்தை நாம் உலகில் வேறு எங்கனுமே காணமுடியாது"[25] என்று குறிப்படுகிறார். இவ்வாறு தமிழருக்கான வரலாற்றை "சங்க இலக்கிய அடிப்படையில் தமிழக வரலாற்றையும், தமிழக வரலாற்றடிப்படையில் சங்க இலக்கியத்தையும் இனித்தான் வகுக்க வேண்டும்"[26] என்கிறார்.

### 4.2.6.தமிழகத்தின் வரலாறு

தமிழர்கள் மிகப் பழமையான வரலாற்றுக்கு சொந்தக்காரர்கள் என்பதைப் பல்வேறு வகைகளில் நிறுவுகிறார் கா.அப்பாத்துரையார். "வரலாறு கண்ட முதல் நிலம் தமிழகம். ஆனால் அதற்கு இன்னும் முழுதுறழ் வரலாறு காணவில்லை. அது எந்நாட்டுக்கும் முற்பட்ட, எந்நாட்டையும் விட நீடித்த தொடர்ச்சியான வரலாறு உடையது. ஆயினும் உலகில் வரலாற்றாராய்ச்சி எழுந்த காலத்தில், அது நாடிழந்து, எல்லையிழந்து, மொழியாட்சி குலைந்து நின்றது. இன்னும் அது தனிநாடாகவோ, தனி மாகாணமாகவோ கூட அமையவில்லை. ஆயிர, பதினாயிரக்கணக்கான ஆண்டுகளாக, அது தன் மொழி வைத்துத் தன்னை நிலவுலகும் கடலுலகும் ஆண்டிருக்கிறது. இந்நிலையை அது மீண்டும் விரைவில் அடைவது உறுதி. கனவுலகில் அத்தகைய தமிழகம் நம் கண்முன் இப்போதே சுடர்வீசுகின்றது. கனவுருவத்தவிசில் நாம் அதனை விரைவில் ஏற்றப்போவது திண்ணம். அத்தவிசின் தொடக்கப்படிகளில் ஒன்றாகவே நாம் தமிழகத்தின் வரலாறு காண முனைந்திருக்கிறோம்"[27] என்கிறார். இங்கு திராவிட இயக்கத்தின் செயல்பாடுகளோடு ஆய்வு முடிவுகளை இணைத்துக் கருத்து தெரிவிப்பது கவனிக்கத்தக்கது.

மேலும்,"சங்க கால முத்தமிழரசர்களுள் பாண்டியன் மாகீர்த்தி என்ற நிலந்தருதிருவிற் பாண்டியன் கடல் கடந்து சாவகம் அல்லது சயநாட்டில் (சுமத்திரா) தன் ஆட்சியை நிறுவியிருந்தான். இவன் முதற்சங்கக் காலத்தவன். தொல்காப்பியம் அரங்கேற்றியவன். புராணங்களில், இவனே உலகின் முதல் அரசனாகிய மனு என்றும், இவன் பெயர் சத்திய விரதன் என்றும் குறிப்பிடப்படுகிறான். இவனே கடல் கொண்ட தமிழகத்துக்கு ஈடாக, சிந்து கங்கை சமவெளியைப் புது நாடாக்கி அதில் தமிழரைக் குடியேற்றினான் என்றும் சில அறிஞர் கருதுகின்றனர். இவன் காலம் அறுதியிடப்படின் இவனே இந்திய மாநில முதற்பேரரசும் கடல்கடந்த முதற்பேரரசும் நாட்டியவன் என்பது தெரியக்கூடும். ஆயிர ஆண்டுகளுக்குப் பின் சோழர் காலத்திலும் இன்றும் பாண்டியநாட்டுப் பெயர்களும் தமிழ்க் கல்வெட்டுக்களும் பாண்டியர் குடிப்பெயர்களும் அங்கே நிலவுவது காண்கிறோம். இக்குறிப்புகள் உறுதியாகத் தெரியப்பட்டால் இக்காலப் பாண்டிய அரசை நாம் முதற்பாண்டியப் பேரரசு என்று கூறலாம்"[28] என எழுதும் கா.அப்பாத்துரையின் இக்கூற்றிலிருந்து மறுமலர்ச்சி இயக்க அறிஞர்கள் வடமொழி அறிஞர்களுக்குப் போட்டியாகச் செயல்பட்டுள்ளதை உணரமுடிகிறது.

இன்றைக்கு கிடைக்கும் கல்வெட்டு, பட்டயங்கள், நாணயங்கள் என வரலாற்றுக்குத் தேவையான சான்றுகள் கிடைத்தாலும் அவை நிறைவுடைய வரலாறு இல்லை என்பதை, "கல்வெட்டு, பட்டயங்கள் நாணயங்கள் உதவியால் தமிழகத்துக்கு நாம் காணும் வரலாறு சென்ற ஆயிரமாண்டு வரலாறே. அது சங்க கால வரலாறு போல நிறைவுடைய தேசிய வரலாறு அல்லவே அல்ல"[29] என்கிறார். இங்கு சங்க இலக்கியமே தமிழருக்கான உண்மையான வரலாறு என்பதை சுட்டிகாட்டுகின்றார்.

### 4.2.7.திராவிட நாகரிகத்தின் தொன்மை

திராவிட நாகரிகம் இந்தியா முழுவதும் பரவி இருந்தது என்பதை "இன்று வடநாட்டில் ஹரப்பா மொஹஞ்சொதாரோ முதலிய இடங்களில் கண்ட கல்வெட்டுக்களால் தமிழர் நாகரிகம் பல்லாயிரக்கணக்கான ஆண்டுகட்கு முன்னரேயே இந்தியநாடு முழுமையும் பரவியிருந்தது என்பது புலனாகிறது"[30] என்கிறார்.

மேலும், இந்தியாவில் ஆரியர் நாகரிகத் தாக்கு மிகவும் குறைவு என்றும், திராவிட நாகரிகத்தின் தாக்கமே அதிகம் என்பதை, "இந்தியாவில் ஆரியர் நாகரிகத் தாக்கு மிகவும் குறைவு, திராவிடர் நாகரிகத்தாக்கே பெரும்பான்மை என்பதை, அண்மையில்

சிந்து நாட்டில் கண்டெடுக்கப்பட்ட கல்வெட்டுகள் காட்டுவதற்கு முன்னமே, தெளிவுபட உணர்த்தியது மொழியியலே"[31] என்று விளக்கிச் செல்கின்றார்.

ஆரிய நாகரிகத்தைவிட திராவிட நாகரிகம் பழமையானது என்று கூறும் கா.அப்பாத்துரை, "ஆரியர் வட இந்தியா வந்தது கி.மு.1500 என்றும், 2000 என்றும், 3000 என்றும் பலவாறாக வரலாற்றறிஞர் உரைக்கின்றனர். எப்படியும் திராவிடர் நாகரிகம் இதனினும் பழமையானதாதலின், இது வரலாற்றுக் காலத்திற்கு அப்பாற்பட்ட தென்பதற்கு ஐயமில்லை. அதோடு ஆரியரின் மிகப் பழமையான நூலாகிய இருக்கு வேதம் அவர்கள் இந்தியாவிற்கு வந்தபின், ஏற்பட்டதாதலால் அதற்கும் திராவிட நாகரிகம் முற்பட்டதென்பது சொல்லாமே அமையும்"[32] என்று எழுதுகிறார்.

**4.2.8.பண்டைத் தமிழரின் வாணிக உறவு**

பண்டைத் தமிழர்கள் பழங்காலந்தொட்டே பல நாடுகளுடன் வாணிக தொடர்பு கொண்டிருந்தனர் என்பதைச் சான்றுகளோடு விளக்குகிறார். 'கி.மு. 4000 ஆண்டுக்கு முன்னிருந்தே தென்னகம் அதாவது பண்டைத் தமிழகம் மாண்ட நாகரிக உலக மக்களான எகிப்தியர், ஏலமியர், சுமேரியர், பாலஸ்தீனர், பிணிசியர், கிரேக்கர், உரோமர் ஆகியவர்களுடனும், அராபியருடனும் வெனீசியருடனும் பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளாக இடையறா வாணிகத் தொடர்பு கொண்டிருந்தது. அவ்வாணிகத்தில் தமிழகச் சரக்குகள், சிறப்பாகக் கொங்குத் தமிழகச் சரக்குகளே பெருபங்கு கொண்டிருந்தன. உலக மொழிகளிலெல்லாம் அச்சரக்குகளின் பெயர்கள் தமிழ்ச் சொற்களின் திரிபாகவே இன்றளவும் வழங்கி வந்துள்ளன. இது அவ்வாணிக வளத்தின் தொன்மைக்கும் உலகளாவிய விரிவகற்சிக்கும், தமிழகமும் கொங்குத்தமிழகமும் அதில் கொண்டிருந்த உயிர்ப் பங்கிற்கும் சான்றுகள் ஆகும். அக்கால உலக வாணிகச் சரக்குகளான தேக்கு(ஆங்கிலம்:teak) அகில் (இலத்தினம்:Aquila, அகில், கழுகு, ஆங்கிலம் eagle, கழுகு, eagle wood, அகில்), சந்தனம் (ஆங்கிலம் sandalwood), யானைத் தந்தம் (தமிழ்: இபம் - யானை: ஆங்கிலம் (el-eph-ant யானை, iv-ory தந்தம்), சக்கரை (பண்டைத்தமிழ்:சக்கரை ஆங்கிலம்: sugar: பிரஞ்சு: sucre), மயில் தோகை (ஏபிரேயம்: TUKHIM) குரங்குகள் (ஏபிரேயம்:kapi), அரிசி (கிரேக்கம்: oriza ஆங்கிலம்:rise), மிளகு அல்லது திப்பிலி (கிரேக்கம்:pippala:ஆங்கிலம் peppeer) ஆகியவை தமிழகத்திலிருந்து உலகலாவச் சென்றன என்பதை இச்சொற்களே காட்டுகின்றன"[33] என்பர். இவ்வாறு

பண்டைத் தமிழர்கள் தொன்மையும், சிறப்பும் மிக்கவர் என்பதைச் சுட்டிக்காட்டுகின்றார். இதுபோன்ற கருத்துக்கள் திராவிட இயக்கத்தினரை சங்க இலக்கியத்தை முன்னெடுத்துச் செல்ல உதவிற்று எனலாம்.

கடல் கடந்த நாடுகளுடன் மட்டுமின்றி நிலங்கடந்த நாடுகளுடனும் பண்டைத் தமிழர்கள் வாணிகத் தொடர்பு கொண்டிருந்தனர் என்பதை "கடல் கடந்த நாடுகளுடன் மட்டுமின்றி நிலங்கடந்த நாடுகளுடன் சங்க காலத்துக்கு முன்னிருந்தே கொங்கு மக்கள் பெருவாணிகத் தொடர்பு கொண்டிருந்தனர். கொங்குத் தலைநகரான கருவூரில் வாழ்ந்த ஒரு சங்கப் புலவர் (கருவூர்க் கலிங்கத்தார்) கலிங்க நாட்டுப் பெருவணிகராகவும் விளங்கினார். தவிர கொங்குநாட்டின் பல சிற்றூர்களில் கூட, கி.மு.1 ஆம் நூற்றாண்டுக்குரிய ஈரான் நாட்டு நாணயங்கள் கண்டெடுக்கப்பட்டுள்ளன"[34] என்று விளக்கிச் செல்கின்றார்.

**4.2.9.திராவிட தேசியம்**

இந்தியாவின் தென் கோடியில் அமைந்த ஒரு சிறு நிலப்பரப்பாக மட்டுமே பிற வரலாற்று ஆசிரியர்களால் வருணிக்கப்பட்டது தமிழகம். கா.அப்பாத்துரையார், இதனை, "தமிழகத்தேசியம் நாடு கடந்த உலகமாக, உலகத்தின் ஒரு சிறு பகுதியான தேசம் அல்லது துணைக்கண்ட அமைப்பாக வளர்ந்து கொண்டு வருகிறது. வரலாறு இதைக் காட்டுகிறது. இந்திய வரலாறு எழுதுபவர்களோ, அதன் அரசியல் அமைப்பவர்களோ, இந்த வரலாற்றின் படிப்பினையைக் கண்டால், அது இந்தியாவின் வருங்காலப் புகழை நம் கனவெல்லை தாண்டி வளர்க்க வல்லதாக அமையும். ஆனால் தமிழகத் தேசியத்தையே இருட்டடிப்பதன் மூலம், வரலாற்றின் குரலையே கேளாக் குரலாக்குவதன் மூலம், வரலாற்றாசிரியரும் அரசியலறிஞரும் தெரிந்தோ தெரியாமலோ மாநிலத்தின் வருங்காலப் புகழை இருட்டடிப்புச் செய்கிறார்கள்"[35] என்று மதிப்பிடுகிறார். இவ்வாறு திராவிட கருத்தியலுக்கு ஒத்திசைவான, இந்திய தேசியத்தின் மையப்புள்ளியே திராவிடத் தேசியம் தான் என்று முன் வைப்பதான செயல்பாட்டைக் காண முடிகிறது.

கா.அப்பாத்துரை தான் எழுதிய, கொங்குத் தமிழக வரலாறு (1983), தென்னாட்டுப் போர்க்களங்கள்(1971), குமரிக்கண்டம் அல்லது கடல் கொண்ட தென்னாடு (1941), சரித்திரம் பேசுகிறது (1959), சங்க இலக்கிய மாண்பு(1949), சங்க காலப் புலவர்(1947),

முதலான நூல்களின் மூலம் தமிழர்களின் வரலாற்றையும், பண்பாட்டையும், நாகரிகத்தையும் விளக்கிச் செல்கின்றார்.

### 4.3.மு.வரதராசனார் - சங்க இலக்கிய வாசிப்பு

மு.வரதாராசனாரின் ஆய்வுகள், திராவிட இயக்கங்களின் கருத்தாடல்களை ஒட்டியதாகவும், திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சேர்ந்தவர்கள், மேடைகளில் சங்க இலக்கியத்தைப் பயன்படுத்தி நிகழ்த்தும் சொற்பொழிவுகள் உருவாக்கிய கருத்தாடல்களுக்கு வளம் சேர்ப்பதாகவும் அமைந்தன.

சி.என். அண்ணாத்துரை விரும்பிய வண்ணம் சங்க இலக்கியம் குறித்த சிறு சிறு வெளியீடுகள் மிகுதியாக வெளிவரத் தொடங்கின. இவ்வகைச் செயல்பாட்டில் குறிப்பிடத்தக்கவராக விளங்கியவர் திராவிட இயக்கச் சிந்தனையாளரான மு.வரதராசனார் ஆவார். மு.வ.தமிழரின் ஒழுக்கம் மிகுந்த வாழ்க்கை பற்றியும் அவர்களின் தூய்மையான காதல் பற்றியும் செறிவான வீரம் பற்றியுமான நூல்களைத் தொடர்ந்து வெளியிட்டார். ஓவச் செய்தி (1946), தமிழ் நெஞ்சம் (1947), முல்லைத் திணை(1952), நற்றிணை விருந்து(1953), குறுந்தொகை விருந்து (1953), மணல் வீடு(1954), குறுந்தொகைச் செல்வம்(1955), நற்றிணைச் செல்வம்(1965), குருவிப்போர்(1965), இலக்கியத் திறன்(1965), இலக்கியக் காட்சிகள்(1968) ஆகிய நூல்களின் மூலம் திராவிட இயக்கக் கருத்துக்களை வெகு மக்களிடம் கொண்டு செல்லும் பணியைச் செய்தார்.

பாமரர்களுக்கு புரியும்படி எளிமையான நடையைப் பின்பற்றிய மு.வரதாராசனார் தனது சங்க இலக்கியம் குறித்த படைப்புகளை விளக்கும் போது “சங்க இலக்கியம் என்றால் என்ன? என்று அறியாதவரும், அந்தத் தொடரைக் கேட்டறியாதவரும் பலர். இந்த நிலை தமிழகத்தில் இனியும் நீட்டித்தால் நன்றன்று. சங்க இலக்கியம் என்றால் எமது எமது என்று பெருமிதத்துடன் எண்ணும் நெஞ்சமும், கூறும் நாவும் இனி மிகுதல் வேண்டும்”[36] என்கிறார். இவ்வாறு பாமரரும் சங்க இலக்கியத்தை அறிதல் வேண்டும் என்ற ஆர்வம் அவரிடம் மிகுந்து இருப்பதை அறிய முடிகிறது.

மேலும் “எவ்வளவு சிறப்பு வாய்ந்த இலக்கியமாயினும், அதன் எதிர்காலம், கற்கும் மக்களைப் பொறுத்தே அமைகின்றது. ஒருபுறம், அதனை ஆழ்ந்து கற்று உணரும் புலவரும் வேண்டும். மற்றொரு புறம், அதன் கருத்தை உணர்ந்து போற்றிப் புகழும் பொது மக்களும் வேண்டும். பொதுமக்களின் உள்ளத்தில் இடம் பெறாமல், புலவர் நெஞ்சில்

மட்டும் வாழும் வாழ்வு போதாது. பொதுமக்களின் புறக்கணிப்பு, இலக்கியத்தின் எதிர்கால வாழ்வுக்கு இடையூறாகும்"[37] என்று கூறித் தம்முடைய எளிய உரைகள் மூலம் சங்க இலக்கியத்தைப் பொது மக்களிடம் கொண்டு சேர்க்கும் பணியைச செய்தார், மு.வ.

### 4.3.1.பண்டைத் தமிழரின் நாகரிகச் சிறப்பு

பண்டைத் தமிழரின் நாகரிகச் சிறப்பைக் கூறும் மு.வரதராசனார் "செல்வ வாழ்க்கை அமைத்து மூவேந்தர் ஆட்சிபுரிந்த அக்காலத்திலும், வேந்தரின் வெற்றிக்குக் காரணமான படைவன்மையினையும் அழிக்கும் ஆண்மையினையும் பெருமையுடையன என்று போற்றாது அறிஞர் சிலர் ஒதுக்கி வந்தனர். அவர்தம் கருத்தில்தான் நாகரிகம் நிலவி நின்றது. "அரசே, யானை, குதிரை, தேர், காலாள் என்னும் நாற்பெரும் படையால் பெருகிச் சிறந்திருக்கின்ற அரசு சிறப்புடையதெனக் கொள்ளல் வேண்டா, அரசின் வெற்றிக்கு அடிப்படை இப்படைப் பெருமை அன்று, அறநெறியே" என மதுரை மருதனிள நாகனார் என்ற புலவர், பாண்டியன் ஒருவனுக்கு அறிவுறுத்திய கருத்து நாகரிக விளக்காகும். அவர் அப்பாண்டியனுக்கு மேலும் அறிவுறுத்தத் தொடங்கி, "நடுநிலையோடு இருந்து ஆட்சி செய்க. நம்மவர் என விருப்பு மிகக்கொண்டு தவறலாகாது: பிறர் என வெறுப்புக் கொண்டு தீங்கிழைத்தலுமாகாது. ஞாயிறு போன்ற ஆண்மையும் திங்கள் போன்ற மென்மையும் மழை போன்ற வண்மையும் உடையை ஆகுக" என்றார்"[38] எனச் சங்ககால மன்னர்கள் அறம் வழுவாது ஆட்சிப் புரிந்தனர் என்பதை சுட்டிக்காட்டுகின்றார். இவ்வாறான விவரணையில் சங்கச் சமூகம் குறித்த பெருமித உணர்வு பெருக்கெடுத்து ஓடுவதை எளிதில் உணர முடிகிறது.

மேலும், "வாழ்க்கையில் பழக்கங்கள் பல, வழக்கங்கள் பல. இவற்றை விரிவாக ஆராய்தலால் நாகரிகம் புலனாகும் என்று எண்ணுவதற்கில்லை. பழக்க வழக்கங்களும் சடங்குகளும் முதல் முதலில் புகுத்திய மக்களின் மனப்பாங்கை உணர்த்துவனவே அன்றிப் பின்னர்ப் பல நூற்றாண்டுகளாகக் கண்மூடிப் பின்பற்றிச் செய்யும் மக்களின் மனப்பாங்கை உணர்த்துவன அல்ல. அவற்றைத் தொடக்கத்தில் செய்த மக்களின் மனப்பாங்கு இன்னதென அறியக் கூடாதவாறு அவற்றில் திரிபுகள் பல படிப்படியாகப் புகுந்திட்டமையால் அம்முயற்சியும் பயன் தருவது அன்று, ஆதலின் அவற்றை ஆராய்தலும் வேண்டா. ஆங்காங்கு நிகழ்ந்த சில நிகழ்ச்சிகள் பாட்டுருப் பெற்றுள்ளன. சில அறிவுரைகள் பாட்டுருப் பெற்றுள்ளன, சில துணிவுரைகளும் அவ்வாறே அமைந்துள்ளன. நிகழ்ச்சிகளாகவும் அறிவுரைகளாகவும் துணிவுரைகளாகவும்

பாடப்பெற்றுள்ளன. பாடல்களே நாகரிகத்தைத் தெரிவிக்கப் போதியன. நிகழ்ச்சிகளுக்குக் காரணமாகுகின்ற நெஞ்ச நிலையே உண்மையான நாகரிகத்தை விளக்குவதாகும்"[39] இவ்வாறு கூறுவதன் மூலம் இன்றைய பண்பாட்டையும் நாகரிகத்தையும் வெளிப்படுத்துவனாக சங்க இலக்கியங்கள் இருக்கின்றன என்பதைச் சுட்டிக்காட்டுகின்றார்.

### 4.3.2.பண்டைத் தமிழரின் வீரம்

சங்கத் தமிழரின் வீரத்தைப் பற்றிக் கூறும்போது "போர் வந்தது, அந்நாட்டின் ஆடவர் எல்லோரும் படை ஏந்திப் போர்க் களத்திற்குப் புறப்படல் வேண்டும் என்ற ஆணை பிறந்தது. வெற்றி விரும்பி இளைஞர் பலர் போருக்கு எழுந்தனர். நரைத்த தலை உடைய கிழவியின் மகன் ஒருத்தனும் முனைந்து சென்றான். உலகம் ஆளும் சிறப்புடைய அரசர் இருவர் நிகழ்த்திய அப்போரில் வீரர் பலர் பொருது மடிந்தனர். கிழவியின் மகன் வாள் எடுத்துப் போர் செய்தான். பகைவனுடைய வாள் அவனுடைய மார்பில் பட்டது. வாளோடு விழுந்து மடிந்தான். புலவர் கழாத்தலையார் இக்காட்சியைக் கண்டு தாய்க்குக் கூறுவது போல் வருந்திப் பாடியுள்ளார்."[40] இவ்வாறு தமிழரின் வீரத்தை வியந்து பேசுகிறார் மு.வரதராசனார் சித்தரிக்கும் இக்காட்சி விவரணையேத் திராவிட இயக்கப் பேச்சாளர்கள், பொதுக்கூட்டமேடைகளில் விவரித்தார்கள்.

### 4.3.3.பண்டைத் தமிழரின் மானம்

தமிழரின் மானத்தைப் பற்றிக் கூறும் மு.வரதராசன் "கரிகால் பெருவளத்தான் என்ற சோழனோடு சேரமான் பெருஞ்சேரலாதன் ஒரு பெரும் போர் நடத்தினான். அப்போரில் சோழன் எறிந்த வேல் சேரமான் உடலில் ஒருபுறம் பட்டு முதுகில் புண்படுத்தியது. முதுகில் புண்படுதல் பெரிய இழுக்காகக் கருதப்பட்டு வந்த காலம் அது. நெற்றியிலும் மார்பிலும் விழுப்புண் பட்டால் எவ்வளவு மகிழ்ச்சி அடைந்தனரோ அதனினும் மிகுதியாக முதுகில் பட்ட புண்ணுக்காக வருந்தும் மான உணர்ச்சி அக்காலத்தே இருந்தது."[41] இவ்வாறு கூறுவதன் மூலம் சங்கத் தமிழர்கள் மானமிக்கவர்களாக இருந்தார்கள் என்பதை புலப்படுத்துகிறார்.

### 4.3.4.தமிழ்ச்சங்கம்

சங்க இலக்கியம் பற்றிய ஆய்வுகளில் 'சங்கம்' குறித்த செய்திகள் குறிப்பிடத்தக்க இடத்தை வகிக்கின்றன எனலாம். சங்க இலக்கியங்கள் என்று இன்று

நாம் கருதும் நூல்களில் ‘சங்கம்’ என்ற சொல்லாட்சி இல்லை. இது குறித்து மு.வரதராசனார் “மூன்று சங்கங்கள் இருந்தனவா என்பதை வலியுறுத்தும் சான்றுகள் போதுமான அளவில் இல்லை. புலவர்கள் கூடி ஆயும் கூட்டங்கள் இருந்தன என்பதை மட்டுமே பழைய சங்க இலக்கியச் சான்றுகள் அறிவுறுத்துகின்றன. ஆயினும், ஒரு குறிப்பிட்ட கால எல்லைக்கு உட்பட்ட நூல்களைச் சங்க இலக்கியம் என்றும், அக்காலத்தைச் சங்க காலம் என்றும் வழங்கும் மரபு பயனுள்ளதாகிவிட்டது”[42] என்று குறிப்பிடுவதைக் காண முடிகிறது.

சங்க இலக்கியம் தொடர்பான இவருடைய நூல்கள், பாமர மக்களைச் சென்று சேர வேண்டும் என்ற நோக்கில் எளிய உரை விளக்கங்களுடன் எழுதப்பட்டுள்ளன என்பது குறிப்பிடத்தக்கது. இந்நூல்கள் மூலம் திராவிட இயக்கக் கொள்கைகளை மக்களிடம் கொண்டு செல்லும் பணியைச் செய்தார் மு.வ. எனலாம்.

**4.4.கா.கோவிந்தன் - சங்க இலக்கிய வாசிப்பு**

தமிழ் மறுமலர்ச்சி இயக்கத்தினரின் மற்றொரு போக்கு, தமிழர் பெருமை பேசும் ஆங்கில நூல்களைத் தமிழில் மொழிபெயர்த்து வெளியிடுதலாகும். இம்முறையில் கா.அப்பாத்துரை, வெ.கனகசபையின் ‘ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகளுக்கு முற்பட்ட தமிழகம்’ என்ற நூலைத் தமிழில் வெளியிட்டார். மறுமலர்ச்சி இயக்கத்தினரில் குறிப்பிடத்தக்கவர் கா.கோவிந்தன் ஆவார். இவர் பி.டி.சீனிவாச ஐயங்கார் எழுதிய தமிழர் வரலாறு (history of thentamils) என்ற ஆங்கில நூலைத் தமிழில் மொழிபெயர்த்து வெளியிட்டவர் ஆவா். மேலும் இவர் வி.ஆர்.இராமச்சந்திர தீட்சிதர் எழுதிய தமிழர் தோற்றமும் பரவலும் (origin and spread of the tamils) என்ற ஆங்கில நூலையும் தமிழில் மொழிபெயர்த்து வெளியிட்டு இருக்கிறார் என்பது குறிப்பிடத்தக்கது.

பி.டி.சீனிவாச ஐயங்கார் எழுதிய ‘தமிழர் வரலாறு’ என்ற ஆங்கில நூலைத் தமிழாக்கம் செய்து திறனாய்வும் செய்த கா.கோவிந்தன், இந்நூலில் பி.டி.சீனிவாச ஐயங்காா் கூறியுள்ள கருத்திற்கு மறுப்புத் தெரிவித்து தம்முடைய கருத்தை தரவுகளின் அடிப்படையில் பதிவு செய்திருக்கிறார்.

### 4.4.1.சேர, சோழ, பாண்டிய அரசுகளின் தொன்மை

"சேர, சோழ, பாண்டிய அரசுகள் இராவணன் ஆட்சி அழிவின் விளைவாகப் பெரும்பாலும் இராமாயண காலத்திற்குப் பின்னரே தோன்றியிருக்க வேண்டும்"[43] எனக் கூறுகிறார் பி.டி. சீனிவாசஐயங்கார். இதனை மறுத்துக் கருத்து தெரிவிக்கும் கா.கோவிந்தன் "இராமாயணப் போரில் பாண்டி நாட்டவரல்லாத பிற நாட்டவர் அனைவரும் பங்கு கொண்டது போலவும் பாண்டியர் மட்டுமே பங்கு கொள்ளவில்லை என்பது போலவும் கொண்டு அது காரணம் காட்டி அப்போது பாண்டியரே இல்லை எனக் கொள்ளும் முடிவு தருக்க நெறியோடு பொருந்தாப் போலி முடிவாகும்.

இராமன் இலங்கை மீது படையெடுக்கத் தொடங்கியது பாண்டிய நாட்டுக் கடற்கரையிலிருந்து, கடலைக் கடக்கக் கட்டிய பாலத்தின் தொடக்கம் பாண்டிய நாட்டுக் கடற்கரையிலிருந்து, அந்நாட்களில் அப்பகுதியில் பாண்டிய ஆட்சி நடைபெற்றிருந்திருக்குமாயின், அப்பகுதி பாண்டி நாட்டுக்கு உரியதாக வால்மீகத்தில் குறிப்பிடப்பட்டிருக்கும். ஆனால், அவ்வாறு குறிப்பிடப்படவில்லை. ஆகவே, அக்காலத்தில் ஆங்குப் பாண்டிய அரச இனமே தோன்றவில்லை என்பதும் ஏற்புடையதாகாது.

ஓரிடத்தில் "அ" என்ற இனத்தவர் இல்லை என்பதை உறுதி செய்யும் போது, அந்த இடத்தில் வேறு யாரோ ஓர் இனத்தவர் இருந்திருக்க வேண்டுமல்லவா? அந்த இனத்தவர் "ஆ" என்ற இனத்தவர் எனக் கொண்டு அந்த இடத்தில் "ஆ" என்ற இனத்தவர் இருந்தனர் "அ" என்ற இனத்தவர் அல்லர் என்பதை உறுதி செய்யவல்ல வலுவான அகப்புறச் சான்றுகளைக் காட்டியப் பின்னரே அது செய்ய வேண்டும். அது செய்யாது ஓர் அரச இனத்தவர்க்குரிய ஓர் இடத்தில் நிகழ்ந்த நிகழ்ச்சியைக் குறிப்பிட்டுவிட்டு, அவ்விடத்தை ஆண்டிருந்த அரச இனத்தவரைக் குறிப்பிடாத ஒரே காரணத்தைக் காட்டி, அந்த நிகழ்ச்சி நடைபெற்ற போது, அந்த இடத்தில் அந்த அரச இனத்தவரே இல்லை என வாதிடுவது வாதமுறையாகாது.

இராமன் தமிழகத்தின் தென்கோடி முனையில் பாலம் அமைத்துக் கடலைக் கடந்தபோது அத்தென்கோடி நிலப்பரப்பில் பாண்டியரே இல்லை என வாதாடும் திருவாளர் பி.டி. எஸ். அவர்கள், பாண்டியர் இல்லை ஆயின் ஆங்கு வேறு யாரோ ஓர் இனத்தவர் இருந்திருக்க வேண்டுமல்லவா? அந்த இனத்தவர் இன்னார் என்பதைச் சான்று காட்டி உறுதி செய்த பின்னரே, பாண்டியர் ஆங்கு இல்லை என்ற முடிவிற்கு வந்திருக்க

வேண்டும். அது செய்யாது, இராமன் பாலம் அமைத்த அந்நிலத்துக்கு உரியவர் பாண்டியர் அப்போது ஆங்கு இல்லை எனக் கொண்ட முடிவு உண்மையோடு பட்ட முடிவு ஆகாது.

ஒருநூல், ஒரு பொருள் குறிப்பிடவில்லை என்பதினாலேயே அப்பொருள் அந்நூல் எழுதிய காலத்தில் இல்லவே இல்லை என்ற வாதம், இருக்கு வேதத்தில் ஆலமரம் குறிப்பிடப்பட்டவில்லை என்பதினாலேயே, இருக்கு வேத காலத்தில் ஆலமரமே இல்லை என்பது போலும் பொருளற்ற வாதமாம். திருவாளர் பி.டி.எஸ். அவர்களாலும் ஏற்றுக் கொள்ளப்பட்ட வாத முறை இது"[44]

"ஆகச் சேரர், சோழ, பாண்டிய அரச இனங்கள், இராமாயண காலத்தில் தோன்றவில்லை, இராவணன் வீழ்ச்சிக்குப் பின்னரே தோன்றியிருக்க வேண்டும் என்பதற்குத் திருவாளர் பி.டி.எஸ் அவர்கள் காட்டிய காரணங்கள் பொருத்தமானவையோ, போதுமானவையோ அல்ல என்பது தெளிவு"[45] இவ்வாறு தமிழ் மறுமலர்ச்சி இயக்க அறிஞர்கள் வடமொழி அறிஞர்களின் கருத்துக்களை வன்மையுடன் மறுத்துச் செயல்பட்டுள்ளதை அறிய முடிகிறது.

### 4.4.2.பண்டைய மன்னர்களின் ஆட்சி எல்லை (காஞ்சிபுரம்)

மேலும், "காஞ்சி மாநகர், தமிழ்நாட்டின் எல்லைக்குள் இடம் பெற்றிருந்தாலும், பண்டைக்காலத்தில், அது, தமிழர் நாகரிகத்தைத் கொண்டிருக்கவில்லை. மாறாகச் சமஸ்கிருத நாகரிகத்தின் நடுநாயகமாகவே இருந்தது. அது, தமிழ் அரசர்களாலும் ஆளப்படவில்லை: மாறாக ஆரிய ராஜாக்களாலேயே ஆளப்பட்டது? இக்கூற்று உண்மையா?"[46] என பி.டி.சீனிவாச ஐயங்கார் கூறிய கருத்துக்கு மறுப்பு கூறும் கா.கோவிந்தன் இதற்கான அகச்சான்றுகளை முன்வைக்கின்றார்.

"பழந்தமிழ்ப் பாக்கள் உணர்த்தும் அன்றைய அரசியல் நிலைகளால் தெளிவாக்கும் உண்மைகள் இரண்டு. ஒன்று, கடல்பிறக் கோட்டிய செங்குட்டுவன், கரிகால் பெருவளத்தான், தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் போன்ற பேரரசன் எவனாயினும், ஒரு போர்க்களத்தில், தன்னை ஒழிந்த இருவேந்தர்களையும், எண்ணிலாச் சிற்றரசர்களையும் வெற்றிகொண்டு விட்டான் என்றால், அங்கெல்லாம், அதுவரை நடைமுறையில் இருந்து வந்த அரசுகளை, அரசியல் முறைகளை அகற்றிவிட்டு, தன்னுடைய ஆட்சியை நிலைநாட்டிவிட்டான் எனக் கொண்டு விடல் கூடாது. அப்போரில்

தோல்வியுற்ற அரசர்களைக் காட்டிலும், தான் ஆற்றலால் மிக்கோன் என்பதை நிலைநாட்டியது மட்டுமே என்பதுதான்."[47]

### 4.4.3.குமரி முதல் வேங்கடம் வரை

"பழந்தமிழ்ப் பாடல்கள் உணர்த்தும் இரண்டாவது உண்மை தமிழகத்தின் தென் எல்லையாம் குமரியை உள்ளடக்கிய நாஞ்சில் நாடு, தமிழகத்தின் வடஎல்லையாம், வேங்கடத்தை உள்ளடக்கிய தொண்டை நாடு, தமிழகத்தின் வடமேற்கு எல்லைக்கு அணித்தான கொண்கானம், எழில் குன்றம், எருமைநாடு, குடகடலைச்சார்ந்த சேரநாட்டு எல்லைக்குட்பட்டனவாய் குதிரை, கொல்லி, கோடை முலைகள், பாழிப்பெருநகள், வாகைப்பறந்தலை, முசிறி, தொண்டிக் கடல்துறைகள், குணகடல் நாடாம் சோழ நாட்டைச் சேர்ந்த, இடைக்கழிநாடு, கடல்மல்லை, கழார் அழிசி, ஆர்க்காடு, புகார், பாண்டி நாட்டு எல்லைக்குட்பட்ட, தோட்டி, பறம்பு, பொதினி, பொதியம், முதிரம், சிறுமலை ஆகிய மலைகள், கொற்கைத்துறை, ஆகிய இடங்களில் எல்லாம், சுருங்கச் சொல்லின், வடவேங்கடம், தென்குமரி, குணகுட கடல்களை எல்லையாகக் கொண்ட, தமிழகம் முழுவதும், தமிழ்மொழி வழங்கியது போலவே, தமிழரசர்களே, நீக்கமற இடங்கொண்டு ஆட்சிபுரிந்து வந்தனர் என்பது.

குமரிமுதல் வேங்கடம் வரையான தமிழகம் முழுவதும், தமிழே வழங்கி வந்தது, தமிழரசர்களாலேயே ஆளப்பட்டு வந்தது என்பதை மெயப்பிக்கும் இத்தனை அகச்சான்றுகள் இருக்கவும், காஞ்சியும், அதைச் சூழ உள்ள நாடும் தமிழரசர்களால் ஆளப்படவில்லை மாறாகச் சமஸ்கிருத ராஜாக்களால் ஆளப்பட்டு வந்தது எனத் திருவாளர் பி.டி.சீனிவாச அய்யங்கார் அவர்கள் கூறுவதற்கு அவர் காட்டும் முதற் காரணம் காஞ்சி ஆண்ட பழைய அரசர்கள் பெயர்கள், பழந்தமிழ்ப் பாக்களில் குறிப்பிடப்படவில்லை"[48] என்று கருத்துக்களை எடுத்துக்காட்டும் கா.கோவிந்தன் அக்கருத்துக்களை மறுத்துரைக்கிறார்.

இதற்கான விரிவான அகச்சான்றுகளை முன்வைக்கின்றனார் கா.கோவிந்தன் " சோழர்க்குரிய காவிரிக்கு வடக்கே பெண்ணையாற்றங்கரைத் திருக்கோவலூரைத் தலைநகராகக் கொண்டு மலையமான் திருமுடிக்காரி ஆண்டுவந்ததைப் போலவும், பாலாற்றங்கரைத் கச்சியைத் தலைநகராகக் கொண்டு திரையன் ஆண்டுவந்ததைப் போலவும், சேயாற்றங்கரைச் செங்கண்மாவைத் தலைநகராகக் கொண்ட மலை நாட்டை

நன்னன் சேய் நன்னன் என்பான் ஒரு தமிழ்க் குறுநில மன்னனும், அப்பழந்தமிழா் காலத்தே ஆண்டு வந்தான். அவன் புகழ்பாடும் மாண்பு நாட்டுப் புலவராம், இரணிய முட்டத்துப் பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனார், தம்முடைய மலைபடுகடாம் என்ற பாட்டில், அவன் பெயர் "நன்னன் சேய் நன்னன்" என்பதையும் (64) அவன் தலைநகர், கிழக்குத் தொடர்ச்சி மலையின் ஒரு பகுதியாய், இன்று ஜவ்வாது மலை என அழைக்கப்படும் நவிரம் 'பேரிசை நவிரம்' (82) என்பதையும், அவன் நாட்டில் பெருக்கெடுத்தோடும் ஆறு, திரையன் நாட்டுப் பாலாற்றோடு கலந்து ஓடிக் கடலில் விழும் இக்காலை செய்யாறு என அழைக்கப் பெறும் சேயாறு "காணுநர் வயாஅம் கட்சின் சேயாறு"(476) "கடுவரல் கலுழிக் கட்கின் சேயாறு" (555) என்பதையும் அறிவித்துள்ளார். நன்னன் சேய் நன்னன் என்பதையும் அறிவித்துள்ளார். நன்னன் சேய் நன்னன் நாட்டுப் பரப்பின் பெருமையும், வளச் செழுமையும், மக்கள் பண்பாடும், புலவர்க்கு 585 வரிகளைக் கொண்ட ஒரு நெடும் பாட்டைப் பாடத் தேவைப்படுமளவு படர்ந்து, நீண்டு உயர்ந்து விளங்கின."[49]

ஆக, இதுவரையில் எடுத்து வைத்த கா.கோவிந்தனின், விரிவான அகச்சான்றுகளால், கச்சியைத் தலைநகராகக் கொண்ட வேங்கட நாடுவரையான தமிழ் வழங்கிய நாடு, பழந்தமிழர் காலத்தில் தமிழரசர்களாலேயே ஆளப்பட்டு வந்தது என்பது உறுதி செய்யப்பட்டது. ஆகவே, காஞ்சியைத் தலைநகராகக் கொண்ட நாடு, தமிழரசர்களால் ஆளப்படவில்லை, மாறாகச், சமஸ்கிருத ராஜாக்களால் ஆளப்பட்டது என்ற, திருவாளர் பி.டி.சீனிவாச அய்யங்கார் அவர்கள் கூற்று உண்மைக்கு மாறானது என்பது தெளிவாக்கப்பட்டது என்பதன் மூலம் தமிழ் இலக்கிய ஆராய்ச்சியின் இருதுருவச் செயல்பாட்டினை விளங்கிக் கொள்ள முடிகிறது. இப்படியாக வளர்ந்த சங்க இலக்கிய ஆய்வுகள், சங்க கால மன்னர்களைப் பற்றியும், புலவர்களைப் பற்றியும், சங்க கால ஊர்கள் பற்றியும், சமயம், பண்பாடு, நாகரிகம் எனப் பல்வேறு வகைகளில் விரிந்தன எனலாம்.

### 4.4.4.ஊர்ப்பெயர்கள்

சங்கப் பாக்களில் காஞ்சிபுரம் பற்றி ஆராயும் கா.கோவிந்தன், "பத்துப்பாட்டு எட்டுத்தொகையாகிய பழந்தமிழ்ப் பாடல்களில் நூற்று இருபத்தைந்துக்கும் மேற்பட்ட சிற்றூர், பேரூர்களின் பெயர்கள் இடம் பெற்றுள்ளன. அவற்றுள், ஆள்ளுர், வேலூர் என்பன போல், ஊர் என முடிவன இருபத்தைந்து மட்டுமே. அவை ஒழிந்த நூற்றுக்கு

மேற்பட்ட ஊர்களில், ஆர்க்காடு என்பது போல் காடு என முடிவன சில. ஆலங்குடி என்பதுபோல், குடி என முடிவன சில. இடையாறு என்பதுபோல், ஆறு என முடிவன சில. இவை போல்வன ஒருசில தவிர்த்து ஏனைய எல்லாம், அம்பர், உறந்தை, இருப்பை, குமரி, கூடல், கோழி, வஞ்சி, வேம்பி என்பன போலும், இடுகுறிப் பெயர்களாகவே அழைக்கப் பெற்றுள்ளன. இவ்வகையால் பெயர் பெற்ற ஊர்களில், ஆலங்கானம், ஆலமுற்றம், இருப்பை, காஞ்சி, வஞ்சி, வாகை போல்வன மரத்தால் பெயர் பெற்றவை. கரந்தை, காஞ்சி, தூசி, வஞ்சி, வாகை என்பனவற்றைப் புறத்திணை வகைகளால் பெயர் பெற்றனவாகவும் கொள்ளலாம்.

### 4.4.5.ஊர்ப்பெயர்கள் சமஸ்கிருதத்தால் ஏற்பட்ட மாற்றம்

சமஸ்கிருதம் அல்லது, அது சார்ந்த மொழி வழங்கும் வட நாட்டில், ஊர்ப் பெயர்கள் "புரி" அல்லது "புரம்" என்பதை ஈற்றில் கொண்டனவாய், அயோத்தியாபுரி, துவராகபுரி, மதுராபுரி, அஸ்தினாபுரம் எனப் பெயர் சூட்டப்பட்டதை ஒட்டி இச்சமஸ்கிருத மொழியாளர்கள், தமிழகத்தில் வேர் ஊன்றிய காலத்திற்குப் பின்னர்ப் "புரம்" என்பதை ஈற்றில் கொண்டுவிட்ட, இராமாநாதபுரம், காஞ்சிபுரம், சோழலிங்கபுரம், திருவத்திபுரம், திருவனந்தபுரம், வாணாபுரம், விரிஞ்சிபுரம், விழுப்புரம் போலும் சில ஊர்ப் பெயர்கள் தமிழகத்திலும் இடம்பெற்று விட்டாலும் பண்டைத் தமிழகத்தில், எந்த ஒரு ஊர்ப் பெயரும் "புரம்" என்ற ஈற்றினைக் கொண்டதாக அமையவில்லை. அதுமட்டுமன்று, பழந்தமிழ்ப் புலவர்கள் "புரம்" என்ற ஈற்றுச் சொல் வடிவை அறவே வெறுப்பதும் செய்து வந்துள்ளனர். வடநாட்டுத் துவராகாபுரியைக் குறிப்பிட நேர்ந்த ஓரிடத்திலும், "புரி" என்ற அதன் ஈற்றையும், அதை, முதல் நிலையோடு இணைக்கும். இடைப்பகுதியையும் அறவே விடுத்து "துவரை" என அழைப்பதிலேயே ஆர்வம் காட்டியுள்ளனர். 'துவரை ஆண்டு நாற்பத்தொன்பது வழி முறை வந்த வேளிர்" (புறம்: 201) என்ற கபிலர் கூற்றினைக் காண்க. அதுபோலவே, கங்கைக்கரைப் பாடலிப்புத்திரத்தைக் குறிப்பிட நேர்ந்த இரு இடங்களிலும் "புத்திரம்" என்ற அதன் ஈற்றுப் பகுதியைக் கழித்துவிட்டுப் "பாடலி" என்றே குறிப்பிட்டுள்ளனர். "பொண்மலி பாடலி" (குறுந். : 75) "நந்தர் வீரமிகு பாடலிக் குழிசிக் கங்கைநீர் முதல் கரந்த நிதியம்" (அகம். : 262) என்ற தொடர்களைக் காண்க.

இவ்வாறு, வட இந்திய ஊர்ப் பெயர்களைக் குறிப்பிடும் போதும், சமஸ்கிருத மொழியாளர்கள், அப்பெயர்களோடு இணைத்து வழங்கும் "புரம், புத்திரம்" என்பனவற்றை

விடுத்தே எடுத்தாள்வதை மரபாகக் கொண்டுவிட்ட பழந்தமிழ்ப் புலவர்கள், தமிழகத்துத் தலையாய நகர்களுள் ஒன்றாகிய காஞ்சிக்கு, அவ்வட நாட்டுப் பெயர் ஈற்றுப் பகுதியாம் "புரம்" என்பதை இணைத்துக் "காஞ்சிபுரம்" என வழங்கினர் என்பது, வாத நெறியில் ஏற்றுக் கொள்ள இயலாத ஒன்று. ஆகவே, அந்நகர்க்குப் பழந்தமிழர் இட்டு வழங்கிய பெயர் "காஞ்சி" என்பதே, அம்மாநகரில் வந்து வாழத் தொடங்கிய சமஸ்கிருத மொழியாளர், தங்கள் வட நாட்டுப் பெயர் மரபை ஒட்டி, புரம் என்பதைக் காஞ்சியோடும் இணைத்துக் காஞ்சிபுரம் என மாற்றி அழைத்தனர் என்பதே, இயல்பாகப் பெறக்கூடிய முடிவாகும்"[50] இவ்வாறு இலக்கியத்தின் வழியாக நிறுவும் பணியைச் செய்வதை காணமுடிகிறது.

**4.4.6.சங்கப் புலவரின் தொன்மை (மாமூலனார்)**

"மாமூலனார், தொகை நூல்களில் இடம் பெற்றுள்ள புலவர்கள் வரிசையில் கடைசியில் வைத்து எண்ணத் தக்கவர், கி.பி. ஐந்தாம் நூற்றாண்டின் இறுதியில் வாழ்ந்தவர்" எனத் திரு சீனிவாச அய்யங்கார் கூறுவர்"[51] இதனை மறுக்கும் கா.கோவிந்தன் "இதற்குத் திரு அய்யங்கார் கூறும் காரணங்கள் இரண்டு. ஒன்று: அவர், தமிழர் வரலாறு என்ற தம் நூலின் 20, 22 ஆம் அதிகாரங்களில் ஆராயப் பெற்ற கரிகாலன் உள்ளிட்ட சோழர் குல அரசர்களையோ, 21 ஆம் அதிகாரத்தில் ஆராயப்பட்டிருக்கும் முதுகுடுமிப் பெருவழுதி உள்ளிட்ட பாண்டியர்குல அரசர்களையோ, 25 ஆம் அதிகாரத்தில் ஆராயப்பட்டிருக்கும் பெருஞ்சேரலாதன் உள்ளிட்ட சேரர் குல அரசர்களையோ பாடினார் அல்லர் என்பது. இரண்டு மேலே கூறிய மூவேந்தர்களின் ஆட்சியின் அழிவுக்கு பின்னர், கி.பி.ஐந்தாம் நூற்றாண்டின் இறுதியில், தமிழகத்தின் பல்வேறு பகுதிகளில் ஆளத் தொடங்கிய எண்ணற்ற குறுநிலத் தலைவர்களையே பாடியுள்ளார் என்பது"[52].

"மாமூலனார், 1.அதியமான் நெடுமான் அஞ்சி, 2. அதியன், 3. ஆவி, 4. எருமையூரன், 5. எவ்வி, 6. எழினி, 7. கட்டி, 8. நிதியன், 9. நன்னன், 10. பாணன், 11. புல்லி, 12. மத்தி, 13. மோகூர்ப் பழையன் முதலாம் குறுநிலத்தவர்களைப் பாடியுள்ளார் என்பது உண்மை.

ஆனால், அவர்கள் அனைவரும், திருவாளர் அய்யங்கார் கூற்றுப்படி, மூவேந்தர் ஆட்சியின் மறைவுக்குப் பின்னர், அரசோச்சத் தொடங்கியவரல்லர். மாறாக, அம்மூவேந்தர்

ஆட்சி நிலவிய காலத்திலேயே, அம்மூவேந்தர் ஆட்சிக்கு அடங்கிய சிற்றரசர்களாகவும், அவர்களுக்கு அடங்காது தனியரசு நடத்தும் சிற்றரசர்களாகவும் இருந்தவர்களே. அவர்களில் ஒரு சிலர், அம்மூவேந்தர்களின் பகைவர்களாகி, அவர்களோடு, போரிட்டும் வந்துள்ளார். மாமூலனாரால் பாடப்பெற்ற இவர்களில் ஒரிருவர் தவிர்த்து எஞ்சிய ஏனையோரெல்லாம், அம்மூவேந்தர் புகழ்பாடும், பரணர், நக்கீரர், ஔவையார் போலும் முதுபெரும் புலவர்களால் அம்முவேந்தர்களோடு இணைத்தே பாடப் பட்டுள்ளனர்"[53] இவ்வாறு திராவிட இன அடிப்படையில் சங்க இலக்கியத்தை ஆராய்ந்த கா.கோவிந்தன் தமிழின் தொன்மை, தனித்தன்மை, பெருமை என்ற அடிப்படையில் தம்முடைய ஆய்வை நிகழ்த்தி இருப்பதை காண முடிகிறது.

கா.கோவிந்தன் இதே அடிப்படையில் தமிழ்ப்புலவர்கள், அரசர்களின் காலம்பற்றிய பின்னணியுடன் அவர்களின் வரலாற்றைச் சங்க இலக்கியத்தை அடிப்படையாகக் கொண்டு தொகுக்கும் வேலையைச் செய்தார். "சங்கப் புலவர் வரிசை ( 6 தொகுதிகள் ) (1953, 54) என்ற நூலில் தமிழ்ப் புலவர்களான, கபிலர், பரணர், நக்கீரர், ஔவையார், பெண்பாற்புலவர்கள், உவமையாற் பெயர் பெற்றோர் என்ற முறையில் தமிழ்ப் புலவர் வரலாறுகளைத் தொகுத்தளித்தார். 'சங்க கால அரசர் வரிசை' (இரு பகுதிகள் - 1954) என்ற நூலில் சேரர், சோழர், பாண்டியர், வள்ளல்கள், அகுதை முதலிய 44 பேர்கள், திரையன் முதலிய 29 பேர்கள், ஆகியோரின் வரலாற்றை எழுதினார். சேரமன்னர்கள் 25 பேர் வரலாறுகளையும், சோழ மன்னர்கள் 21 பேர் வரலாற்றையும், பாண்டியமன்னர்கள் 25 பேர் வரலாற்றையும் இந்நூலில் விளக்கினார்."[54] இதன் மூலம் சங்க இலக்கியம் பற்றிய காலம் தேடுதல், வரலாறு எழுதுதல் என்ற மறுமலர்ச்சி இயக்கத்தினரின் பணி இங்கே தொடரப்படுவதைக் காணமுடிகிறது.

ஆய்வு நூல் வரிசையில் கா.கோவிந்தனின் முதல் நூலாக வெளிவந்தது 'திருமாவளவன்'(1951) ஆகும். மு.இராகவையாங்கார், நீலகண்ட சாஸ்திரி ஆகியோரின் நூல்களைப் படித்தபோது ஏற்பட்ட முரண்பாடுகள் காரணமாகவே இந்நூலை எழுதியதாகக் குறிப்பிடுகிறார்.

### 4.4.7.சங்க காலம்

சங்க காலத்தை, "சங்க இலக்கிய காலம் ஐந்தாம் நூற்றாண்டே என்று கொள்வார், தமக்கு ஆதாரமாகக் கூறிய சான்றுகள் ஏற்கும் தகுதியற்றன என்பது தெளிவாகவே,

தாலமி, பிளினி போன்ற பிற நாட்டு நில நூல் ஆசிரியர்கள் அளிக்கும் குறிப்புகளும், இலங்கை வரலாறு மகாவம்சமும், சிலப்பதிகாரமும் அளிக்கும் குறிப்புகளும் சான்றாகக் கொண்டு, சங்க காலம் இரண்டாம் நூற்றாண்டைச் சேர்ந்ததே"[55] என்பர்.

"பண்டைத் தமிழரின் போர் நெறி' என்ற இவரது நூல் புறத்திணையியலின் உரையாக விளங்குகிறது. இதில் தமிழர்களின் போர் முறை சென்று தாக்கியது அல்ல. நின்று தாங்கிய போர்கள் என்ற முறையில் விளக்கியுள்ளார்."[56] அனைத்து மக்களுக்கு என எளிய உரைகளைக் கொடுத்தல் என்ற மறுமலர்ச்சி இயக்கச் சிந்தனையுடன் தொடர்ந்து இவருடைய நூல்கள் வெளிவந்தன. தமிழர் வாழ்வு (1956), நற்றிணை (1956), குறிஞ்சி குமரி (1956), மருதநில மங்கை (1956), பாலைச் செல்வி (1956), முல்லைக்கொடி (1957), காதல் கன்னி (1958), நெய்தல் கன்னி (1958), குறுந்தொகைக்கோவை (1959) முதலான இவருடைய நூல்கள் எளிய உரைகளாகும். இதன் மூலம் சங்க இலக்கியத்தை மக்களிடம் கொண்டு செல்ல வேண்டும் என்ற எண்ணம் தமிழ் மறுமலர்ச்சி இயக்கத்தாரிடையே செயல்பட்டமையைக் காணமுடிகிறது.

### 4.5.லெ.ப.கரு. இராமநாத செட்டியார் - சங்க இலக்கிய வாசிப்பு

சங்க காலத் தமிழர் வாழ்வு (1957) பத்துப்பாட்டு வளம் (1968) போன்ற நூல்களை எழுதிய லெ.ப.கரு. இராமநாதன் செட்டியார் சங்க காலத்தின் தொன்மையையும், பண்டைத் தமிழரின் பண்பாடு, வாணிகம், போர்முறை, தொழில், கலைகள் போன்றவற்றை வியந்து போற்றுகிறார்.

#### 4.5.1.சங்கத் தமிழரின் பெருமை

சங்க காலத்துத் தமிழர்களைப் பற்றி கூறும்போது "சங்க காலத்தில் தமிழகத்தை ஆண்ட பெருமக்கள் தமிழ் நாட்டையே சேர்ந்தவர், தமிழகத்திலேயே பிறந்து வளர்ந்தவர். தாமும் தமிழராக இருந்து தம்மால் ஆளப்பட்டவரும் தமிழராக இருந்த காரணத்தால், தமது மொழியும் நாட்டு மொழியுமாகிய தமிழைத் தம் உயிர் போலக் கருதினர். அம்மொழியில் வல்ல புலவரையும், பாணரையும், கூத்தரையும் பேணிப் பாதுகாத்தனர். அவர்கள் வாயிலாக முத்தமிழையும் வளப்படுத்தினர். பாணரால் இசைக் கலையும், கூத்தரால் நாடகக் கலையும் நன்முறையில் வளர்ச்சி பெற்றன. இயற்றமிழ் நூல்கள் மிகுதியாகத் தோன்றின. தமிழக வேந்தர், தம் குடிகளின் நல்வாழ்வு ஒன்றிலேயே கருத்துகொண்டவராகச் செங்கோல் வழுவாது ஆட்சிபுரிந்தனர். இதன்பயனாய்த் தமிழர்

வாழ்வு, எல்லாத் துறைகளிலும் வளமுற்று விளங்கியது"[57] என்கிறார். இவ்வாறு தமிழகம் தமிழ் மன்னர்களால் ஆளப்பட்ட காலத்தில் தமிழர்கள் எல்லா வளமும் பெற்று சிறப்புடன் விளங்கினர் என்ற கருத்தை முன் வைக்கின்றார்.

### 4.5.2.பண்டைத் தமிழரின் கல்விச் சிறப்பு

பண்டைத் தமிழர் கல்வியில் சிறந்து விளங்கினர் என்பதைப் பல்வேறு அகச் சான்றுகளின் அடிப்படையில் நிறுவுகிறார். "ஒரு தாய் மக்களுள் கல்வியால் சிறந்தவனையே பெரிதும் விரும்புவாள், ஒரு குடியிற் பிறந்த பலருள்ளும் வயதால் மூத்தவனை "அறிவுரை கூற வருக" என்று அரசன் அழையாமல், கல்வி அறிவுடையவன் சென்ற வழியிலேயே செல்வான். சமுதாயத்தில் கீழ்குலத்திற் பிறந்த ஒருவன் கற்றவனாயிருப்பின், மேற்குலத்தவனும், இவன் கீழ்குலத்தவன் என்று எண்ணாமல் கல்வியின் பொருட்டு அவனிடத்தே சென்று வழிபடுவான். ஆதலின், கல்வியின் சிறப்பை நோக்கி, எவ்வாறாயினும் முயன்று கற்றல் நலம் என்று பாண்டியன் ஆரியப்படை கடந்த நெடுஞ்செழியன் பாடியுள்ளான்"[58] என்று புறநானூறு 183 வது பாடலைச் சுட்டிக்காட்டுகின்றார்.

மேலும், "அழிந்தன போக இன்று எஞ்சியுள்ள சங்கச் செய்யுட்களைப் பார்க்கும்போது அவற்றைப் பாடிய புலவர் ஏறத்தாழ ஐந்நூற்றுவர் என்பது புலனாகின்றது. அரசர், அந்தணர், வணிகர், வேளாளர், குறவர், மறவர், ஆயர் முதலிய தமிழ்ச் சமுதாய மக்கள் அனைவரும் கல்வி கற்க அக்காலத்தில் வசதியிருந்தது. கூல வாணிகன், அறுவை வாணிகன், மருத்துவன், கணியன், கொல்லன், வண்ணக்கண் முதலிய பல தொழில் மக்களும் கவி பாடும் ஆற்றல் பெற்றிருந்தனர் என்பது, சங்கச் செய்யுட்களால் அறியப்படும் உண்மையாகும். மேலும், அக்காலத்து எழுத்தாளராய் இருந்தவரும் எழில்மிக்க செய்யுள் இயற்றும் புலமை பெற்றிருந்தனர்"[59] இவ்வாறு சங்க காலத்தில் உயர்ந்தவர் தாழ்ந்தவர் என்ற வேறுபாடு இல்லாமல் அனைவரும் கல்வியில் சிறந்து விளங்கினர் என்பார்.

### 4.5.3.சங்க காலப் பெண்களின் கல்விச் சிறப்பு

பெண்களின் கல்விச் சிறப்பைப் பற்றிக் கூறும்போது சங்க காலத்தோடு சமகாலத்தை ஒப்பிட்டுப் பார்க்கிறார். அவருடைய கூற்றாவது, "பெண்டிருள், பூதப்பாண்டியன் மனைவியாகிய பெருங்கோப்பெண்டு, பாரி மகளிர் முதல் வேட்டுவ

மகளிர், காவற் பெண்டிர், குயத்தியர் ஈறாகத் தமிழ்ச் சமுதாயத்துப் பெண்மணிகள் பலரும் புலமை நிறைந்த கல்வி கற்றிருந்தனர். இக்காலத்தில், குறத்தி, வேட்டுவிச்சி, குயத்தி என்னும் பெண்டிருள் பெரும்பாலோர் எழுத்தறிவற்றவராக இருக்கின்றனர். நாகரிகம் முதிர்ந்த இவ்விருபதாம் நூற்றாண்டில், இவர்கள் நிலை இங்ஙனம் இருத்தலையும், ஆயிரத்தொண்ணூறு ஆண்டுகட்கு முன் இவர்தம் முன்னோர், மன்னரால் பாராட்டத்தகும் புலமை பெற்றிருந்ததையும் நோக்க, சங்க காலம் தமிழக வரலாற்றில் பொற்காலம் என்று கூறுவது பொருத்தமேயன்றோ”[60] என்கிறார். இப்படிச் சங்க காலத்தை பொற்காலமாக்கும் போக்கு திராவிட இயக்கச் சிந்தனைக்கு வலுவூட்டுவதாக அமைகிறது.

### 4.5.4.பண்டைத் தமிழரின் வாணிகச் சிறப்பு

பண்டைத் தமிழரின் வாணிகச் சிறப்பைப் பற்றிக் கூறும் லெ.ப.கரு இராமநாதன் செட்டியார், “நந்தர் பாடலிபுரத்தையாண்ட காலத்திலிருந்து சங்க கால இறுதி வரையில் தமிழ் வேந்தர் இந்தியாவில் தங்கள் வாணிகத்தைத் திறம்பட நடத்தி வந்தனர் என்பதற்குச் சங்க நூல்களில் சான்றுகள் உண்டு. சேர நாட்டு மிளகும், இமய மலையில் பிறந்த மணியும், பொன்னும், குடமலையில் பிறந்த சந்தனமும், அகிலும், தென் கடலிலிருந்து எடுக்கப்பட்ட முத்தும், கீழ்க்கடலிற் பிறந்த பவளமும் கங்கையாற்றுப் பாய்ச்சலால் விளைந்த பொருள்களும், காவிரியாற்றுப் பாய்ச்சலால் விளைந்த பொருள்களும், காவிரிப்பூம்பட்டினத்தில் விலையாயின என்பதிலிருந்து அக்கால உள்நாட்டு வாணிகத்தைப் பற்றி நாம் ஓரளவு தெளியலாகும்”[61]. இவ்வாறு இமயம் முதல் குமரி வரையில் தமிழர்கள் வாணிகத்தில் சிறந்து விளங்கினர் என்பதைச் சுட்டிக் காட்டுகாட்டுகிறார்.

மேலும், “கிறிஸ்து பிறப்பதற்குப் பல நூற்றாண்டுகள் முன்பிருந்தே தமிழகம் கடல் வாணிகத்தில் சிறந்திருந்தது. கண்ணாடி, கற்புரம், பட்டு முதலிய பண்டங்கள் சீனத்திலிருந்தும், இலவங்கப்பட்டை, கிராம்பு, சாதிக்காய், சாதிப்பத்திரி முதலியன நாக நாடுகள் எனப் பெயர் பெற்ற கிழக்கிந்தியத் தீவுகளிலிருந்தும் தமிழகத்தில் இறக்குமதியாயின. குதிரைகள், அரேபியாவிலிருந்து கொண்டுவரப்பட்டன. சித்திரப்பேழை, பாவை விளக்கு, மது முதலியன மேற்கு நாடுகளிலிருந்து வருவிக்கப்பட்டன. தேக்கு, தோகை, அரிசை, அகில், சந்தனம், இஞ்சி முதலிய பல் பொருள்களுக்குத் தமிழ்ப் பெயர்களே மேலைநாட்டு மொழிகளில் வழங்குவது, தமிழகத்து ஏற்றுமதிச் சிறப்பைக் காட்டுவதாகுமன்றோ? சால்டிய நாட்டைச் சேர்ந்த ‘ஊர்’ என்னும் இடத்தில்

அகழ்ந்தெடுக்கப்பட்ட தமிழ்நாட்டுத் தேக்கு மரத்துண்டம் கி.மு.300 ஆண்டுகட்கு முற்பட்டதென்று ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர். ஏறத்தாழ கி.மு.ஆயிரம் ஆண்டுகட்கு முற்பட்ட சாலமோன் என்னும் யூத அரசன் காலத்தில், தமிழகத்தினின்று யூதேயாவுக்கு ஏற்றுமதியான தோகையின் பெயர், யூதர் மொழியான எபிரேயத்தில், 'துகி' என்று வழங்கப்பட்டது. யவனரைப் பற்றிய குறிப்புகள் சங்கப் பாக்களில் வருவதையும் வேற்று மொழி பேசிய அயல் நாட்டு வணிகர் தமிழகத் துறைமுக நகரங்களில் தங்கியிருந்ததையும் நோக்க, சங்க காலக் கடல் வாணிகம், சிறந்த முறையில் நடைபெற்று வந்தது என்னும் உண்மையை உணரலாம்"[62] என்கிறார். இவ்வாறு பண்டைய தமிழர்கள் பல்வேறு நாடுகளுடன் வாணிகத் தொடர்பு வைத்திருந்தனர் என்பதைப் பல்வேறு சான்றுகளைக் கொண்டு விளக்கிச் செல்கிறார். இவை பண்டைய தமிழர்களின் செல்வச் செழிப்பையும், பொருள் வளத்தையும் உணர்த்துவதாக உள்ளன.

### 4.5.5.பண்டைத் தமிழரின் வரலாறு

பண்டைத் தமிழர்களின் வரலாற்று ஆவணம் சங்க இலக்கியம் என்பதை, "ஆற்றுப்படைகளில், கலைஞன் ஒருவன் மற்றொரு கலைஞனுக்கு வழி கூறும் பகுதியில், தமிழ்நாட்டில் உள்ள முல்லை முதலிய நிலப் பகுதிகள், அவற்றில் உள்ள மரம் செடிகொடிகள், விலங்குகள், பறவைகள், அவற்றின் இயல்புகள், அந்நிலங்களில் வாழும் பலவகை மக்களின் தொழில்கள், அவர்களின் பல்வேறு உணவு வகைகள், வாழ்க்கை முறைகள், பண்புகள் அவர்கள் வாழும் பேரூர்கள், சிற்றூர்கள் ஆகிய பலவற்றைப் பற்றி விளக்கமாக அறியலாம்"[63] "பத்துப்பாட்டில் உள்ள ஒவ்வொர் ஆற்றுப்படையும் ஒரு சிறு வரலாற்று நூலாகவும் விளங்குகின்றது"[64] என்பார்.

மேலும், சங்க காலம் முழுமைக்கும் ஒரே வகையான பண்பாடும், இலக்கிய மரபும் இருந்தன என்பதை "இப்பாட்டுக்கள் பத்தும் பண்டைத் தமிழகத்தின் இயற்கை அமைப்பு, ஐவகை நிலங்களில் வாழ்ந்த அக்கால மக்களின் பழக்க வழக்கங்கள், அவர்களின் உயர்ந்த பண்பாடுகள் மதுரை, காவிரிப்பூம் பட்டினம் முதலிய தலைநகரங்களின் அக்காலச் சிறப்பு, சிற்றூர்கள் சிலவற்றைப் பற்றிய செய்திகள், சில வரலாற்றுக் குறிப்புகள் முதலியவற்றை விளக்குவன என்று கூறலாம்.

பிற்காலத்தில், யாப்பு வகைகளும், அணி வகைகளும் பெருகிவிட்டன ஆதலால், பிற்காலத்தில் தோன்றிய செய்யுட்கள், சொல் நடை, பொருள் அமைப்பு ஆகியவற்றால்,

பல வகைப்பட்டுள்ளன. இவ்வாறன்றி, எட்டுத்தொகையிலும், பத்துப்பாட்டிலும் உள்ள செய்யுட்கள் பொதுத் தன்மைகள் பலவற்றால், ஓர் இயல்பினவாக இருத்தலைக் காண்கிறோம். இதிலிருந்து ஒரே வகைப் பண்பாடும், இலக்கிய மரபும் தமிழ் நாட்டில், நெடுங்காலம் நிலைத்திருந்தன என்பது தோன்றுகிறது"[65] என்கிறார். இவ்வாறு ஆரியர், திராவிடர் என்ற கருத்துக்கள் மேலோங்கிய சூழலில் வடமொழிக் கலப்பற்ற தமிழர் வரலாற்றின் ஆவணமாகச் சங்க காலத் தொன்மையை நிலை நாட்டுதல் என்ற திராவிட இயக்கத்தினரின் செயல் இங்கே செயல்வடிவமாகிறது எனலாம்.

## 4.6.ச.சோமசுந்தர பாரதியார் - சங்க இலக்கிய வாசிப்பு

### 4.6.1.பழந்தமிழ் நாகரிகத்தின் பெருமைகள்

திராவிட இயக்கச் சிந்தனைகளின் அடிப்படையில் நூல்களை எழுதியவரான ச.சோமசுந்தர பாரதியார், பழந்தமிழ் நாடு (1955), நற்றமிழ் (1955), சேரர் தாய முறை (1960) முதலான நூல்களின் மூலம் ஆரியத்துக்கு முற்பட்ட பழந்தமிழ் நாகரிகத்தின் பெருமைகளை விளக்கினார்.

அயல் நாட்டவர் குறிப்புகளோடு பழந்தமிழர்களின் சிறப்புகளைக் கூறும் ச.சோமசுந்தர பாரதியார், "இப்பழைய நாட்டில் ஆரியர் பேரரசு அசோகனாட்சியே. அவன் தந்தை சந்திரகுப்தன் புகழ்படப் பாடலிபுரத்தை யாண்டது ஏசு தோன்றுதற்கு நான்கு நூற்றாண்டின் முன்னாகும். அப்போது பாடலி வேத்தவையில் யவன தூதனாயிருந்த மெகத்தனிசு எழுதிவைத்த நிகழ்ச்சிக் குறிப்பு இன்று நின்றது. அதில் தமிழர் பேரூர் மதுரை எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. மதுரையின் சீரும் சிறப்பும் நேரிலா வளமும் யாண்டுமில்லாத் தேக்கோடு அகிலும் தென்கடல் முத்தும் உப்பொடு உவப்புறா உணவுப் பண்டமும் ஒப்பில் உடைகளும் உலகமெங்கணும் நிலவ, வங்கமும் கால்நடை வகைகளும் சுமந்துதவும் பெருஞ் செல்வமும் சிறப்பும் பாடலி எட்டிய பாண்டியர் புகழும், தமிழர் தேய் விலாத் தூய வாழ்வும் பாராட்டிய யவனப் புலவன் குறிப்புரைகள் பழைய தமிழர் பெருமைக்கு இறவாச் சான்று தருகின்றன. அதனால், இற்றைக்கு இருபத்தைந்து நூற்றாண்டுகளுக்கு முன்னரே கூடல் மதுரை பாண்டியர் தலைநகராய்ச் சிறந்தோங்கிய செய்தி அக்காலப் பிறமொழிப் புலவர் பலரும் பேசிய பழமை"[66] என பழந்தமிழரின் பெருமை குறித்துப் பேசுவதைக் காணமுடிகிறது.

ஆரியர்கள் வருவதற்கு முன்னரே தமிழர்கள் பல வகைச் சிறப்புகளோடு வாழ்ந்தவர்கள் என்பதை, “ஆரியர் இங்கு வருவதற்குப் பற்பல நூற்றாண்டுகளுக்கு முன்னரே இந்நாட்டில் செல்வமும் புகழும் சிறக்க வாழ்ந்தவர் தமிழர். அறனறிந்து மூத்த அறிவும் அகன்றாழ்ந்த அறிவு நூல் வளமும் நிறைந்து நின்றவர். ஊழையும் உப்பக்கங் காணும் உலைவிலா ஊக்கமும் “திரை கடலோடியும் திருவினைத்தேடித்”, தாளாற்றித் தந்த பொருளெல்லாம் தக்கார்க்கு வேளாண்மை செய்து மகிழும் ஆக்கமும் படைத்தவர் “ஒழுக்கமே உயிரினு மோம்பற்குரிய” தென உணர்ந்து தம்மொழியில் முறையிலும், வழக்கொடு செய்யுள் வகைப்படு பொருள் வரலாறுகள் அனைத்தினும் திணை வகுத்து உயரும் வாழ்க்கையை உவந்துகொண்டவர்”[67] என்கிறார்.

மேலும், பண்டைத் தமிழர்களின் பண்பாட்டையும், நாகரிகத்தையும் தாங்கி நிற்பன சங்க இலக்கியம் என்பதை, “பழைய தமிழரின் வாழ்க்கை நிலை, ஒழுக்க நெறி, அடிப்பட்ட வழக்கு முறை, குறிக்கோள்கள், நூன்மரபு, மொழிமரபுகள் இவற்றை உள்ளவாறு இன்று நம்மவர் ஆய்ந்தறிய விரும்புவது இயல்பாகும். அவ்வாராய்ச்சிக்கு ஓரளவு உதவுவன பண்டைச் சான்றோர் செய்யுட்களேயாம்”[68] என்பார்.

பண்டைத் தமிழரின் உயர்ந்த வாழ்க்கையானது ஆரியர்களின் வருகையினால் பல நூறு ஆண்டுகளாக உருக்குலைந்தது. இழந்த பெருமையும், சிறப்பும் பெற வேண்டுமாயின் சங்க இலக்கியம் துணையாக இருக்கும் அதன் வருகை அதனை மீட்டெடுக்கும் என்பதை அவரின் பின்வரும் கூற்று தெளிவாக்குகின்றது. “சென்ற 1500 ஆண்டுகளாக ஊறியேறிய புதிய ஆரியக்களியால் தமிழர், தமிழையும் மறந்து முன்னோர் பெருமையும் உரனும் துறந்து, பிறர் நகைப்புக்கு ஆளாயினர். உலகமெலாம் நெட்டிருள் நீங்கி வெட்டென விடிந்து அறிவொளி யேறு மிக்காலத் தமிழிளைஞரும் நாட்களைத்தூய காற்றைச் சால மோப்பாராயினர். கனித்த ஆரியம் புளித்தபின், அதில் அருவருப்பும் தமது பழந்தமிழ்த் தூய வாழ்வினை மீள மேற்கொள்ளும் பெரு விரும்பும் ஒருங்குணர்வாராயினர். இப்புதிய நன் முயற்சிக்குப் பழைய நூல்களே துணையாமாதலின் முன் மறந்து துறந்த செய்யுட்களைத் தேடத் தொடங்கினர். துருவிக் கண்டு உருவும் செல்லரித்த சுவடிகளைத் துடைத்துப் புதுக்கி, தம் முன்னேற்றக் கருவியாகக் கருதுவர்”[69] எனச் சங்க இலக்கியத்தின் ஆற்றல் குறித்துப் பேசுவதைக் காண முடிகிறது.

### 4.6.2.தமிழர் திருமண முறைகள்

சங்க இலக்கியத்தின் மூலமாகத் தமிழர் பண்பாட்டையும், நாகரிகத்தையும் ஆராயப் புகுந்த ச.சோமசுந்தர பாரதியார் தமிழர் திருமணத்தைப் பற்றிக் கூறும்போது, "தமிழர் திருமணத்துக்கு எவ்வகைச் சடங்கும் இன்றியமையாதனவாகப் பண்டைத் தமிழ் மக்கள் கருதவில்லை என்பதற்குப் பற்பல சான்றுகள் பண்டைத் தமிழ் இலக்கியங்களுள் உண்டு. முதற்கண்ணும் எஞ்ஞான்றும் உழுவலன்பே மணத்திற்கும் இல்வாழ்க்கை இன்பத்திற்கும் உரியதொன்றாக இருந்தது. பொருந்தாத தனவும் செயற்கையும் ஆகிய ஆரியர் வழக்குகளையும், முறைமைகளையும், தமிழரின் காதல் பற்றிய வழக்குகள், குறிக்கோள்களோடும் இணக்கிவேறுபாடு அழித்து ஒன்றாக்கச் சில பிராமண பிராமணீய இலக்கண நூலாசிரியர்கள் மேற்கொண்ட முயற்சிகள் எல்லாம் விளக்க வேண்டா வெளிப்படையாய் உள்ளன."[70] என்கிறார். இவ்வாறு பண்டைத் தமிழரின் திருமண முறையானது சடங்குகள் இல்லாத் திருமண முறை என்பதை சங்க இலக்கியச் சான்றுகளோடு விளக்கிச் செல்கின்றார். எனவே, தமிழர் பண்பாட்டையும், நாகரிகத்தையும் மேற்கண்டவாறு விளக்கிச் செல்வதைப் பார்க்க முடிகிறது. இதுபோன்ற செயல்பாடுகள் எல்லாம் திராவிட இயக்கச் சிந்தனையின் வெளிப்பாடாக இருப்பதைப் பார்க்க முடிகிறது.

## 4.7.ந.சி.கந்தையா பிள்ளை – சங்க இலக்கிய வாசிப்பு

### 4.7.1.நாகரிகத்தின் முன்னோடி

திராவிட இயக்கச் சிந்தனையில் அடிப்படையில் சங்க இலக்கியத்தை ஆராய்ந்த ந.சி.கந்தையா பிள்ளை, தமிழர்களே உலக நாகரிகத்திற்கு வழிகாட்டியாக இருந்தவர்கள் என்பதை ஆய்ந்து நிறுவுகிறார். "எகிப்தியர், சுமேரியர், பாபிலோனியர், அஜீரியர், பினீசியர், மினோவர் (creteins) முதலிய பண்டைய மக்கட்கெல்லாம் பழமையே நாகரிகம் பெற்று விளங்கிய தமிழர், புலவர்களைக் கூட்டி மொழியை வளர்த்தார்கள், நூல் நிலையங்களை அமைத்தார்கள் என்னும் செய்தி உலக வரலாற்றை நோக்குவார்க்கு வியப்பாகத் தோன்றமாட்டாது"[71] என்கிறார். இங்குத் தமிழ் மக்கள் தொன்மைச் சிறப்புடைய நாகரிகத்தை உடையவர்கள் என்று எழுதுகிறார்.

மேலும், "1921 ஆம் ஆண்டு சிந்து வெளியில் புதையுண்டு கிடந்த தமிழரின் மொகஞ்சொதோரா, ஹரப்பா என்னும் இரு பண்டைய நகரங்கள் கண்டுபிடிக்கப்பட்டு அவ்விடங்களிற் கிடைத்த பழம் பொருட்கள் ஆராயப்பட்டன. நுணுகி ஆராய்ந்த பின்னர்

ஆராய்ச்சியாளர், அந்நகரங்களில் வாழந்தோர் தமிழர்கள் என்றும் அவர்களின் நாகரிகம் மெசபெதேமியா, எகிப்து முதலிய நாடுகளின் பழைய நாகரிகங்களை ஒத்துள்ளதென்றும், அந்நகரங்கள் ஆறாயிரம் ஆண்டுகளுக்கு முன் அமைக்கப்பட்டனவென்றும் நவின்றனர்"[72] என்கிறார்.

### 4.7.2.தமிழர் x ஆரியர்

ஆரியருக்கு எதிரான கருத்துருவாக்கத்தை உருவாக்கிய ந.சி.கந்தையா பிள்ளை, தமிழருக்கும் ஆரியருக்கும் வரலாற்று நெடுகிலும் பகை இருந்து வந்ததைச் சான்றுகளோடு விளக்கிச் செல்கின்றார். "பிராமணர் தாமே தமிழருக்கு நாகரிகத்தை உதவி, அவர் மொழியையும் சீர்திருத்தஞ் செய்தவர்கள் எனக் கூறிவந்தார்கள், இதனைத் தமிழ்ப்புலவர்கள் எதிர்த்தார்கள்"[73] "தமிழருக்கும் ஆரியருக்கும் நெடுகிலும் பகையிருந்ததென்பதைச் சங்க இலக்கியங்களிலும் சிலப்பதிகாரத்திலும் காண்கிறோம்"[74] "இற்றைக்கு ஐம்பதாண்டுகளுக்கு முன் தமிழ்நாடு இருந்த நிலை வேறு, இன்றைய நிலை வேறு. ஆரியர் தமிழரை நீண்டகாலம் எவ்வாறு இழிவுபடுத்தினர் என்பதைத் தமிழர் சரித்திர பூர்வமாக அறிந்துள்ளார்கள். ஆரியக் கொள்கைகளைக் கூண்டோடு ஒழிப்பதே தன் மதிப்புள்ள தமிழனின் உயர்ந்த இலக்கு என்னும் உணர்ச்சி நாள் வீதம் ஓங்குகின்றது. ஆரியர் தம் வயிற்றுப் பிழைப்பின் பொருட்டுக் கடவுளின் பெயரால் கட்டி வைத்த கட்டுகள் ஒன்று ஒன்றாக அறுந்து போகின்றன. இன்று தமிழினும் பார்க்க ஆரியம் உயர்ந்ததென்று வாதாடும் ஆற்றல் ஆரியக்கட்சியினரிடம் மறைந்துவிட்டது. தம்மைக் கைவிட்டுவிடக் கூடாதென இவர் இரந்து கேட்கும் காலம் தோன்றியுள்ளது"[75] என்பார். இவ்வாறு ஆரிய திராவிட முரணைத் திராவிட கருத்துநிலைக்கு ஏற்ப விளக்கிச் செல்வதைப் பார்க்க முடிகிறது.

இந்திய நாகரிகத்தைப் பற்றி ஆராய்வோர் வடக்கிலிருந்து ஆராய்வதை விடுத்து தென் பகுதியில் இருந்து தொடங்க வேண்டும் என்கிறார் ந.சி.க. "இந்திய மக்களின் பழைய நாகரிகத்தை அறியத் தொடங்குவோர், அதனைச் சமஸ்கிருத நூல்கள் மூலமாக ஆராய்வது மிகத் தவறான முறை: அறிவு முறையில் ஆராயப்புகும் ஒவ்வொருவரும் கிருட்டிணா, கோதாவரி, வையை ஆற்றுவெளிகளைப்பற்றி ஆராய்தல் வேண்டும். இதை விடுத்துக் கங்கைச்சமவெளிகளில் ஆரம்பித்து ஆராய்வதே நீண்டகாலக் கொள்ளையாகி விட்டது"[76] என்று விமர்சிப்பதோடு வரலாற்றை தெற்கிலிருந்து எழுத வேண்டும் என்கிறார்.

### 4.7.3.தமிழ்மொழியின் தனித்தன்மை

தமிழ் வடமொழியின் உதவியின்றித் தனித்தியங்கும் தன்மையுடையது என்பதைச் சங்க இலக்கியம் கொண்டு வரலாற்று ஆசிரியர்களின் குறிப்புகளோடு ஆராயும் ந.சி.கந்தையா பிள்ளை "சங்க நூல்களில் காணப்படும் வடசொற்கள் மிகச் சிலவே. அச்சொற்களும் வடமொழிக்குரியனவோ என்பது ஐயத்துக்குரியது. மக்லீன் என்பார் சங்க நூல்களில் காணப்படும் வட சொற்கள் எனப்படுவன இருமொழிகளுக்கும் பொதுவாகிய சொற்களாகலாமெனக் கருதினர். தமிழ் ஆராய்ச்சி என்னும் நூல் எழுதிய சீனிவாச ஐயங்கார் 1800 அடிகள் கொண்ட பதிற்றுப்பத்தில் பன்னிரண்டு வடசொற்கள் வரையில் காணப்படுகின்றன வென்றும், இதனால் தமிழ்மொழி பிறமொழிகளின் உதவியின்றி இயங்கும் வன்மை உடைய தென்றும், தமிழிலுள்ள சிறிய சொற்களைச் சேர்த்து இக்காலப் புதிய கருத்துக்களை விளக்குவதற்குப் புதிய சொற்களை ஆக்கிக்கொள்ளல் இலகுவில் அமையுமென்றும் விளங்குகின்றதெனக் கூறியுள்ளார். பதிற்றுப்பத்தில் வந்துள்ள வடசொற்களெனக் காட்டப்பட்ட ஆவுதி, மந்திரம், சாந்தி என்ற சொற்கள் எல்லாம் வடமொழிக்குரியன வென்பது ஐயத்துக் கிடமானது. காலின்ஸ் என்பார் காலன் என்னும் சொல் தமிழ் எனத் 'திராவிட ஆராய்ச்சிகள்' என்னும் நூலிற் காட்டியுள்ளார். பாசம், ஆரம் என்னும் சொற்கள் தமிழுக்கே உரியன வென்று எளிதில் காட்டிவிடலாம்."[77] என்பார்.

மொகஞ்சொதரோ மொழிக்குத் தாய் தமிழ் மொழி என்பதை "மொகஞ்சொதரோவில் வழங்கிய சொற்களில் பல திராவிட மொழிகளிற் காணப்படுகின்றன. ஆகவே திராவிட மொழிகளுக்குத் தாய் மொகஞ்சொதரோ மொழி எனக் கூறலாம். திராவிடமொழிகளிற் காணப்படும் மொகஞ்சொதரோ மொழிச் சொற்களில் பல தமிழிற் காணப்படுகின்றன. ஆகவே, தமிழ் மற்றைய திராவிட மொழிகளிலும் மூப்பு உடையது என்று கருதப்படுகிறது"[78] என்று எழுதுகிறார்.

இந்திய மக்களிடையே காணப்படும் அனைத்திற்கும் திராவிட நாகரிகமே அடிப்படை என்பதை "இன்று இந்திய மக்களிடையே காணப்படும் பழக்க வழக்கங்களும் பிறவும் பழைய தமிழர் நாகரிகத்தை அடிப்படையாகக் கொண்டனவென்று கருதப்படுகின்றன. சங்க காலத் தமிழர் நாகரிகம் கலப்பில்லாத பழந்தமிழ் நாகரிகமேயாகும்"[79] என்பர்.

ந.சி.கந்தையா பிள்ளை தம்முடைய நூல்களான தமிழகம் (1934), வரலாற்றுக் காலத்துக்கு முற்பட்ட பழந்தமிழர் (1943), தமிழ் இந்தியா (1945), முச்சங்கம் (1947), தமிழர் சரித்திரம் (1950) ஆகியவற்றில் இந்திய நாகரிகம், மொழி, மதம், சமயம், பண்பாடு, கடவுள் என அத்தனையும் தமிழர் உடையதாக எழுதித் தமிழ் வடமொழியைச் சார்ந்ததல்ல, தனித்தன்மையுடையது என்ற கருத்தை உயர்த்தி பிடிப்பதைக் காணமுடிகிறது.

சங்க இலக்கியங்களுக்கு எளிய உரை எழுதுதல், வசனங்கள், விளக்கங்கள் தீட்டுதல் என்ற முறையில் ந.சி.கந்தையா பிள்ளை, கலித்தொகை வசனம் (1941), அகநானூறு வசனம் (1938), பத்துப்பாட்டு உரைநடை (1935), பதிற்றுப்பத்து வசனம் (1937), பரிபாடல் வசனம் (1958) முதலிய நூல்களை எழுதி இருப்பதை காணமுடிகிறது. இது போன்ற செயல்பாடுகள் இலக்கியம் அறியாத படித்த பாமரர்களுக்கு சங்க இலக்கியச் செய்திகளைக் கொண்டு சேர்த்தல் என்ற திராவிட இயக்கத்தினரின் செயல்பாடுகளை நினைவுபடுத்துகிறது எனலாம்.

### 4.8.மயிலை சீனி.வேங்கடசாமி – சங்க இலக்கிய வாசிப்பு

#### வேற்றுச் சமயத்தின் தாக்கம்

திராவிட கருத்தாக்கத்துடன் நூல்களை எழுதியவர் மயிலை சீனி.வேங்கடசாமி. “திராவிட இயக்கத் தலைவர்களுடன் அவருக்கு நெருங்கிய தொடர்பு இருந்தது. 1938 - இல் ‘கிறித்தவமும் தமிழும்’ என்னும் நூலை வெளியிட்டார். வைதீக மரபுக்கு எதிரான பிறச்சமயங்கள் தமிழுக்கு ஆற்றிய பணிகளை எடுத்துக் காட்டினார்.

‘பௌத்தமும் தமிழும் (1940)’ ‘சமணமும் தமிழும் (1954)’ முதலான நூல்கள் இந்த அடிப்படையிலேயே எழுந்தவை. தமிழ்ப்பண்பாட்டைத் திராவிடக் கருத்து நிலைகளின் பின்புலத்தில் மீள் கண்டுபிடிப்பு செய்தல் என்பதில் வேங்கடசாமிக்குச் சிறப்பிடம் உண்டு. ‘பழங்காலத் தமிழர் வாணிகம்’ ‘தமிழர் வளர்த்த அழகுக் கலைகள்’ முதலான நூல்கள் மேற்குறித்த பணியைச் சிறப்பாகச் செய்தன. பிற திராவிடக் கருத்துச் சார்பு ஆராய்ச்சியாளர்களைப் போல உணர்வு அடிப்படையில் அல்லாமல் தரவுகளின் அடிப்படையிலேயே தமிழர்ப் பண்பாடு குறித்த தமது கருதுகோளை முன்வைத்தார் என்பது குறிப்பிடத்தக்கது”[80].

திராவிட இயக்கத்தின் கருத்தாக்கத்தோடு சங்க இலக்கியத்தை ஆராய்ந்த மயிலை சீனி. வேங்கடசாமி சங்க இலக்கியத்தின் தொன்மை, முச்சங்கங்களின் காலம், தொல்காப்பியக் காலம், சேரர், சோழர், பாண்டியர் மற்றும் குறுநில மன்னர் சரித்திரம், அயல்நாடுகளோடு நிகழ்ந்த வாணிபத்தின் தன்மை முதலியனவும் தமிழ்ச் சமுதாயத்தின் வாழ்க்கை நிலைமை போன்றவற்றை விரிவாக ஆராய்ந்துள்ளார்.

**4.8.1.கால ஆராய்ச்சி**

“கால ஆராய்ச்சி என்பது இன்றியமையாத ஆராய்ச்சியாக உள்ளது, கால நிர்ணயிப்பை அடிப்படையாகக் கொண்டே இலக்கிய வரலாற்றின் சமூகப் பண்பாட்டு வரலாற்றின் அடிப்படைக் கூறுகள் தீர்மானிக்கப்படுகின்றன”[81] என்பர்.

சங்க இலக்கியம் பற்றிய ஆய்வுகளில் ‘சங்கம்’ குறித்த செய்திகள், காலம் குறித்த ஆய்வுகள் போன்றவை குறிப்பிடத்தக்க இடத்தை வகிக்கின்றன. இது குறித்து ஆராயும் மயிலை சீனி வேங்கடசாமி, “கால அளவு அதிகமாகக் கூறப்படுவதனாலேயே சங்கங்கள் இருந்தன என்பதை ஐயப்படவேண்டியது இல்லை. அதிகக் கால அளவு கூறுவது நமது நாட்டில் மட்டும் அன்று, வேறு நாடுகளிலும் அரசர்களின் ஆட்சிக் காலத்தை அதிகப்படுத்திக் கூறும் வழக்கம் பண்டைக்காலத்தில் இருந்தது”[82] என்கிறார். அதற்கான சான்றுகளைப் பட்டியலிடுகிறார். மூன்று சங்கங்கள் இருந்தன என்பதனை ஒப்புக்கொள்கிறார்.

“கடைச்சங்க காலத்தில் 49 பாண்டியர் இருந்தனர் என்று கூறப்படுவதால், தலைமுறையொன்றுக்கு 20 ஆண்டு என்று சாதாரணமாகச் சரித்திர நூலோர் கணிக்கிற கணக்குப்படி பார்த்தால் 980 ஆண்டு கடைச்சங்கம் இருந்தது என்று கொள்ளலாம். கடைச்சங்கத்தின் இறுதிக்காலம் (கீழ்வரம்பு) கி.பி 300 என்று வைத்துக்கொண்டால் கி.மு 680 இல் கடைச்சங்கம் தோன்றியிருக்கவேண்டும். தொல்காப்பியம் இடைச்சங்கத்தின் இறுதியில் தோன்றியது என்று கூறப்படுவதால், ஏறத்தாழ கி.மு. 800 இல் தொல்காப்பியம் தோன்றியிருக்கலாம் என்று கருதலாம்”[83] என்கிறார்.

சங்க இலக்கியத்தில் கூறப்படும் வரலாற்றுச் செய்திகளைத் தகுந்த சான்றுகளோடு இணைத்து நடுநிலையோடு கூறவேண்டும் என்பதைப் பின்வரும் கூற்றில் தெளிவாக்குகின்றார். “வரலாறு கூறுவது என்பது இந்தப் பழைய இந்நூல்களின் நோக்கம் அன்று. தங்களைப் போற்றிப் புரந்த அரசர் சிற்றரசர் முதலானோரைப் புகழ்ந்து பாடிய

செய்யுளாக அமைந்துள்ள இந்தப் பழைய நூல்களில் சரித்திர வரலாற்றுச் செய்திகளைத் தக்க முறையில் ஏனைய செய்திகளுடன் பொருத்தி ஆராய்ந்து, வரலாற்றை அமைக்க வேண்டியது சரித்திரம் எழுதுவோரின் கடமையாகிறது”[84] என்பார்.

### 4.8.2.ஐயர் என்னும் சொல்லின் பொருள்

சங்க காலத்தில் ஐயர் என்னும் சொல் எப்பொருளில் வழங்கப்பட்டது என்பதை ஆராயும் மயிலை சீனி. வேங்கடசாமி, “ஐயர் என்னும் சொல் தமிழ் நாட்டில் பிராமணருக்கு சாதிப் பெயரைச் சுட்டும் சொல்லாக இப்போது வழங்கப்படுகிறது. இச்சொல் பிராமணருக்குச் சார்த்தி வழங்குவது மிகச் சமீப காலத்து வழக்கம். விஜய நகர அரசர் காலந்தொடங்கி (கி.பி.15-ஆம் நூற்றாண்டு தொடங்கி) இச்சொல் இவர்களுக்கு வழங்கப்படுகிறது. அதற்கு முன்பு ஐயர் என்னும் சொல் பிராமணரைச் சார்த்தி வழங்கப்படவில்லை”[85] என்பர்.

மேலும், “ஐ, ஐயன், ஐயர் என்னும் சொற்கள் சங்க இலக்கியங்களில் அண்ணன், தகப்பன், பெரியவன் என்னும் பொருளில் பொதுவாகவும், அரசன் அரசர் குலத்தைச் சார்ந்தவன் என்னும் பொருளில் சிறப்பாகவும் வழங்கி வந்துள்ளன”[86] என்று விளக்கம் தருகின்றார். ஐயர், ஐயங்கார் முதலிய சொற்கள் பிற்காலத்திலேதான் பிராமண சாதியைக் குறிக்கும் சொல்லாகத் தமிழ் நாட்டில் வழங்கப்பட்டன என்பதைச் சுட்டிக் காட்டுகிறார்.

“ஐயர், என்னும் சொல்லுக்கு இக்காலத்துப் பொருள் வேறு, முற்காலத்துப் போருள் வேறு. பழங்காலத்தில் வழங்கிய ஐயர் என்னும் சொல்லுக்கு இக்காலத்துப் பொருளையும், பிற்காலத்தில் வழங்கும் ஐயர் என்னும் சொல்லுக்கு முற்காலத்துப் பொருளையும் மாற்றி வழங்குவது அறியாமையாகும், தவறும் ஆகும். அவ்வாறு செய்வது, மொழியின் வரலாறு அறியாதவரின் பிழைப்பட்ட செயலாகும். மிகப்பழைய நூலாகிய தொல்காப்பியத்தில் கூறப்படுகிற ஐயர் என்னும் சொல்லுக்கு மிகப் பிற்காலத்துப் பொருளாகிய பிராமணர் என்னும் பொருளைப் பொருத்திப் பொருள் கூறுவது, வரலாறு அறியாதவரின் தவறான செயலாகும்”[87] என்பர். இதற்கான காரணங்களை பல வரலாற்று சான்றுகளைக் காட்டி விளக்கிச் செல்கின்றார்.

“இதில் இளம்பூரண அடிகள் ஐயர் என்பதற்கு முனைவர் என்று பொருள் கூறுவது காண்க. முனைவர் என்பது முதன்மையானவர் மக்கள் சமூகத்தின் தலைவர் என்று பொருள் உள்ள சொல்லாகும்.

எனவே ‘ஐயர் யாத்தனர் கரணம்’ என்பதற்கு, அரசர்கள் கரணத்தை (திருமணச் சடங்கை) ஏற்படுத்தினார்கள் என்பது பொருள். எனவே, ஆரியப் பார்ப்பனர் திருமண முறையை அமைத்தார்கள் என்று இக்காலத்துப் பார்ப்பனர்கள் எழுதியுள்ள உரைபிழை, என்று விடுக.

தமிழ்மொழி குறைந்தது மூவாயிரம் ஆண்டுப் பழமையுடைய மிகப்பழைய மொழி. ஆகவே இம்மொழிச் சொற்கள் பல, வெவ்வேறு காலத்தில் வெவ்வேறு பொருளில் வழங்கப்பட்டன. அந்த மரபை அறிந்து பொருள்கொள்ளவேண்டுமே யல்லாமல், மரபு அறியாமல் கண்டதை எழுதிக் குழப்புவது அறிவுடைமையாகாது, ஆராய்ச்சி ஆகாது”[88] என்பர். இவ்வாறு கூறுவதன் மூலம் தொல்காப்பியம் எழுதப்பட்ட காலத்தை ஆரியக் கலப்பற்ற காலமாகப் பார்க்கிறார்.

### 4.8.3.திராவிட - ஆரியக் கலப்பு

திராவிட ஆரியக் கலாசாரக் கலப்பு தொல்காப்பியம் எழுதப்பட்ட காலத்திற்கு பிறகு கி.மு. மூன்றாம் நூற்றாண்டில் அசோகக் காலத்தில் ஏற்பட்டது என்பதையும் இதன் விளைவாக தமிழர் கடவுள் - ஆரியக் கடவுளோடு இணைக்கப்பட்டார் என்பதையும் விளக்கிக் கூறுகின்றார்.

“திராவிட ஆரிய கலாச்சாரக் கலப்பு கி.மு. மூன்றாம் நூற்றாண்டில் (அசோக சக்கரவர்த்தி காலத்தில்) தொடங்கிற்று என்று கருதலாம். ஆரிய கலாசாரக் கலப்பு ஏற்படாத மிகப் பழைய காலத்தில், திராவிடராகிய தமிழர் வணங்கிய மருதநிலக் கடவுளாகிய வேந்தன் என்னும் தெய்வம் பல நூற்றாண்டுகளுக்குப் பிறகு ஏற்பட்ட திராவிட – ஆரியக் கலாசாரக் கலப்பின் காரணமாக ஆரியரின் இந்திரனோடு இணைக்கப்பட்டு, இந்திரன் என்னும் பெயரினால் வழங்கப்பட்டது, பிறகு, பைய பையப் பழைய வேந்தன் என்னும் தெய்வம் மறக்கப்பட்டு அந்த இடத்தில் புதிய இந்திரன் வழிபடப்பட்டான். சங்க காலத்துக்குப் பிறகு, சில நூற்றாண்டுகளுக்குப் பின்னர், இந்திரன் மறக்கப்பட்டு மறைந்து போனான்”[89] என்கிறார். இங்கு தமிழர்களின் சிறு தெய்வ வழிபாட்டு முறை ஆரியக் கலாசாரக் கலப்பால் பெருதெய்வ வழிப்பாட்டு முறையாக மாறியது என்பதைச் சுட்டிக்காட்டுகின்றார்.

திராவிட – ஆரியக் கலாசாரக் கலப்பானது தெய்வ வழிபாட்டிலே ஏற்பட்டது என்பதை, “திராவிட தெய்வ வழிபாட்டை ஆரியரும் ஆரிய தெய்வ வழிபாட்டைத்

திராவிடரும் பையப் பைய ஏற்றுக்கொண்டனர். திராவிடருடைய தெய்வங்களாகிய சிவன், மாயோன் முதலிய தெய்வங்களுடன் ஆரியருடைய உருத்திரனும், வி'ணுவும் இணைக்கப்பட்டதுபோல, வேந்தன் என்னும் திராவிடத் தெய்வத்துடன் இந்திரன் என்னும் ஆரியத் தெய்வம் இணைக்கப்பட்டது."[90] இவ்வாறு தமிழர் தெய்வங்கள் ஆரியர் தெய்வங்களாக ஆக்கப்பட்டதாகக் கூறுகிறார்.

தமிழர்களுடைய கடல் தெய்வமாகிய வருணனைப் பற்றித் தொல்காப்பியம் கூறுகிறது. ஆனால் அதனை, வைதீக ஆரியர் வழிபட்ட வருணன் அல்லன் என்பதையும், வடநாட்டில் வாழ்ந்திருந்த திராவிடரின் தெய்வமாகிய வருணனை ஆரியர் தங்களுடைய தெய்வமாக ஏற்றுக் கொண்டனர். அதனை இருக்கு வேதத்தில் பாடி வைத்தனர் என்றும் பின்வருமாறு கூறுகிறார்.

"அக்காலத்தில் வட இந்தியாவில் வாழ்ந்துவந்த திராவிட இனத்தாரருக்கு அசுரர் என்று பெயர் இருந்தது. அசுரர்களில் ஒரு பிரிவினர் நாகர் என்பவர். நாகர் ஆதிகாலத்தில் தமிழ் நாட்டிலும் இருந்ததைச் சங்க நூல்களிலிருந்து அறிகிறோம். அசுரரும் அவரில் ஒரு பிரிவினரான நாகரும் வருணன் என்னும் தெய்வத்தை வழிபட்டனர். வருணன் முக்கியமாகக் கடல் தெய்வமாகக் கருதப்பட்டான். திராவிடர் அக்காலத்தில் பெரிய கடல் வாணிகராக இருந்தனர். அவர்கள் வருணனை முக்கியமாக வணங்கினார்கள். வேதகாலத்து ஆரியர் வட இந்தியாவில் நுழைந்தபோது அவர்களுக்கும் அசுரர்களுக்கும் ஏற்பட்ட கலாசாரத் தொடர்பினால், ஆரியர் திராவிட வருணனைத் தம் தெய்வமாக ஏற்றுக் கொண்டனர். ஆனால், வருணன் வணக்கம் ஆதியில் ஆரியர்களுக்குரியதன்று. இவை எல்லாம் ஆராய்ச்சியாளர்கள் கூறுகிற செய்திகள்"[91] என்பர். இவ்வாறு கூறுவதன் மூலம் இந்திரன் வருணன் வழிபாட்டைக் கூறுகிற தொல்காப்பியம் ஆரிய – திராவிடர் கலாசாரக் கலப்பு ஏற்பட்ட பிற்காலத்தில் எழுதப்பட்ட நூல் இல்லை என்பதை சுட்டிக்காட்டுகின்றார்.

இவ்வாறு தொல்காப்பிய காலத்தை "தொல்காப்பியர் காலம் கி.மு.8-ஆம் நூற்றாண்டு அல்லது கி.மு.9-ஆம் நூற்றாண்டாக இருக்க வேண்டும் என்று எமது முடிவைக் கூறியுள்ளோம். இதுவே எமது உறுதியான முடிவு"[92] என்பர்.

### 4.8.4.தமிழரின் பண்பாடு

சங்க காலத்துத் தமிழ் மக்களின் வாழ்க்கையில் காதலையும், வீரத்தையும் முதன்மையாகக் கொண்டிருந்தார்கள் என்பதைக் கூறும் மயிலை சீனி. வேங்கடசாமி "சங்க

காலத்துத் தமிழ் மக்களின் வாழ்க்கையின் முதலிடம் பெற்றிருந்தவை வீரமும் காதலுமே. அக்காலத்து மக்கள் காதலையும் வீரத்தையும் போற்றினார்கள். ஆகவே, அக்காலத்துப் புலவர்கள் காதல் துறையைக் கூறுகின்ற அகப்பொருள் செய்யுட்களையும் போர்வீரருடைய வீரத்தைக் கூறும் புறப்பொருள் செய்யுட்களையும் அதிகமாகப் பாடினார்கள். சங்க காலத்திலே முதன்மையான இலக்கியங்கள் இவை இரண்டுமே"[93] என்கிறார்.

சங்கத் தமிழர்கள் வீரத்தைப் போற்றும் விதமாகப் போர்வீரன் போர்க்களத்தில் போர் செய்து உயிர்விட்டால், அவனது வீரத்தைப் போற்றி அவன் பெயரால் வீரக்கல்லை நட்டார்கள் என்ற செய்தியையும் குறிப்பிடுகிறார். நடுகல் நடும் வழக்கம் தொல்காப்பியர் காலம் தொடங்கி கி.பி.14-ஆம் நூற்றாண்டு வரையில் இருந்து வந்ததை இலக்கியச் சான்றுகளோடு விளக்கிச் செல்கின்றார். அதுமட்டுமல்லாமல் அதற்கான புறச்சான்றுகளையும் குறிப்பிடுகின்றார். இவ்வாறு கூறுவதன் மூலம் தமிழர்கள் மறவர் வழிவந்தவர்கள் என்பதையும் வீரமிக்க வரலாற்றுக்குச் சொந்தக்காரர்கள் என்பதையும் நிலைநிறுத்துகிறார்.

### 4.8.5.பழங்காலத் தமிழர் வாணிகம்

பழங்காலத் தமிழர் வாணிகம் குறித்து ஆராயும் மயிலை.சீனி வேங்கடசாமி தமிழரின் வாணிகம் அக்காலத்தில் எவ்வாறு நடந்தது என்பதைச் சங்க நூல்களிலிருந்து ஆராய்கிறார். சங்க காலத்தில் வாழ்ந்த தமிழர் அன்றாடத் தேவையான அரிசி, பருப்பு, உப்பு, பால், தயிர், மீன், இறைச்சி முதலான பொருள்களையும் காசு கொடுத்து வாங்காமல் பண்டமாற்றுச் செய்து கொண்டார்கள் என்பதை, "இடையன் பாலைக் கொடுத்து அதற்கீடாகத் தானியத்தை மாற்றிக்கொண்டதை முதுகூத்தனார் கூறுகிறார். 'பாலொடு வந்து கூழொடு பெயரும் யாடுடை இடையன்' என்று (குறுந்.221:3-4) அவர் கூறுகிறார் (கூழ் என்பது அரிசி, கேழ்வரகு, வரகு, தினை முதலான தானியங்கள்) ஆயர் மகளிர் தயிரைக் கடைந்து வெண்ணெய் எடுத்து நெய் காய்ச்சினார்கள். தயிரையும் மோரையும் மாற்றித் தானியத்தைப் பெற்று உணவைச் சமைத்து உண்டதைக் கடியலூர் உருத்திரங் கண்ணனார் கூறுகிறார்"[94]. இவ்வாறு தமிழரின் பண்டமாற்று முறையைச் சங்க இலக்கியப் பாடல்களைக் கொண்டு விளக்கிச் செல்கிறார்.

#### 4.8.6.பண்டமாற்று முறை

மேலும், "பண்டமாற்று வாணிகம் நடந்த அந்தக் காலத்தில் காசு வழங்கப்படவில்லை என்று கருதுவது கூடாது. அதே காலத்தில், செம்பு, வெள்ளி, பொன், காசுகளும் வழங்கி வந்தன. அந்தக் காசுகள் விலையுர்ந்த பொருள்களை வாங்குவதற்குப் பயன்படுத்தப்பட்டன. பண்டமாற்று நடந்ததைச் சங்க நூல்களிலிருந்து தெரிந்து கொள்வதைப் போலவே காசு வழங்கிவந்ததையும் சங்கச் செய்யுட்களிலிருந்து அறிகிறோம். அந்தக் காசுகள் நெல்லிக்காய் வடிவம் போல உருண்டு சிறிது தட்டையாக இருந்தன என்று அறிகிறோம். இதனை மதுரைக் கொல்லன் வெண்நாகனார் கூறுகிறார். பாலை நிலத்து வழியிலே இருந்த நெல்லி மரங்களிலிருந்து உதிர்ந்துள்ள நெல்லிக்காய்கள் பொற்காசுகள் உதிர்ந்து கிடப்பன என்று அவர் கூறுகிறார்"[95] என்பர். இவ்வாறு பண்டமாற்று வாணிகம் குறித்துப் பல சான்றுகளைச் சங்க இலக்கியப் பாடல்களிலிருந்து காட்டுகிறார்.

சங்க காலத்தில் தமிழ்நாட்டு வாணிகர் பல நாடுகளுக்குச் சென்று வாணிகம் செய்திருக்கிறார்கள். அது தரைவழியாகவும் கடல் வழியாகவும் நடந்திருக்கின்றன என்கிறார். தரை வழியாக வாணிகம் செய்த பெரு வணிகர்க்கு மாசாத்துவான் என்றும் கடல் வாணிகத்தை நடத்தின பெரிய வாணிகருக்கு மாநாய்க்கன் என்றும் பட்டப்பெயர் கூறுவர் என்று விளக்கம் தருகின்றார். இவ்வாறான வாணிகம் "கி.மு.8-ஆம் நூற்றாண்டுகளுக்கு முன்பே தமிழர் கடல் வாணிகம் செய்து கொண்டிருந்தார்கள்"[96] என்பர். இவ்வாறு சங்க கால சமுதாயத்தை வளமார்ந்த சமூகமாகவே படம் பிடித்துக் காட்டுகிறார்.

"அந்தக் காலத்தில் எல்லா நாடுகளிலும் எண்ணெய் விளக்கு உபயோகிக்கப்பட்டது. மண்ணால் செய்த அகல் விளக்கையும் இரும்பினால் செய்த விளக்கையும் (இரும்பு செய் விளக்கு, நெடுநல்வாடை,42) தமிழர் உபயோகித்தார்கள். யவன நாட்டிலிருந்து வந்த அன்னப்பறவையின் உருவமாக அமைக்கப்பட்ட 'ஓதிம' விளக்கையும் பெண் வடிவமாக அமைத்த 'பாவை' விளக்கையும் தமிழர் உபயோகித்தார்கள். இவ்விளக்கைச் செல்வர் வாங்கி உபயோகித்தார்கள்.

'யவனர் இயற்றிய வினைமாண் பாவை

கையேந் தையகல் நிறைய நெய்சொரிந்து

பரூஉத்தியி கொரீஇய குரூஉத்தலை நிமிர்எரி'

என்றும் (நெடுநல்வாடை 101:103) "பாவை விளக்கின் பரூஉச்சுடர் அவிழ" (முல்லைப்பாட்டு 85) பாவை விளக்குக் கூறப்படுகிறது. சிலப்பதிகாரமும் (5:154) மணிமேகலையும் (1:45) பாவை விளக்கைக் கூறுகின்றன. "யவனர் ஓதிம விளக்கை"ப் பெரும்பாணாற்றுப்படை கூறுகிறது (வரி 316 -317)"[97] இவ்வாறு சங்க கால சமூகத்தை அறிவார்ந்த சமூகமாகவும், வளமார்ந்த சமூகமாகவும் காட்டுகிறார்.

**4.8.7.நெசவுத் தொழில்**

மேலும், "தமிழ்நாட்டில் பருத்திப் பஞ்சு விளைந்தது. பருத்தியை நூல் நூற்று ஆடை நெய்தார்கள். ஆகவே, பருத்தி பயிரிடும் தொழிலும் பருத்தியிலிருந்து நூல் நூற்கும் தொழிலும் நூற்ற நூலைத் துணியாக நெய்யும் நெசவுத் தொழிலும் அதனை விற்கும் வாணிபத் தொழிலும் நடைபெற்றன. தமிழகத்தில் துணி விற்கப்பட்டதோடு மட்டுமல்லாமல் வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டது. சங்கச் செய்யுள்களிலிருந்து அக்காலத்துப் பருத்தி தொழிலைப் பற்றி அறிகிறோம்"[98] என்பர். இதற்கான சான்றுகளைச் சங்க இலக்கியப் பாடல்களைக் கொண்டு விளக்கிச் செல்கின்றார்.

"வில் அடித்துப் பஞ்சியிலிருந்து கொட்டை நீக்கப்பட்டது. கொட்டை நீக்கப்பட்ட பஞ்சு வெண்மேகம் போலக் காணப்பட்டது. 'வில்லெறி பஞ்சியின் வெண்மழை தவழும்'(அகம்.133:6) கொட்டை நீக்கிய பஞ்சை நூலாக நூற்கிறார்கள். அக்காலத்தில் கையினாலே நூல் நூற்கப்பட்டது. நூலை நூற்றவர்கள் மகளிர். ஆண் மகன் ஆதரவு இல்லாத பெண்டிர் பஞ்சை நூலாக நூற்றார்கள். அவர்கள் இரவிலும் சிறு விளக்கு வெளிச்சத்தில் நூல் நூற்றார்கள். 'ஆளில் பெண்டிர் தாளிற் செய்த நுணங்கு நுண்பனுவல்' (நற்.353:1-2) 'பருத்திப் பெண்டின் சிறு தீ விளக்கம்' (புறம்.326:5)"[99] இவ்வாறு விளக்கிச் செல்லும் மயிலை சீனி.வேங்கடசாமி பல வகையான ஆடை நெய்யப்பட்டதைக் கீழ் வரும் கூற்றில் விளக்குகிறார்.

"நூலினால் முரட்டுத் துணிகளும் மெல்லிய துணிகளும் நெய்யப்பட்டன. குளத்தில் படரும் பாசி போன்ற (ஊருண் கேணிப் பகட்டிலைப் பாசிவேர்) நூலினால் முரட்டுத் துணிகள் நெய்யப்பட்டன. நுண்மையான நூல்களினால் மெல்லிய துணிகள் நெய்யப்பட்டன. பால் ஆவி போன்ற மெல்லிய துணிகளும் பாம்புத்தோல் போன்ற

அழகான துணிகளும் காகிதம் போன்ற மெல்லிய துணிகளும் பல வகையாக நெய்யப்பட்டன. 'இழை மருங்கறியா நுழை நூற் கலிங்கம்' (மலை.156) 'பாம்பறித் தன்ன பொன்ன பூங் கலிங்கம்'(புறம்.397:15) 'பொதுவிரி பகன்றைப் புதுமலர் அன்ன அகன்றுமடி கலிங்கம்' (புறம்.393:17-18) 'நோக்கு நுழைகல்லா நுண்மைய பூங்கணிந்து அரவுரி யுன்ன அறுவை' (பொருந.82-83) 'காம்பு சொலித்தண்ண அறுவை' (சிறுபாண.236) இவ்வாறு பல தரமான ஆடைகள் நெய்யப்பட்டன"[100] என்கிறார். இவ்வாறு கூறுவதன் மூலம் அக்காலத்தமிழ் மக்கள் நாகரிகத்தோடு வாழ்ந்தார்கள் என்பதை உணர்த்துகின்றார்.

### 4.8.8.அணிகலன்கள்

சங்க காலத்தில் பெண்கள் வளையல்கள் அணிந்திருந்தார்கள் அரண்மனையில் வாழ்ந்த அரச குமாரிகள் முதல் குடில்களில் வாழ்ந்த ஏழை மக்கள் வரையில் எல்லோரும் சங்கு வளைகளை அணிந்திருக்கிறார்கள். இதனைப் பல சான்றுகளோடு விளக்கிச் செல்கின்றார். "இன்றைக்கு 3000 ஆண்டுகளுக்கு முன்னே சிந்து வெளியில் இருந்த ஹரப்பா நகரத்துத் திராவிட நாகரிக மகளிரும் சங்கு வளைகளை அணிந்திருந்தனர் என்பது அங்கு அகழ்ந்தெடுக்கப்பட்ட மனித எலும்புக் கூடுகளுடன் சங்கு வளைகளும் இருந்ததனால் அறிகிறோம். கொற்கை, காவிரி பூம்பட்டினம் உறையூர் முதலான ஊர்களில் நிலத்தை அகழ்ந்தெடுத்த போது அங்கிருந்து கிடைத்த பழம் பொருள்களுடன் உடைந்து போன சங்கு வளையல் துண்டுகளும் கிடைத்தன. இதனால் சங்கச் செய்யுட்களில் கூறப்படுகிற அக்காலத்து மகளிர் சங்கு வளைகளை அணிந்திருந்தனர் என்னும் செய்தி வலியுறுகின்றது"[101] என்பர். இவ்வாறு சங்க காலத்து மக்களின் அகவாழ்வையும் புறவாழ்வையும் விளக்குகிறார். இவ்வாறான செய்திகள் திராவிடக் கருத்தியலுக்கு வலுச்சேரக்கின்றனவாக அமைகின்றன.

### 4.8.9.மூவேந்தர்களின் சிறப்புகள்

'சேர, சோழ, பாண்டியன்' என்னும் இவருடைய நூலானது, சங்க கால சேர, சோழ, பாண்டிய மன்னர்களின் அரசியல், அரசுரிமை, போர்முறை, நாடு, எல்லைகள் ஆகியவற்றை ஆராய்கின்ற நூலாகவும் மூவேந்தர்களின் பெருமையைப் பேசுகின்ற பண்டைத் தமிழரின் வரலாற்று நூலாகவும் இருக்கின்றது. இந்நூலில் சேர, சோழ, பாண்டிய மன்னர்களைப் பற்றிய வரலாற்றைச் சங்க இலக்கியம் அயல்நாட்டுக் குறிப்புகள், கல்வெட்டுகள், அகழ்வாராய்ச்சிகள், தொல்கதைகள் ஆகியவைகள் கொண்டு

ஆராய்ந்திருக்கிறார். இதை வெறும் மன்னர்களின் வரலாறாக மட்டுமில்லாமல் அம்மன்னர்கள் அரசாண்ட பகுதிகளின் நிலவியல் அமைப்பு, எல்லைகள், முக்கிய ஆறுகள், பட்டினங்கள், மக்கள் இனங்கள், அரசர்களின் வழிமுறைகள், போர்கள், ஆட்சிமுறை முதலானவற்றை ஆராய்ந்திருக்கிறார்.

சேர மன்னர்களின் ஒருவரான பல்யானைக் குட்டுவனின் சிறப்பைப் பற்றிக் கூறும் போது, "சினம், காமம், கழிகண்ணோட்டம், அச்சம், பொய்ச்சொல், அன்புமிகவுடைமை, தெறல், கடுமை முதலான தீய பண்புகள் அறநெறியில் செல்லும் ஆட்சிக்குத் தடையாய் அமைந்து விடும் என்னும் உண்மையை உணர்ந்து அந்தத் தீய பண்புகளை விட்டு நல்லன பல செய்து இவனது முன்னோர் வாழ்ந்து வந்தனர். நாட்டு மக்கள் மாசற்ற தெளிவான அறிவினை உடையவர்கள். பிறரை நலியாதவர்கள். வேற்றவர்கள் பொருளைப் பறிக்க விரும்பாதவர்கள். செந்நெறியில் நடப்பவர்கள். தம்மை விரும்பி வாழும் துணைவரைப் பிரியாதவர்கள். பிணியின்றி வாழ்ந்தமையால் மூத்துப் பின்னர்தான் இறந்தனர். இவ்வாறு குடிமக்கள் வாழும்படி பல்யானைச் செல்கெழு குட்டுவனது முன்னோர் அரசாட்சி செலுத்தினார்களாம். இத்தகைய உரம் பெற்ற முன்னோரின் வழிவந்த அவர்களைக் காட்டிலும் மேம்பட்டு உயர்ந்து விளங்கினானாம் பல்யானைக் குட்டுவன் (பதிற்.22:10-11)"[102] என்பார்.

சோழ அரசர்களின் சிறப்பைப் பற்றிக் குறிப்பிடும்போது " 'வளவன்' என்னும் பட்டப்பெயர் நிலவளமும் நீர்வளமும் மிக்க நாட்டின் தலைவர் எனும் காரணத்தால் வழங்கிய பெயராகலாம். தமிழ்நாட்டினை வளமிக்க நாடாகச் செய்தவன் கரிகால் பெருவளத்தான். 'காடு கெடுத்து நாடாக்கிக் குளந்தொட்டு வளம் பெருக்கிய' காரணத்தாலேயே கரிகாலனைப் 'பெருவளத்தான்' என்று புலவர்கள் போற்றினர். கரிகாலனுக்குப் பிறகு அவனுடைய குடியில் வந்த சோழ அரசர்களுக்குரிய சிறப்புப் பெயராக 'வளவன்' என்னும் பெயர் வழங்கலாயிற்று. திருமாவளவன், மாவளத்தான் கிள்ளி வளவன் என்னும் பெயருடைய சோழ அரசர்கள் கரிகாலனுக்குப் பிறகு சிறப்புற்று விளங்கியவராவர்-"[103] இவ்வாறு சங்ககால வேந்தர்கள் சிறப்பான ஆட்சியைச் செலுத்தினார்கள் என்ற கருத்தை முன்வைக்கின்றார்.

மேலும், "சங்க காலச் சோழ வேந்தரின் வரலாற்றை வரைவதற்குச் சங்க இலக்கியப் பாடல்களே பேருதவியாக உள்ளன. ஆனால், அவற்றில் ஒரு குறையுண்டு. அரசர்களின் ஆட்சிக் காலத்தைப் பற்றியோ எந்த ஆண்டில் யார் ஆட்சிக்கு வந்தனர்

என்பதைப் பற்றியோ அவை யாதும் கூறுவது இல்லை. கால வரன்முறை வரலாற்றின் கண்ணாகப் போற்றப்படுகிறது. காலத்தை வரையறுக்க நமக்கு அகச்சான்றுகள் கிடைக்கவில்லை. எனினும், அப்பாடல்களில் காணப்படும் சிற்சில குறிப்புகளையும் அம்மன்னர்களைப் பாடிய புலவர்களைச் சில தலைமுறையினராக வகைப்படுத்துவதற்குரிய செய்திகளையும் புறச்சான்றுகள் சிலவற்றையும் கொண்டு, சங்க காலச் சோழ வேந்தர்களை ஒரு வகையாகக் 'காலத்தால் முற்பட்டவர் பிற்பட்டவர் யாவர்' என்பதைத் துணிந்து அம்முறையில் அவர்களுடைய வரலாற்றை வரைந்துள்ளோம்”[104] என்பர். இவ்வாறான வரலாற்றைக் கட்டமைப்பதன் மூலம் தங்களின் இருப்பை உறுதிப்படுத்துவதற்கும் தம்முடைய இருப்பின் தேவையை நியாயப்படுத்துவதற்கும் தம்மை உயர்த்திப்பிடிப்பதற்கும் பயன்பட்டுள்ளது என்பது தெளிவாகின்றது.

சோழர் குடியின் தொன்மையைப் பற்றி கூறும்போது “பன்னெடுங் காலமாகத் தமிழகத்தை மூவேந்தர்கள் ஆட்சி செய்து வந்தனர். 'வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பின்' என்று தமிழகத்தைத் தொல்காப்பியர் சுட்டியுள்ளார். (தொல்.பொருள்.செய்.75:3) மற்றும் சோழர் குடியின் அடையாளச் சின்னமாக அத்திப் பூமாலையை (தொல்.பொருள்.புறத்.5:4) அவர் குறிப்பிட்டுள்ளார். தமிழ் இலக்கியத்துள் காலத்தால் முந்தியது தொல்காப்பியம். சற்றேறக்குறைய கி.மு.நான்காம் நூற்றாண்டு அளவில் இந்நூல் இயற்றப்பட்டிருக்கலாம் என்று அறிஞர்கள் கருதுகின்றனர். இந்த இலக்கியச் சான்றுகளால் சோழர்குடி மிகவும் தொன்மையானது என்பது புலனாகிறது. நெடுங்காலமாக ஆட்சி செய்து வந்த அரசகுடி எனும் பொருளிலேயே 'படைப்புக் காலந்தொட்டு' இந்நாட்டை ஆண்டு வரும் குடி என்று நம் முன்னோர்கள் போற்றியுள்ளனர் (குறுந்.955 பரிமேல.உரை)”[105] என்பார். இலக்கிய சான்றுகளை முன்வைத்து சோழர்குடி மிகவும் தொன்மையானது என்று முடிவு செய்கிறார்.

அகச்சான்றுகளின் அடிப்படையில் மட்டுமல்லாது புறச்சான்றுகளின் அடிப்படையிலும் சேர,சோழ, பாண்டிய மன்னர்களின் காலத்தைத் தொன்மையானது என்று முடிவு செய்கிறார். “மௌரியப் பேரரசன் அசோகனுடைய (கி.மு.272-232) கல்வெட்டுகளில் தமிழக வேந்தர்களைப் பற்றிய குறிப்புகள் உள்ளன. அவற்றுள் சோழ அரசமரபே முதலாவதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. மௌரியப் பேரரசனுடைய ஆதிக்கத்திற்குட்படாது, தன்னுரிமைத் தனியரசுகளாகச் சோழ, பாண்டிய, சேர அரசுகள் விளங்கியமையும் தெரிய வருகிறது. இக்குறிப்புகளால் கி.மு.மூன்றாம் நூற்றாண்டு அளவிலேயே சோழப் பெருவேந்தரின் குடி,

வட இந்திய மக்களின் கருத்தைக் கவரத்தக்க நிலையில் பெருவாழ்வு பெற்றிருந்தமை தெளிவாகத் தோன்றுகிறது."[106] எனச் சோழ மன்னனின் காலத்தை கி.மு.மூன்றாம் நூற்றாண்டு எனக் கல்வெட்டுச் சான்றுகளின் அடிப்படையில் குறிப்பிடுகின்றார்.

"சோழ அரசர்களுக்கு நேர்மாறாகச் சேர அரசர் தங்களுக்குள் ஒற்றுமையாக இருந்தனர். சேர அரசர்களில் தாயாதி அரசர்கள் கூடச் சண்டையிட்டுக் கொள்ளவில்லை. சேர அரசர் தங்களுக்குள் போர் செய்து கொண்டதைச் சங்க நூல்களில் காணக் கிடைக்கவில்லை. சேர அரசர் ஒற்றுமையாக இருந்த காரணத்தினால்தான் கொங்கு நாட்டையும் துளு நாட்டையும் கைப்பற்ற முடிந்தது"[107] என்பர்.

மயிலை சீனி.வேங்கடசாமி, தமது சேரன் செங்குட்டுவன் (1966) என்ற நூலில் சேர மன்னர்களின் வரலாற்றை ஆராய்கிறார். பதிற்றுப்பத்தை அடிப்படையாகக் கொண்டு சேரர் பரம்பரையைப் பட்டியலிடுகிறார். சேரன் செங்குட்டுவனின் காலத்தைக் கி.பி.130 முதல் 185 வரை என அறுதியிட்டு அந்த அடிப்படையில் மற்ற சேரமன்னர்களின் காலத்தை முடிவு செய்கின்றார். இவ்வாறு திராவிடக் கருத்தியலுக்கு ஆதரவாகச் செயல்பட்டுள்ளதை அறியமுடிகின்றது.

### 4.9.மறைமலையடிகள் - சங்க இலக்கிய வாசிப்பு

தனித்தமிழில் பேசவேண்டும் எழுத வேண்டும் என இயக்கம் தொடங்கியவரான மறைமலையடிகள் தாம் பதிப்பித்த நூல்களைத் தனித்தமிழில் வெளியிடும் முயற்சியில் ஈடுபட்டார். பட்டினப்பாலை ஆராய்ச்சி உரை (1957) முற்காலப் பிற்காலத் தமிழ்ப் புலவோர் (1957) முல்லைப்பாட்டு ஆராய்ச்சி (1958) போன்ற நூல்கள் குறிப்பிடத்தக்கனவாகும். தனித்தமிழில் எழுத வேண்டும் என்ற இவருடைய நோக்கம் வெளிப்படுவதைப் பின்வரும் கூற்றால் அறிந்து கொள்ள முடிகிறது.

"நம்மனோயிற் கற்றவராயிருப்போர் ஆரியம், ஆங்கிலம் முதலான பிற மொழிச் சொற்களைக் கலவாமற் தனித்தமிழிற் பேசவும் எழுதவும் கடைப்பிடியாய்ப் பழகிவரல் வேண்டும். இதனை முன் நடந்து காட்டும் பொருட்டு, இதற்கு முன் யாம் எழுதிய நூல்களிற் புகுந்த சிற்சில அயன் மொழிச் சொற்களையும் அந்நூல்களைத் திரும்பப் பதிப்பிட்டு வரும் இப்போது முழுதுங்களைந்து விட்டு அவை நின்ற இடத்தில் தூய தமிழ்ச்சொற்களையே நிரப்பி வருகின்றோம்"[108] இப்படித் தமிழ் மொழியில் எழுத வேண்டும்,

பேச வேண்டும் அதற்கேற்ப விளக்கம் கொடுத்தல் என்ற மறுமலர்ச்சி இயக்கம் செயல்பட்டுள்ளதை அறிய முடிகிறது.

### 4.10.தேவநேயப் பாவாணர் - சங்க இலக்கிய வாசிப்பு

இந்தப் போக்கில் தொடர்ந்து நூல்களை வெளியிட்டவர் தேவநேயப்பாவாணர். திராவிடத்தாய் (1944) பழந்தமிழாட்சி (1952) தமிழ் வரலாறு (1967) பண்டைத் தமிழர் நாகரிகமும் பண்பாடும் (1966) தமிழக வரலாறு முதலான நூல்களின் மூலம் மொழித்தூய்மை பேணுதல் என்ற செயலைத் தொடர்ந்து மேற்கொண்டனர். ஒரு சொல்லுக்கான வேரைத் தேடி அதனைத் தமிழ்ச் சொல் என்று நிறுவுவது இவருடைய போக்காகும். தமிழ் மேம்பாட்டுக் கொள்கையுடையவரான தேவநேயப்பாவாணர், இந்தியா முழுவதும் ஒரு காலத்தில் திராவிட மொழியே தழைத்திருந்தது என்றும் அது ஆரியரின் வருகையினால் மாற்றமடைந்தது என்பதைப் பின்வருமாறு எழுதுகிறார்.

“இன்றும் தென்னாட்டில் ஓரளவு செவ்வையாய்ப் பேசப்படும் தமிழ், வடக்கு நோக்கிச் சிறிது சிறிதாய்த் திரிந்து, முதலாவது கொடுந்தமிழாயினும் பின்பு திராவிடமாயும் திரிவதையும் திராவிடமும் ஆரியக்கலப்பால் காலாரியமாய் மாறுவதையும் அதற்கப்பால் முறையே அரையாரிய மொழிகளும் முழு ஆரிய மொழிகளும் வழங்குவதையும் ஆரியர் பழங்குடி சொற்களையெல்லாம் அகற்றிவிட்டு, அவற்றிடத்தில் ஆரியச் சொற்களையே வழங்குவதில் கண்ணும் கருத்துமாயிருந்து இக்கேட்டுத்தொழிலை வடக்கிருந்து தெற்கோடி வரை செய்து வருவதையும் நோக்கின், முதற் காலத்தில் ஒரு மொழியே நாவலந் தேய முழுதும் தென்கோடியிலிருந்து வடகோடி நோக்கிச் சிறிது சிறிதாய்த் திரிந்து வழங்கியதென்பதையும், ஆரியக் கலப்பு இல்லாவிட்டால் இன்றும் வடநாட்டில் திராவிடமே வழங்கும் என்பதையும் உய்த்துணரலாம். ஒரு மொழியே சிறிது சிறிதாய்ப் பெயர்ந்து வழங்கியமையாலேயே, வடநாடுகளை வேற்றுமொழி நாடெண்ணாது ‘மொழிபெயர் தேய்’ என்றனர் முன்னோர். “மொழிப் பெயர் தேஎந்தராயினும்” (குறுந்.11)”[109] என்று எழுதுகிறார். இங்கே அவருடைய தமிழ் மேம்பாட்டுக் கொள்கை விதந்து முன்மொழியப்படுவதைக் காணமுடிகிறது.

வ.சுப.மாணிக்கத்தின் தமிழ்க்காதல், ந.சுப்புரெட்டியாரின் காதல் ஓவியங்கள், ஔவை சு.துரைசாமிப்பிள்ளையின் சேர வரலாறு (1957), ந.மு.வேங்கடசாமி நாட்டாரின்

நக்கீரர் (1919), கபிலர் (1921), சோழர் சரித்திரம் (1923) முதலானவை தொடர்ச்சியாகத் திராவிட இயக்கத்தின் சிந்தனையின் விளைவாக வெளிவந்த நூல்கள் ஆகும்.

தமிழ் மறுமலர்ச்சி இயக்கத்தினரின் வருகையால் வேகமாக வெளிவரத் தொடங்கிய சங்க இலக்கிய ஆய்வுகள் இன்று வரையில் தொடர்ந்து வெளிவந்து கொண்டிருக்கின்றன. இதன் காரணமாக சங்க இலக்கியம் தொடர்ந்து மறுவாசிப்புக்கு உள்ளாக்கப்படுகின்றது.

# தொகுப்புரை

- திராவிட இயக்கத்திற்கு ஆதரவான கருத்துடைய ஆய்வாளர்கள் சங்க இலக்கிய ஆய்வுகளில் ஈடுபட்டனர். அவர்களது ஆய்வுகள் திராவிட இயக்கக் கருத்தியல்களுக்கு வளம் சேர்ப்பதாக அமைந்தன.
- சி.இலக்குவனார் சங்க இலக்கியங்களைப் பற்றிக் குறிப்பிடத்தக்க ஆய்வுகளைச் செய்தவர் ஆவார். சங்கம் பற்றி ஐயத்தோடு எழுப்பப்படும் கேள்விகளை எதிர்கொள்ளும் அவர், சங்கம் பற்றிய செய்திகள் நம்புதற்குரியன என்கிறார்.
- சங்க இலக்கியத்தில் காணப்படும் ஊர்ப்பெயர்கள் இன்றும் வழக்கில் உள்ளன என்று வாதிடும் சி.இலக்குவனார், பழந்தமிழர் வாழ்வு சிறப்பாக இருந்தது என்றும் ஆரியம் உட்புகுவதற்கு முன்பு தமிழரின் வாழ்வு செம்மையுற்றிருந்தது என்றும் கருதுகிறார்.
- பண்டைத் தமிழரின் கடவுள் நம்பிக்கை, சிறு தெய்வ வழிபாட்டு முறை என்றும் அது வடமொழிப் புராணங்களாலும், சமய வெறியினாலும் பெருந்தெய்வ வழிபாட்டு முறையாக மாறியது என்றும் சி.இலக்குவனார் கருத்துரைக்கிறார்.
- பண்டைத் தமிழர்களுக்குச் சமய அடையாளங்களும் வழிபாட்டு முறைகளும் தனித்துவம் உடையனவாக இருந்தன என்றும் ஆரியர்களின் வருகையாலேயே இம்முறைகள் மாற்றமடைந்தன என்று சி.இலக்குவனார் கருதுகிறார். இவ்வாறு சங்க இலக்கியம் முன்வைக்கும் தமிழ்ச் சமூகம் ஆரியக் கலப்பற்ற உயரிய சமூகமாக, தனது தனித்தன்மையைத் தக்கவைத்துக் கொண்டிருந்த சமூகமாக இருந்தது என்று நிறுவ முயலுகிறார் எனலாம்.
- திராவிட சித்தாந்தத்தின் தனித்தன்மையை நிறுவுவதற்குப் பல்துறை பன்மொழி அறிவு தேவையாக இருந்தது என்றும் அத்தேவையினை மிகச்சரியாக நிறைவேற்றியவர் பன்மொழிப்புலவர் கா.அப்பாத்துரையார் என்றும் ஆய்வாளர்கள் கருதுகின்றனர்.
- கா.அப்பாத்துரையார் தமிழின் மூலத்தை ஆராய்ந்தார். அவர் துருவித் துருவித் தமிழினத்தின் வரலாற்றை ஆராய்ந்தார். அவ்வாறு ஆராய்ந்தது தமிழ் இனத்துக்கும் மற்ற இனங்களுக்கும் பகை மூட்ட அல்ல; தோழமையை ஏற்படுத்தவே என்று அண்ணாதுரை பாராட்டியுள்ளார்.

- கடவுள் நம்பிக்கையும் சைவ சமய ஈடுபாடும் கொண்டவராக அப்பாத்துரையார் இருந்தாரெனினும் திராவிட தேசியக் கண்ணோட்டம் கொண்டவராகவே விளங்கினார். திராவிடர் கழகத்தின் பொதுச்செயலாளராக அப்பாத்துரையாரை அமர்த்த வேண்டும் என்று பாவேந்தர் பாரதிதாசன் விரும்பினார். அந்த அளவுக்குத் திராவிட இயக்கத்தின் செயல்பாட்டாளராகவும் கருத்துநிலை பரப்புபவராகவும் அப்பாத்துரையார் அறியப்பட்டார் எனலாம்.
- தென்னாட்டுப் போர்க்களங்கள் என்னும் நூலின் வழியாகப் பண்டைத் தமிழரின் போர்ச்சிறப்புகளைப் பட்டியலிட்டுக் காட்டினார் அப்பாத்துரையார். பண்டைத் தமிழ்ச் சமூகத்தையும் சமகாலத்தையும் ஒப்பிட்டி இன்றைய தமிழர் மரபு அயல் மொழியினாலும், ஆரியர்களாலும் அடிமைப்பட்டுக் கிடக்கிறது என்று கருத்துரைக்கிறார் கா.அப்பாத்துரையார்.
- ஆரிய நாகரிகத்தைவிடத் திராவிட நாகரிகம் பழமையானது என்பதற்குப் பல்வேறு சான்றுகளைக் காட்டி வாதிடுகிறார் கா.அப்பாத்துரையார். பண்டைத் தமிழர்களின் வாணிபச் சிறப்பையும் அவர் எடுத்துரைக்கிறார்.
- கா.அப்பாத்துரையார் எழுதிய நூல்கள் சங்க இலக்கியங்களை அடிப்படையாகக் கொண்டு, தமிழ்நாட்டின் வரலாற்றுப் பகுதிகளை வெளிக்கொணருவனவாக அமைந்தன.
- மு.வரதராசனாரின் ஆய்வுகள், திராவிடக் கருத்தியல்களை ஒட்டியதாகவும் திராவிட முன்னேற்றக் கழகத்தினர் மேடைகளில் சங்க இலக்கியத்தைப் பயன்படுத்த வாய்ப்பேற்படுத்திக் கொடுப்பனவாகவும் அமைந்தன.
- அண்ணாதுரை விரும்பிய சங்க இலக்கியங்களைக் குறித்த எளிய, சிறு சிறு வெளியீடுகள் என்ற கருத்தைச் செயல்வடிவுக்குக் கொண்டு வந்தவர் மு.வரதராசனார்.
- பாமரரும் சங்க இலக்கியத்தைப் பயில வேண்டும் என்ற நோக்கத்துடன் எளிய நடையில் சங்க இலக்கியங்களைக் குறித்த நூல்களைப் படைத்தார் மு.வரதராசனார்.
- மு.வரதராசனார் சங்க இலக்கியங்களைக் குறித்து உருவாக்கிய சித்திரங்களில் அக்காலகட்டத்து வாழ்க்கையைப் பற்றிய பெருமித உணர்வை வெளிப்படுத்துகிறார். மு.வ. காட்டிய சங்கச் சித்திரங்களைத் திராவிட இயக்கப் பேச்சாளர்கள் அப்படியே மேடையில் வழிமொழிந்தார்கள்.

- தமிழ் மறுமலர்ச்சி இயக்கத்தினரின் மற்றொரு போக்கு, தமிழர் பெருமை பேசும் ஆங்கில நூல்களைத் தமிழில் மொழிபெயர்த்து வெளியிடுதலாகும். பி.டி.சீனிவாச அய்யங்கார், வி.ஆர்.இராமச்சந்திர தீட்சிதர் ஆகியோர் எழுதிய ஆங்கில நூல்களைத் தமிழில் மொழி பெயர்த்துப் பரப்பியவர் கா.கோவிந்தன் ஆவார்.
- தமிழரின் பெருமை பேசும் நூல்களிலும் முரண்பட்ட கருத்துக்கள் இருப்பின் தவறாது மறுப்பை மிகவும் விளக்கமாக எழுதிக் குறிப்பிடும் முறையைக் கா.கோவிந்தன் பின்பற்றியுள்ளார்.
- பி.டி.சீனிவாச அய்யங்காரின் கருத்துக்களும் கா.கோவிந்தனின் கருத்துக்களும் சங்க இலக்கியம் குறித்த ஆராய்ச்சியில் இரு வேறு துருவங்கள் என்பதை அடையாளப்படுத்துகின்றன.
- தமிழ்ப்புலவர்கள், அரசர்கள் காலம் பற்றிய பின்னணியுடன் அவர்களின் வரலாற்றைச் சங்க இலக்கியத்தை அடிப்படையாகக் கொண்டு தொகுக்கும் பணியைச் செய்தார் கா.கோவிந்தன். அந்த அடிப்படையில் சங்கப் புலவர் வரிசை என்னும் ஆறு தொகுதிகளையும் சங்க கால அரசர் வரிசை என்னும் இரு பகுதிகளையும் வெளியிட்டார்.
- லெ.ப.கரு.இராமநாதன் செட்டியார் சங்க காலத்தின் தொன்மையையும் பண்டைத் தமிழர் பண்பாடு, வாணிகம், போர்முறை, தொழில், கலைகள் போன்றவற்றை வியந்து எழுதுகிறார்.
- சங்க காலம் முழுமைக்கும் செய்யுள்களில் ஒருவிதமான பொதுத் தன்மை இருக்கிறது என்றும் அவை நெடுங்காலம் மாறாமல் நிலைத்திருந்தன என்றும் லெ.ப.கரு.இராமநாதன் செட்டியார் கருதுகின்றார்.
- திராவிட இயக்கத்தாரின் கம்பராமாய எதிர்ப்பு ஆகியவற்றில் முரண்பட்ட நாவலர் ச.சோமசுந்தர பாரதியார், திராவிடக் கருத்தியலை உள்வாங்கிக் கொண்டு பல்வேறு நூல்களை எழுதியவராவார்.
- ஆரியர்களின் தொன்மையான பேரரசே அசோகன் ஆட்சிதான் என்றும் அதற்குப் பன்னெடுங் காலத்துக்கு முன்பே தமிழர்கள் சிறப்புற ஆட்சி நடத்தினர் என்றும் ச.சோ.பாரதியார் கருத்துரைக்கின்றார். ஆரியர்கள் வருகைக்கு முன்னரேயே தமிழர்கள் பலவகைச் சிறப்புக்களோடு வாழ்ந்தவர்கள் என்ற கருத்துருவத்தை முன்வைத்துப் பல கட்டுரைகளைப் படைத்துள்ளார்.

- ந.சி.கந்தையா பிள்ளை, திராவிட இயக்கச் சிந்தனையோடு இலக்கியங்களை ஆராய்ந்தவர் ஆவார். தமிழர்களே உலக நாகரிகத்திற்கு வழிகாட்டிகளாக இருந்தவர்கள் என்பது ந.சி.க.வின் கருதுகோள் ஆகும்.
- இந்திய நாகரிகத்தைப் பற்றி ஆராய்வோர் வடக்கிலிருந்து ஆராய்வதை விடுத்துத் தென் பகுதியில் இருந்து தொடங்க வேண்டும் என்று கருத்துரைக்கிறார் ந.சி.கந்தையா பிள்ளை.
- வடமொழியின் துணையின்றித் தமிழ் தனித்து இயங்க வல்லது என்ற கால்டுவெல்லின் கருத்தினைச் சங்க இலக்கியத்தின் துணைகொண்டு நிறுவுகிறார் ந.சி.க.
- திராவிட இயக்கத் தலைவர்களுடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்த மயிலை சீனி.வேங்கடசாமி, வைதீக மரபுக்கு எதிரான பிற சமயங்கள் தமிழுக்கு ஆற்றிய பணிகளைத் தமிழிலக்கிய வரலாற்றில் பதிவு செய்தவர்.
- தமிழ்மொழி குறைந்தது மூவாயிரம் ஆண்டுப் பழமையுடையது என்று கூறும் மயிலை சீனி.வேங்கடசாமி, தமிழ்ச் சொற்கள் பல, வெவ்வேறு காலத்தில் வெவ்வேறு பொருளில் வழங்கப்பட்டன என்ற மரபை அறிந்து பொருள் கொள்ள வேண்டும் என்கிறார்.
- மறைமலையடிகள், தேவநேயப் பாவாணர் வ.சுப.மாணிக்கனார் போன்றவர்கள் திராவிடக் கருத்துநிலையை உள்வாங்கிக் கொண்டு சங்க இலக்கியம் குறித்து எழுதியவர்கள்.

**சான்றெண் விளக்கம்**

1. டாக்டர் சி.இலக்குவனார், பழந்தமிழ், ப.27
2. மேலது, ப.28
3. மேலது, ப.37
4. மேலது, ப.38
5. மேலது, ப.39
6. மேலது, ப.57
7. மேலது, ப.57
8. டாக்டர் சி.இலக்குவனார், இலக்கியம் கூறும் தமிழர் வாழ்வியல் ப.4
9. மேலது, ப.22
10. மேலது, பக்.24,25
11. மேலது, பக்.32,33
12. மேலது, பக்.33,34
13. மேலது, பக்.64,65
14. கு.வெ.பாலசுப்பிரமணியன், இந்திய இலக்கியச் சிற்பிகள் ப.13
15. மேற்கோள்: மேலது, ப.13
16. கு.வெ.பாலசுப்பிரமணியன், மு.நூ, ப.18
17. மேலது, ப.19
18. மேலது, ப.19
19. கா.அப்பாத்துரை, தென்னாட்டுப் போர்களங்கள், பக். XI, XII
20. மேலது, ப.32
21. மேலது, ப.34
22. மேலது, ப.37
23. மேலது, ப.40
24. மேலது, ப.78
25. மேலது, ப.80
26. மேலது, ப.117
27. மேற்கோள், இரா.நாராயணன், சங்க இலக்கிய அரசியல் பக்.109,110
28. மேலது, ப.109
29. கா.அப்பாத்துரை, தென்னாட்டுப் போர்களங்கள், ப. XI,

30. கா.அப்பாத்துரை, குமரிக்கண்டம் அல்லது கடல்கொண்ட தென்னாடு, ப.7
31. மேலது, ப.11
32. மேலது, ப.17
33. கா.அப்பாத்துரை, கொங்குத் தமிழக வரலாறு பக். 7, 8
34. மேலது, ப.11
35. கா.அப்பாத்துரை, சரித்திரம் பேசுகிறது, ப.42
36. மு.வரதராசன், நெடுந்தொகை விருந்து, ப.3
37. மேலது, ப.3
38. மு.வரதராசன், தமிழ் நெஞ்சம், பக்.11,12
39. மேலது, ப.13,14
40. மு.வரதராசன், புலவர் கண்ணீர், ப.59
41. மேலது, ப.61
42. ம.ரா.போ.குருசாமி, சங்க காலம், மு.வரதராசனார் முன்னுரை ப.இ
43. கா.கோவிந்தன், தமிழர் வரலாறு தமிழாக்கமும் திறனாய்வும், ப.50
44. மேலது, பக்.56,57
45. மேலது, ப.58
46. மேலது, ப.163
47. மேலது, ப.171
48. மேலது, பக்.171,172
49. மேலது, பக்.174,175
50. மேலது, பக்.180,181
51. மேலது, ப.396
52. மேலது, ப.396
53. மேலது, ப.397
54. இரா.நாராயணன், சங்க இலக்கிய அரசியல், ப.117
55. கா.கோவிந்தன், திருமாவளவள், ப.125
56. இரா.நாராயணன், மு.நூ, ப.117
57. லெ.ப.கரு.இராமநாத செட்டியார், சங்க காலத் தமிழர் வாழ்வு, பக்.30,31
58. மேலது, பக்.40,41
59. மேலது, ப.43
60. மேலது, ப.43

61. மேலது, பக்.85,86
62. மேலது, பக்.86,87
63. லெ.ப.கரு.இராமநாத செட்டியார், பத்துபாட்டு வளம், ப.15
64. மேலது, ப.15
65. மேலது, பக்.99,100
66. ச.சோமசுந்தர பாரதியார், பழந்தமிழ் நாடு, பக்.77,78
67. மேலது, ப.79
68. மேலது, ப.79
69. மேலது, பக்.80,81
70. மேலது, பக்.114,115
71. ந.சி.கந்தையாபிள்ளை, முச்சங்கம், ப.2
72. ந.சி.கந்தையாபிள்ளை, தமிழ் இந்தியா, ப.6
73. ந.சி.கந்தையாபிள்ளை, முச்சங்கம், ப.31
74. மேலது, ப.31
75. மேலது, ப.33
76. ந.சி.கந்தையாபிள்ளை, வரலாற்றுக் காலத்துக்கு முற்பட்ட பழந்தமிழர், ப.63
77. ந.சி.கந்தையாபிள்ளை, முச்சங்கம், பக்.35,36
78. ந.சி.கந்தையாபிள்ளை, தமிழ் இந்தியா, ப.256
79. மேலது, ப.42
80. கி.பார்த்திபராஜா, இருபதாம் நூற்றாண்டு தமிழியல் ஆய்வு வரலாறு, ப.27.
81. மேலது .ப.17
82. மயிலை சீனி.வேங்கடசாமி, சங்க காலத் தமிழர் வரலாற்றில் சில செய்திகள், ப.5
83. மேலது. ப.12.
84. மயிலை சீனி. வேங்கடசாமி, கொங்கு நாட்டு வரலாறு, ப.3
85. மேலது. ப.67
86. மேலது. ப.67
87. மேலது. ப.68
88. மேலது. ப.71
89. மேலது. ப.73
90. மேலது. ப.74
91. மேலது. ப.77

92. மேலது. ப.84

93. மேலது. ப.108

94. மயிலை சீனி.வேங்கடசாமி, பழங்காலத் தமிழர் வாணிகம், பக்.13-14

95. மேலது ப.21

96. மேலது. ப.36

97. மேலது. ப.64

98. மேலது. ப.131

99. மேலது. ப.132

100. மேலது. பக்.132-133

101. மேலது. ப.145

102. மயிலை.சீனி.வேங்கடசாமி, சேர, சோழ, பாண்டியன், ப.27

103. மேலது. பக்.127-128

104. மேலது. ப.190

105. மேலது. பக்.118,119

106. மேலது.ப.119

107. மயிலை சீனி வேங்கடசாமி, சேரன் செங்குட்டுவன், ப.2

108. மறைமலையடிகள், முல்லைப்பாட்டு ஆராய்ச்சி உரை, ப.20

109. ஞா.தேவநேயப்பாவாணர், திராவிடத்தாய், ப.16

# மதிப்பீடு

- வாசிப்பு என்ற சொல் வாசகன் அல்லது ஆய்வாளன் ஓரிலக்கியத்தை எவ்வாறு அணுகுகிறான், புரிந்து கொள்கிறான், திறனாய்கிறான் என்பதைக் குறிப்பதாகும்.
- நக்கீரர், சீத்தலைச் சாத்தனார் ஆகியோரைப் பற்றிப் புனையப்பட்டுள்ள கதைகள், சங்க இலக்கிய வாசிப்பு என்பது சங்க காலத்திலேயே இருந்திருக்கிறது என்பதை உணர்த்துவதாக அமைகிறது.
- சங்கப்பாடல்களைத் திரட்டித் தொகுத்த தொகுப்பாசிரியர்கள் பாடல்களோடு பல்வேறு குறிப்புகளைத் திரட்டித் தந்துள்ளனர். திணை, துறை, சூழலமைவுக் குறிப்புகள், பண், இசை, வண்ணம், தூக்கு முதலியன பிற்கால வாசிப்பின் விளக்கம் கருதியே அளிக்கப்பட்டிருக்க வேண்டும்.
- சங்க இலக்கியச் செய்யுள்களுக்கு உரையெழுதிய உரையாசிரியர்கள், உரை விளக்கம் மட்டும் கொடுக்காமல், சமகாலச் சமூகத் தேவையை நிறைவு செய்யும் நோக்கத்தோடும் உரை வரைந்துள்ளனர். இதுவும் சங்க இலக்கிய வாசிப்புப் போக்கில் நிகழ்ந்துள்ளது.
- சமயம் சார்ந்த மடங்களைச் சார்ந்த புலவர்கள், சங்க இலக்கியக் கல்வியைத் தடை செய்தனர் என்று தமிழியல் ஆய்வாளர்களில் சிலர் கருதுகின்றனர். சங்க இலக்கியப் பரவலாக்கத்தை இது தடுத்திருப்பது புலனாகிறது.
- 19 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் சங்க இலக்கியத்தை மீட்டுருவாக்கம் செய்யும் முயற்சியில் அறிஞர்கள் இறங்கிய பிறகே, அவற்றுக்கு முக்கியத்துவம் உருவாகியிருக்கிறது. இடைக்காலம் என்னும் பகுதியைக் கடந்துவரச் சங்க இலக்கியம் பெரும்பாடுபட்டிருக்கிறது எனலாம்.
- செந்தமிழ், செந்தமிழ்ச்செல்வி, கலாநிலையம், சித்தாந்த தீபிகை, தமிழ்ப்பொழில் முதலான இதழ்கள் சங்க இலக்கியப் பதிப்புப் பணிகளிலும் ஆய்வுப்பணிகளிலும் தங்களை ஈடுபடுத்திக் கொண்டன. அவை குறித்த கட்டுரைகளைத் தங்களது ஏடுகளில் வெளியிட்டன.
- சங்க இலக்கியப் பதிப்புகள் வெளிவந்த அதே காலகட்டத்தில் பல்வேறு இலக்கியங்கள் பிறமொழிகளிலும் வெளியிடப்பட்டு வெளிநாட்டு ஆய்வாளர்களின் கவனத்தைப் பெற்றன.

- எம்.எஸ்.பூர்ணலிங்கம் பிள்ளை, வெ.கனகசபைப்பிள்ளை, சீனிவாச அய்யங்கார், எஸ்.கிருஷ்ணசாமி அய்யர் முதலான அறிஞர்கள் சங்க இலக்கியங்களைப் பற்றி ஆங்கிலத்தில் கட்டுரைகளை எழுதி இதழ்களில் வெளியிட்டனர்.
- சங்க இலக்கிய ஆய்வுகள் தமிழரின் பெருமைகளையும் சிறப்புகளையும் விளக்கும் வகையில் மட்டும் அமையாமல், அரசியல், உளவியல், அறிவியல், வானவியல், மொழியியல், சமூகவியல், தொல்லியல், மானுடவியல் முதலான துறைகளோடு இணைத்து ஆராயப்பட்டது.
- ஓலைச்சுவடிகளை அச்சுக்குக் கொண்டு வருதலும் அதன் வழியில் இந்திய தேசியத்தின் பெருமையை ஏகாதிபத்தியத்துக்கு உணர்த்துதலுமாகிய செயல்பாட்டில் சங்க இலக்கியங்கள் முன்னணியில் நின்றன.
- இந்திய தேசியச் சிந்தனையுடன் வரலாற்றைக் கட்டமைக்க முனைந்த அறிஞர்கள் தமிழின் பெருமைகளை ஏற்றுக்கொண்ட அதே வேளையில், மிகப்பக்குவமாக இந்தியப் பெருவட்டத்தில் தமிழகத்தை இணைக்கும் முயற்சியில் ஈடுபட்டனர். இதனால் தென்னிந்திய ஆராய்ய் ஒரு வேறுபட்ட தளத்தில் இயங்க ஆரம்பித்தது. இந்த இரட்டைநிலைப் போக்கு தமிழகத்தில் வேரூன்றியது.
- சங்க இலக்கியப் பதிப்புகளும் சிந்துச் சமவெளி நாகரிகக் கண்டுபிடிப்புகளும் தமிழர்களின் தனித்தன்மையான நாகரிக வரலாற்றை வெளிப்படுத்துவதாகத் திராவிட அறிஞர்கள் கருத்துரைத்தனர். கே.ஏ.நீலகண்ட சாஸ்திரி, ரா.ராகவையங்கார், எம்.சீனிவாச ஐயங்கார், சாமி.சிதம்பரனார், எஸ்.வையாபுரிப்பிள்ளை முதலான தமிழறிஞர்கள் இக்கருத்தின் மீது வினையாற்றியுள்ளனர்.
- சங்க இலக்கியம் பாடப்பட்ட காலத்தில் சமண, பௌத்த சமயங்களின் மேலாண்மை இருந்திருக்கக் கூடும்; அக்காலகட்டத்து இலக்கியமல்லாத சான்றுகள் கிடைக்குமானால் இக்கருத்து மெய்ப்படும் என்று கா.சிவத்தம்பியைப் போன்ற ஆய்வாளர்கள் கருதுகின்றனர். ஆனால் சங்க இலக்கியத் தொகுப்பு மரபை நோக்கும்போது வைதிக சமயத்தின் அதிலும் சைவ சமயத்தின் மேலாண்மையை அறிய முடிகிறது.
- சைவ சமய ஈடுபாடுடைய அறிஞர்கள் தங்களிடம் பத்துப்பாட்டுப் பிரதிகள் முழுமையாக இருந்தும் அவற்றிலிருந்து திருமுருகாற்றுப்படையை மட்டுமே முதன்மைப்படுத்தினர் என்பர்.

- தமிழகத்திலும் யாழ்ப்பாணத்திலும் சைவை சித்தாந்த மகா சமாஜங்களும் சைவ சபைகளும் சைவ சிந்தாந்த கழகங்களும் சைவப்பிரகாச சபைகளும் சங்க இலக்கியங்களில் ஆழ்ந்த அக்கறை காட்டின. சங்க இலக்கிய ஆராய்ச்சி மாநாடுகளை நடத்தின. நற்றிணைச் சொற்பொழிவுகள், கலித்தொகைச் சொற்பொழிவுகள், பரிபாடல் சொற்பொழிவுகள், அகநானூற்றுச் சொற்பொழிவுகள், புறநானூற்றுச் சொற்பொழிவுகள், பத்துப்பாட்டுச் சொற்பொழிவுகள் முதலான தொகுப்பு நூல்கள் வெளியிடப்பெற்றன.
- சங்க இலக்கியங்கள், சங்கம் என்ற அமைப்பு ஆகியவற்றில் புத்த, சமண சமயத்தின் பங்களிப்புக் குறித்தும் சைவ சமயத்தின் பங்களிப்பைக் குறித்தும் வரலாற்று ஆய்வாளர்களுக்கும் சைவ சமயச் சார்புடைய ஆய்வாளர்களுக்கும் கருத்து வேறுபாடுகள் நிலவின.
- இறையனார் களவியல் உரையில் கூறப்பட்டுள்ள சங்கம் குறித்த செய்திகள் யாவும் உண்மையே என்று சைவ சமயச் சார்புடைய ந.சி.கந்தையா பிள்ளை, அ.சிதம்பரனார் முதலானவர்கள் வாதிட்டனர்.
- திராவிட இயக்கத்தினர் தங்களது கருத்தியல் செயல்பாடுகளில் இலக்கிய ஆய்வுகளையும் ஒரு பொருண்மையெனக் கொண்டனர். ஆரியக் கலப்பு மிகவும் குறைந்த சங்க இலக்கியத்தையும் அதன் சிறப்பையும் தனது கருத்தியலைப் பரப்பும் நோக்கத்தோடு கையிலெடுத்துக் கொண்டனர்.
- தமிழர்கள் இந்தியாவின் பூர்வீகக் குடிகள், உலக நாகரிகத்துக்கு வழிகாட்டியாக இருந்தவர்கள், உலகில் முதன் முதலில் தோன்றிய மனித இனம் முதலான கருத்துக்கள் திராவிட இயக்க ஆய்வாளர்களால் முன்னெடுக்கப்பட்டன.
- சங்க இலக்கியத்தைப் பாமரர்களிடம் கொண்டு சேர்த்தது திராவிட இயக்கம். தங்களில் அரசியல் குரலுக்குச் சாதகமான பண்புகளைச் சங்க இலக்கியம் கொண்டிருப்பதாகத் திராவிட இயக்கம் கருதியது. எனவே அதனைச் சமகால நிலையுடன் ஒப்பிட்டுப் பொதுவெளியில் முன்வைத்தது.
- அறிஞர் அண்ணா, இரா.நெடுஞ்செழியன், மு.கருணாநிதி ஆகிய திராவிட இயக்கத் தலைவர்கள் சங்க இலக்கியம் குறித்துப் பல்வேறு ஆக்கங்களைச் செய்யவும் எழுதவும் பேசவும் செய்தனர்.
- தமிழ்நாட்டின் மார்க்சிய இயக்கம் தனது இயக்கச் செயல்பாடுகளில் சங்க இலக்கிய ஆய்வுக்குக் குறிப்பிடத்தக்க இடமளித்தது. தமிழ் குறித்தும் சங்க

இலக்கியம் குறித்தும் திராவிட இயக்கம் முன்வைத்த கருத்தாக்கங்களுக்கு எதிர்வினையாற்றியே தீர வேண்டிய கட்டாயத்திலிருந்தது தமிழக மார்க்சிய இயக்கம்.

- தொல்காப்பியத்துள் பொருளதிகாரம், சங்க இலக்கியங்களுள் புறநானூறு ஆகியவற்றை மட்டுமே மார்க்சியர் ஆய்வு செய்துள்ளனர் என்பர். அகப்பாடல்களை மார்க்சியர்கள் உரிய கவனமெடுத்து ஆய்வு செய்யவில்லை என்று மதிப்பிடுவோரும் உண்டு.
- கே.முத்தையா, கோ.கேசவன் ஆகிய சில மார்க்சியர்கள் மட்டுமே சங்க இலக்கிய ஆய்வுகளில் அக்கறை செலுத்தினர். காலம் பற்றிய ஆய்வில் மார்க்சியர்கள் பெரிதும் ஆர்வம் காட்டவில்லை. தேவைப்படும்பொழுது எஸ்.வையாபுரிப்பிள்ளை போன்றோரின் முடிவுகளையே வழிமொழிந்தனர்.
- கா.சிவத்தம்பி, கைலாசபதி முதலான ஈழத்து மார்க்சிய அறிஞர்கள் சங்க இலக்கியம் பற்றிய கணிசமான ஆய்வுகளைச் செய்துள்ளனர். பண்டைத்தமிழ்ச் சமூகத்தின் நிகழ்த்துகலை மரபு குறித்த கா.சிவத்தம்பியின் ஆய்வு குறிப்பிடத்தக்கது.
- மார்க்சியர்கள் சமூகவியல், பொருளியல் அடிப்படையில் தம் ஆய்வுகளை முன்வைத்தனர். சர்வதேசியம், இந்திய தேசியம் ஆகிய கருத்தாக்கங்களின் அடிப்படையிலேயே தங்களது சங்க இலக்கிய ஆய்வையும் முன்வைத்தனர். தமிழ்த்தேசியம் என்ற கருத்துவருவாக்கத்தை மறுத்து இந்திய தேசிய மறுமலர்ச்சி இயக்கத்தின் போக்கினையொட்டியே தங்களது விமர்சனப் பார்வையை அமைத்துக்கொண்டனர்.
- ஆங்கிலேயர்களை இந்தியாவிலிருந்து வெளியேற்றும் முயற்சியினூடாக, இங்கிருந்த பல்வேறு சாதியக் குழுக்கள் தன்னெழுச்சி பெற்றன. இந்த எழுச்சியானது அரசியல், கல்வி, மதம், இலக்கியம் முதலிய அனைத்துப் பண்பாட்டுத் துறைகளிலும் எதிரொலித்தது. ஏற்கனவே தமிழ்ப்பண்பாடு அரசியல் சூழலோடு இணைத்துப் பேசப்பட்ட சங்க இலக்கியம், இச்சாதியச் சூழலுக்கு ஏற்பவும் வாசிக்கப்பட்டது. சாதிய இயக்கங்கள் மீண்டும் தங்களைப் புதுப்பித்துக் கொண்டு வேகமாக இயங்கி வரும் சூழலில் சங்க இலக்கியத்திலிருந்து தொன்மை தேடும் முயற்சி தொடர்ந்து நடைபெற்று வருகிறது.

- சைவ வேளாளர் எழுச்சியானது சங்க இலக்கியத்தில் தங்களது வேர்களைத் தேடும் முயற்சியில் தொடங்கியது. மறைமலையடிகளைப் போன்றவர்கள் இவ்வாறான நோக்கில் சங்க இலக்கியத்தில் தொழிற்பட்டுள்ளனர். பழங்காலந்தொட்டே உழவுத் தொழிலுக்கும் வணிகத் தொழிலுக்கும் உரிமையுடையவர்கள் வேளாளர்கள் என்ற கருத்தை முன்வைத்தனர். அரசத் தொழிலுக்கும் உரிமையுடையவர்கள் வேளாளர்கள் என்றும் வருணப்பாகுபாட்டில் வேளாளர்கள் நாலாவது வருணத்தோடு பிணிக்கப்பட்டிருக்கவில்லை என்றும் கருதுவர்.
- மள்ளர் என்னும் சமுதாயத்தினர் சங்க இலக்கியங்களில் குறிப்பாக புறநானூற்றில் போற்றப்படுகிற தலைவர்கள் அனைவருமே மள்ளர்கள் என்று கருத்துரைக்கின்றனர். அகப்பொருள் பற்றிப் பாடும் நூல்களும் மருத நிலத்துத் தலைமக்களான மள்ளர், மள்ளத்தியர்களையே தலைவன் தலைவியாக் கொண்டு இயற்றப்பட்டுள்ளன என்பர்.
- சங்க கால அரசருக்குத் துணையாக இருந்தவர்கள் மறவர்கள் என்றும், இதனால் படைவீரர், படைத்தலைவர், அமைச்சர் ஆகிய பொறுப்புகளை ஏற்றுச் செயல்பட்டனர் என்றும், சங்க இலக்கியத்தில் காணப்பெறும் மறவர்களை, இன்றைய மறவர்களின் முன்னோர்கள் என்றும், சங்க இலக்கியத்தில் இடம்பெறும் மறவர் பாடல்களை எல்லாம் மறக்குடியினரின் பாடல்களாகவும், எயினர், மறவர், எயிற்றியர், மறத்தியர், மூதின் மகளிர் போன்றவர்களை மறக்குடி முன்னோர்கள் என்றும் குறிப்பதைக் காணமுடிகிறது.
- அருந்ததி இனத்தைச் சேர்ந்தோர் சங்க இலக்கியங்களில் கூறப்பெறும் அருந்ததி என்னும் பெண் அதியர் குடி வழி வந்தவள் என்றும் அவளுடைய பெயரிலேயே பிற்காலக்குடிகள் சாதிப்பெயராக அறியப்பட்டார்கள் என்றும் கூறுவர்.
- தலித் மக்களுக்கான அடையாளத்தைச் சங்க இலக்கியங்களில் தேடும் முயற்சியை ராஜ்கௌதமன் போன்ற ஆய்வாளர்கள் முன்னெடுத்துள்ளனர். தலித் மக்களாக, கானக்குறவர்கள், எயின வேடர்கள், பரதவர், உமணர், ஆயர், உழவர், கை வினைஞர், வணிகர், கலைக்குழுவினர், புலையர் ஆகிய மக்களை இனங்காண்கின்றனர்.
- அரசியல், சாதி அமைப்புகளும் இயக்கங்களும் பல்வேறு வகைகளில் சங்க இலக்கியங்களை வாசித்துள்ளன. பல்வேறு முரண்பட்ட கருத்துக்கள் முன்மொழியப்பட்டு எதிர்கொள்ளப்பட்டு விவாதிக்கப்பட்டுள்ளன. ஆனாலும்

தமிழ்நாட்டில் தொன்மையான அடையாளங்களைத் தேடும் யாவரும் தேடும் களஞ்சியமாகச் சங்க இலக்கியம் இருக்கிறது எனலாம்.

- தமிழ், திராவிடம் என்னும் இரு சொற்களும் ஒரு பொருட் பன்மொழியாகவும் எதிரிணைச் சொற்களாகவும் கொள்ளும் வழமை உண்டு. கி.பி. ஏழாம் நூற்றாண்டிலிருந்து திராவிட என்னும் சொற்பதம் இந்திய இலக்கியங்களில் வரலாற்றுக் குறிப்புகளில் இடம்பெறுகிறது.
- திராவிடம் என்னும் வடமொழிச் சொல்லே தமிழாகத் திரிந்தது என்போர் உளர். தமிழ் என்னும் சொல்லிலிருந்தே திராவிடம் என்னும் சொல் பிறந்தது என்று கருதும் அறிஞர்களும் உள்ளனர். திராவிடம் என்றாலும் தமிழ் என்றாலும் ஒரே பொருள்தான் என்று தந்தை பெரியார் உள்ளிட்டோர் கருதினர்.
- திராவிடம் என்பது தமிழுக்கான மாற்றுச் சொல்லாகவும், தமிழக, ஆந்திர, கருநாடகம், கேரளப் பகுதிகளை உள்ளடக்கிய தென்னாட்டைக் குறிப்பதாகவும், பார்ப்பனிய மேலாண்மைக்கு எதிரான சொல்லாகவும் முன்னிறுத்தப்படுகிறது.
- திராவிடம் என்ற சொல், கால்டுவெல்லின் திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம் குறித்த நூல் 1856 இல் வெளியிடப்பட்ட பிறகே பரவலாக அறியப்பட்டது.
- ஆதி திராவிட ஜன சபை, திராவிட மகாஜன சபை என்று அயோத்திதாசப் பண்டிதரும், ரெட்டமலை சீனிவாசனும் தொடங்கிய அமைப்புகள் திராவிட என்னும் சொல்லைத் தனது தலைப்புகளில் கொண்டிருந்தன. ஆதிக்க வகுப்பினருக்கு எதிராக ஒடுக்கப்பட்ட மக்களின் உரிமைக் குரலாகத் திராவிடன் என்ற சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது. பிறகு, பார்ப்பனரல்லாத அனைத்துச் சாதியினருக்குமான பொதுப் பெயராக வரலாற்றில் இடம் பிடித்தது.
- தமிழர் என்ற சொற்பிரயோகத்துக்குள் எல்லாச் சமூகக் குழுமங்களையும் கொண்டு வர முடியாதபோது, திராவிடர் என்ற சொல் அனைவரையும் கொண்டு வருவதால் இப்பதம் அவசியப்பட்டது என்று கார்த்திகேசு சிவத்தம்பி போன்றோர் கருதுகின்றனர்.
- திராவிட என்பது திராவிடர் என்ற இன மக்களைக் குறிப்பதாகவும் திராவிட என்ற நில எல்லைப் பகுதியைக் குறிப்பதாகவும் அமைகிறது.
- 1916 இல் தென்னிந்திய நலவுரிமைச் சங்கம் தோற்றுவிக்கப்பட்டபோது, சங்கத்தின் சார்பில் தொடங்கிய ஆங்கிலம், தமிழ், தெலுங்கு ஆகிய மூன்று மொழிகளிலும்

உருவாக்கப்பட்ட நாளிதழ்களில் தமிழ் நாளிதழுக்கு மட்டும் திராவிடன் என்ற பெயர் வைக்கப்பட்டது.

- தமிழ்நாட்டில் தோன்றிய திராவிட உணர்வு, பிற பகுதிகளில் ஏற்படவில்லை என்று ஆய்வாளர்கள் கருதுகின்றனர். கன்னடர்களோ, தெலுங்கர்களோ, மலையாளிகளோ தங்களைத் திராவிடர்கள் என்று கருதவில்லை என்று கருத்துரைக்கின்றனர்.
- இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் திராவிடத் தேசியம் முழுமையான வடிவத்தை எய்தியது. எனினும் சுயமரியாதை இயக்கம் தோன்றிய பின்பே அது ஒரு திட்டவட்டமான வடிவமைப்பைப் பெற்றது.
- பிராமணர்களுக்கும் பிராமணரல்லாதோருக்கும் ஏற்பட்ட உரிமைப் போராட்டத்தின் விளைவே தென்னிந்திய நலவுரிமைச் சங்கமாகும். அன்றைய சூழலில் பிராமணர்களால் அழுத்தப்பட்டுக் கிடந்த சைவம், தனித்தமிழ் உள்ளிட்ட பல்வேறு போக்குகளை எழுச்சி பெறச் செய்தது திராவிடக் கருத்துநிலை.
- தமிழ்நாட்டில் வாழும் சாதிக் குழுமங்களைச் சேர்ந்தவர்கள், தங்களின் சமூக நிலைமையையும் தங்கள் சமூக அசைவியக்கத்தையும் வரையறை செய்த பிராமணக் கருத்துநிலை தம்மீது திணித்ததென அவர்கள் கண்ட, கொண்ட மேலாண்மைக்கெதிராக நடத்திய போராட்டங்களினூடே மேற்கிளம்பினதும், அந்தப் போராட்டங்களை நியாயப்படுத்துவதற்குப் பயன்படுத்தப்பட்டதுமான சிந்தனை நிலைப்பாடே, திராவிடக் கருத்துநிலை ஆகும்.
- இந்து சமயம் முன்வைத்த வருணாசிரம தர்மத்தை எதிர்த்தலும் சூத்திரர்கள் இழிவுபடுத்தப்படாமையுமே திராவிட இயக்கத்தின் முதன்மையான பணியாக அமைந்தது. சாதியைப் பேசுவதன் நீட்சியாகச் சமயத்தை முற்றிலுமாக தந்தை பெரியார் எதிர்த்தார். சமயக் குறியிடுகளை அழித்தார். சமயச் சடங்குகளைக் கடுமையாக அம்பலப்படுத்தினார். சமயச் சொல்லாடல்களை மறுத்தார்.
- இந்து சமயம் பெண்களுக்கு வழங்கியிருந்த இரண்டாமிடத்தை பெரியார் மிகக் கடுமையாக எதிர்த்தார். ஆண் பெண் சமத்துவத்துக்கான பல்வேறு நடவடிக்கைகளைத் திராவிட இயக்கம் முன்னெடுத்தது.
- திராவிட இயக்கத்தின் பண்பாட்டு அரசியல் செயல்பாடுகளில் திராவிட முன்னேற்றக் கழகம் தோன்றியது. தந்தை பெரியாரின் செயல்பாடுகளில் கருத்து மாறுபட்ட சி.என். அண்ணாதுரை அதன் நிறுவனரானார்.

- திராவிட முன்னேற்றக்கழகமும் பின்னாளில் பல்வேறு இயக்கங்களாகப் பிரிந்து பிரிந்து சென்றது. எந்தப் பிரிவிலும் அது திராவிட என்னும் சொல்லை ஒட்டியே பிறந்தது என்பது கருத்தில் கொள்ளத் தக்கது.
- பெரியாரின் இலக்கியம் குறித்த பார்வை முற்று முழுவதுமாக பயன்பாட்டு நோக்கில் அமைவது ஆகும். இலக்கியத்தின் அழகியல் மதிப்புக்கு முதன்மை கொடுப்பதை அவர் மறுத்தார். பயன்மதிப்பையே அவர் வலியுறுத்தினார்.
- தமிழ்நாட்டில் பண்பாட்டு அரசியலில் ஈடுபடும் அக்கறையின் காரணமாகவே அவர் இலக்கிய ஆய்வுகளிலும் ஈடுபட்டார்.
- இராமாயணம், மகாபாரதத்துக்கு எதிராகப் பெரியார் சங்க இலக்கியத்தை முன்வைத்தார். சங்க இலக்கியங்கள் குறித்து அவர் மிகுதியும் எழுதவில்லை, பேசவில்லை எனினும் சங்க இலக்கியத்தை வலியுறுத்திப் பேசியுள்ளார்.
- மேலை நாட்டு இலக்கியங்களோடு தமிழ்நாட்டு இலக்கியங்களை ஒப்பிட்டுக் காட்டும் பெரியார், மதத்தின் பிடியில் தமிழ் இலக்கியங்கள் சிக்கியிருப்பதாக எடுத்துக்காட்டுகிறார். ஆகவே எல்லா இலக்கியங்களையும் புலவர்களையும் கடுமையாகச் சாடுகிறார்.
- சங்க இலக்கியங்களுக்குப் பின் வந்த இலக்கியங்களில் தமிழர் நாகரிகம், கலை, பண்பாடு போன்றவற்றைக் காண்பதே அரிதாயிற்று என்கிறார் பெரியார்.
- பார்ப்பனருக்கு வடமொழி எப்படித் தங்களின் இன நலத்துக்குப் பயன்படுகிறதோ, அப்படித்தான் தமிழ், தமிழ்ப்புலவர்களுக்குத் தங்கள் நலத்துக்கு மட்டுமே பயன்படுகிறது என்று பெரியார் கடுமையாகச் சாடினார்.
- சங்க இலக்கியங்கள், திருக்குறள் உள்ளிட்டவற்றைத் தமிழருக்கான அடையாள இலக்கியமாகப் பெரியார் முன்மொழிந்துள்ளார். அவை தரவிரப் பிற இலக்கியங்களைக் கடுமையாகச் சாடியுள்ளார். அவற்றில் பலவற்றைத் தீயிலிட்டுக் கொளுத்தவுமான பண்பாட்டு நடவடிக்கைகளில் ஈடுபட்டுள்ளார்.
- சங்க இலக்கியங்களைக் குறித்துப் பெரியார் மிகுதியும் ஆராயவில்லையெனினும் அதன் மீதான தன்னுடைய ஈடுபாட்டைப் புலப்படுத்தியுள்ளார். பிற்காலத்தில் அவருடைய வழித் தோன்றல்களாக அண்ணாதுரை போன்றோர் சங்க இலக்கியத்தில் ஆழ்ந்து ஈடுபட, தந்தை பெரியாரே உத்வேகமாக இருந்துள்ளார் எனலாம். தமிழ் ஆய்வாளர்கள் பலர் சங்க இலக்கிய ஆய்வுகளில் ஈடுபட உத்வேகமளித்துள்ளார்.

- இந்திய விடுதலைக் காலத்தைத் தொடர்ந்து தந்தை பெரியார், சி.என்.அண்ணாதுரை இருவருக்குமிடையே பல்வேறு காரணங்களைப் பற்றிக் கருத்து வேறுபாடுகள் தோன்றின. திராவிடர் கழகம் என்ற அமைப்பிலிருந்து திராவிட முன்னேற்றக் கழகம் என்ற புதிய அமைப்புத் தோன்றியது. இக்காலகட்டத்தை இரண்டாம் கட்டத் திராவிட இயக்கம் எனலாம்.
- இந்திய விடுதலை நாளைத் துக்க நாளாக அறிவித்தார் தந்தை பெரியார். சி.என்.அண்ணாதுரை தனது திராவிட நாடு ஏட்டில் அந்த நாளை 'இன்பநாள்' என்று எழுதினார். ஆங்கிலேயர்-ஆரியர் என்ற இரண்டு எதிரிகளில் ஒருவர் குறைந்திருக்கிறார் என்ற அடிப்படையில் அதனை வரவேற்க வேண்டுமென்று கருதினார். இந்த வேறுபாடு இருவருக்குமிடையில் பிணக்கை ஏற்படுத்தியது.
- பெரியாரின் திருமண ஏற்பாடு குறித்த விவாதங்களிலும் அண்ணாதுரை முரண்பட்டிருந்தார். தன்னைப்போலவே பெரியாரின் திருமண ஏற்பாட்டில் முரண்பட்டிருந்த பிற அமைப்புத் தோழர்களோடு 'திராவிட முன்னேற்றக் கழகம்' என்ற புதிய அமைப்பினைத் தோற்றுவித்தார்.
- சி.என்.அண்ணாதுரையின் அரசியல் குறிக்கோள் என்பது கால்டுவெல்லின் ஒப்பிலக்கணம், சங்க இலக்கியக் கண்டுபிடிப்புகள், சிந்துச்சமவெளிக் கண்டுபிடிப்புகள், ஐரோப்பிய சனநாயகச் சிந்தனைகள் ஆகியவற்றை உட்கொண்டதாகும்.
- தமிழக வரலாற்றில் தமிழ்மொழி குறித்த சிந்தனை பல்வேறு மாற்றங்களை அடைந்து வந்துள்ளது. தமிழ் தேசிய இனத்துக்கு உணர்ச்சி ஊட்டக்கூடிய ஓரம்சமாக மொழி இருந்து வந்திருக்கிறது. மொழி என்பது வெறும் கருவியாக மட்டுமின்றி, தேசிய இனத்தின் அடையாளமாகவும் திகழ்ந்திருக்கிறது.
- சங்க காலத்தில் தமிழ்மொழியில் வந்து கலந்த வடமொழி, இடைக்காலத்தில் அதிகமான இடத்தைப் பெற்று ஆதிக்கம் செலுத்தத் தொடங்கியது.
- சோழர் காலத்தில் பெருங்காப்பியங்கள் தோன்றின. இக்காலகட்டத்தில் வடமொழி எதிர்ப்பும் தமிழை உயர்த்திப்பிடிக்கும் போக்கும் காணக்கிடைக்கிறது. தமிழ்விடு தூது இலக்கியத்தில் தமிழுக்கு வடமொழி ஏவல் செய்வதாகவே வருணிக்கப்படுகிறது.
- விஜயநகரப் பேரரசு, நாயக்க, மராட்டிய அரசுகள் ஆகிய வேற்றரசுகளின் காலத்தில் பிற மொழியினர் தமிழகத்தில் மிகுதியும் குடியேறினர். எனவே தமிழகம் கலப்புப் பண்பாடுகளுக்குரிய களமாயிற்று.
- பெரியாரின் மொழி பற்றிய கருத்துக்கள் வெளிப்படையானவை. அதனாலேயே அவருடைய கருத்துக்களில் ஒரு தொடர்ச்சியின்மை வெளிப்படுகிறது என்று கருதுவோரும் உள்ளனர். தமிழைக் காட்டுமிராண்டிக் காலத்து மொழி என்றும் தமிழ் இலக்கியங்கள் பயன்பாட்டுக்கு உதவாதவை என்றும் பெரியார் கடுமையாகச் சாடினார்.
- மொழி பற்றிய சிந்தனைகளிலும் பெரியாரும் அண்ணாதுரையும் இருவேறு துருவங்களில் நின்றனர். மொழியில் கருத்துக்கு முதன்மையளித்தார் பெரியார். வடிவத்துக்கு முன்னுரிமை அளித்தார் அண்ணாதுரை.

- திராவிட இன அடிப்படையில் சங்க இலக்கியத்தை ஆராய்ந்த சி.என்.அண்ணாதுரை தமிழின் தொன்மை, தனித்தன்மை, பெருமை என்ற அடிப்படையில் தனது கருத்துக்களை முன்வைத்தார். பழந்தமிழகத்தின் வரலாற்றையும் தமிழர்களின் வீரத்தையும் அவர்களின் போர் முறையையும், வாழ்வியலையும், செல்வச் செழிப்பையும், சங்க இலக்கியச் சிறப்பையும் இன உணர்வை வளர்க்கும் வகையில் வெகு மக்களிடம் கொண்டு சேர்த்தார் அண்ணாதுரை.
- சங்க இலக்கியங்களைச் சிறு சிறு பிரசுரங்களாக்கி மக்கள் மத்தியில் பரப்பிட வேண்டும் என்று அண்ணாதுரை பல இடங்களில் பேசியும் எழுதியும் வந்தார். அவரது கூற்றுக்கிணங்க, சிறு சிறு நூல்கள் வெளியிடப்பட்டன. அதனைத் தொடர்ந்து சங்க இலக்கியம் தொடர்பான ஆய்வுகள், எளிய உரைகள், கட்டுரைகள் போன்றவை வெளிவரத்தொடங்கின எனலாம்.
- கம்பராமாயணத்துக்கு மாற்றாக அண்ணாதுரை சங்க இலக்கியங்களை முன்மொழிந்தார். எனவேதான் கம்பராமாயணத்தைப் பழித்துப் பேசும் இடங்களில் நற்றிணையை, நல்ல குறுந்தொகையை, கற்றறிந்தோர் ஏத்தும் கலியை, அகத்தை, புறத்தை அழிக்க நாங்கள் புறப்படவில்லை என்று பேசினார்.
- தமிழர்களுக்குத் தனிக்கலை உண்டு என்றும் சங்க நூல்கள் அக்கலைச் செல்வத்தைக் காட்டுகின்றன என்றும் தனியான கலையுடன் தனியான வாழ்வும், தனியரசும் பெற்று வாழ்ந்த தமிழர், பின்னர் தாழ்ச்சியுற்றுத் தன்மானம் இழந்து தன்னரசு இழந்ததற்குக் காரணம் கம்பராமாயணம், பெரிய புராணம் போன்ற நூல்களே என்று கருத்துரைத்தார் அண்ணாதுரை.
- புராண இதிகாசக் கருத்துக்களின் தாக்கமில்லாத சங்க இலக்கியங்களை உயர்த்திப் பிடிப்பதும் புராணங்களின் தன்மையைக் கேலி செய்வதும், சங்க இலக்கியத்தின் பொருண்மைகளோடு தற்கால வாழ்வை ஒப்பிட்டு, சங்க காலத்தைப் பெருமைப்படுத்தியும் அண்ணாதுரை பேசியும் எழுதியும் வந்தார்.
- பழந்தமிழகத்தின் ஆட்சிச் சிறப்பையும் மன்னர்களின் சிறப்புக்களையும் எடுத்துக்காட்டித் தற்காலத் தமிழகம் மேன்மையடைய வேண்டும் என்று எழுதியும் பேசியும் வந்தார் அண்ணாதுரை.
- சங்க இலக்கியங்களில் உள்ள இயற்கைக் காட்சிகளை அண்ணாதுரை பலவாறாக விதந்து போற்றிப் பேசுகிறார். அவை யாவும் உன்னதமான, காணுதற்கு இனிய காட்சிகள் என்பது அவர் கருத்தாகும். சங்க இலக்கியங்களிலுள்ள இனிய காட்சிகள் பலவற்றை விவரித்து எழுதியுள்ளார் அவர்.
- பண்டைத் தமிழ்ச் சமூகத்தின் காதல், வீரம், கவிதை வளம், கொடை, அறம், போர், ஊர்ச்சிறப்பு, ஊராள்வோன் சிறப்பு எனப் பலவகையான சிறப்புகளைச் சங்க இலக்கியத்திலிருந்து எடுத்துக்காட்டுகிறார் அண்ணாதுரை.
- அண்ணாதுரை முன்னெடுத்த சங்க இலக்கிய மேன்மையை மேலும் விதந்து பேசியவர் கருணாநிதியாவார். தமிழர்களின் கல்விச்சிறப்பு, சங்க கால மன்னர்களின் பெருமை மிகு வரலாறு, வாணிபச் சிறப்பு என்றெல்லாம் பாராட்டி எழுதியுள்ளார்.
- மு.கருணாநிதியின் தமிழின உணர்வும் தமிழ் மான உணர்வும் சங்க இலக்கியத்தில் ஈடுபாடு கொள்ள வைத்தது என்று சி.பாலசுப்பிரமணியன்

கருத்துரைப்பார். மு.கருணாநிதியின் பேச்சிலும் எழுத்திலும் சங்க இலக்கியத் தொடர்களோ, பாட்டுகளோ, கருத்துக்களோ இடம்பெறாமற் போகாது என்பர்.

- எட்டுத்தொகை, பத்துப்பாட்டு இவற்றிலிருந்து நூறு பாடல்களைத் தேர்ந்தெடுத்துக் கவிதை நடையில் சங்கத் தமிழ் என்ற மறு ஆக்கத்தைப் படைத்திருக்கிறார் மு.கருணாநிதி. தமிழ் உணர்வு, தமிழ் இனப்பற்று ஆகியவற்றை உட்கொண்டதாக அக்கவிதை உரை அமைந்திருக்கிறது எனலாம்.
- சங்கத் தமிழ் எழுத்தோவியங்களின் வழியாகச் சங்க இலக்கியத்தைத் தமிழர்களின் வீரத்தின் அடையாளமாகவும், வரலாற்றுப் பேழையாகவும் காட்ட முயற்சிக்கிறார் மு.கருணாநிதி.
- மு.கருணாநிதியின் உரை விளக்கத்தில், மூலத்தில் இல்லாத சில கருத்துக்கள் தரப்பட்டுள்ளன. தோழியின் கூற்றாக அமைந்த பாடலில் தலைவன் தலைவியின் உரையாடல் இடம்பெறுவது முதலான மாற்றங்கள் இடம்பெற்றுள்ளன. வாசகர்களுக்குப் பாடலின் கருத்தைக் கொண்டு சேர்க்கும் முயற்சியாகவே இது அமைகின்றது எனலாம்.
- மு.கருணாநிதியின் உரை விளக்கத்தில் சங்க இலக்கியங்களில் உள்ள பகுத்தறிவுக் கருத்துக்கள் முதன்மையளித்து அழுத்தம் கொடுத்து விவரிக்கப்படுகின்றன. திராவிடக் கருத்துநிலையைத் தனது உரை விளக்கத்தில் கலந்து அளித்துள்ளார் மு.கருணாநிதி.
- திராவிட இயக்கத்திற்கு ஆதரவான கருத்துடைய ஆய்வாளர்கள் சங்க இலக்கிய ஆய்வுகளில் ஈடுபட்டனர். அவர்களது ஆய்வுகள் திராவிட இயக்கக் கருத்தியல்களுக்கு வளம் சேர்ப்பதாக அமைந்தன.
- சி.இலக்குவனார் சங்க இலக்கியங்களைப் பற்றிக் குறிப்பிடத்தக்க ஆய்வுகளைச் செய்தவர் ஆவார். சங்கம் பற்றி ஐயத்தோடு எழுப்பப்படும் கேள்விகளை எதிர்கொள்ளும் அவர், சங்கம் பற்றிய செய்திகள் நம்புதற்குரியன என்கிறார்.
- சங்க இலக்கியத்தில் காணப்படும் ஊர்ப்பெயர்கள் இன்றும் வழக்கில் உள்ளன என்று வாதிடும் சி.இலக்குவனார், பழந்தமிழர் வாழ்வு சிறப்பாக இருந்தது என்றும் ஆரியம் உட்புகுவதற்கு முன்பு தமிழரின் வாழ்வு செம்மையுற்றிருந்தது என்றும் கருதுகிறார்.
- பண்டைத் தமிழரின் கடவுள் நம்பிக்கை, சிறு தெய்வ வழிபாட்டு முறை என்றும் அது வடமொழிப் புராணங்களாலும், சமய வெறியினாலும் பெருந்தெய்வ வழிபாட்டு முறையாக மாறியது என்றும் சி.இலக்குவனார் கருத்துரைக்கிறார்.
- பண்டைத் தமிழர்களுக்குச் சமய அடையாளங்களும் வழிபாட்டு முறைகளும் தனித்துவம் உடையனவாக இருந்தன என்றும் ஆரியர்களின் வருகையாலேயே இம்முறைகள் மாற்றமடைந்தன என்று சி.இலக்குவனார் கருதுகிறார். இவ்வாறு சங்க இலக்கியம் முன்வைக்கும் தமிழ்ச் சமூகம் ஆரியக் கலப்பற்ற உயரிய சமூகமாக, தனது தனித்தன்மையைத் தக்கவைத்துக் கொண்டிருந்த சமூகமாக இருந்தது என்று நிறுவ முயலுகிறார் எனலாம்.
- திராவிட சித்தாந்தத்தின் தனித்தன்மையை நிறுவுவதற்குப் பல்துறை பன்மொழி அறிவு தேவையாக இருந்தது என்றும் அத்தேவையினை மிகச்சரியாக

நிறைவேற்றியவர் பன்மொழிப்புலவர் கா.அப்பாத்துரையார் என்றும் ஆய்வாளர்கள் கருதுகின்றனர்.

- கா.அப்பாத்துரையார் தமிழின் மூலத்தை ஆராய்ந்தார். அவர் துருவித் துருவித் தமிழினத்தின் வரலாற்றை ஆராய்ந்தார். அவ்வாறு ஆராய்ந்தது தமிழ் இனத்துக்கும் மற்ற இனங்களுக்கும் பகை மூட்ட அல்ல; தோழமையை ஏற்படுத்தவே என்று அண்ணாதுரை பாராட்டியுள்ளார்.
- கடவுள் நம்பிக்கையும் சைவ சமய ஈடுபாடும் கொண்டவராக அப்பாத்துரையார் இருந்தாரெனினும் திராவிட தேசியக் கண்ணோட்டம் கொண்டவராகவே விளங்கினார். திராவிடர் கழகத்தின் பொதுச்செயலாளராக அப்பாத்துரையாரை அமர்த்த வேண்டும் என்று பாவேந்தர் பாரதிதாசன் விரும்பினார். அந்த அளவுக்குத் திராவிட இயக்கத்தின் செயல்பாட்டாளராகவும் கருத்துநிலை பரப்புபவராகவும் அப்பாத்துரையார் அறியப்பட்டார் எனலாம்.
- தென்னாட்டுப் போர்க்களங்கள் என்னும் நூலின் வழியாகப் பண்டைத் தமிழரின் போர்ச்சிறப்புகளைப் பட்டியலிட்டுக் காட்டினார் அப்பாத்துரையார். பண்டைத் தமிழ்ச் சமூகத்தையும் சமகாலத்தையும் ஒப்பிட்டி இன்றைய தமிழர் மரபு அயல் மொழியினாலும், ஆரியர்களாலும் அடிமைப்பட்டுக் கிடக்கிறது என்று கருத்துரைக்கிறார் கா.அப்பாத்துரையார்.
- ஆரிய நாகரிகத்தைவிடத் திராவிட நாகரிகம் பழமையானது என்பதற்குப் பல்வேறு சான்றுகளைக் காட்டி வாதிடுகிறார் கா.அப்பாத்துரையார். பண்டைத் தமிழர்களின் வாணிபச் சிறப்பையும் அவர் எடுத்துரைக்கிறார்.
- கா.அப்பாத்துரையார் எழுதிய நூல்கள் சங்க இலக்கியங்களை அடிப்படையாகக் கொண்டு, தமிழ்நாட்டின் வரலாற்றுப் பகுதிகளை வெளிக்கொணருவனவாக அமைந்தன.
- மு.வரதராசனாரின் ஆய்வுகள், திராவிடக் கருத்தியல்களை ஒட்டியதாகவும் திராவிட முன்னேற்றக் கழகத்தினர் மேடைகளில் சங்க இலக்கியத்தைப் பயன்படுத்த வாய்ப்பேற்படுத்திக் கொடுப்பனவாகவும் அமைந்தன.
- அண்ணாதுரை விரும்பிய சங்க இலக்கியங்களைக் குறித்த எளிய, சிறு சிறு வெளியீடுகள் என்ற கருத்தைச் செயல்வடிவுக்குக் கொண்டு வந்தவர் மு.வரதராசனார்.
- பாமரரும் சங்க இலக்கியத்தைப் பயில வேண்டும் என்ற நோக்கத்துடன் எளிய நடையில் சங்க இலக்கியங்களைக் குறித்த நூல்களைப் படைத்தார் மு.வரதராசனார்.
- மு.வரதராசனார் சங்க இலக்கியங்களைக் குறித்து உருவாக்கிய சித்திரங்களில் அக்காலகட்டத்து வாழ்க்கையைப் பற்றிய பெருமித உணர்வை வெளிப்படுத்துகிறார். மு.வ. காட்டிய சங்கச் சித்திரங்களைத் திராவிட இயக்கப் பேச்சாளர்கள் அப்படியே மேடையில் வழிமொழிந்தார்கள்.
- தமிழ் மறுமலர்ச்சி இயக்கத்தினரின் மற்றொரு போக்கு, தமிழர் பெருமை பேசும் ஆங்கில நூல்களைத் தமிழில் மொழிபெயர்த்து வெளியிடுதலாகும். பி.டி.சீனிவாச

அய்யங்கார், வி.ஆர்.இராமச்சந்திர தீட்சிதர் ஆகியோர் எழுதிய ஆங்கில நூல்களைத் தமிழில் மொழி பெயர்த்துப் பரப்பியவர் கா.கோவிந்தன் ஆவார்.

- தமிழரின் பெருமை பேசும் நூல்களிலும் முரண்பட்ட கருத்துக்கள் இருப்பின் தவறாது மறுப்பை மிகவும் விளக்கமாக எழுதிக் குறிப்பிடும் முறையைக் கா.கோவிந்தன் பின்பற்றியுள்ளார்.
- பி.டி.சீனிவாச அய்யங்காரின் கருத்துக்களும் கா.கோவிந்தனின் கருத்துக்களும் சங்க இலக்கியம் குறித்த ஆராய்ச்சியில் இரு வேறு துருவங்கள் என்பதை அடையாளப்படுத்துகின்றன.
- தமிழ்ப்புலவர்கள், அரசர்கள் காலம் பற்றிய பின்னணியுடன் அவர்களின் வரலாற்றைச் சங்க இலக்கியத்தை அடிப்படையாகக் கொண்டு தொகுக்கும் பணியைச் செய்தார் கா.கோவிந்தன். அந்த அடிப்படையில் சங்கப் புலவர் வரிசை என்னும் ஆறு தொகுதிகளையும் சங்க கால அரசர் வரிசை என்னும் இரு பகுதிகளையும் வெளியிட்டார்.
- லெ.ப.கரு.இராமநாதன் செட்டியார் சங்க காலத்தின் தொன்மையையும் பண்டைத் தமிழர் பண்பாடு, வாணிகம், போர்முறை, தொழில், கலைகள் போன்றவற்றை வியந்து எழுதுகிறார்.
- சங்க காலம் முழுமைக்கும் செய்யுள்களில் ஒருவிதமான பொதுத் தன்மை இருக்கிறது என்றும் அவை நெடுங்காலம் மாறாமல் நிலைத்திருந்தன என்றும் லெ.ப.கரு.இராமநாதன் செட்டியார் கருதுகின்றார்.
- திராவிட இயக்கத்தாரின் கம்பராமாய எதிர்ப்பு ஆகியவற்றில் முரண்பட்ட நாவலர் ச.சோமசுந்தர பாரதியார், திராவிடக் கருத்தியலை உள்வாங்கிக் கொண்டு பல்வேறு நூல்களை எழுதியவராவார்.
- ஆரியர்களின் தொன்மையான பேரரசே அசோகன் ஆட்சிதான் என்றும் அதற்குப் பன்னெடுங் காலத்துக்கு முன்பே தமிழர்கள் சிறப்புற ஆட்சி நடத்தினர் என்றும் ச.சோ.பாரதியார் கருத்துரைக்கின்றார். ஆரியர்கள் வருகைக்கு முன்னரேயே தமிழர்கள் பலவகைச் சிறப்புக்களோடு வாழ்ந்தவர்கள் என்ற கருத்துருவத்தை முன்வைத்துப் பல கட்டுரைகளைப் படைத்துள்ளார்.
- ந.சி.கந்தையா பிள்ளை, திராவிட இயக்கச் சிந்தனையோடு இலக்கியங்களை ஆராய்ந்தவர் ஆவார். தமிழர்களே உலக நாகரிகத்திற்கு வழிகாட்டிகளாக இருந்தவர்கள் என்பது ந.சி.க.வின் கருதுகோள் ஆகும்.
- இந்திய நாகரிகத்தைப் பற்றி ஆராய்வோர் வடக்கிலிருந்து ஆராய்வதை விடுத்துத் தென் பகுதியில் இருந்து தொடங்க வேண்டும் என்று கருத்துரைக்கிறார் ந.சி.கந்தையா பிள்ளை.
- வடமொழியின் துணையின்றித் தமிழ் தனித்து இயங்க வல்லது என்ற கால்டுவெல்லின் கருத்தினைச் சங்க இலக்கியத்தின் துணைகொண்டு நிறுவுகிறார் ந.சி.க.

- திராவிட இயக்கத் தலைவர்களுடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்த மயிலை சீனி.வேங்கடசாமி, வைதீக மரபுக்கு எதிரான பிற சமயங்கள் தமிழுக்கு ஆற்றிய பணிகளைத் தமிழிலக்கிய வரலாற்றில் பதிவு செய்தவர்.
- தமிழ்மொழி குறைந்தது மூவாயிரம் ஆண்டுப் பழமையுடையது என்று கூறும் மயிலை சீனி.வேங்கடசாமி, தமிழ்ச் சொற்கள் பல, வெவ்வேறு காலத்தில் வெவ்வேறு பொருளில் வழங்கப்பட்டன என்ற மரபை அறிந்து பொருள் கொள்ள வேண்டும் என்கிறார்.
- மறைமலையடிகள், தேவநேயப் பாவாணர் வ.சுப.மாணிக்கனார் போன்றவர்கள் திராவிடக் கருத்துநிலையை உள்வாங்கிக் கொண்டு சங்க இலக்கியம் குறித்து எழுதியவர்கள்.

## மேலாய்வுக் களங்கள்

- சங்க இலக்கியம் திராவிட இயக்க வாசிப்பு எனும் தலைப்பிலான இவ்வாய்வின் மேலாய்வுக் களங்களாகப் பின்வருவன பரிந்துரை செய்யப்படுகின்றது.

- திராவிடக் கருத்தியல் சங்க இலக்கியம் தவிர்த்த ஏனைய இலக்கியங்களை எவ்வாறு வாசித்திருக்கிறது என்பதைக் குறித்த ஆய்வு திராவிடக் கருத்திநிலையின் நோக்குநிலையை முழுவதுமாக உணர்ந்து கொள்ள உதவிகரமாக இருக்கும்.

- திராவிடக் கருத்துநிலை கோட்பாட்டாளர்களுக்கிடையே இருக்கும் மொழி மற்றும் இலக்கியங்கள் பற்றிய விவாதங்களைத் தொகுத்தும் வகுத்தும் காணுவது, திராவிடக் கருத்துநிலை வளர்ச்சியின் உள் முரண்களை அடையாளப்படுத்துவதாக அமையும்.

- திராவிடக் கருத்துநிலை தவிர ஏனைய கருத்துநிலைகள், மார்க்சியக் கருத்துநிலை, தேசியக் கருத்துநிலை, தமிழ்தேசியக் கருத்துநிலைகள் செவ்வியல் இலக்கியங்களை எவ்வாறு நோக்கின என்பதும் இன்றியமையாத ஆய்வாகும்.

# துணை நூற்பட்டியல்

## முதன்மை ஆதாரங்கள்


ஆனைமுத்து.வே., (தொ.ஆ.) - பெரியார் ஈ.வெ.ரா. சிந்தனைகள், (தொகுதி 1,2,3) சிந்தனையாளர் கழகம், திருச்சி – 1974.

கருணாநிதி.மு., - சங்கத் தமிழ், ராக்ஃபோர்ட் பப்ளிகேஷன்ஸ், சென்னை, இரண்டாம் பதிப்பு, 1987.

பரிமணம்.அ.மா., பாலசுப்பிரமணியன்.கு.வெ. (ப.ஆசி.) - சங்க இலக்கியத் தொகுப்பு, (எட்டுத்தொகை, பத்துப்பாட்டு) நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்., சென்னை, முதற்பதிப்பு, 2004.

மெய்யப்பன்., (ப.ஆ.) - அண்ணாவின் சட்டசபை சொற்பொழிவுகள் (தொகுதி - 1, 2) மணிவாசகர் பதிப்பகம், சென்னை, மறுபதிப்பு, 1998.

……. - தம்பிக்கு அண்ணாவின் கடிதங்கள், (தொகுதி: 1-7) பூம்புகார் பதிப்பகம் சென்னை, 2002.

…….. - பேரறிஞர் அண்ணாவின் சொற்பொழிவுகள், (தொகுதி : 1, 2) பூம்புகார் பதிப்பகம், சென்னை, மூன்றாம் பதிப்பு, 2011.

…….. - கலைஞர் கடிதம், (தொகுதி.1-10) அபிராமி நிலையம், சென்னை,1990.

…….. - கலைஞரின் சட்டமன்ற உரைகள்,
(பாகம்: 1,2)
தமிழ்க்கனி பதிப்பகம்,
சென்னை
முதற்பதிப்பு, 2008.

## துணைமை ஆதாரங்கள்

அண்ணாதுரை.சி.என்., - இலக்கியச் சோலை,
பூம்புகார் பதிப்பகம்,
சென்னை,
இரண்டாம் பதிப்பு -1994

,, - ஏ தாழ்ந்த தமிழகமே
முத்தமிழ் நிலையம்
சென்னை - 1963

அரசு.வீ.,
(ப.ஆ) - சங்க இலக்கியம்: பன்முக வாசிப்பு,
மாற்று வெளியீட்டகம்,
சென்னை, 2012.

அரசு.வீ., - தமிழியல் கருத்துநிலைத் தேடல்,
இளவழகன் பதிப்பகம்,
சென்னை, 2001.

அப்பாத்துரை.கா., - தென்னாட்டுப் போர்க்களங்கள்,
அலமேலு நிலையம்,
சென்னை,1971.

,, - குமரிக்கண்டம் அல்லது கடல் கொண்ட
தென்னாடு,
கழக வெளியீடு,
சென்னை,
மறுமதிப்பு, 1972.

,, - தென்னாட்டுப் போர்க்களங்கள்,
மெய்யப்பன் பதிப்பகம்,
சிதம்பரம், 2010.

,, - கொங்குத் தமிழக வரலாறு,
அலமேலு நிலையம்,
சென்னை, 1983.

,, - சரித்திரம் பேசுகிறது,
தமிழ் மண் பதிப்பகம்,
சென்னை, 1985.

அய்யப்பன்.கா., - குறிஞ்சி சங்க இலக்கியம்,
பரிசல் பதிப்பகம்,
சென்னை, 2008.

ஆனந்தகுமார்.பா., - தமிழ் ஆராய்ச்சி வரலாற்றில் மார்க்சிய பேரொளி,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
சென்னை, 2012,

இராணி.ந., - சங்க இலக்கியத் தொகுப்பு நெறிமுறைகள்
நியூ செஞ்சூரி புக் ஹவுஸ்
சென்னை, 2012

இராமநாத செட்டியார்.லெ.ப.கரு., - சங்க காலத் தமிழர் வாழ்வு,
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்,
அண்ணாமலை நகர்,
மூன்றாம் பதிப்பு,1958.

,, - பத்துப்பாட்டு வளம்,
முத்தையா நிலையம்,
சென்னை,
ஐந்தாம் பதிப்பு,1978.

இலக்குவனார்.சி., - பழந்தமிழர்,
வள்ளுவர் பதிப்பகம்,
புதுக்கோட்டை,
மூன்றாம் பதிப்பு,1970.

,, - இலக்கியம் கூறும் தமிழர் வாழ்வியல்,
வள்ளுவர் பதிப்பகம்,
புதுக்கோட்டை,
மூன்றாம் பதிப்பு, 1970.

இளங்கோவன்.எழில்., - அருந்ததியர் வரலாறு,
வினாவும் - விளக்கமும்,
தமிழ்நாடு அருந்ததியர் சங்கம்,
மும்பை, 1998.

உதயகுமார்.ப., - அண்ணாவின் கலை இலக்கிய கோட்பாடுகள்,
கலைச்செல்வி பதிப்பகம்,
சென்னை, 2002.

கரிகாலன்.நைசி., - புறநானூற்று ஆய்வுகள்,
நியூ செஞ்சுரி புத்தக நிலையம்,
சென்னை, 2011.

கருணாநிதி.மு., - முக்கனி,
தி.மு.க இளைஞர் அணி,
சென்னை, 1984.

கருவூர் கன்னல்., - கலைஞரின் சங்கத்தமிழில் மார்க்சிய பார்வை,
மூன்றாம் தமிழிலக்கிய ஆய்வுக்கோவை,
அனைத்திந்தியத் தமிழ் இலக்கியக் கழகம்,
தஞ்சாவூர், 1989.

கனகசபை.வெ., (மொ.நூ) - ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முற்பட்ட தமிழகம்,
தமிழாக்கம் : கா.அப்பாத்துரை,
கழக வெளியீடு, சென்னை, 1956.

காமராசு.இரா., - தமிழ் ஆளுமைகள் சிந்தனைத்தடம்,
நியூ செஞ்சுரி புத்தக நிலையம்,
சென்னை – 2010.

கால்டுவெல், இராபர்ட்., (மொழி.நு) - திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம்,
திருமகள் நிலையம்,
சென்னை, 1992.

கிருஷ்ணசாமி ஐயங்கார்.எஸ்., - கடை வள்ளலார் காலம்,
செந்தமிழ்ப் பிரசாரம்,
தமிழ்ச்சங்க முத்திரா சாலைப் பதிப்பு,
மதுரைத் தமிழ்ச்சங்கம், 1924.

குணா - இந்தியத் தேசியமும் திராவிடத் தேசியமும்,
தாமரை கலை இலக்கிய மன்றம்,
பெங்களூர், முதற் பதிப்பு,1986.

குருசாமி.ம.ரா.போ., - சங்க காலம்,
மெர்க்குரி புத்தகக் கம்பெனி,
கோயமுத்தூர்,1967.

குளோரியா சுந்தரமதி., - உ.வே.சா.சங்க இலக்கிய பதிப்புகள்,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை, 1989.

கேசவன்.கோ., - திராவிட இயக்கமும் மொழிக் கொள்கையும்,
செல்மா வெளியீடு,
சிவகங்கை, முதற்பதிப்பு,1991.

கோசாம்பி.டி.டி., (மொ.நு) - பண்டை இந்தியா அதன் பண்பாடும் நாகரிகமும் பற்றிய வரலாறு,
தமிழாக்கம் எஸ்.ஆர்.என்.சந்தியா,
இந்தியன் கவுன்சில் ஆப் ஹிஸ்டாரிகல் ரிசர்ச்,
நியூதில்லி, 1989.

கோவிந்தன்.கா., - தமிழர் வரலாறு தமிழாக்கமும் திறனாய்வும்,
கற்பகம் புத்தகாலயம்,
சென்னை, 1959.

கோவிந்தன்.கா., - திருமாவளவன்,
கழக வெளியீடு,
சென்னை, 1959.

கோவை வாணன்., (ப.ஆ.) - தமிழ்ச் செவ்வியல் இலக்கியம் மார்க்சிய ஆய்வுகள்,
நியூ செஞ்சுரி புத்தக நிலையம்,
சென்னை, 2011.

கந்தையாபிள்ளை.ந.சி., - முச்சங்கம்,
முத்தமிழ் நிலையம்,
சென்னை, 1947.

,, - தமிழ் இந்தியா,
கழக வெளியீடு,
சென்னை,1959.

,, - வரலாற்றுக் காலத்துக்கு முற்பட்ட பழந்தமிழர்,
புரொகிரெசிவ் அச்சகம்,
(இ.இ) மூன்றாம் பதிப்பு, 1957.

சிதம்பரனார்.சாமி., - தொல்காப்பியத் தமிழர்,
ஸ்டார் பிரச்சாரம்,
சென்னை, 1956.

,, - எட்டுத்தொகையும் தமிழர் பண்பாடும்,
ஸ்டார் பிரசுரம்,
சென்னை,1991.

சிதம்பரனார்.அ., - தமிழ்ச் சங்கங்களின் வரலாறு,
கழக வெளியீடு,
சென்னை, 1948

சிவத்தம்பி.கா., - தமிழில் இலக்கிய வரலாறு,
நியூ செஞ்சுரி புத்தக நிலையம்,
சென்னை-1998

,, - திராவிட இயக்கக் கருத்துநிலையின் இன்றைய பொருத்தப்பாடு - ஒரு வரலாற்று நோக்கு,
மக்கள் வெளியீடு,
சென்னை, 1999.

- இலக்கியமும் கருத்து நிலையும்,
நியூ செஞ்சுரி புத்தக நிலையம்,
சென்னை-2011.

சுப்பிரமணியன், ஏ.வி., - தமிழ் ஆராய்ச்சியின் வளர்ச்சி,
மெய்யப்பன் பதிப்பகம்,
இரண்டாம் பதிப்பு, 2005.

சுப்பிரமணியன். ந., - சங்க கால வாழ்வியல்,
நியூ செஞ்சுரி புத்தக நிலையம்,
சென்னை, 1986.

சிவஞானம்.ம.பொ., - தமிழகத்தில் பிறமொழியினர்,
பூங்கொடி பதிப்பகம்,
சென்னை, 1986.

சோமசுந்தர பாரதியார்.ச., - பழந்தமிழ் நாடு,
நெய்தல் பதிப்பகம்,
சென்னை, 2009.

தமிழ்நாடன் - மநுதர்மம்,
குயில் பண்ணை,
சேலம், மூன்றாம் பதிப்பு,1997.

திருநாவுக்கரசு.க., - திராவிட இயக்க வேர்கள்,
அலமு பிரிண்டர்ஸ்,
சென்னை, மூன்றாம் பதிப்பு, 2007.

திருமாறன்.கு., - தனித்தமிழ் இயக்கம்,
மருதம் பதிப்பகம்,
திருச்சி, 1992.

துரை.சு., - தமிழ் இலக்கிய ஆய்வில் மார்க்சிய நோக்கு,
காவ்யா பதிப்பகம்,
பெங்களூர் - 2000.

தேவநேயப்பாவணர்.ஞா. - திராவிடத் தாய்,
தமிழ் மண் பதிப்பகம்,
சென்னை,
மறுபதிப்பு, 2000.

நன்னன்.மா., - பெரியாரியல் 3 - இலக்கியம்,
ஞாயிறு பதிப்பகம்,
சென்னை,1993.

நீலகண்ட சாஸ்திரி.கே.ஏ., - தென்னிந்திய வரலாறு (முதற்பகுதி)
தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்,
சென்னை, மறுமதிப்பு,1979.

நெடுஞ்செழியன். நாவலர்., - திராவிட நாகரிகம்,
ஐந்தாம் உலகத் தமிழ் மாநாட்டு விழா மலர்,
தமிழக அரசு வெளியீடு, 1981.

பஞ்சாங்கம்.க., - சிலப்பதிகாரத் திறனாய்வுகள் - ஒரு பார்வை,
அன்னம்(பி) லிட்.,
சிவகங்கை,1993.

பசுபதி.மா.வே., - உ.வே.சா. வாழ்வும் தமிழ்த் தொண்டும்,
பொன்னழகம்மை நூலகம்,
காரைக்குடி,1976.

| | | |
|---|---|---|
| புகழேந்தி.இள., | - | கல்வி நிலையங்களில் கலைஞர்,<br>பாகம்-1 (கல்வி நிலையங்களில் ஆற்றிய உரைகள்)<br>சீதை பதிப்பகம், சென்னை, 1996. |
| பாட்டழகன்.மோ.,<br>(தொ.ஆ) | - | நாம் எல்லாம் ஒரே குடும்பம்,<br>எம்.வெற்றியரசி பதிப்பகம்,<br>சென்னை, 2000. |
| பார்த்திபராஜா.கி., | - | இருபதாம் நூற்றாண்டுத் தமிழியல் ஆய்வு வரலாறு,<br>பாணர் குடில்,<br>திருப்பத்தூர் – 2010. |
| ,, | - | தமிழ் மொழி அரசியல்<br>நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்<br>சென்னை, 2010. |
| பாலசுப்பிரமணியன்.கு.வெ., | - | கா. அப்பாதுரையார்,<br>இந்திய இலக்கியச் சிற்பிகள்,<br>சாகித்திய அகாதெமி,<br>புதுதில்லி, இரண்டாம் பதிப்பு, 2010. |
| பெரியார்.ஈ.வெ.ரா., | - | இலக்கியம் வளர்ச்சிக்கு உதவ வேண்டாமா?,<br>திராவிடக் கழக வெளியீடு,<br>சென்னை, 2004. |
| ,, | - | மொழித்தொல்லை,<br>சுயமரியாதை பதிப்பகம்,<br>உடுமலைப்பேட்டை, 2011. |
| ,, | - | மொழியாராய்ச்சி,<br>வள்ளுவர் பதிப்பகம்,<br>ஈரோடு,1948. |
| ,, | - | திருக்குறளும் பெரியாரும்,<br>பெரியார் சுயமரியாதைப் பிரசார நிறுவன வெளியீடு,<br>சென்னை - 2001. |
| பொற்கோ | - | தந்தை பெரியார்,<br>பூம்பொழில் வெளியீடு,<br>சென்னை,1995. |

,, - தமிழ் உணர்ச்சி, தமிழ் வளர்ச்சி, தமிழ் ஆட்சி,
நியூ செஞ்சூரி புக் ஹவுஸ்,
சென்னை, 1986.

மணி.பெ.சு., - இந்திய தேசியத்தின் தோற்றமும் வளர்ச்சியும்,
பூங்கொடி பதிப்பகம்,
சென்னை – 1976.

மாறன்.பொன்., - திராவிட இயக்கங்களின் வரலாற்றுப் பின்னணி,
வேங்கை பதிப்பகம்,
மதுரை, இரண்டாம் பதிப்பு,2001.

மார்க்ஸ்.அ.
ரவிக்குமார் - தேசியம் ஒரு கற்பிதம்,
வேல்சாமி (தொ.ஆசி.) விடியல் பதிப்பகம்,
கோவை,1994.
‘

மார்க்ஸ்.அ., - பெரியார்?
அடையாளம் வெளியீடு
சென்னை, 2011.

மார்கஸ்.அ.,
கேசவன்.கோ., - குணா: பாசிசத்தின் தமிழ் வடிவம்,
விடியல் பதிப்பகம்,
சென்னை, 1997.

மறைமலையடிகள் - வேளாளர் நாகரிகம்,
கழக வெளியீடு,
சென்னை
மறுபதிப்பு, 1975.

,, - முல்லைப் பாட்டு ஆராய்ச்சியுரை
கழக வெளியீடு
சென்னை
மறுபதிப்பு : 1962

முத்துமோகன்.ந., - தமிழ் அடையாள அரசியலின் இயங்கியல்,
நியூ செஞ்சூரி புக் ஹவுஸ்,
சென்னை, 2011.

முத்தையா.கே., - சிலப்பதிகாரம் உண்மையும் புரட்டும்,
கழக வெளியீடு,
சென்னை - 1981.

முத்தையா.சு., - சங்க கால மறவர்,
காவ்யா,
பெங்களூர், 1998.

மூர்த்தி.பூ., - தலித் சமூகவியல்,
ஜெய்பீம் பதிப்பகம்,
புதுச்சேரி, 1994.

ராஜதுரை.எஸ்.வி., - இந்து இந்தி இந்தியா,
அறிவகம், சென்னை,1993.

ராஜ் கௌதமன் - தலித் பார்வையில் தமிழ்ப் பண்பாடு,
கௌரி பதிப்பகம்,
புதுச்சேரி,1994.

லெனின்.கோவை., - திராவிட இயக்கம் நோக்கம்-தாக்கம்-தேக்கம்,
நக்கீரன் வெளியீடு,
சென்னை, இரண்டாம் பதிப்பு, 2013.

வரதராசனார்.மு., - நெடுந்தொகை விருந்து,
பாரி நிலையம்,
சென்னை,1963.

,, - தமிழ் நெஞ்சம்,
பாரி நிலையம்,
சென்னை, பதினெட்டாம் பதிப்பு, 2000.

,, - புலவர் கண்ணீர்
பாரிநிலையம்
சென்னை, மூன்றாம் பதிப்பு, 2001.

வீரபாண்டியன்.சுப., - பெரியாரின் இடது சாரித் தமிழ்த்தேசியம்,
தமிழ் முழக்கம் வெளியீடு,
சென்னை, 2005.

வெங்கடேசன்.ந., - கலைஞரின் சங்கத்தமிழில் தமிழர் பண்பாடு
தரணி பதிப்பகம்
சிதம்பரம், இரண்டாம் பதிப்பு, 2008.

வேங்கடசாமி.மயிலை சீனி., - பத்தொண்பதாம் நூற்றாண்டில் தமிழ் இலக்கியம்
(1800-1900)

பரிசல் பதிப்பகம்,
சென்னை, 2012.

,, - சங்க கால தமிழக வரலாற்றில் சில செய்திகள்
அண்ணாமலைப் பல்கலைக்கழகம்
அண்ணாமலை நகர் - 1970

,, - கொங்கு நாட்டு வரலாறு
நியூ செஞ்சுரி புத்தக நிலையம்
சென்னை – 1974

,, - பழங்காலத் தமிழர் வாணிகம்
நியூ செஞ்சுரி புத்தக நிலையம்
சென்னை
ஐந்தாம் பதிப்பு, 1995

,, - சேர, சோழ, பாண்டியன்
வ.உ.சி.நூலகம்
சென்னை – 2005

,, - சேரன் செங்குட்டுவன்
அண்ணல்ஸ் ஆப் ஓரியண்டல் ரிசர்ச் யுனிவர்சிட்டி
சென்னை, 1966.

வையாபுரிப்பிள்ளை.எஸ்., - காவிய காலம்,
வையாபுரிப்பிள்ளை நினைவு மன்றம்,
சென்னை,1991.

**இதழ்கள்**

- கவிதாசரண்,

  அக்டோபர்(21) - நவம்பர், 1997.

- தி.இந்து (தமிழ் நாளிதழ்)

  அக்டோபர், 24, 2013.

## அகராதி

மாருதிதாசன் - நர்மதாவின் தமிழ் அகராதி

நர்மதா பதிப்பகம்

சென்னை – 2002.

# சங்க இலக்கியம் - திராவிட இயக்க வாசிப்பு

திருவள்ளுவர் பல்கலைக்கழக முழு நேர முனைவர் (பிஎச்.டி.,)
பட்டத்திற்காக அளிக்கப் பெற்ற ஆய்வேடு


ஆய்வாளர்

**சி.க. கோவிந்தராஜ்**

(பதிவு எண்: No.TVU/R/Ph.D./Reg./FT/Tam./SHCT/2013/6254)

நெறியாளர்

**முனைவர் கி. பார்த்திபராஜா,** எம்.ஏ., பிஎச்.டி.,
உதவிப் பேராசிரியர் & முதுகலைத் தமிழ்த்துறைத் தலைவர்
தமிழ் முதுகலை & ஆய்வுத்துறை
தூய நெஞ்சக் கல்லூரி (தன்னாட்சி)
திருப்பத்தூர் – 635 601, வேலூர் மாவட்டம்.






## திருவள்ளுவர் பல்கலைக்கழகம்

**சேர்க்காடு, வேலூர் - 632 115.**

அக்டோபர் – 2016

## மதிப்பீடு

- வாசிப்பு என்ற சொல் வாசகன் அல்லது ஆய்வாளன் ஓரிலக்கியத்தை எவ்வாறு அணுகுகிறான், புரிந்து கொள்கிறான், திறனாய்கிறான் என்பதைக் குறிப்பதாகும்.
- நக்கீரர், சீத்தலைச் சாத்தனார் ஆகியோரைப் பற்றிப் புனையப்பட்டுள்ள கதைகள், சங்க இலக்கிய வாசிப்பு என்பது சங்க காலத்திலேயே இருந்திருக்கிறது என்பதை உணர்த்துவதாக அமைகிறது.
- சங்கப்பாடல்களைத் திரட்டித் தொகுத்த தொகுப்பாசிரியர்கள் பாடல்களோடு பல்வேறு குறிப்புகளைத் திரட்டித் தந்துள்ளனர். திணை, துறை, சூழலமைவுக் குறிப்புகள், பண், இசை, வண்ணம், தூக்கு முதலியன பிற்கால வாசிப்பின் விளக்கம் கருதியே அளிக்கப்பட்டிருக்க வேண்டும்.
- சங்க இலக்கியச் செய்யுள்களுக்கு உரையெழுதிய உரையாசிரியர்கள், உரை விளக்கம் மட்டும் கொடுக்காமல், சமகாலச் சமூகத் தேவையை நிறைவு செய்யும் நோக்கத்தோடும் உரை வரைந்துள்ளனர். இதுவும் சங்க இலக்கிய வாசிப்புப் போக்கில் நிகழ்ந்துள்ளது.
- சமயம் சார்ந்த மடங்களைச் சார்ந்த புலவர்கள், சங்க இலக்கியக் கல்வியைத் தடை செய்தனர் என்று தமிழியல் ஆய்வாளர்களில் சிலர் கருதுகின்றனர். சங்க இலக்கியப் பரவலாக்கத்தை இது தடுத்திருப்பது புலனாகிறது.
- 19 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் சங்க இலக்கியத்தை மீட்டுருவாக்கம் செய்யும் முயற்சியில் அறிஞர்கள் இறங்கிய பிறகே, அவற்றுக்கு முக்கியத்துவம் உருவாகியிருக்கிறது. இடைக்காலம் என்னும் பகுதியைக் கடந்துவரச் சங்க இலக்கியம் பெரும்பாடுபட்டிருக்கிறது எனலாம்.
- செந்தமிழ், செந்தமிழ்ச்செல்வி, கலாநிலையம், சித்தாந்த தீபிகை, தமிழ்ப்பொழில் முதலான இதழ்கள் சங்க இலக்கியப் பதிப்புப் பணிகளிலும் ஆய்வுப்பணிகளிலும் தங்களை ஈடுபடுத்திக் கொண்டன. அவை குறித்த கட்டுரைகளைத் தங்களது ஏடுகளில் வெளியிட்டன.
- சங்க இலக்கியப் பதிப்புகள் வெளிவந்த அதே காலகட்டத்தில் பல்வேறு இலக்கியங்கள் பிறமொழிகளிலும் வெளியிடப்பட்டு வெளிநாட்டு ஆய்வாளர்களின் கவனத்தைப் பெற்றன.

- எம்.எஸ்.பூர்ணலிங்கம் பிள்ளை, வெ.கனகசபைப்பிள்ளை, சீனிவாச அய்யங்கார், எஸ்.கிருஷ்ணசாமி அய்யர் முதலான அறிஞர்கள் சங்க இலக்கியங்களைப் பற்றி ஆங்கிலத்தில் கட்டுரைகளை எழுதி இதழ்களில் வெளியிட்டனர்.
- சங்க இலக்கிய ஆய்வுகள் தமிழரின் பெருமைகளையும் சிறப்புகளையும் விளக்கும் வகையில் மட்டும் அமையாமல், அரசியல், உளவியல், அறிவியல், வானவியல், மொழியியல், சமூகவியல், தொல்லியல், மானுடவியல் முதலான துறைகளோடு இணைத்து ஆராயப்பட்டது.
- ஓலைச்சுவடிகளை அச்சுக்குக் கொண்டு வருதலும் அதன் வழியில் இந்திய தேசியத்தின் பெருமையை ஏகாதிபத்தியத்துக்கு உணர்த்துதலுமாகிய செயல்பாட்டில் சங்க இலக்கியங்கள் முன்னணியில் நின்றன.
- இந்திய தேசியச் சிந்தனையுடன் வரலாற்றைக் கட்டமைக்க முனைந்த அறிஞர்கள் தமிழின் பெருமைகளை ஏற்றுக்கொண்ட அதே வேளையில், மிகப்பக்குவமாக இந்தியப் பெருவட்டத்தில் தமிழகத்தை இணைக்கும் முயற்சியில் ஈடுபட்டனர். இதனால் தென்னிந்திய ஆராய்ய் ஒரு வேறுபட்ட தளத்தில் இயங்க ஆரம்பித்தது. இந்த இரட்டைநிலைப் போக்கு தமிழகத்தில் வேரூன்றியது.
- சங்க இலக்கியப் பதிப்புகளும் சிந்துச் சமவெளி நாகரிகக் கண்டுபிடிப்புகளும் தமிழர்களின் தனித்தன்மையான நாகரிக வரலாற்றை வெளிப்படுத்துவதாகத் திராவிட அறிஞர்கள் கருத்துரைத்தனர். கே.ஏ.நீலகண்ட சாஸ்திரி, ரா.ராகவையங்கார், எம்.சீனிவாச ஐயங்கார், சாமி.சிதம்பரனார், எஸ்.வையாபுரிப்பிள்ளை முதலான தமிழறிஞர்கள் இக்கருத்தின் மீது வினையாற்றியுள்ளனர்.
- சங்க இலக்கியம் பாடப்பட்ட காலத்தில் சமண, பௌத்த சமயங்களின் மேலாண்மை இருந்திருக்கக் கூடும்; அக்காலகட்டத்து இலக்கியமல்லாத சான்றுகள் கிடைக்குமானால் இக்கருத்து மெய்ப்படும் என்று கா.சிவத்தம்பியைப் போன்ற ஆய்வாளர்கள் கருதுகின்றனர். ஆனால் சங்க இலக்கியத் தொகுப்பு மரபை நோக்கும்போது வைதிக சமயத்தின் அதிலும் சைவ சமயத்தின் மேலாண்மையை அறிய முடிகிறது.
- சைவ சமய ஈடுபாடுடைய அறிஞர்கள் தங்களிடம் பத்துப்பாட்டுப் பிரதிகள் முழுமையாக இருந்தும் அவற்றிலிருந்து திருமுருகாற்றுப்படையை மட்டுமே முதன்மைப்படுத்தினர் என்பர்.

- தமிழகத்திலும் யாழ்ப்பாணத்திலும் சைவை சித்தாந்த மகா சமாஜங்களும் சைவ சபைகளும் சைவ சிந்தாந்த கழகங்களும் சைவப்பிரகாச சபைகளும் சங்க இலக்கியங்களில் ஆழ்ந்த அக்கறை காட்டின. சங்க இலக்கிய ஆராய்ச்சி மாநாடுகளை நடத்தின. நற்றிணைச் சொற்பொழிவுகள், கலித்தொகைச் சொற்பொழிவுகள், பரிபாடல் சொற்பொழிவுகள், அகநானூற்றுச் சொற்பொழிவுகள், புறநானூற்றுச் சொற்பொழிவுகள், பத்துப்பாட்டுச் சொற்பொழிவுகள் முதலான தொகுப்பு நூல்கள் வெளியிடப்பெற்றன.
- சங்க இலக்கியங்கள், சங்கம் என்ற அமைப்பு ஆகியவற்றில் புத்த, சமண சமயத்தின் பங்களிப்புக் குறித்தும் சைவ சமயத்தின் பங்களிப்பைக் குறித்தும் வரலாற்று ஆய்வாளர்களுக்கும் சைவ சமயச் சார்புடைய ஆய்வாளர்களுக்கும் கருத்து வேறுபாடுகள் நிலவின.
- இறையனார் களவியல் உரையில் கூறப்பட்டுள்ள சங்கம் குறித்த செய்திகள் யாவும் உண்மையே என்று சைவ சமயச் சார்புடைய ந.சி.கந்தையா பிள்ளை, அ.சிதம்பரனார் முதலானவர்கள் வாதிட்டனர்.
- திராவிட இயக்கத்தினர் தங்களது கருத்தியல் செயல்பாடுகளில் இலக்கிய ஆய்வுகளையும் ஒரு பொருண்மையெனக் கொண்டனர். ஆரியக் கலப்பு மிகவும் குறைந்த சங்க இலக்கியத்தையும் அதன் சிறப்பையும் தனது கருத்தியலைப் பரப்பும் நோக்கத்தோடு கையிலெடுத்துக் கொண்டனர்.
- தமிழர்கள் இந்தியாவின் பூர்வீகக் குடிகள், உலக நாகரிகத்துக்கு வழிகாட்டியாக இருந்தவர்கள், உலகில் முதன் முதலில் தோன்றிய மனித இனம் முதலான கருத்துக்கள் திராவிட இயக்க ஆய்வாளர்களால் முன்னெடுக்கப்பட்டன.
- சங்க இலக்கியத்தைப் பாமரர்களிடம் கொண்டு சேர்த்தது திராவிட இயக்கம். தங்களில் அரசியல் குரலுக்குச் சாதகமான பண்புகளைச் சங்க இலக்கியம் கொண்டிருப்பதாகத் திராவிட இயக்கம் கருதியது. எனவே அதனைச் சமகால நிலையுடன் ஒப்பிட்டுப் பொதுவெளியில் முன்வைத்தது.
- அறிஞர் அண்ணா, இரா.நெடுஞ்செழியன், மு.கருணாநிதி ஆகிய திராவிட இயக்கத் தலைவர்கள் சங்க இலக்கியம் குறித்துப் பல்வேறு ஆக்கங்களைச் செய்யவும் எழுதவும் பேசவும் செய்தனர்.
- தமிழ்நாட்டின் மார்க்சிய இயக்கம் தனது இயக்கச் செயல்பாடுகளில் சங்க இலக்கிய ஆய்வுக்குக் குறிப்பிடத்தக்க இடமளித்தது. தமிழ் குறித்தும் சங்க

இலக்கியம் குறித்தும் திராவிட இயக்கம் முன்வைத்த கருத்தாக்கங்களுக்கு எதிர்வினையாற்றியே தீர வேண்டிய கட்டாயத்திலிருந்தது தமிழக மார்க்சிய இயக்கம்.

- தொல்காப்பியத்துள் பொருளதிகாரம், சங்க இலக்கியங்களுள் புறநானூறு ஆகியவற்றை மட்டுமே மார்க்சியர் ஆய்வு செய்துள்ளனர் என்பர். அகப்பாடல்களை மார்க்சியர்கள் உரிய கவனமெடுத்து ஆய்வு செய்யவில்லை என்று மதிப்பிடுவோரும் உண்டு.
- கே.முத்தையா, கோ.கேசவன் ஆகிய சில மார்க்சியர்கள் மட்டுமே சங்க இலக்கிய ஆய்வுகளில் அக்கறை செலுத்தினர். காலம் பற்றிய ஆய்வில் மார்க்சியர்கள் பெரிதும் ஆர்வம் காட்டவில்லை. தேவைப்படும்பொழுது எஸ்.வையாபுரிப்பிள்ளை போன்றோரின் முடிவுகளையே வழிமொழிந்தனர்.
- கா.சிவத்தம்பி, கைலாசபதி முதலான ஈழத்து மார்க்சிய அறிஞர்கள் சங்க இலக்கியம் பற்றிய கணிசமான ஆய்வுகளைச் செய்துள்ளனர். பண்டைத்தமிழ்ச் சமூகத்தின் நிகழ்த்துகலை மரபு குறித்த கா.சிவத்தம்பியின் ஆய்வு குறிப்பிடத்தக்கது.
- மார்க்சியர்கள் சமூகவியல், பொருளியல் அடிப்படையில் தம் ஆய்வுகளை முன்வைத்தனர். சர்வதேசியம், இந்திய தேசியம் ஆகிய கருத்தாக்கங்களின் அடிப்படையிலேயே தங்களது சங்க இலக்கிய ஆய்வையும் முன்வைத்தனர். தமிழ்த்தேசியம் என்ற கருத்துவருவாக்கத்தை மறுத்து இந்திய தேசிய மறுமலர்ச்சி இயக்கத்தின் போக்கினையொட்டியே தங்களது விமர்சனப் பார்வையை அமைத்துக்கொண்டனர்.
- ஆங்கிலேயர்களை இந்தியாவிலிருந்து வெளியேற்றும் முயற்சியினூடாக, இங்கிருந்த பல்வேறு சாதியக் குழுக்கள் தன்னெழுச்சி பெற்றன. இந்த எழுச்சியானது அரசியல், கல்வி, மதம், இலக்கியம் முதலிய அனைத்துப் பண்பாட்டுத் துறைகளிலும் எதிரொலித்தது. ஏற்கனவே தமிழ்ப்பண்பாடு அரசியல் சூழலோடு இணைத்துப் பேசப்பட்ட சங்க இலக்கியம், இச்சாதியச் சூழலுக்கு ஏற்பவும் வாசிக்கப்பட்டது. சாதிய இயக்கங்கள் மீண்டும் தங்களைப் புதுப்பித்துக் கொண்டு வேகமாக இயங்கி வரும் சூழலில் சங்க இலக்கியத்திலிருந்து தொன்மை தேடும் முயற்சி தொடர்ந்து நடைபெற்று வருகிறது.

- சைவ வேளாளர் எழுச்சியானது சங்க இலக்கியத்தில் தங்களது வேர்களைத் தேடும் முயற்சியில் தொடங்கியது. மறைமலையடிகளைப் போன்றவர்கள் இவ்வாறான நோக்கில் சங்க இலக்கியத்தில் தொழிற்பட்டுள்ளனர். பழங்காலந்தொட்டே உழவுத் தொழிலுக்கும் வணிகத் தொழிலுக்கும் உரிமையுடையவர்கள் வேளாளர்கள் என்ற கருத்தை முன்வைத்தனர். அரசத் தொழிலுக்கும் உரிமையுடையவர்கள் வேளாளர்கள் என்றும் வருணப்பாகுபாட்டில் வேளாளர்கள் நாலாவது வருணத்தோடு பிணிக்கப்பட்டிருக்கவில்லை என்றும் கருதுவர்.
- மள்ளர் என்னும் சமுதாயத்தினர் சங்க இலக்கியங்களில் குறிப்பாக புறநானூற்றில் போற்றப்படுகிற தலைவர்கள் அனைவருமே மள்ளர்கள் என்று கருத்துரைக்கின்றனர். அகப்பொருள் பற்றிப் பாடும் நூல்களும் மருத நிலத்துத் தலைமக்களான மள்ளர், மள்ளத்தியர்களையே தலைவன் தலைவியாக் கொண்டு இயற்றப்பட்டுள்ளன என்பர்.
- சங்க கால அரசருக்குத் துணையாக இருந்தவர்கள் மறவர்கள் என்றும், இதனால் படைவீரர், படைத்தலைவர், அமைச்சர் ஆகிய பொறுப்புகளை ஏற்றுச் செயல்பட்டனர் என்றும், சங்க இலக்கியத்தில் காணப்பெறும் மறவர்களை, இன்றைய மறவர்களின் முன்னோர்கள் என்றும், சங்க இலக்கியத்தில் இடம்பெறும் மறவர் பாடல்களை எல்லாம் மறக்குடியினரின் பாடல்களாகவும், எயினர், மறவர், எயிற்றியர், மறத்தியர், மூதின் மகளிர் போன்றவர்களை மறக்குடி முன்னோர்கள் என்றும் குறிப்பதைக் காணமுடிகிறது.
- அருந்ததி இனத்தைச் சேர்ந்தோர் சங்க இலக்கியங்களில் கூறப்பெறும் அருந்ததி என்னும் பெண் அதியர் குடி வழி வந்தவள் என்றும் அவளுடைய பெயரிலேயே பிற்காலக்குடிகள் சாதிப்பெயராக அறியப்பட்டார்கள் என்றும் கூறுவர்.
- தலித் மக்களுக்கான அடையாளத்தைச் சங்க இலக்கியங்களில் தேடும் முயற்சியை ராஜ்கௌதமன் போன்ற ஆய்வாளர்கள் முன்னெடுத்துள்ளனர். தலித் மக்களாக, கானக்குறவர்கள், எயின வேடர்கள், பரதவர், உமணர், ஆயர், உழவர், கை வினைஞர், வணிகர், கலைக்குழுவினர், புலையர் ஆகிய மக்களை இனங்காண்கின்றனர்.
- அரசியல், சாதி அமைப்புகளும் இயக்கங்களும் பல்வேறு வகைகளில் சங்க இலக்கியங்களை வாசித்துள்ளன. பல்வேறு முரண்பட்ட கருத்துக்கள் முன்மொழியப்பட்டு எதிர்கொள்ளப்பட்டு விவாதிக்கப்பட்டுள்ளன. ஆனாலும்

தமிழ்நாட்டில் தொன்மையான அடையாளங்களைத் தேடும் யாவரும் தேடும் களஞ்சியமாகச் சங்க இலக்கியம் இருக்கிறது எனலாம்.

- தமிழ், திராவிடம் என்னும் இரு சொற்களும் ஒரு பொருட் பன்மொழியாகவும் எதிரிணைச் சொற்களாகவும் கொள்ளும் வழமை உண்டு. கி.பி. ஏழாம் நூற்றாண்டிலிருந்து திராவிட என்னும் சொற்பதம் இந்திய இலக்கியங்களில் வரலாற்றுக் குறிப்புகளில் இடம்பெறுகிறது.
- திராவிடம் என்னும் வடமொழிச் சொல்லே தமிழாகத் திரிந்தது என்போர் உளர். தமிழ் என்னும் சொல்லிலிருந்தே திராவிடம் என்னும் சொல் பிறந்தது என்று கருதும் அறிஞர்களும் உள்ளனர். திராவிடம் என்றாலும் தமிழ் என்றாலும் ஒரே பொருள்தான் என்று தந்தை பெரியார் உள்ளிட்டோர் கருதினர்.
- திராவிடம் என்பது தமிழுக்கான மாற்றுச் சொல்லாகவும், தமிழக, ஆந்திர, கருநாடகம், கேரளப் பகுதிகளை உள்ளடக்கிய தென்னாட்டைக் குறிப்பதாகவும், பார்ப்பனிய மேலாண்மைக்கு எதிரான சொல்லாகவும் முன்னிறுத்தப்படுகிறது.
- திராவிடம் என்ற சொல், கால்டுவெல்லின் திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம் குறித்த நூல் 1856 இல் வெளியிடப்பட்ட பிறகே பரவலாக அறியப்பட்டது.
- ஆதி திராவிட ஜன சபை, திராவிட மகாஜன சபை என்று அயோத்திதாசப் பண்டிதரும், ரெட்டமலை சீனிவாசனும் தொடங்கிய அமைப்புகள் திராவிட என்னும் சொல்லைத் தனது தலைப்புகளில் கொண்டிருந்தன. ஆதிக்க வகுப்பினருக்கு எதிராக ஒடுக்கப்பட்ட மக்களின் உரிமைக் குரலாகத் திராவிடன் என்ற சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது. பிறகு, பார்ப்பனரல்லாத அனைத்துச் சாதியினருக்குமான பொதுப் பெயராக வரலாற்றில் இடம் பிடித்தது.
- தமிழர் என்ற சொற்பிரயோகத்துக்குள் எல்லாச் சமூகக் குழுமங்களையும் கொண்டு வர முடியாதபோது, திராவிடர் என்ற சொல் அனைவரையும் கொண்டு வருவதால் இப்பதம் அவசியப்பட்டது என்று கார்த்திகேசு சிவத்தம்பி போன்றோர் கருதுகின்றனர்.
- திராவிட என்பது திராவிடர் என்ற இன மக்களைக் குறிப்பதாகவும் திராவிட என்ற நில எல்லைப் பகுதியைக் குறிப்பதாகவும் அமைகிறது.
- 1916 இல் தென்னிந்திய நலவுரிமைச் சங்கம் தோற்றுவிக்கப்பட்டபோது, சங்கத்தின் சார்பில் தொடங்கிய ஆங்கிலம், தமிழ், தெலுங்கு ஆகிய மூன்று மொழிகளிலும்

உருவாக்கப்பட்ட நாளிதழ்களில் தமிழ் நாளிதழுக்கு மட்டும் திராவிடன் என்ற பெயர் வைக்கப்பட்டது.

- தமிழ்நாட்டில் தோன்றிய திராவிட உணர்வு, பிற பகுதிகளில் ஏற்படவில்லை என்று ஆய்வாளர்கள் கருதுகின்றனர். கன்னடர்களோ, தெலுங்கர்களோ, மலையாளிகளோ தங்களைத் திராவிடர்கள் என்று கருதவில்லை என்று கருத்துரைக்கின்றனர்.
- இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் திராவிடத் தேசியம் முழுமையான வடிவத்தை எய்தியது. எனினும் சுயமரியாதை இயக்கம் தோன்றிய பின்பே அது ஒரு திட்டவட்டமான வடிவமைப்பைப் பெற்றது.
- பிராமணர்களுக்கும் பிராமணரல்லாதோருக்கும் ஏற்பட்ட உரிமைப் போராட்டத்தின் விளைவே தென்னிந்திய நலவுரிமைச் சங்கமாகும். அன்றைய சூழலில் பிராமணர்களால் அழுத்தப்பட்டுக் கிடந்த சைவம், தனித்தமிழ் உள்ளிட்ட பல்வேறு போக்குகளை எழுச்சி பெறச் செய்தது திராவிடக் கருத்துநிலை.
- தமிழ்நாட்டில் வாழும் சாதிக் குழுமங்களைச் சேர்ந்தவர்கள், தங்களின் சமூக நிலைமையையும் தங்கள் சமூக அசைவியக்கத்தையும் வரையறை செய்த பிராமணக் கருத்துநிலை தம்மீது திணித்ததென அவர்கள் கண்ட, கொண்ட மேலாண்மைக்கெதிராக நடத்திய போராட்டங்களினூடே மேற்கிளம்பினதும், அந்தப் போராட்டங்களை நியாயப்படுத்துவதற்குப் பயன்படுத்தப்பட்டதுமான சிந்தனை நிலைப்பாடே, திராவிடக் கருத்துநிலை ஆகும்.
- இந்து சமயம் முன்வைத்த வருணாசிரம தர்மத்தை எதிர்த்தலும் சூத்திரர்கள் இழிவுபடுத்தப்படாமையுமே திராவிட இயக்கத்தின் முதன்மையான பணியாக அமைந்தது. சாதியைப் பேசுவதன் நீட்சியாகச் சமயத்தை முற்றிலுமாக தந்தை பெரியார் எதிர்த்தார். சமயக் குறியிடுகளை அழித்தார். சமயச் சடங்குகளைக் கடுமையாக அம்பலப்படுத்தினார். சமயச் சொல்லாடல்களை மறுத்தார்.
- இந்து சமயம் பெண்களுக்கு வழங்கியிருந்த இரண்டாமிடத்தை பெரியார் மிகக் கடுமையாக எதிர்த்தார். ஆண் பெண் சமத்துவத்துக்கான பல்வேறு நடவடிக்கைகளைத் திராவிட இயக்கம் முன்னெடுத்தது.
- திராவிட இயக்கத்தின் பண்பாட்டு அரசியல் செயல்பாடுகளில் திராவிட முன்னேற்றக் கழகம் தோன்றியது. தந்தை பெரியாரின் செயல்பாடுகளில் கருத்து மாறுபட்ட சி.என். அண்ணாதுரை அதன் நிறுவனரானார்.

- திராவிட முன்னேற்றக்கழகமும் பின்னாளில் பல்வேறு இயக்கங்களாகப் பிரிந்து பிரிந்து சென்றது. எந்தப் பிரிவிலும் அது திராவிட என்னும் சொல்லை ஒட்டியே பிறந்தது என்பது கருத்தில் கொள்ளத் தக்கது.
- பெரியாரின் இலக்கியம் குறித்த பார்வை முற்று முழுவதுமாக பயன்பாட்டு நோக்கில் அமைவது ஆகும். இலக்கியத்தின் அழகியல் மதிப்புக்கு முதன்மை கொடுப்பதை அவர் மறுத்தார். பயன்மதிப்பையே அவர் வலியுறுத்தினார்.
- தமிழ்நாட்டில் பண்பாட்டு அரசியலில் ஈடுபடும் அக்கறையின் காரணமாகவே அவர் இலக்கிய ஆய்வுகளிலும் ஈடுபட்டார்.
- இராமாயணம், மகாபாரதத்துக்கு எதிராகப் பெரியார் சங்க இலக்கியத்தை முன்வைத்தார். சங்க இலக்கியங்கள் குறித்து அவர் மிகுதியும் எழுதவில்லை, பேசவில்லை எனினும் சங்க இலக்கியத்தை வலியுறுத்திப் பேசியுள்ளார்.
- மேலை நாட்டு இலக்கியங்களோடு தமிழ்நாட்டு இலக்கியங்களை ஒப்பிட்டுக் காட்டும் பெரியார், மதத்தின் பிடியில் தமிழ் இலக்கியங்கள் சிக்கியிருப்பதாக எடுத்துக்காட்டுகிறார். ஆகவே எல்லா இலக்கியங்களையும் புலவர்களையும் கடுமையாகச் சாடுகிறார்.
- சங்க இலக்கியங்களுக்குப் பின் வந்த இலக்கியங்களில் தமிழர் நாகரிகம், கலை, பண்பாடு போன்றவற்றைக் காண்பதே அரிதாயிற்று என்கிறார் பெரியார்.
- பார்ப்பனருக்கு வடமொழி எப்படித் தங்களின் இன நலத்துக்குப் பயன்படுகிறதோ, அப்படித்தான் தமிழ், தமிழ்ப்புலவர்களுக்குத் தங்கள் நலத்துக்கு மட்டுமே பயன்படுகிறது என்று பெரியார் கடுமையாகச் சாடினார்.
- சங்க இலக்கியங்கள், திருக்குறள் உள்ளிட்டவற்றைத் தமிழருக்கான அடையாள இலக்கியமாகப் பெரியார் முன்மொழிந்துள்ளார். அவை தரவிரப் பிற இலக்கியங்களைக் கடுமையாகச் சாடியுள்ளார். அவற்றில் பலவற்றைத் தீயிலிட்டுக் கொளுத்தவுமான பண்பாட்டு நடவடிக்கைகளில் ஈடுபட்டுள்ளார்.
- சங்க இலக்கியங்களைக் குறித்துப் பெரியார் மிகுதியும் ஆராயவில்லையெனினும் அதன் மீதான தன்னுடைய ஈடுபாட்டைப் புலப்படுத்தியுள்ளார். பிற்காலத்தில் அவருடைய வழித் தோன்றல்களாக அண்ணாதுரை போன்றோர் சங்க இலக்கியத்தில் ஆழ்ந்து ஈடுபட, தந்தை பெரியாரே உத்வேகமாக இருந்துள்ளார் எனலாம். தமிழ் ஆய்வாளர்கள் பலர் சங்க இலக்கிய ஆய்வுகளில் ஈடுபட உத்வேகமளித்துள்ளார்.

- இந்திய விடுதலைக் காலத்தைத் தொடர்ந்து தந்தை பெரியார், சி.என்.அண்ணாதுரை இருவருக்குமிடையே பல்வேறு காரணங்களைப் பற்றிக் கருத்து வேறுபாடுகள் தோன்றின. திராவிடர் கழகம் என்ற அமைப்பிலிருந்து திராவிட முன்னேற்றக் கழகம் என்ற புதிய அமைப்புத் தோன்றியது. இக்காலகட்டத்தை இரண்டாம் கட்டத் திராவிட இயக்கம் எனலாம்.
- இந்திய விடுதலை நாளைத் துக்க நாளாக அறிவித்தார் தந்தை பெரியார். சி.என்.அண்ணாதுரை தனது திராவிட நாடு ஏட்டில் அந்த நாளை ‘இன்பநாள்’ என்று எழுதினார். ஆங்கிலேயர்-ஆரியர் என்ற இரண்டு எதிரிகளில் ஒருவர் குறைந்திருக்கிறார் என்ற அடிப்படையில் அதனை வரவேற்க வேண்டுமென்று கருதினார். இந்த வேறுபாடு இருவருக்குமிடையில் பிணக்கை ஏற்படுத்தியது.
- பெரியாரின் திருமண ஏற்பாடு குறித்த விவாதங்களிலும் அண்ணாதுரை முரண்பட்டிருந்தார். தன்னைப்போலவே பெரியாரின் திருமண ஏற்பாட்டில் முரண்பட்டிருந்த பிற அமைப்புத் தோழர்களோடு ‘திராவிட முன்னேற்றக் கழகம்’ என்ற புதிய அமைப்பினைத் தோற்றுவித்தார்.
- சி.என்.அண்ணாதுரையின் அரசியல் குறிக்கோள் என்பது கால்டுவெல்லின் ஒப்பிலக்கணம், சங்க இலக்கியக் கண்டுபிடிப்புகள், சிந்துச்சமவெளிக் கண்டுபிடிப்புகள், ஐரோப்பிய சனநாயகச் சிந்தனைகள் ஆகியவற்றை உட்கொண்டதாகும்.
- தமிழக வரலாற்றில் தமிழ்மொழி குறித்த சிந்தனை பல்வேறு மாற்றங்களை அடைந்து வந்துள்ளது. தமிழ் தேசிய இனத்துக்கு உணர்ச்சி ஊட்டக்கூடிய ஓரம்சமாக மொழி இருந்து வந்திருக்கிறது. மொழி என்பது வெறும் கருவியாக மட்டுமின்றி, தேசிய இனத்தின் அடையாளமாகவும் திகழ்ந்திருக்கிறது.
- சங்க காலத்தில் தமிழ்மொழியில் வந்து கலந்த வடமொழி, இடைக்காலத்தில் அதிகமான இடத்தைப் பெற்று ஆதிக்கம் செலுத்தத் தொடங்கியது.
- சோழர் காலத்தில் பெருங்காப்பியங்கள் தோன்றின. இக்காலகட்டத்தில் வடமொழி எதிர்ப்பும் தமிழை உயர்த்திப்பிடிக்கும் போக்கும் காணக்கிடைக்கிறது. தமிழ்விடு தூது இலக்கியத்தில் தமிழுக்கு வடமொழி ஏவல் செய்வதாகவே வருணிக்கப்படுகிறது.
- விஜயநகரப் பேரரசு, நாயக்க, மராட்டிய அரசுகள் ஆகிய வேற்றரசுகளின் காலத்தில் பிற மொழியினர் தமிழகத்தில் மிகுதியும் குடியேறினர். எனவே தமிழகம் கலப்புப் பண்பாடுகளுக்குரிய களமாயிற்று.
- பெரியாரின் மொழி பற்றிய கருத்துக்கள் வெளிப்படையானவை. அதனாலேயே அவருடைய கருத்துக்களில் ஒரு தொடர்ச்சியின்மை வெளிப்படுகிறது என்று கருதுவோரும் உள்ளனர். தமிழைக் காட்டுமிராண்டிக் காலத்து மொழி என்றும் தமிழ் இலக்கியங்கள் பயன்பாட்டுக்கு உதவாதவை என்றும் பெரியார் கடுமையாகச் சாடினார்.
- மொழி பற்றிய சிந்தனைகளிலும் பெரியாரும் அண்ணாதுரையும் இருவேறு துருவங்களில் நின்றனர். மொழியில் கருத்துக்கு முதன்மையளித்தார் பெரியார். வடிவத்துக்கு முன்னுரிமை அளித்தார் அண்ணாதுரை.

- திராவிட இன அடிப்படையில் சங்க இலக்கியத்தை ஆராய்ந்த சி.என்.அண்ணாதுரை தமிழின் தொன்மை, தனித்தன்மை, பெருமை என்ற அடிப்படையில் தனது கருத்துக்களை முன்வைத்தார். பழந்தமிழகத்தின் வரலாற்றையும் தமிழர்களின் வீரத்தையும் அவர்களின் போர் முறையையும், வாழ்வியலையும், செல்வச் செழிப்பையும், சங்க இலக்கியச் சிறப்பையும் இன உணர்வை வளர்க்கும் வகையில் வெகு மக்களிடம் கொண்டு சேர்த்தார் அண்ணாதுரை.
- சங்க இலக்கியங்களைச் சிறு சிறு பிரசுரங்களாக்கி மக்கள் மத்தியில் பரப்பிட வேண்டும் என்று அண்ணாதுரை பல இடங்களில் பேசியும் எழுதியும் வந்தார். அவரது கூற்றுக்கிணங்க, சிறு சிறு நூல்கள் வெளியிடப்பட்டன. அதனைத் தொடர்ந்து சங்க இலக்கியம் தொடர்பான ஆய்வுகள், எளிய உரைகள், கட்டுரைகள் போன்றவை வெளிவரத்தொடங்கின எனலாம்.
- கம்பராமாயணத்துக்கு மாற்றாக அண்ணாதுரை சங்க இலக்கியங்களை முன்மொழிந்தார். எனவேதான் கம்பராமாயணத்தைப் பழித்துப் பேசும் இடங்களில் நற்றிணையை, நல்ல குறுந்தொகையை, கற்றறிந்தோர் ஏத்தும் கலியை, அகத்தை, புறத்தை அழிக்க நாங்கள் புறப்படவில்லை என்று பேசினார்.
- தமிழர்களுக்குத் தனிக்கலை உண்டு என்றும் சங்க நூல்கள் அக்கலைச் செல்வத்தைக் காட்டுகின்றன என்றும் தனியான கலையுடன் தனியான வாழ்வும், தனியரசும் பெற்று வாழ்ந்த தமிழர், பின்னர் தாழ்ச்சியுற்றுத் தன்மானம் இழந்து தன்னரசு இழந்ததற்குக் காரணம் கம்பராமாயணம், பெரிய புராணம் போன்ற நூல்களே என்று கருத்துரைத்தார் அண்ணாதுரை.
- புராண இதிகாசக் கருத்துக்களின் தாக்கமில்லாத சங்க இலக்கியங்களை உயர்த்திப் பிடிப்பதும் புராணங்களின் தன்மையைக் கேலி செய்வதும், சங்க இலக்கியத்தின் பொருண்மைகளோடு தற்கால வாழ்வை ஒப்பிட்டு, சங்க காலத்தைப் பெருமைப்படுத்தியும் அண்ணாதுரை பேசியும் எழுதியும் வந்தார்.
- பழந்தமிழகத்தின் ஆட்சிச் சிறப்பையும் மன்னர்களின் சிறப்புக்களையும் எடுத்துக்காட்டித் தற்காலத் தமிழகம் மேன்மையடைய வேண்டும் என்று எழுதியும் பேசியும் வந்தார் அண்ணாதுரை.
- சங்க இலக்கியங்களில் உள்ள இயற்கைக் காட்சிகளை அண்ணாதுரை பலவாறாக விதந்து போற்றிப் பேசுகிறார். அவை யாவும் உன்னதமான, காணுதற்கு இனிய காட்சிகள் என்பது அவர் கருத்தாகும். சங்க இலக்கியங்களிலுள்ள இனிய காட்சிகள் பலவற்றை விவரித்து எழுதியுள்ளார் அவர்.
- பண்டைத் தமிழ்ச் சமூகத்தின் காதல், வீரம், கவிதை வளம், கொடை, அறம், போர், ஊர்ச்சிறப்பு, ஊராள்வோன் சிறப்பு எனப் பலவகையான சிறப்புகளைச் சங்க இலக்கியத்திலிருந்து எடுத்துக்காட்டுகிறார் அண்ணாதுரை.
- அண்ணாதுரை முன்னெடுத்த சங்க இலக்கிய மேன்மையை மேலும் விதந்து பேசியவர் கருணாநிதியாவார். தமிழர்களின் கல்விச்சிறப்பு, சங்க கால மன்னர்களின் பெருமை மிகு வரலாறு, வாணிபச் சிறப்பு என்றெல்லாம் பாராட்டி எழுதியுள்ளார்.
- மு.கருணாநிதியின் தமிழின உணர்வும் தமிழ் மான உணர்வும் சங்க இலக்கியத்தில் ஈடுபாடு கொள்ள வைத்தது என்று சி.பாலசுப்பிரமணியன்

கருத்துரைப்பார். மு.கருணாநிதியின் பேச்சிலும் எழுத்திலும் சங்க இலக்கியத் தொடர்களோ, பாட்டுகளோ, கருத்துக்களோ இடம்பெறாமற் போகாது என்பர்.

- எட்டுத்தொகை, பத்துப்பாட்டு இவற்றிலிருந்து நூறு பாடல்களைத் தேர்ந்தெடுத்துக் கவிதை நடையில் சங்கத் தமிழ் என்ற மறு ஆக்கத்தைப் படைத்திருக்கிறார் மு.கருணாநிதி. தமிழ் உணர்வு, தமிழ் இனப்பற்று ஆகியவற்றை உட்கொண்டதாக அக்கவிதை உரை அமைந்திருக்கிறது எனலாம்.
- சங்கத் தமிழ் எழுத்தோவியங்களின் வழியாகச் சங்க இலக்கியத்தைத் தமிழர்களின் வீரத்தின் அடையாளமாகவும், வரலாற்றுப் பேழையாகவும் காட்ட முயற்சிக்கிறார் மு.கருணாநிதி.
- மு.கருணாநிதியின் உரை விளக்கத்தில், மூலத்தில் இல்லாத சில கருத்துக்கள் தரப்பட்டுள்ளன. தோழியின் கூற்றாக அமைந்த பாடலில் தலைவன் தலைவியின் உரையாடல் இடம்பெறுவது முதலான மாற்றங்கள் இடம்பெற்றுள்ளன. வாசகர்களுக்குப் பாடலின் கருத்தைக் கொண்டு சேர்க்கும் முயற்சியாகவே இது அமைகின்றது எனலாம்.
- மு.கருணாநிதியின் உரை விளக்கத்தில் சங்க இலக்கியங்களில் உள்ள பகுத்தறிவுக் கருத்துக்கள் முதன்மையளித்து அழுத்தம் கொடுத்து விவரிக்கப்படுகின்றன. திராவிடக் கருத்துநிலையைத் தனது உரை விளக்கத்தில் கலந்து அளித்துள்ளார் மு.கருணாநிதி.
- திராவிட இயக்கத்திற்கு ஆதரவான கருத்துடைய ஆய்வாளர்கள் சங்க இலக்கிய ஆய்வுகளில் ஈடுபட்டனர். அவர்களது ஆய்வுகள் திராவிட இயக்கக் கருத்தியல்களுக்கு வளம் சேர்ப்பதாக அமைந்தன.
- சி.இலக்குவனார் சங்க இலக்கியங்களைப் பற்றிக் குறிப்பிடத்தக்க ஆய்வுகளைச் செய்தவர் ஆவார். சங்கம் பற்றி ஐயத்தோடு எழுப்பப்படும் கேள்விகளை எதிர்கொள்ளும் அவர், சங்கம் பற்றிய செய்திகள் நம்புதற்குரியன என்கிறார்.
- சங்க இலக்கியத்தில் காணப்படும் ஊர்ப்பெயர்கள் இன்றும் வழக்கில் உள்ளன என்று வாதிடும் சி.இலக்குவனார், பழந்தமிழர் வாழ்வு சிறப்பாக இருந்தது என்றும் ஆரியம் உட்புகுவதற்கு முன்பு தமிழரின் வாழ்வு செம்மையுற்றிருந்தது என்றும் கருதுகிறார்.
- பண்டைத் தமிழரின் கடவுள் நம்பிக்கை, சிறு தெய்வ வழிபாட்டு முறை என்றும் அது வடமொழிப் புராணங்களாலும், சமய வெறியினாலும் பெருந்தெய்வ வழிபாட்டு முறையாக மாறியது என்றும் சி.இலக்குவனார் கருத்துரைக்கிறார்.
- பண்டைத் தமிழர்களுக்குச் சமய அடையாளங்களும் வழிபாட்டு முறைகளும் தனித்துவம் உடையனவாக இருந்தன என்றும் ஆரியர்களின் வருகையாலேயே இம்முறைகள் மாற்றமடைந்தன என்று சி.இலக்குவனார் கருதுகிறார். இவ்வாறு சங்க இலக்கியம் முன்வைக்கும் தமிழ்ச் சமூகம் ஆரியக் கலப்பற்ற உயரிய சமூகமாக, தனது தனித்தன்மையைத் தக்கவைத்துக் கொண்டிருந்த சமூகமாக இருந்தது என்று நிறுவ முயலுகிறார் எனலாம்.
- திராவிட சித்தாந்தத்தின் தனித்தன்மையை நிறுவுவதற்குப் பல்துறை பன்மொழி அறிவு தேவையாக இருந்தது என்றும் அத்தேவையினை மிகச்சரியாக

நிறைவேற்றியவர் பன்மொழிப்புலவர் கா.அப்பாத்துரையார் என்றும் ஆய்வாளர்கள் கருதுகின்றனர்.

- கா.அப்பாத்துரையார் தமிழின் மூலத்தை ஆராய்ந்தார். அவர் துருவித் துருவித் தமிழினத்தின் வரலாற்றை ஆராய்ந்தார். அவ்வாறு ஆராய்ந்தது தமிழ் இனத்துக்கும் மற்ற இனங்களுக்கும் பகை மூட்ட அல்ல; தோழமையை ஏற்படுத்தவே என்று அண்ணாதுரை பாராட்டியுள்ளார்.
- கடவுள் நம்பிக்கையும் சைவ சமய ஈடுபாடும் கொண்டவராக அப்பாத்துரையார் இருந்தாரெனினும் திராவிட தேசியக் கண்ணோட்டம் கொண்டவராகவே விளங்கினார். திராவிடர் கழகத்தின் பொதுச்செயலாளராக அப்பாத்துரையாரை அமர்த்த வேண்டும் என்று பாவேந்தர் பாரதிதாசன் விரும்பினார். அந்த அளவுக்குத் திராவிட இயக்கத்தின் செயல்பாட்டாளராகவும் கருத்துநிலை பரப்புபவராகவும் அப்பாத்துரையார் அறியப்பட்டார் எனலாம்.
- தென்னாட்டுப் போர்க்களங்கள் என்னும் நூலின் வழியாகப் பண்டைத் தமிழரின் போர்ச்சிறப்புகளைப் பட்டியலிட்டுக் காட்டினார் அப்பாத்துரையார். பண்டைத் தமிழ்ச் சமூகத்தையும் சமகாலத்தையும் ஒப்பிட்டி இன்றைய தமிழர் மரபு அயல் மொழியினாலும், ஆரியர்களாலும் அடிமைப்பட்டுக் கிடக்கிறது என்று கருத்துரைக்கிறார் கா.அப்பாத்துரையார்.
- ஆரிய நாகரிகத்தைவிடத் திராவிட நாகரிகம் பழமையானது என்பதற்குப் பல்வேறு சான்றுகளைக் காட்டி வாதிடுகிறார் கா.அப்பாத்துரையார். பண்டைத் தமிழர்களின் வாணிபச் சிறப்பையும் அவர் எடுத்துரைக்கிறார்.
- கா.அப்பாத்துரையார் எழுதிய நூல்கள் சங்க இலக்கியங்களை அடிப்படையாகக் கொண்டு, தமிழ்நாட்டின் வரலாற்றுப் பகுதிகளை வெளிக்கொணருவனவாக அமைந்தன.
- மு.வரதராசனாரின் ஆய்வுகள், திராவிடக் கருத்தியல்களை ஒட்டியதாகவும் திராவிட முன்னேற்றக் கழகத்தினர் மேடைகளில் சங்க இலக்கியத்தைப் பயன்படுத்த வாய்ப்பேற்படுத்திக் கொடுப்பனவாகவும் அமைந்தன.
- அண்ணாதுரை விரும்பிய சங்க இலக்கியங்களைக் குறித்த எளிய, சிறு சிறு வெளியீடுகள் என்ற கருத்தைச் செயல்வடிவுக்குக் கொண்டு வந்தவர் மு.வரதராசனார்.
- பாமரரும் சங்க இலக்கியத்தைப் பயில வேண்டும் என்ற நோக்கத்துடன் எளிய நடையில் சங்க இலக்கியங்களைக் குறித்த நூல்களைப் படைத்தார் மு.வரதராசனார்.
- மு.வரதராசனார் சங்க இலக்கியங்களைக் குறித்து உருவாக்கிய சித்திரங்களில் அக்காலகட்டத்து வாழ்க்கையைப் பற்றிய பெருமித உணர்வை வெளிப்படுத்துகிறார். மு.வ. காட்டிய சங்கச் சித்திரங்களைத் திராவிட இயக்கப் பேச்சாளர்கள் அப்படியே மேடையில் வழிமொழிந்தார்கள்.
- தமிழ் மறுமலர்ச்சி இயக்கத்தினரின் மற்றொரு போக்கு, தமிழர் பெருமை பேசும் ஆங்கில நூல்களைத் தமிழில் மொழிபெயர்த்து வெளியிடுதலாகும். பி.டி.சீனிவாச

அய்யங்கார், வி.ஆர்.இராமச்சந்திர தீட்சிதர் ஆகியோர் எழுதிய ஆங்கில நூல்களைத் தமிழில் மொழி பெயர்த்துப் பரப்பியவர் கா.கோவிந்தன் ஆவார்.

- தமிழரின் பெருமை பேசும் நூல்களிலும் முரண்பட்ட கருத்துக்கள் இருப்பின் தவறாது மறுப்பை மிகவும் விளக்கமாக எழுதிக் குறிப்பிடும் முறையைக் கா.கோவிந்தன் பின்பற்றியுள்ளார்.
- பி.டி.சீனிவாச அய்யங்காரின் கருத்துக்களும் கா.கோவிந்தனின் கருத்துக்களும் சங்க இலக்கியம் குறித்த ஆராய்ச்சியில் இரு வேறு துருவங்கள் என்பதை அடையாளப்படுத்துகின்றன.
- தமிழ்ப்புலவர்கள், அரசர்கள் காலம் பற்றிய பின்னணியுடன் அவர்களின் வரலாற்றைச் சங்க இலக்கியத்தை அடிப்படையாகக் கொண்டு தொகுக்கும் பணியைச் செய்தார் கா.கோவிந்தன். அந்த அடிப்படையில் சங்கப் புலவர் வரிசை என்னும் ஆறு தொகுதிகளையும் சங்க கால அரசர் வரிசை என்னும் இரு பகுதிகளையும் வெளியிட்டார்.
- லெ.ப.கரு.இராமநாதன் செட்டியார் சங்க காலத்தின் தொன்மையையும் பண்டைத் தமிழர் பண்பாடு, வாணிகம், போர்முறை, தொழில், கலைகள் போன்றவற்றை வியந்து எழுதுகிறார்.
- சங்க காலம் முழுமைக்கும் செய்யுள்களில் ஒருவிதமான பொதுத் தன்மை இருக்கிறது என்றும் அவை நெடுங்காலம் மாறாமல் நிலைத்திருந்தன என்றும் லெ.ப.கரு.இராமநாதன் செட்டியார் கருதுகின்றார்.
- திராவிட இயக்கத்தாரின் கம்பராமாய எதிர்ப்பு ஆகியவற்றில் முரண்பட்ட நாவலர் ச.சோமசுந்தர பாரதியார், திராவிடக் கருத்தியலை உள்வாங்கிக் கொண்டு பல்வேறு நூல்களை எழுதியவராவார்.
- ஆரியர்களின் தொன்மையான பேரரசே அசோகன் ஆட்சிதான் என்றும் அதற்குப் பன்னெடுங் காலத்துக்கு முன்பே தமிழர்கள் சிறப்புற ஆட்சி நடத்தினர் என்றும் ச.சோ.பாரதியார் கருத்துரைக்கின்றார். ஆரியர்கள் வருகைக்கு முன்னரேயே தமிழர்கள் பலவகைச் சிறப்புக்களோடு வாழ்ந்தவர்கள் என்ற கருத்துருவத்தை முன்வைத்துப் பல கட்டுரைகளைப் படைத்துள்ளார்.
- ந.சி.கந்தையா பிள்ளை, திராவிட இயக்கச் சிந்தனையோடு இலக்கியங்களை ஆராய்ந்தவர் ஆவார். தமிழர்களே உலக நாகரிகத்திற்கு வழிகாட்டிகளாக இருந்தவர்கள் என்பது ந.சி.க.வின் கருதுகோள் ஆகும்.
- இந்திய நாகரிகத்தைப் பற்றி ஆராய்வோர் வடக்கிலிருந்து ஆராய்வதை விடுத்துத் தென் பகுதியில் இருந்து தொடங்க வேண்டும் என்று கருத்துரைக்கிறார் ந.சி.கந்தையா பிள்ளை.
- வடமொழியின் துணையின்றித் தமிழ் தனித்து இயங்க வல்லது என்ற கால்டுவெல்லின் கருத்தினைச் சங்க இலக்கியத்தின் துணைகொண்டு நிறுவுகிறார் ந.சி.க.

- திராவிட இயக்கத் தலைவர்களுடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்த மயிலை சீனி.வேங்கடசாமி, வைதீக மரபுக்கு எதிரான பிற சமயங்கள் தமிழுக்கு ஆற்றிய பணிகளைத் தமிழிலக்கிய வரலாற்றில் பதிவு செய்தவர்.
- தமிழ்மொழி குறைந்தது மூவாயிரம் ஆண்டுப் பழமையுடையது என்று கூறும் மயிலை சீனி.வேங்கடசாமி, தமிழ்ச் சொற்கள் பல, வெவ்வேறு காலத்தில் வெவ்வேறு பொருளில் வழங்கப்பட்டன என்ற மரபை அறிந்து பொருள் கொள்ள வேண்டும் என்கிறார்.
- மறைமலையடிகள், தேவநேயப் பாவாணர் வ.சுப.மாணிக்கனார் போன்றவர்கள் திராவிடக் கருத்துநிலையை உள்வாங்கிக் கொண்டு சங்க இலக்கியம் குறித்து எழுதியவர்கள்.

## மேலாய்வுக் களங்கள்

- சங்க இலக்கியம் திராவிட இயக்க வாசிப்பு எனும் தலைப்பிலான இவ்வாய்வின் மேலாய்வுக் களங்களாகப் பின்வருவன பரிந்துரை செய்யப்படுகின்றது.

- திராவிடக் கருத்தியல் சங்க இலக்கியம் தவிர்த்த ஏனைய இலக்கியங்களை எவ்வாறு வாசித்திருக்கிறது என்பதைக் குறித்த ஆய்வு திராவிடக் கருத்திநிலையின் நோக்குநிலையை முழுவதுமாக உணர்ந்து கொள்ள உதவிகரமாக இருக்கும்.

- திராவிடக் கருத்துநிலை கோட்பாட்டாளர்களுக்கிடையே இருக்கும் மொழி மற்றும் இலக்கியங்கள் பற்றிய விவாதங்களைத் தொகுத்தும் வகுத்தும் காணுவது, திராவிடக் கருத்துநிலை வளர்ச்சியின் உள் முரண்களை அடையாளப்படுத்துவதாக அமையும்.

- திராவிடக் கருத்துநிலை தவிர ஏனைய கருத்துநிலைகள், மார்க்சியக் கருத்துநிலை, தேசியக் கருத்துநிலை, தமிழ்தேசியக் கருத்துநிலைகள் செவ்வியல் இலக்கியங்களை எவ்வாறு நோக்கின என்பதும் இன்றியமையாத ஆய்வாகும்.